# திருமந்திரம் காட்டும் வாழ்வியல் நெறிகள்

முனைவர் தி. மகாலட்சுமி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை – 600 113

# நூல்விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | திருமந்திரம் காட்டும் வாழ்வியல் நெறிகள் |
| ஆசிரியர் | : | முனைவர் தி. மகாலட்சுமி<br>ஆய்வு அலுவலர்<br>தமிழ் இலக்கியம் மற்றும் சுவடிப் புலம்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>தரமணி, சென்னை 600 113 |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை 600 113<br>தொலைபேசி எண் 044/22542992 |
| வெளியீட்டு எண் | : | 792 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2014 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டி.என்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : | 352 + 16 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ.165/- (ரூபாய் நூற்றி அறுபத்தைந்து மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீசரவணா எண்டர்பிரைசஸ்<br>144, தம்புத் தெரு<br>சென்னை 600 001 |
| பாடம் | : | ஆன்மிகத் தத்துவம் |

முனைவர் கோ. விசயராகவன் எம்.ஏ., எம்.பில், பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600113

## அணிந்துரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் ஆய்வியல் நிறைஞர், முனைவர் பட்டம், சுவடியியல் பட்டயம் ஆகியவற்றை நடத்தி வருகின்றோம். தற்போது 2014-15ஆம் கல்வியாண்டில் திருமந்திரமும் வாழ்வியலும் என்ற முழுநேரப் பட்டய வகுப்பையும் தொடங்கி இருக்கின்றோம். அற இலக்கியங்கள் என்பது வெறும் மனப்பாடக் கல்வியாக மட்டுமே இருக்கின்றது. இக்கல்வியை வாழ்வியலுக்கு நடைமுறைப்படுத்தும் தன்மை நம்மிடையே இல்லை. கல்வியைக் கற்பிப்பதோடு அதனை வாழ்வியலில் கடைப்பிடிக்க வேண்டிய பயிற்சியையும் வழங்க வேண்டும். எனவே இந்நோக்கில் இப்பட்டய வகுப்பு 02.05.2014 அன்றுமுதல் தொடங்கப் பெற்றுள்ளது.

தன்னம்பிக்கை மனிதனுக்கு மிக அவசியம். ஊக்கமுடைமை என வள்ளுவர் இதைப் புகழ்வார். ஆனால் இன்றைய இளைஞர்கள் ஊக்கமின்றி வாழ்வதற்கு உடலைப் பற்றிய அவர்களது கவனமின்மை மிக முக்கியக் காரணமாகும். திருமந்திரம் உடலைப் பேணுவதையும் அதன்வாயிலாக ஒரு மனிதன் தன்னைப் பேணுவதையும் பற்றிக் கூறுகின்றது.

குடி, புகை, பெண்மோகம் என்ற மூன்றினாலும் உலகம் அழிந்து கொண்டிருக்கின்றது. இன்பம் என்று இன்பமில்லா வாழ்வை நம்பி மாயையில் இருக்கின்றது இளைஞர் கூட்டம். தன்னுடலை மெருகேற்றி, மனத்தை வலிமையாக்குவதன் வாயிலாகப் பெரும் இன்பமே மிகச்சிறந்தது என்பதை உணர்த்தும் முகத்தான் இப்பட்டய வகுப்பு நடைபெற்றுவருகின்றது. இப்பட்டயம் பயில்வோர்க்கு ஒரு வழிகாட்டியாகவும், பாடநூலாகவும் இருந்து துணைபுரிய வேண்டுமென்ற நோக்கில் திருமந்திரம் காட்டும் வாழ்வியல் நெறிகள் என்ற இந்நூல் வெளிவருகின்றது.

திருமூலர் சித்தர்களில் முதன்மையானவர். இவர் ஒன்பது தந்திரங்கள்வழி 3000 தமிழ் மந்திரங்களைப் படைத்துள்ளார். தந்திரம் என்றால் பக்குவம் என்று பொருள். அப்பக்குவ நிலையை ஒருவர் அடைவதற்கு நெறி இன்றியமையாதது. அந்நெறியை நேர்படுத்தி ஒழுகும் முறையைத் திருமூலர் வகுத்துக்காட்டுகின்றார்.

திருமந்திரம் ஓர் வாழ்வியல் தத்துவநூல். முயற்சியோடு கூடிய பயிற்சியின்வழி பெறும் அனுபவ அறிவால் உணரக்கூடிய நூல். இந்நூல் பக்திநூல், சாத்திரநூல், தோத்திரநூல், தாந்திரிக நூல், மந்திரநூல், யோகநூல், ஞானநூல் என்று பலராலும் பலவாறு போற்றப்படுகின்றது. எப்படி இருப்பினும் வாழ்க்கைக்கு வழிகாட்டும் நூல் என்பதுதான் அதன் தனிச்சிறப்பு ஆகும்.

இறைவனை நாம் பல வடிவங்களில் பல்வேறு வகைகளில் வழிபட்டாலும் அனைத்தும் பரம்பொருளையே சென்றடையும். இதனை ஒன்றது பேரூர் வழிஆறு அதற்குள என்றும், ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்றும் திருமூலர் உணர்த்துகின்றார். திருமந்திரம் பன்னிரு திருமுறைகளில் பத்தாம் திருமுறையாகச் சாத்திர நூலாக உள்ளது. மந்திரங்களைக் கொண்டதால் தோத்திர நூலாகவும் உள்ளது.

25 ஆண்டுகளுக்குமுன் ஒரு சில சான்றோர்களே திருமந்திரத்தைக் கற்றும், உணர்ந்தும், விளக்கியும், வளர்த்தும் வந்தனர்.

> தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
> மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
> திருவாசகமும் திருமூலர் சொல்லும்
> ஒரு வாசகம் என்றுஉணர்

என்பது தமிழ் மூதாட்டி ஔவையின் கூற்றாகும். திருக்குறள், நான்கு வேதங்களின் முடிபுகள், அப்பர், சுந்தரர், திருஞானசம்பந்தர் ஆகியோரது தேவாரப் படைப்புகள், குறுமுனியாகிய அகத்தியரின் நூல், திருஞானக்கோவை, திருவாசகம், திருமந்திரம் ஆகிய நூல்களைப் படித்துணர வேண்டிய நூல்களாக ஔவையார் பட்டியல் இடுகின்றார். இந்தப் பாடல்வழி திருமந்திரத்தின் பெருமை தெரியவருகின்றது. திருமந்திரத்தின் சிறப்புக்கு இது ஒரு நல்ல சான்றாகும்.

இத்துணை சிறப்பு வாய்ந்த திருமந்திரமானது, மக்களைச் சென்றடையாமலும், அதன் பெருமைகள் முழுமையாக, அறியப்படாமலும் இருக்கின்றது. இந்த ஆதங்கம் தமிழ் அறிந்த சான்றோரிடையே பல காலமாக உள்ளது. தேவாரமும், திருவாசகமும் புகழ்பெற்ற அளவிற்குத் திருமந்திரம் பாமர மக்களிடையே அவ்வளவாகப் பரவவில்லை என்ற ஆதங்கமும் பலருக்கு உள்ளது. அதை நிறைவு செய்யும் முயற்சிக்கு ஒரு படிக்கல்லாக அமைந்த இந்நூல் இப்பட்டயம் பயில்வோருக்கு மட்டுமின்றி, நாட்டுமக்களுக்கும் ஒரு வழிகாட்டியாக அமையும்.

வழிபாட்டுமுறை, யோகமுறை, இறையின் இயல்பு, இறைவனை அடையும்வழி அட்டாங்க யோகமுறை, சித்த மருத்துவமுறை, கருவறை தொடங்கிச் சமாதிநிலைவரை மனிதன் அடையும் வாழ்வுநிலை, திருமந்திர நெறி இன்னது என உணர்தல், அதற்குத் தேவைப்படும் நுண்ணுணர்வு போன்றவற்றைத் திருமந்திர வழிநின்று இந்நூல் விரிவாக விளக்குகின்றது. மேலும் ஆழ்ந்து அகன்ற ஆய்வுக் கண்ணோட்டம், எளிமை, நுட்பம், ஆர்வம், ஈர்ப்பு போன்ற பல உத்திகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. எனவே இந்நூல் இதுவரை திருமந்திரம் குறித்து வெளிவந்துள்ள நூல்களுள் தனக்கென ஒரு தனியிடத்தை, தனிச்சிறப்பைப் பெறும் தகைமையுடைத்தாய் விளங்குகின்றது. குறுகிய காலத்தில் சிறப்பானதொரு நூலினை எழுதிய பேராசிரியர் தி. மகாலட்சுமி அவர்களைப் பாராட்டுகின்றேன். இப்பட்டய வகுப்பின் தொடக்கவிழாவில் கலந்துகொண்டு சிறப்பித்ததோடு மட்டுமல்லாமல் இந்நூலுக்கு அருள்வாழ்த்துரை வழங்கிய ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களுக்கும், வாழ்த்துரை வழங்கிய அரங்க. இராமலிங்கம் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள், தமிழ்மீதும், தமிழர்மீதும், தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. தமிழின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றி வருகின்றார்கள். ஒல்லும்வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும் மாண்புமிகு தமிழக முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளைப் பதிவு செய்கின்றோம்.

தமிழ் வளர்ச்சிக்கும் இந்நிறுவன வளர்ச்சிக்கும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம்தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சரும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவருமாகிய மாண்புமிகு கே.சி.வீரமணி அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சியில் எங்களை வழிநடத்திவரும் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச்செயலாளர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப. அவர்களுக்கும் எம் இனிய நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கின்றோம். இதைக் கணினியில் வடிவமைத்த திருமதி எ.ம.லட்சுமி, செல்வி ல.தீபிகா ஆகியோருக்கும் அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீசரவணா எண்டர்பிரைசஸ் அச்சகத்தாருக்கும் என் பாராட்டுகள்.

இயக்குநர்



## அருள் வாழ்த்துரை

உந்திச் சுழியி னுடனேர் பிராணனைச்
சிந்தித்து எழுப்பிச் சிவமந் திரத்தினால்
முந்தி முகட்டின் நிறுத்திய பானனைச்
சிந்தித்து எழுப்பச் சிவன்அவன் ஆமே
(திருமூலர் திருமந்திரம்)

வானநாடனாய் வழித்துணை மாமருந்தாய் அடியவர்க்கருளும் கோமுக்தீஸ்வரர் எழுந்தருள்பாலிக்கும் திருவாவடுதுறை திருக்கோயிலின் வாயுமூலையில் ஞானசமாதி கொண்டருளும் திருமூலதேவ நாயனார் அருளிய செந்தமிழ் ஆகமமாம் திருமந்திரப் பெருநூலின் சித்தாந்த சைவ நுண்பொருள் தன்மையையும், அதுகாட்டும் வாழ்வியல் நெறிகளையும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் திருமந்திர மாநாடுகள் பல நடத்தியும், பஞ்சாட்சரதீப உரை எனும் அரிய விளக்கத்துடன் ஆதீன வெளியீடுகளாகத் திருமந்திர நூல் முழுதும் பல்வேறு பதிப்புகளாக வெளியிட்டு வருவதும், திருமூலர் ஐதீக விழாவினைத் திருக்கோயிலில் நடத்தி வருவதும், திருமூலரின் குருபூஜைத் திருநாள் (ஐப்பசி - அசுவதி) திருமந்திர முற்றோதலுடன் சிறப்பு வழிபாடு சீர்பெற நிகழ்வுறுதலும் சைவநன் உலகம் நன்கறியும்.

ஒன்றே குலம் ஒருவனே தேவன்
யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்

எனும் திருமூலரின் உயர்ந்த சிந்தனையை உலகறியச் செய்து மானிடராய் பிறந்தோர் அனைவரும் உடலாலும் உள்ளத்தாலும் உயர்நிலை எய்திட முயல்வதே பிறவிப் பயன்.

அத்தகு அரிய முயற்சியில் தமிழக அரசின் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தலைப்பட்டு, **திருமந்திரமும் வாழ்வியலும்** எனும் ஓராண்டு பட்டயப் படிப்பைத் தொடங்கியிருப்பது பாராட்டிற்கு உரியது.

02.05.2014 இல் இப்பட்டயப் படிப்பின் தொடக்கவிழா திருவாவடுதுறை ஆதீனத்தின் தலைமையில் சென்னையில் நடந்தேறியது. இதன் தொடர்ச்சியாகப் பாடத்திட்டம் அமைத்து வெளிவரும் **திருமந்திரம் காட்டும் வாழ்வியல் நெறிகள்** எனும் இந்நூல், திருமூலரின் உள்ளக் கருத்தின் வெளிப்பாடாக அமைந்து சிறக்கவும், இப்பயிற்சி வகுப்பில் பங்கேற்கும் மாணவர்களும், பொறுப்பாளர்களும் இம்மை மறுமை நலன்களை நிறைவுறப் பெற்று நீடுநல்வாழ்வு எய்திடவும் நமது ஆத்மார்த்த மூர்த்திகளாகிய ஸ்ரீஞானமா நடராஜப் பெருமானின் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

# வாழ்த்துரை

மனிதர்கள் பல்வேறு வகையான வாழ்க்கை முறைகளைக் கைக்கொண்டு வாழ்பவர்கள். மனிதனுடைய வாழ்வியல்நெறி எப்படி அமைந்துள்ளதோ அதைப் பொருத்தே அவனுடைய வெற்றியும் தோல்வியும் அமைகின்றன. சிந்தனை வளம், அறிவு, எதிர்காலத்தைப் பற்றிய சரியான ஊகிப்பு ஆகியவற்றைப் பெற்றுள்ளவர்களின் வாழ்க்கை வளமான நிறைவான வாழ்வாக அமைகின்றது. தமிழகத்தில் பல நூற்றாண்டுகளுக்குமுன் வாழ்ந்த திருமூலரின் வாழ்வு அதைப் போன்றதாகும்.

திருமூலரின் வாழ்வு, நிறைவாழ்வு. அவருடைய வாழ்வியல் நெறி பின்பற்றத்தக்கது. அதை உணர்ந்தவர் இந்நூலாசிரியர் முனைவர் தி. மகாலட்சுமி அவர்கள். இவர் சித்தர் இலக்கியத்தில் ஆழங்கால்பட்டவர். சுவடித்துறையில் தமக்குள்ள பட்டறிவின்மூலம் பல அரிய பிரதிகளைக் கண்ணுறுபவர். அவற்றின் உட்பொருளை உணரவல்லவர். சோதிடத்தில் ஆர்வமும் ஈடுபாடும் மிக்கவர். அவருடைய அனுபவங்களை ஒன்றிணைத்துத் திருமந்திரம்காட்டும் வாழ்வியல் நெறிகள் என்ற இந்நூலைப் படைத்தளித்துள்ளார்.

வாழும் வழிகளை அறிய முற்படுபவர்களுக்குப் பெரியோர்களின் நூல்கள் வழிகாட்டிகளாய்ப் பயன்படுவன. ஒவ்வொருவரும் சிறந்த ஆளுமைகளைக் கொண்டு விளங்குவதற்கான செய்திகள் அனைத்தும் அப்பெரியோரின் நூல்களில் இடம்பெற்றிருக்கும். அத்தகு பெரியோர்களின் வரிசையில் வைத்துப் போற்றப்பெறும் திருமூலரின் திருமந்திரத்தில் உள்ள வாழ்வியல் நெறிகளை இந்நூலாசிரியர் ஒன்பது தலைப்புகளாகப் பகுத்துத் தந்துள்ளார்.

திருமந்திரத்தை இலக்கண இலக்கியப் பார்வையோடு அணுகி அதன்கண் அமைந்த யாப்புமுறை, உவமைகள், பழமொழிகள் இயற்கை, உயிரினங்கள் பற்றிய குறிப்புரைகள் (ப. 24-33) ஆகியவற்றை எடுத்துக்காட்டுகிறார். அன்பு, அறம், ஈகை, நிலையாமையை உணரும் தெளிவு, புலால்மறுத்தல், கொல்லாமை, ஒழுக்கம், நடுவுநிலைமை முதலியவை சமுதாயத்திற்குத் தேவையானவை என்பதை உணர்ந்து

அப்பண்புநலன்களைத் திருமந்திரத்தின்வழி நின்று விளக்கியுள்ள (ப.34-59) திறம் போற்றுதலுக்குரியது.

திருமூலரின் கோட்பாடாகிய அறியாமையிலிருந்து மக்களை விடுவிப்பது (ப.60) என்பதை ஒன்பது தந்திரங்களின் பாடல்களில் இருந்து மேற்கோள் காட்டி விளக்கியிருப்பது பாராட்டுக்குரியது. இயற்கையில் இறைவனைக் காணச்செய்யும் கல்வியே சிறந்த கல்வியாகும் (ப.100). கீழைநாடுகள் உலகிற்கு வழங்கிய கல்விமுறை இது. பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்து நம்மண்ணில் இக்கல்விமுறை பின்பற்றப் பெறுகின்றது. அதைத் திருமூலரின் பாடல்கள்மூலம் நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார். நம் முன்னோரின் சிறப்பை இளைய தலைமுறையினர் அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாததாகும்.அதை மனத்தில்கொண்டு காலமறிந்து பல்வேறு குறிப்புகளை எடுத்துக்காட்டியிருப்பதால் காலத்தினால் செய்த உதவியாக (குறள்-102) இந்நூலைக் கருதலாம்.

தமிழ் மருத்துவம், வானியல் ஆகியவற்றில் நூலாசிரியர் ஈடுபாடும் அறிவும் மிக்கவர் என்பதை மருத்துவம் மற்றும் வானியல் கோட்பாடு (ப.164) என்ற தலைப்பிலான செய்திகள்மூலம் அறியமுடிகிறது. உலக மருத்துவமுறைகளில் உணவையே மருந்தாகக் கொண்டுள்ள தனிச்சிறப்பு நம் மருத்துவமுறைக்கு உண்டு என்பதை நூலாசிரியர் எடுத்துக் காட்டியுள்ளார். வானியல்அறிவு மூலம் உலகில் தோன்றும் உயிரினங்களின்வாழ்வு எப்படி அமையும் என்பதை முன்கூட்டியே அறிந்து செயல்படும் தன்மைகளும் நூலாசிரியரால் விளக்கமாகத் தரப்பெற்றுள்ளன.

சித்தர்கள் உண்மைகளை நேரடியாகச் சொல்லாமல் பரிபாஷைகளாகக்(பதி பாஷை) கூறியுள்ளனர் என்பதைப் புராணக் கதைகள் உணர்த்தும் நீதி என்னும் தலைப்பின்கீழ் விரிவாகத் தந்துள்ளார் (ப.271-286) நூலாசிரியர்.

எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு (குறள்.355)

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு (குறள்.423)

என்னும் திருவள்ளுவரின் வாய்மொழிக்கு ஏற்ப புராணச் செய்திகளின் உண்மைப் பொருளைக் கண்டுகூறியுள்ள நூலாசிரியரின்

அறிவுவேட்கை பாராட்டுக்குரியது. இவ்விளக்கங்களைப் புரிந்துகொண்டு திருமந்திரத்தைப் படிப்பவர்கள் அதன் உண்மைப் பொருளை எளிதாகப் புரிந்துகொள்ள முடியும்.

ஆன்மிக வாழ்வு என்பதைப் பலரும் பல்வேறு விதமாகப் புரிந்து வைத்துள்ளனர். புறவேடங்களைத் தரித்துக் கொள்வதால் மட்டும் ஆன்மிகவாழ்வு வாழ்ந்துகொண்டிருப்பதாகப் பலரும் கருதுகின்றனர். இறையுணர்வைப் பெற்று அவ்வுணர்வில் தொடர்ந்து இருப்பதற்கான பயிற்சியைச் செய்துகொண்டிருப்பதன்மூலம் பிறப்பில்லாப் பெருவாழ்வை அடைவதே ஆன்மிக வாழ்வின் நோக்கம். இப்பயணத்தில் பலரும் அவரவர் சக்திக்கு ஏற்றார்போல் முன்னேறிச் செல்கின்றனர். அப்படிச் சென்றவர்களுள் குறிப்பிடத்தக்க தூரத்தைக் கடந்து சென்றவர் திருமூலர். அவருடைய ஆன்மிக வாழ்வு பற்றிய நெறிகளை நூலாசிரியர் 58 பக்கங்களில் (287-344) செறிவாக வழங்கியுள்ளார்.

முனைவர் தி. மகாலட்சுமி அவர்கள் திருமந்திரம் முழுவதையும் உரைநடையில் படித்த நிறைவை இந்நூலின் மூலம் வழங்கியுள்ளார். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின்மூலம் அண்மையில் திருமந்திரத்தில் பட்டயப்படிப்பு தொடங்கப் பெற்றுள்ளது. அப்பட்டயப்படிப்பை இந்நூலாசிரியர் தலைமையேற்று நடத்தி வருகிறார். அவர் இந்த வாய்ப்பைப் பயன்படுத்தித் திருமந்திரத்தை உலகம் முழுவதும் கொண்டு செல்லவேண்டும் என்று விரும்புகிறேன்.

திருமூலரின் வாழ்வியல் நெறிகளைத் தற்போதுள்ள வாழ்வியல் தேவைகளின் அடிப்படையில் தந்துள்ளார் முனைவர் தி. மகாலட்சுமி அவர்கள். அவருக்கு இந்நூல் திருமந்திரத்தை உலகம் முழுவதும் கொண்டுவருவதற்கான அடித்தளமாக அமைந்துள்ளதை எண்ணி மகிழ்கிறேன். அவருடைய தமிழ்ப்பணி தொடர்ந்து சிறக்க வாழ்த்துகிறேன்.

அன்புடன்
அரங்க.இராமலிங்கம்



ஆசிரியரைப் பற்றி...

1954ஆம் ஆண்டு கோவை மாவட்டம் மேட்டுப் பாளையத்தில் பிறந்தவர். சிலப்பதிகார ஆய்வு வரலாறு எனும் தலைப்பில் ஆய்வியல் நிறைஞர் பட்டமும், கோவை மாவட்டச் சொற்களஞ்சியம் எனும் தலைப்பில் இந்நிறுவனத்தில்வழி முனைவர் பட்டமும் பெற்றவர்.

சுவடியியல், இதழியல், மொழிபெயர்ப்பியல் ஆகியவற்றில் பட்டயங்களும் பெற்றவர். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 1989 ஆம் ஆண்டுமுதல் 23 ஆண்டுகள் பணியாற்றி, சுவடியியல் புலத்தின் பொறுப்பாளராக இருந்து இணைப்பேராசிரியராக மே 2012இல் ஒய்வு பெற்றவர். நவம்பர் 2012 முதல் ஆய்வுஅலுவலராகத் தொடர்ந்து பணியாற்றி வருபவர். சுவடியியல், சோதிடவியல், சித்தமருத்துவம், ஆன்மிகம், இலக்கியம், அகராதியியல் எனப் பல்துறைகளில் புலமை மிக்கவர். இதுவரை 19 ஆய்வு நூல்களை எழுதியுள்ளார். இத்துடன் பதிப்பாசிரியராகவும் (பிறருடன் இணைந்து), பொதுப் பதிப்பாசிரியராகவும் இருந்து மொத்தம் 58 நூல்களை வெளியிட்டுள்ளார். மேலும் பத்து நூல்கள் வெளிவர உள்ளன. இவருடைய சோதிடவியல் எனும் நூல் தமிழக அரசின் முதல் பரிசைப் பெற்றுள்ளது. சாதக அலங்காரம் எனும் மிகப்

பெரிய நூல் 4 பதிப்புகளைப் பெற்று மக்களின் பாராட்டைச் சிறப்பு நிலையில் பெற்றுள்ளது. தட்சிணாமூர்த்தி குருமுகம் எனும் நூல் சித்த மருத்துவத்தின் மணிமகுடமாகத் திகழ்கின்றது. 150க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார். அறக்கட்டளைப் பொறுப்பாளராக இருந்து 27 பொழிவுகளையும், 12 சுவடியியல் பயிலரங்குகளையும், 6 கருத்தரங்குகளையும் நடத்தியுள்ளார்.

அன்னைதெரசா, ஔவை, தமிழ்நிதி, சுவடிச்சுடர் போன்ற விருதுகளைப் பெற்ற இவர், தமிழகத்தின் பல இடங்களில் சிறப்புச் சொற்பொழிவுகளையும் நிகழ்த்தியுள்ளார். குறிப்பாக மலேசியாவில் ஓலைச்சுவடி குறித்து நிகழ்த்திய சிறப்புப் பொழிவு குறிப்பிடத்தக்கது.

பாடத்திட்டக்குழு உறுப்பினராகவும், வல்லுநர்குழு உறுப்பினராகவும் பல அமைப்புகளில் (புதுச்சேரி பல்கலைக் கழகம், கற்பகம் பல்கலைக் கழகம்) உள்ளார். வானொலி, தொலைக்காட்சி நிகழ்வுகளில் பங்கேற்று உரையாற்றியுள்ளார். இவர்தம் மேற்பார்வையில் 25 ஆய்வாளர்கள் முனைவர் பட்டமும், 35 ஆய்வாளர்கள் ஆய்வியல் நிறைஞர் பட்டமும், 20 மாணவர்கள் சுவடியியல் பட்டயமும் பெற்றுள்ளனர். தற்போதும் ஆய்வாளர்கள் ஆய்வு செய்து வருகின்றனர்.

தற்போது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் திருமந்திரமும் வாழ்வியலும் என்ற ஓராண்டுப் பட்டய வகுப்பின் பொறுப்பாளராகப் பணியாற்றி வருகின்றார். மேலும் பற்பல பணிகளில் தொடர்ந்து ஈடுபட்டு வருகின்றார்.

# என்னுரை

திருமந்திரத்தை அருளிய திருமூலர், தன்னுடைய அவதாரச் சிறப்பைத் தானே பின்வருமாறு கூறுகின்றார்.

மாலாங் கனேயங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேத்தைச் செப்பவந் தேனே! (திரு. 77)

இப்பாடலில் தான்மூலனின் உடலில் புகுந்த காரணத்தையும் மனித வாழ்வின் சித்தாந்தத்தையும், வேதமுறைகளையும் கூறுவதோடு இறைவன் என்னைத் தமிழ் செய்ய அனுப்பியதாகவே பறைசாற்றுகின்றார். இதனை,

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே (திரு. 81)

என்ற பாடல் அடிகளாலும் உணர்த்துகின்றார். எனவே நாம் திருமந்திரத்தை மேன்மேலும் தெளிவுறக் கற்று, தமிழை வளர்த்து அதற்குச் சிறப்புச் செய்வோம். திருமந்திரம் என்றாலே தமிழ் மந்திரம் என்று பொருள். அதனால்தான் மூலன்செய்த 3000 தமிழ் என்று திருமந்திரம் பெயர் பெற்றது. இதனை,

மூலன் உரைசெய்த மூவாயிரம் தமிழ் (திரு. 99)

தமிழ் மூவாயிரம் முத்திமுடிவிது மூவாயிரத்திலே
(திரு. 100)

என்ற தொடர்வழி உறுதிப்படுத்துகின்றார். திருமந்திரத்துக்கு முதலில் வழங்கப்பட்ட பெயர் சதாசிவ ஆகமம் ஆகும். இதனைக் குருநூல் என்றும் கூறுவர்.

யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்

எனும் வரிகள் வாயிலாகச் சமய வேறுபாடுகள் நமக்குள் வேண்டாம், இதன் உண்மைப் பொருளைக்கண்டு அதைப் பின்பற்றுங்கள், அதைவிடுத்துக் கருத்து வேறுபாடுகளுக்கும் வெறித்தனமான, என்சமயம் பெரிது, உன் சமயம் சிறிது என்ற மூடநம்பிக்கைகளுக்கும் இடம்கொடுக்காதீர்கள் என்கின்றார் திருமூலர். அனைத்துச்

சமயங்களும் அன்பைத்தான் போதிக்கின்றன. அன்பு என்பது ஓர் இயற்கையான உணர்வு. இதைக் காட்டுவது மக்களுக்குச் செய்யும் தொண்டு. இறையை அடையவும், வழிபாட்டு நெறிக்கும் மெய்யுணர்தலுக்கும் அடிப்படைத் தேவை அன்பு நெறியே. இதனைத் திருமூலர், அன்பே சிவமாவதாரும் அறிகிலார் என்கின்றார். அதுவே கடவுள்நெறி எனத் திருமூலர் உணர்த்துகின்றார். இந்த அன்பும் நம் உள்ளத்துள்தான் இருக்கின்றது. இந்த உண்மைப் பொருளைத் தம்முள் உணர்ந்து உள்ளன்போடு தன்னலமின்றி வழிபடுபவர்களுக்கு இறைவன் வெளிப்படுவான்.

உடம்பினுக்கு உள்ளே உறுபொருள் கண்டேன் என்கின்றார். இதை உணர முதலில் நாம் நம்மை உணரவேண்டும். அதனால்தான்,

தானே தனக்குப் பகைவனும் நட்டானும் (நண்பனும்)
தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை

என்கின்றார். தன்னை ஒருவன் அறியும்போது அவனை வழிநடத்த ஒரு தலைவன் தேவையில்லை என்பதால், தன்னை அறிவான் தலைவனும் ஆகலாம் என்கின்றார்.

முதலில் நாம் தெளிவடைய வேண்டும். தெளிவில்தான் ஞானம் தோன்றும். இதனை,

தெளிவு அறியாதார் தீரார் பிறப்பே
செயலற்று இருக்க சிவானந்த மாகும்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிட சிவகதி யாமே

என்று கூறிப் புரிய வைக்கின்றார். சிவசிவ என்று கூறும் எளிய வழிமுறையால் தீவினை மாளும் என்கின்றார். ஐம்புலன்களை அடக்காமலே இவற்றை எல்லாம் பெறமுடியும். இதையே, அஞ்சும் அடக்கெனபர் அறிவிலார் என்கின்றார். வாசியோகத்தை வலியுறுத்தக் காற்றைப்பிடி, காலனை அடக்கு என்கின்றார்.

இத்தகு அரிய, எளிய கருத்துகளைத் தன்னகத்தே கொண்ட திருமந்திரத்தின் பாரம்பரியத் தொன்மைச் சிறப்பு, அறம் சார்ந்து வாழும்முறை, இயல்பாக வாழ்வதன் வாயிலாகத் தன்னையறிதல், நாம் எதை செய்கின்றோமோ அதுவாகவே ஆதல், எண்ணியதை எண்ணியாங்கு எய்துதல், தன்னலமற்ற அன்பு, பிறருக்கு உதவுவதையே வாழ்வின் தவமாக உணர்தல், அறிவைப் பேணுதல், உணர்ச்சி நிலையில் இயங்காமல் அறிவுநிலையில் இயங்குதல், அன்புநெறியில் அறநெறியில் வாழ்தல், உடன் வாழும் மனிதனோடு ஐக்கியமாதல், தன்னம்பிக்கைக்கான சிந்தனையைப் பெறுதல், ஆன்ம விழிப்புணர்வு பெறுதல், எதையும் தாங்கும் மனவலிமையைப் பெறுதல்,

மனத்தைப் பண்படுத்திக் கொள்ளல், மனஅழுத்தத்தில் இருந்து விடுபடல், வெற்றிக்கு ஆதாரமான உடலையும் மனத்தையும் தகுதியுடன் வைத்தல், உடம்பைப் பராமரிக்கும் முறைகள், ஆறு ஆதாரங்கள் (உயிர் மற்றும் அதன் சக்தி இணைப்புகள், உடலில் உள்ள சுரப்பிகளின் இயக்கங்கள்), 96 தத்துவங்கள், அட்டாங்கயோகம், அட்டமாசித்தி, தியானம், ஆயுளை நீட்டிக்கும் மூச்சுப்பயிற்சி, சீவாத்மாவை அறிதல் முதலான பல கருத்துகளைத் **திருமந்திரம் காட்டும் வாழ்வியல் நெறிகள்** என்ற இந்நூல் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது.

உலக வாழ்வியலுக்கும் இறையியலுக்கும் அடிப்படை தனிமனித, ஒழுக்கங்களாகிய அகம் சார்ந்த பண்புகளே ஆகும். திருமந்திரம் முடிந்த முடிபாக நமக்கு அன்புநெறியைக் காட்டுகின்றது. இதை நாம் பின்பற்ற முயற்சித்தால் படிப்படியாக நம் உள்ளம் உயர்ந்து பக்குவப்பட்டுவிடும். மனம் எண்ணியதை எண்ணியாங்கு எய்தும், தன்னைத்தான் உணர்தல் இயலும். காலத்தால் முற்பட்ட செந்தமிழ் சிவாகமமாகிய திருமந்திரமே முத்தியடைய தமிழிலும் இடமுண்டு என்று மெய்ப்பித்துக் காட்டியுள்ளது. அனைத்து நிலையினருக்கும், அனைத்து நாட்டிற்கும், அனைத்துக் காலத்திலும் பொருந்துவதாக இந்நூலில் ஆழமான கருத்துகள் பொதிந்துள்ளன. இத்தகு சிறப்புமிகு கருத்துகளை எடுத்தோதும், திருமந்திரத்தின் வாழ்வியல் செய்திகளையும் ஆன்மிகச் செய்திகளையும் எடுத்துக் கூறுவதற்கான நல்வாய்ப்பு கிடைத்தமையை எண்ணி மகிழ்வுறுகின்றேன்.

இப்பட்டய வகுப்பைத் தொடங்குவதற்கும் நூலாக்கத்திற்கும் அனைத்து வகையிலும் ஊக்கப்படுத்திய இயக்குநர் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியினையும் அன்பினையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

மேலும் பட்டயவகுப்பு நடைபெறுவதற்கு உறுதுணை புரிந்துவரும் நிறுவன அலுவலர்களுக்கும், நூலாக்கத்திற்கு உதவிய திரு. ச. செந்தில் குமார், சித்த மருத்துவர் முனைவர் க. இரவீந்திரன், திருமதி. எ.ம. லட்சுமி, எனது முனைவர் பட்ட ஆய்வாளர் திருமதி. மு. தேவி ஆகியோருக்கும் அச்சகத்தாருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

தி. மகாலட்சுமி

# பொருளடக்கம்

# 1. திருமந்திரம் அறிமுகம்

## முன்னுரை

உலகமக்கள் உய்வடையவேண்டி ஞானபூமியாகிய இந்திய நாட்டில் ஞானிகளும் சித்தர்களும் அவதாரம் செய்து மக்களுக்கு நல்வழி காட்டினர். அவ்வரிசையில் திருமூலர் தலையாயவர். இவர் காட்டும் வாழ்வியல் உண்மைகளை முறையாக நாம் கடைப்பிடிப்பதில்லை. நேரம் இல்லை என்பதையும் ஒரு காரணமாகக் கூறிக் கொள்கின்றோம். நாகரிக இயந்திர வாழ்க்கையில் மாட்டிக்கொண்டு பல இன்னல்களுக்கும் மாயைகளுக்கும் ஆட்பட்டுக்கொண்டிருக்கின்றோம். நாளுக்குநாள் நவீனம் என்ற பெயரில் இயற்கையை அழித்து வருகின்றோம். இந்த நிலை மாற நாம் யார்? நமது கடமை என்ன? நாம் பூவுலகில் எங்ஙனம் வாழ வேண்டும், எந்தச் செயலுக்கு நாம் முக்கியத்துவம் தர வேண்டும். பிறப்பு, இறப்பின் இரகசியம் என்ன என்பன போன்ற சில பகுத்தறிவுக் கேள்விகளுக்கு விடைகள் காண வேண்டியுள்ளது. மெய்ஞ்ஞானம் பெற்று வீடுபேறு அடையவும் திருமூலர் வழிகாட்டுகின்றார். இந்த வழிகாட்டுதலைப் புரிந்துகொள்ளும் முகமாகத் திருமந்திரம் அறிமுகம் என்ற முதல்பகுதி அமைகின்றது.

## சித்தர்களின் தோற்றம்

பண்டைய இந்தியாவில் வேளாண்மையின் பொருட்டு எழுந்த இயற்கையான எண்ணங்களில் இருந்து பெண்மைக் கோட்பாடு உருவாகித் தந்திரமாக நிலைபெற்றது. மனித உடலைக் குறித்து எழுந்த இயற்கையான எண்ணங்களில் இருந்து கருத்துகள் படிப்படியாக வளர்ச்சி பெற்றது. இந்நிலையானது அண்டத்தைப் பற்றிய முழுமையான அறிவை உலகம் பெறுவதற்கு வித்திட்டது. மனித உடலோடு அண்டக்கூறுகளை இணைத்து ஆய்வு செய்ததன் விளைவானது வானியல், கணிதம், மருத்துவம், சோதிடம் முதலான அறிவியல் துறைகளுக்கு ஆணிவேராக அமைந்தது. இக்கருத்தியல் வளர்ச்சியானது அண்டக் கூறுகளுக்கான செயல்களையும் அவை ஆளுமை செய்யும் உடல் பகுதிகளையும் பல வகைகளில் வரையறை செய்தது.

இத்தந்திரம் இந்தியாவில் இருந்து பலநாடுகளுக்குப் பரவிய நிலைகள் குறித்து வரலாற்றாளர்கள் பல்வேறு கருத்துகளைத் தெரிவித்து உள்ளனர்.

2

*பெண்மைக்கோட்பாடு தந்த தந்திரம்*

வேட்டையாடி வந்த மனிதன் அதில் இருந்து முன்னேறி உணவு உற்பத்தி செய்யத் தொடங்கினான். இந்த வேளாண்மைக் காலச் சமூகஅமைப்பில் இருந்து படிப்படியாகப் பெண்மைக்கோட்பாடு உருவானது. வேளாண்மையைப் பெண்களே முதன்முதலாகக் கண்டுபிடித்தனர். நிலத்தைக் குச்சியால் கிளறிப் பயிரிட்டுத் தானியங்களை உற்பத்தி செய்தனர். மண்ணின் செழிப்பும் பெண்ணின் கருவுறும்திறனும் ஒரேமாதிரியான பண்பாகக் கருதப்பட்டது.

வேளாண்மை தொடர்பான நடவடிக்கைகள் அனைத்தையுமே பெண்களின் கருவுறும் தன்மையோடு இயற்கையை (பூமி மற்றும் அண்டம்) இணைத்து ஒற்றுமைப்படுத்தியே உருவாக்கினர். இதன் அடிப்படையில் வேளாண்மை மந்திரங்கள் ஏராளமாக உருவாகிப் பெண்களால் நடத்தப் பெற்றது. இம்மந்திரங்கள் உடல் உழைப்பு சார்ந்த நடவடிக்கைகளுக்கு ஊக்கமளிக்கும் உளவியல் காரணியாகப் பயன்படுத்தப்பட்டது. பெண் கருவுற்று குழந்தை பெறும் தன்மையோடு பூமியின் தானிய உற்பத்திச் செயலை ஒப்பிட்டதன் கருத்தியல் வளர்ச்சியில் மனித உடலில் இடம்பெறுபவை அனைத்தும் பேரண்டத்தின் முன்மாதிரி என்னும் கோட்பாடு உருவாயிற்று.

இவ்வாறான பெண்மைக் கோட்பாட்டின் தொடர் வளர்ச்சியின் விளைவாகப் பெண் உடல் மற்றும் உள்ளம் என்பது தன்னுள் ஏற்றுக்கொள்ளும் தன்மை உடையது. ஆண் உடல் மற்றும் உள்ளம் என்பது முழுமையாக வெளிப்படுத்தும் தன்மை உடையது என்ற உளவியல் உண்மை கண்டுபிடிக்கப்பட்டது. இதனைப் பெண்மனம் என்பது உள்வாங்கிக் கற்றுக் கொள்ளும் அறிவு என்றும், ஆண் தன்மையைத் தக்க முறையில் வெளிப்படுத்திக் கற்றுக்கொடுக்கும் அறிவு என்றும் எடுத்துக் கொள்ளலாம். எனவே உள்வாங்கிக் கற்றுக் கொள்ளாமல் கற்றுக் கொடுக்க முடியாது என்பது புரிகின்றது. இவ்வகையில் பெண் தன்மையானது மிக முக்கியமாகி விடுகின்றது. மேலும் இருபாலினருக்கு உள்ளும் ஆண்பெண் தன்மைகள் கலந்து உள்ளது என்பதையும் உணர்ந்தனர்.

இதன் உருவமாகச் சிவனைப் பாதிப் பெண்ணாகக் காட்டும் அர்த்தநாரீஸ்வரர் உருவத்தைப் படைத்தனர். மேலும் உணர்வின் இருப்பிடம் மூளைதான் என்றும் அறிந்தனர். மேற்கண்ட உளவியல் உண்மைகளை இருபதாம் நூற்றாண்டில்தான் நவீன அறிவியல் கண்டுபிடித்தது என்பது குறிப்பிடத்தக்கதாகும். இவ்வாறு பெண்மைக் கோட்பாட்டின் முக்கியத்துவத்தை உணர்ந்தவர்கள் தமக்குள், இருக்கும் பெண்மைத் தன்மையை அதிகரித்துக் கொண்டு அனைத்தும் அறிந்த நிலையைப் பெறும் பயிற்சியான தந்திரத்தை உருவாக்கினர்.

*தந்திரப்பயிற்சி*

ஒவ்வொரு மனிதருக்குள்ளும் ஆசனவாயின் மேல்பகுதி முதல் தலைஉச்சிப் பகுதிவரை ஏழு பெண் சக்தி மையங்கள் இருப்பதை அறிந்தனர். ஆசனவாயின் மேல்பகுதியில் சுருண்டு கிடக்கும் குண்டலினி (பெண்மைச்சக்தி) சக்தியை எழுப்பி முதுகெலும்பின் வழியாக உள்ள பிற பெண் சக்தி மையங்களைத் துளைத்து மூளையை (சகஸ்தாரா) நோக்கிச் செலுத்தி அங்கு ஆண் தன்மை முழுவதையும் தனதாக்கி ஆண் பெண் தன்மைகள் என்று இல்லாமல் ஒன்றாக்கிக் கலந்து விடுகின்றனர். சுருக்கமாகக் கூறின் பெண்ணாக மாறி அனைத்து அறிவினையும் உள்வாங்கிக் கொண்டனர்.

*பேரண்டம்*

மனித உடலில் இடம்பெறுபவை அனைத்தும் பேரண்டத்தின் முன்மாதிரி ஆகும். மனித உடலை அகம் என்றும் பேரண்டத்தைப் புறம் என்றும் தந்திரம் வகைப்படுத்தியது. இதில் இருந்து தன்னுள் உறையும் சக்தியை வளர்ப்பதன் வாயிலாகப் பேரண்டத்தின் சக்தியைத் தனக்குச் சாதகமாக மாற்றிக் கட்டுப்படுத்த முடியும்; பேரண்டத்தில் உள்ளவற்றைக் கட்டுப்படுத்துவதன் வாயிலாகத் தன்னுள் உறையும் சக்தியை வளர்க்க முடியும் என்ற கோட்பாடு உருவானது.

உடலும் உடலில் உள்ள ஒவ்வொரு செல்லும் பேரண்டத்தின் பாகமாகும். பேரண்டத்தை அணுக மூச்சே பாலமாக உள்ளது. மூச்சில் உள்ள சில புள்ளிகளின் வழியாக வேறு ஒரு பரிணாமத்திற்குள் (வேறுபட்ட உணர்வு நிலை) செல்ல முடியும் என்பது தந்திரத்தின் கோட்பாடாகும். நூற்றிப்

பன்னிரெண்டு முறைகளை, அனைத்தும் (பிண்டம் மற்றும் அண்டம்) அறிந்த நிலையைப் பெறுவதற்கான பயிற்சிகளாகத் தந்திரம் கூறியுள்ளது. இப்பயிற்சிகளில் ஈடுபட்டு வெற்றி பெற்றவர்கள் சித்தர்கள் எனப்பட்டனர். இவர்கள் வானில் பறப்பது, நீரில் நடப்பது, நெருப்பில் புகுவது முதலான அறுபத்து நான்கு கலைகளில் தேர்ச்சி பெற்றவர்கள். இக்கலைகளுள் சோதிடம், மருத்துவம், மந்திரம், யோகம் முதலியன அடங்கும்.

*உடல் பற்றிய உண்மைகள்*

சித்தர்களின் உச்சகட்ட நோக்கம் தந்திரப் பயிற்சிகளின் வழி அழியாத உடலைப் பெறுவதாகும். உடலைப் பற்றிய உண்மைகளை அறியும்போதுதான் அமைதிக் கிட்டும். அனைத்து விதமான உளப்பயிற்சிகளுக்கும் உடல்தான் அடித்தளமாகும். உடல் நலமின்றிஎவ்விதச் சாதனைகளும் நிகழ வாய்ப்பில்லை. எனவே சித்தர்கள் உடலைப் பேணுவதில் மிகுந்த அக்கறையுடன் இருந்துள்ளனர்.

உடலில் நதிகள், புனித இடங்கள், சூரியன் முதலான கோள்கள் அனைத்தும் உள்ளது. பூசைசெய்து வழிபடத்தக்க ஆனந்தமான ஓர் இடம் மனித உடலைத் தவிர வேறு எதுவும் இல்லை என்பது சித்தர்களின் முடிவாகும். இதன் காரணமாகவே உடல் நலமுடன் வாழத் தேவையான வழிகளையும், நோயுற்ற உடலில் இருந்து நோயினை நீக்குவதற்கான முறைகளையும் முதன்முதலில் கண்டுணர்ந்தனர். இதற்காக இவர்கள் பல வகையான உபகரணங்களைக் கொண்டு சோதனைகளும் இரசவாத சாதனைகளும் செய்தனர். பரிசோதனை செய்துணராமல் எதையும் வெளியிடும் வழக்கம் இவர்களிடம் எப்போதும் இருந்ததில்லை. இவர்கள் இச்சாதனைகளை மிகத் தொன்மையான காலக்கட்டத்திலேயே நிகழ்த்தியுள்ளனர். இதன் பொருட்டுச் சித்தர்களை உலகின் முதல் அறிவியலாளர் எனலாம்.

பிண்டத்தையும் அண்டத்தையும் இணைத்துப் பார்த்த தந்திரக் கோட்பாட்டின் அடிப்படையில் சோதிடம், மருத்துவம், யோகம், ஞானம் தொடர்பான பல உண்மைகளைக் கண்டறிந்தனர்.

வேளாண்மையில் (பெண்மைக்கோட்பாட்டில்) தொடங்கித் தந்திரமாக வளர்ச்சி பெற்ற இத்தத்துவத்தில் இருந்து சாருவாகம், சாங்கியம், உல்காயதம் ஆகிய தத்துவங்கள் உருவானது. சுக்ரநீதிசாரம், கௌடில்யரின் அர்த்த சாத்திரம், பாகவத புராணம்,

மணி பத்ராவின் நூல்கள், பாணரின் ஹர்சசரிதம் போன்ற நூல்களில் தந்திரிகர்களின் ஆக்கப்பூர்வமான ஒழுக்க மதிப்புகள் குறிப்பிடப்பட்டுள்ளது. அறிவியலுக்கு அடிப்படையான இத்தந்திர நூல்கள் திட்டமிட்டு அழிக்கப்பட்டு உள்ளன. அதனை எதிர்த்தவர்களின் நூல்களில் இருந்தே தந்திரம் குறித்த தகவல்கள் திரட்டப் பெற்றுள்ளன. தமிழ்நாட்டுத் தந்திரிகர் களுக்கும் (சித்தர்கள்) சீனாவிற்கும் இடையேயான தொடர்புகள் அறிவியலை வளர்த்துள்ளது என்றும், தந்திரத்தில் சில நாகரிகமற்ற நடவடிக்கைகள் உள்ளன என்றும் பரப்புரை செய்யப்பட்டுள்ளது. ஆனால் அவை அக்காலச் சூழ்நிலையில் அனைத்துச் சமூகங்களிடமும் காணப்பட்ட நடவடிக்கைகளே ஆகும்.

தந்திரத்தில் அறிவியலுக்கான அனைத்துக் கூறுகளும் இருந்தது எனப் பண்டைய இந்தியத் தத்துவ வரலாற்றை ஆய்வு செய்த சட்டோபாத்தியாயா உலகாயதம் என்ற தனது நூலில் தெளிவுபடுத்துகின்றார்.

இந்திய சரித்திரக் களஞ்சியம் என்ற நூலின் ஆசிரியர் ப.சிவனடி தனது நூலின் இரண்டாம் தொகுதியில் தந்திர நூல்கள் தமிழகத்தில் இருந்து சிந்துவெளி, திபேத், கிழக்கு மற்றும் மேற்காசிய நாடுகளுக்குப் பரவியது என்று கூறுகின்றார். எஹ்ரன் பெலஸ் என்பவர் தனது தாய்மார்கள் எனும் நூலில் தாய்வழி உரிமை முறைகள் இந்தியாவில்தான் முதன்முதலில் தோன்றியது என்றும் இங்கிருந்து உலகம் முழுவதும் பரவியது என்றும் கூறுகின்றார்.

பண்டைய சீனாவை ஆய்வுசெய்த ஜோசப் நிட்ஹாம் தனது **சீனாவின் விஞ்ஞானமும் நாகரீகமும்** என்ற நூலில் தந்திரத்திற்கும் தாவோயிசத்திற்கும் நெருங்கிய ஒற்றுமை உள்ளதையும், இந்தியா சீனாவுக்கிடையே கருத்துப் பரிமாற்றங்கள் ஏற்பட்டுள்ளதையும் குறிப்பிட்டுள்ளார்.

தந்திரத்தில் சோதிடம், மருத்துவம், ஞானம் போன்றவற்றுக்கான அனைத்து அடிப்படைக் கூறுகளும் உள்ளன. இத்தந்திரம் சுமேரிய நாகரிகத்திற்கும் மிக தொன்மையான காலக்கட்டத்தைக் குறிக்கின்றது. அக்காலம் உணவுக்காக வேட்டையாடுவதைத் தொழிலாகக் கொண்டிருந்த காலத்தில் இருந்து மாறி வேளாண்மை செய்யத் தொடங்கிய

காலக்கட்டத்தைக் குறிக்கும். தந்திரம் மிகத் தொன்மையான காலத்தில் நிலவியதற்கான சான்றுகளையும் அது அறிவியலுக்கு அடிப்படையாக இருந்தது என்பதையும் சட்டோபாத்தியாவின் உலகாயதம் என்ற நூல் தெளிவுபடுத்துகின்றது. எனவே பண்டைய தந்திரத்தில் இருந்தே பின்னாளில் உலகம் வானியல், சோதிடம், மருத்துவம் குறித்த அடிப்படையான அறிவினைப் பெற்றுள்ளது.

தந்திரா குறித்த மேற்கூறிய செய்திகளை, கு.கு.ரவி ஓலைச்சுவடிகளும் தந்திராவின் அறிவியல் பங்களிப்பும் என்ற தம்கட்டுரையில் கூறியுள்ளார் (சுவடிப்பதிப்புகளில் உரைவேறுபாடுகள், பக்.170-175).

### சித்தர்களின் சிறப்பு

தமிழ்ச் சமூக வளர்ச்சியில் சித்தர்களின் பங்கு முக்கியமானது. சித்தர்களின் இலக்கிய ஆக்கம் பெரிதும் சமூக நலத்தைக் காப்பதாகவும், வளர்ப்பதாகவும் உள்ளது.

சித்தர்களின் இலக்கிய ஆய்வைச் செய்தவருள் முக்கியமானவர் சாமிசிதம்பரனார். அவர் கருத்து வருமாறு

சித்தர் பாடல்களை ஆழ்ந்து படித்தால் அவர்கள் வைதீக மதத்திற்கு எதிரானவர்களாகவே காணப்படுகின்றனர்; அம்மதக் கொள்கைகளைத் தாக்குகின்றனர். இவர்கள் கடவுள் அன்பர்களாகவே காட்சியளிக்கின்றனர். ஆயினும் உலகாயுதத்தை நாத்திகத்தை அவர்கள் கண்டிக்கவில்லை. ஆன்மா என ஒன்று தனியாக, மதவாதிகள் சொல்லுகின்றபடி அழியாத தனிப்பொருளாக இல்லை என்பதே பல அறிவியல் அறிஞர் கருத்து. சித்தர்களின் கொள்கை இதற்கு ஒத்திருப்பதைக் காண்கின்றோம்.

உலக வாழ்வியலோடு கருத்துக்கனவு செறிவு செய்தவர்கள் சித்தர்கள். இவர்களில் முதலாகத் தோன்றியவர் திருமூலர். அவரது வைதீக சமயச் சார்பு எதிர்ப்பு மிகவும் வலுவுடன் விளங்குவதாக க.கைலாசபதி கூறுகின்றார்.

வேதாந்தச் சார்புள்ள இறைத்தத்துவங்கள் யாவும் காலமே பொய், உடலை விடுத்து உயிரின் ஈடேத்திற்காக உழை என்றே மாயாவாதம் பேசின. இப்போக்கை வன்மையாகக் கண்டித்து மறுத்தனர் சித்தர். தமிழிலே திருமூலர் முதன்முதலாக இவ்வெதிர்க் குரலுக்கு உருவங்கொடுத்தார் எனலாம் (க. கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், ப.140). இக்கூற்று சித்தர்களின் கருத்துச் சார்பு உலகாயதத்தை ஒட்டி அமைகின்றது என்பதைக் காட்டுகின்றது.

திருமூலர் உடலை வளர்த்தேன், உயிரை வளர்த்தேன் என்று உயிருக்கு உடல் முக்கியம் என்பதையும், காயமே இது பொய் எனும் கருத்து முதல்வாதத்திற்கு எதிர்ப்பையும் தெரிவித்தார். ஒவ்வொருவருக்குள்ளும் இறைவனைக் காணமுடியும்.

நந்தவனத்தில் ஓர் ஆண்டி - அவன்
நாலாறு மாதமாயக் குயவனை வேண்டிக்
கொண்டு வந்தானொரு தோண்டி - மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி

எனும் கடுவெளிச்சித்தர் பாடல் மனித வாழ்வின் அனைத்து இயல்புகளையும் எடுத்துரைக்கின்றது (சிவவாக்கியர், சித்தர்பாடல், ப.288).

சித்தர்கள் ஞானம் அடைந்த நிலையில் கடவுளை வணங்க வேண்டியதில்லை என்கின்றனர்.

மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டா
மனமது செம்மையானால் வாயுவை வுயர்த்த வேண்டா
மனமது செம்மையானால் வாதியை நிறுத்த வேண்டா
மனமது செம்மையானால் மந்திரஞ் செம்மை யாமே
(சிவவாக்கியச் சித்தர் பாடல்கள், ப.369)

தமிழ்நாட்டைப் பொருத்தவரையில் சித்தர் தத்துவத்திற் பொதிந்துள்ள அறிவியல் நோக்கிலும், சமுதாய உணர்வே வரலாற்றுடன் விளங்கி வருகின்றது எனும் கைலாசபதி கூற்று (மேலது, ப.158) சித்தர் பாடல்களின் நோக்கையும் போக்கையும் தெளிவுபடுத்துகின்றது. சித்தர்களின் இலக்கியப் போக்கு ஐரோப்பியர் வருகையால் மாற்றம் அடைகின்றது.

### சித்தர்முறை

சித்தர்களின் நூல்களில் உள்ள செய்திகளைப் பார்க்கும்போது அவை அனைத்தும் மேனாட்டு ஆசியா, ஐரோப்பாவின் நாகரிகத்திற்கு நெடுங்காலத்திற்கு முன்னதாகவே ஏற்பட்டதென்று தெரியவருகின்றது. சித்தர்களின் முறையானது அனேக ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே ஏற்பட்டது. அனைத்துத் தந்திரத் தொழில்களிலும், வித்தை நுல்களிலும் சித்தர்கள் மேற்கொண்ட முயற்சிகளும், அறிவின் திறமும் அபாரமானது, ஆன்மசக்தி அடைந்தபின் செய்திகளைத் தெளிவாகத் தெரிந்தபின் சித்தர்களால் எழுதப்பட்டவையே சித்தர் முறைகளாக நமக்குக் கிடைக்கின்றன. சித்தர்களின் ஞானவிளக்கத்தின் அறிவாலும், அனுபவத்தாலும் எழுதிய நூல்களில் உண்மையே அடிப்படையாக உள்ளது. அதனால்

அவை இன்றளவும் சிறந்து விளங்குகின்றது. மேலும் ஒருமித்த சிரத்தையோடு படித்துச் செய்திகளைக் கிரகிக்க வேண்டுமென்று உண்மையாக முயற்சிக்க வேண்டும். இல்லையென்றால் அனேகச் செய்திகள் நம் புலனுக்கு எட்டாத வித்தையாகவே காணப்படும்.

*பஞ்சபூதத் தத்துவம்*

சித்தர்நூல் முறைப்படி உலகத்தில் உள்ள சடப் பொருள்களுக்கு எல்லாம் பஞ்சபூதமே ஆதாரமாக உள்ளது. உடல் அழிந்தால் ஐம்பூதங்களும் வெவ்வேறாகப் பிரிந்து போகும். ஐம்பூதங்களால் ஆக்கப்பட்ட மனித உடம்பும் அது இறந்தவுடன் அவனின்று பிரிந்துவிடும். அம்மனித உடம்பு பின்வருமாறு ஐம்பூதங்களால் ஆக்கப்பட்டுள்ளது.

| | | | |
|---|---|---|---|
| 1. | மண் | - | எலும்பு, சதை, நரம்பு, தோல், மயிர் |
| 2. | தண்ணீர் | - | பித்தம், இரத்தம், விந்து, கசிவு அல்லது கழிவு, வியர்வை |
| 3. | நெருப்பு | - | பசி, தாகம், தூக்கம், அழகு, சோம்பல் |
| 4. | காற்று | - | சுருக்கம், விரிவு, அசைவு |
| 5. | ஆகாசம் | - | வயிறு, இதயம், கழுத்து, தலை இவற்றில் உள்ள இடைவெளிகள் |

உலக உயிர்கள் அனைத்தும் இறுதியில் பஞ்சபூதங்களாக மாறுகின்றன. இப்பூதங்கள் ஒன்றோடொன்று சேர்ந்து சீவஅணுக்கள் ஆகின்றன. இவற்றில் இருந்து உடம்புக்குரிய பொருட்கள் அனைத்தும் ஏற்படுகின்றது. இரண்டாவது இச்சீவ அணுக்களே தங்களுக்கு உள்ள தொழில் இயற்றும் சக்தியால் உடம்பிற்கும் மனத்திற்கும் வேண்டிய அம்சங்களைக் கொடுக்கின்றது. ஆகவே உடம்பின் படைப்புக்கு ஆதாரமான தொழில்களே வாதமாகும்; பாதுகாப்புக்கு வேண்டியதே பித்தமாகும். அழிவுக்கு ஏதுவான தொழிலே கபமாகும். சீவ அணுக்களின் கலப்பினால் முக்குணம் என்ற சத்துவம், இராஜசம், தாமசம் ஆகியவற்றின் தொழில்கள் நடத்தப்படுகின்றது. ஆத்மா, மனது, உடம்பு என்ற மூன்றும் சேர்ந்தது புருசம் எனப்படுகின்றது. இது மனத்தையும் உடம்பையும் தொழில் இயற்றவும் பிரதிபலன் தூண்டவும் செய்யும். உடம்பில் எழும் சக்திக்கு ஆன்மாவே காரணமாகும். இருப்பினும் இது ஒரு பற்றுமின்றி ஒன்றுக்கும் அசையாமல் தனித்து நிற்கும்.

சீவஅணுக்கள் நரம்பில் இருந்து எழும்பி, உடம்பைப் பூரணநிலைக்குக் கொண்டு வருகின்றது. உண்ணும் உணவு அன்னரசமாகி இரத்தத்தைச் சேருகின்றது. அதன் பிறகு அதில்

இருந்து உடம்பில் சதை, கொழுப்பு, எலும்பு, கடைசியாகப் பசையாக, விந்தாக மாறும். இத்தொழில்கள் தொடர்ந்து நடைபெறும்போது வாதபித்தகபம் என்ற முப்பிணிகள் தோன்றுகின்றன. வாதபித்தகபம் ஆகியவை உடம்பைக் காத்தலால் இவற்றை ஆதாரத் தாதுக்கள் என்பர். இவை தன்நிலை மாறும்போது அதாவது கெடும்போது உடல் சதைபாகங்கள் நல்ல நிலையில் இருக்காது.

மனிதனுக்குள் சூக்கும சக்திகள் மூளையிலும், முதுகுத் தண்டின் கயிற்றுக்குள்ளும் இருக்கும். இதுவே மனிதனுக்கு உள்ள மூச்சு (பிராண) சக்தியாகும். இம் மூச்சு சக்தியாகிய வாதத்தோடு பித்த கபம் கூடினால் முப்பிணி உண்டாகும். அதுபோது திரிதோசத்தின் காரணம், குறிகள், குணங்கள் ஆகியன அறிந்து இவற்றைச் சரியான நிலைக்குக் கொண்டுவருதல் வேண்டும்.

***நோய்க்கான காரணம்***

காலம், அறிவு, புலன் இவற்றின் தொழில்கள் குறையின்றி இருந்தால் உடல் நலமாக இருக்கும். எனவே நோய் என்பது உடல்நோய், மனநோய் என இரண்டு வகைப்படுகின்றது. ஒன்றே மற்றொன்றுக்குக் காரணம். அதாவது மனநோய் உடல் நோய்க்கு இடங்கொடுக்கும். இவ்விரண்டுக்கும் உடலின் கூறுபாடே ஆதாரமாக உள்ளது. மேலும் பரம்பரை வழியாயும் நோய் ஏற்படும். இது சித்தமுறைப்படி முற்பிறவி அல்லது முன்னோர் செய்த வினைப்பயன்களால் ஏற்படுவதாகும். காலச்சக்கரத்தில் அறியக் கூடாத காரணங்களால் தாய் குழந்தைகளை இது பிற்காலத்தில் தாக்கும்.

**சித்தர் நூல்களின் சிறப்பு**

மனிதன் மனத்தினால் அதிகமாகத் தூண்டப்படுகின்றான். ஆன்மா மனத்தின் மூலசக்தியின்வழி இயங்குவதால் அதிக வலிமை அடைகின்றது. சித்தர் நூல்களில் உள்ள உண்மைகள் யாவும் அவர்கள் தியானத்தால் கண்டறிந்தவையாகும்.

அண்டமும் பிண்டமும் ஒன்றே அறிந்துதான் பார்க்கும்போது என்று சட்டமுனி நிகண்டில் கூறியுள்ளபடி, மனிதனது இரத்தத்தாது செவ்வாய்க்கோளை அனுசரித்ததாகும். ஆத்மநிலைகள் சுக்கிரனுடைய ஆதரவை ஒட்டி நிற்கும்.

சித்தர் முறைப்படி, மனிதனானவன் ஐம்பூத அம்சம்; கோள் அம்சம்; பிரகிருதியின் மூலத்தில் உண்டாகி உடம்பில் உள்ள ஏழு தத்துவங்களையும் கொண்ட ஆன்மாவைப் பொருந்தியவன். இவன் கடவுளுக்கு மிக நெருங்கிய தொடர்புடையவன். ஞானிகள் உலகை ஆட்டுவிக்கும் சக்தி இன்னதென்று அறிந்தவர்கள்.

வெகுதூரத்து நிகழ்வுகளையும் தியான சிருஷ்டியால் கண்டறிபவர்கள். இவர்களது நூல்கள் உலகத்தையே தன்வசமாக்கிக் கொள்ளக்கூடிய சக்தியை மனிதனுக்கு அளிக்கின்றது. இது தெய்வத்தன்மை பொருந்திய உள்மனிதனை இனங்காட்டுகின்றது; மனிதன் நீண்ட காலம் வாழலாம் என்பதைக் கற்பிக்கின்றது. எக்காலத்திலும் எவரும் ஏற்கும் அறிவுடைய தாகவும், முக்காலத்திற்கும் பயனுடையதாயும் உள்ளவையே உண்மையான நூல் என்று கருதப்படும். சித்தர் நூல்கள் உண்மையை ஆதாரமாகக் கொண்டவை. எனவேதான் அவை இன்றும் என்றும் மக்களால் ஏற்றுக் கொள்ளப்படும் தகுதியைப் பெற்றுள்ளன.

## சித்தர்களின் யோகநெறி

யோகம் ஒன்றினால்தான் பிறப்பு, இறப்பை வெகுவிரைவில் சுருக்கமாக முடித்துக் கொள்ள முடியும். இவ்யோகம் குருவால் தொட்டுக் காட்டப்பட வேண்டும். அப்படியில்லாவிட்டால் உடம்பிற்குக் கெடுதி ஏற்படும். ஆனால் மாசற்ற தூய மனத்தினை உடையவருக்கு அவரது மனமே ஒரு குருவாகத் தனக்குள் நின்று காட்டிக் கொடுக்கும். ஏனெனில் தெய்வ பக்தி மேலுக்கு ஓங்கத் தன்னைத் தானறிவதற்கு உண்டான அறிவு விளக்கமும் மேம்பட விருத்தியாகும்.

பஞ்சபூதங்களை யோகிதான் தன்ஆளுகைக்குட்படுத்த முடியும். ஆகவே இயற்கையில் உண்டான பேதங்களையும் மாற்றலாம். சிருஷ்டி வகையில் எவ்விதமான வடிவமும் எடுக்கனாம். தன்னுடைய உடம்பையே போக்கவும் செய்யலாம்.

குண்டலினிக்கு உள்ளே வலியும், நரம்பு சக்தியும் தகுந்தபடி இல்லாவிடில் இதயம் துடிக்காது; நுரையீரல் மூச்சுவிடாது; உடம்பில் இரத்தஓட்டம் உண்டாகாது; மற்ற உறுப்புகளும் தனக்குரிய தொழில்களைச் செய்யாது. மனிதனுக்குள் உண்டான காந்த சக்தியால் உலகத்தாரைத் தன் வசமாக்கவும், ஒரு நாட்டு வகுப்பினர்களைத் தன்ஆட்சிக்கு உள்ளாக்கவும் செய்யலாம். இதற்குச் சாதாரணமான பிராணாயாமத்தால் உண்டான வலிவே காரணமாகும்.

## சித்தர்களின் தத்துவ ஞானம்

உலகப் படைப்பில் மனிதன் ஒருவனுக்கே அனைத்து விதச் சக்திகளும் உடம்பினுள் மறைந்துள்ளது. இச்சக்தியால் மனிதனைக் கடவுளின் ஆற்றலுக்குச் சமமாகவே சொல்லலாம். இச்சக்தி மாயையால் மறைக்கப்பட்டுச் சரியான பாதையில்

செல்லவிடாமல் தடுக்கும். அப்படித் தடுக்காதபடி செய்துவிட்டால் இயற்கை சக்தியானது தனது முழுவலிமையைக் காட்டும். பஞ்சபூதங்கள், ஆறாதார நிலைகள், மூன்று நாடிகள், முக்குணங்கள் இவை முதலான 96 தத்துவங்கள் ஆத்மாவிற்கு ஆதரவாய் உள்ளன.

**சித்தர்களின் மனசிந்தனை**

எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றும் நேர்கோடானால் மனம் நினைப்பது நடக்கும்; கேட்பது கிடைக்கும்; வலிமை பெறும். மனம் தெளிவானால் மனிதனின் வளர்ச்சிக்குத் தடையே இராது. மனத்தைக் கல்தூண்போல் உறுதியாக்க யோகம் தேவை என்கின்றார் இடைக்காட்டுச் சித்தர். ஒரு குறிப்பிட்ட சாதனையை அடைவதற்காக உடம்புக்குப் பயிற்சி தருதல்போல மனத்திற்குப் பயிற்சி தருவது மனப்பயிற்சியாகும்.

ஒரு பொருளின் நுட்பம் அதிகமாக அதிகமாக அதன் சக்தி அதிகமாகும் என்பது அறிவியலாளர் கூற்று. மண்ணைவிட நீர், நீரைவிட நெருப்பு, நெருப்பைவிடக் காற்று, காற்றைவிட வான் நுட்பமானவை; சக்தி மிக்கவை. அதுபோல் உடலைக் காட்டிலும் மனம் நுட்பமானது; ஆற்றல்மிக்கது. உடற்பயிற்சியில் சாதிக்க முடியாதவற்றை மனப்பயிற்சியில் சாதிக்க முடியும். சித்தர்கள் அட்டமாசித்திகளைச் செய்ய முடிந்ததற்குக் காரணம் மனப்பயிற்சியே ஆகும்.

சித்தர்கள் உடல், மனம், ஆன்மா ஆகிய மூன்றும் தூய்மை பெறுவதற்கான வழிமுறைகளைக் கூறி மனப்பயிற்சிக்கு வழிகாட்டி உள்ளனர். மனிதனின் சிந்தனைகள் உயிரணுக்களின் மின்சாரத் தாக்குதல்களாலும், கவர்ச்சிகளாலும் பிறக்கின்றன என்பது இன்றைய அறிவியலாளரின் கண்டுபிடிப்பாகும். உள்ளத்து இயல்புகளில் காணும் வேறுபாடுகளுக்கு ஏற்பவே புறத்தோற்றத்தில் காணும் வேறுபாடுகள் அமையும்.

**சித்தர்களின் அறிவியல் பார்வை**

வாதபித்த ஐய மருந்துகள் இன்றைய அறிவியலோடு ஒத்தவை. தருக்க நெறியில் அமைந்த அறிவியல் எனச் சித்தர்களின் உண்மைகளை இன்றைய அறிவியலாளரும் ஒப்புக் கொள்கின்றனர்.

நாபி எனும் நவபாடாணத்தைப் பசுவின் மூத்திரத்தில் போட்டு 24 மணிநேரம் ஊறியபின் பயன்படுத்தினால் அது இதயத்துடிப்பை ஊக்குவிக்கின்றது. ஆனால் ஊற வைக்காமல் அப்படியே பயன்படுத்தினால் அது இரத்த ஓட்டத்தைக் குறைத்து ஆளைக் கொன்றுவிடுகின்றது. வேதியல் மாற்றம் பசுநீரால் மாறுவதை அறியும்போது சித்தர்களின் சித்து அறிவியல் முறையிலானது என அறிய முடிகின்றது.

அகத்தியர் நயனவிதி 500 என்ற நூல் 26 அறுவை மருந்துக் கருவிகளைப் பற்றிக் கூறுகின்றது. நாகமுனிவர் நயனவிதி என்ற நூல் கண் அறுவைசிகிச்சை பற்றிக் கூறுகின்றது. அறுவைக்கான கருவிகளைப் புளிய இலையைப் போட்டுக் கொதிக்க வைத்த நீரினால் சுத்தம் செய்து இருக்கின்றனர்.

பழனிமலை கோவிலில் உள்ள முருகன் சிலை நவபாடாண மூலிகையால் போகரால் உருவாக்கப்பட்டது. இது அவரின் இராசயன அறிவை எடுத்துக் காட்டுகின்றது. இதனுடைய அபிடேகம், தீர்த்தம் முதலியன கர்ப்ப நோயை விலக்குகின்றது; குழந்தைச் செல்வம் கிடைக்கச் செய்கின்றது. இதுபோன்ற பல நடந்த உண்மைகளை அறியமுடிகின்றது.

சித்தர்களால் கூறப்பட்ட மூலிகை தாவர அறிவாலும், மருத்துவச் சிந்தனைகளாலும் பல அரிய நோய்களுக்கு நிரந்தரத் தீர்வு காணமுடியுமெனப் பல அறிவியல் ஆய்வுகள் மெய்ப்பிக்கின்றன.

உலோகம், தாதுப்பொருள், மூலிகை போன்றவற்றைத் தக்க சமயத்தில் பெற்று உரிய தட்பவெப்ப நிலைகளில் வைத்து உகந்த முறையில் பயன்படுத்தப் பருவங்களைப் பற்றிய அறிவு அவர்களுக்கு இருந்தது. தாவரங்கள் வளரும் புவியைப் பற்றிய அறிவையும் பெற்று இருந்தனர்.

நித்திய கல்யாணி போன்ற இன்னும் பல மூலிகைகள் புற்றுநோயைத் தீர்க்கின்றன, ஆவாரை இரத்தத்தில் உள்ள சக்கரையின் அளவைக் குறைக்கின்றது. இவைபோல் குப்பைவேளை, புதினா, கருநெல்லி, நிலவேம்பு, பொன்முசுட்டை, கீழாநெல்லி போன்ற பல தாவரங்களை ஆய்வு செய்து அதன் மருத்துவப் பண்புகளை வெளிப்படுத்தி உள்ளனர்.

உடம்பில் உள்ள முக்கியமான நரம்பு முடிச்சுகள் பற்றியும், இயல்பு பற்றியும், அமைப்பு பற்றியும் அகத்தியர் சமரச கலைஞானம் என்ற நூல் கூறுகின்றது.

ஒரே ஒரு நரம்பில் காணப்படும் மூவகைத் துடிப்புகளை உணர்ந்து அவற்றை விலங்கு, பறவை போன்றவற்றின் செயலுக்கு

இணையாக ஒப்புநோக்கிச் சித்தர்கள் குறித்துள்ளனர். பல அறிவியல் விளக்கத்தை உள்ளடக்கியதாக நாடி பற்றிய செய்திகள் அமைகின்றன என்கின்றார் அறிஞர் ப.மு. வேணுகோபால்.

*சித்தர்களின் அணுச்செயல் மாற்றம் (மரபணு மாற்றம்)*

ஒரு பொருளின் கருவைச் சிதைப்பதன் வாயிலாக அப்பொருளை வேறுபொருளாக மாற்ற முடியும். நம் உடம்பு ஒளி புகாப்பொருள் ஆகும். இதை யோகப் பயிற்சியால் ஒளிபுகும் பொருளாக மாற்றினால் கண்ணுக்குப் புலனாகா வடிவைப் பெற முடியும். வள்ளலார் ஒரு முறை நீதிமன்றம் வந்தபோது அவரைப் புகைப்படம் எடுத்தனர். படச்சுருளை எடுத்துப் பார்த்தபோது அது வெள்ளையாக இருந்தது என்பர். எனவே கூடுவிட்டுக் கூடு பாய்தல், சிறிய உருவத்தைப் பெரிய உருவமாக்குதல், பெரிய உருவைச் சிறிய உரு ஆக்குதல் போன்ற அட்டமாசித்துகள் இன்றைய மரபணுமாற்றம் செய்யும் முயற்சிகளை ஒத்த கருத்துகளாக உள்ளன.

இன்று பரிசோதனைக் குழாயில் செயற்கை முறையில் குழந்தை உண்டாவதை நாம் கண்கூடாகப் பார்க்கின்றோம். இந்த அறிவியல் உண்மையைச் சித்தர்கள் முதலே கண்டு கூறியுள்ளனர். கருப்பையில் இருந்து குழந்தை பிறப்பது யோனிமுறை. அதுபோல் கும்பம் வழியாகக் குழந்தையை உருவாக்குவது கும்பமுறை ஆகும்.

*கும்பமுறை*

நாதம், விந்து, கந்தகம், ஆண், பெண் பாதரசங்கள் அடங்கிய கற்பத்துடன் மேற்சொன்ன பொருட்களில் ஒன்றாகிய செயநீரால் பாதரசம், கந்தகம், முப்பு ஆகிய மூன்றையும் வெண்ணையாக்கி, கற்பம் உண்டாக்க வேண்டும. அதைக் கும்பம் போன்ற பாத்திரத்தில் வைத்துமூடவேண்டும. கும்பத்தில் சீலைமண் செய்து கும்பத்தின் வாய்க்கு ஊசியால் இரண்டு மூன்று துளைகள் போட வேண்டும். பின் இருட்டறையில் 300 நாள் வைக்க வேண்டும். 300 நாள் ஆனதும் கும்பத்தில் குழந்தை உருவாகும். கற்ப மருந்துகளில் நாதம், விந்து ஆகியவை 4:3 எனும் விகிதத்தில் கலக்கப் பெற்றால் உருவாகும் குழந்தை ஆண், பெண் என்றாகும். இம்முறையில் உருவாகும் குழந்தை மூன்றரையடி உயரம்தான் வளரும். இம்முறையில் உருவான அகத்தியர், குள்ளமானவர் என்பர். அதனால்தான் அகத்தியரைக் கும்பமுனி, கலசமுனி, குள்ளமுனி என அழைக்கின்றனர்.

கலசத்தில் வைக்கப்பட்ட பொருட்களில் ஒன்றான கந்தகத்தின் பெயரே கந்தன் என்று முருகனைக் குறிப்பதாகக் கூறப்படுகின்றது. இதன்வழி இன்றைய Test Tube Baby முறை அன்றே இருந்தது தெரியவருகின்றது. எனவே இன்றைய அறிவியல் வெற்றியை அன்றே சித்தர்கள் அடைந்துள்ளனர்.

இப்படிச் சித்தர்கள் உயிரின் மூலங்களைக் கண்டறிந்து உள்ளனர். அது எந்தப் பொருளின் சேர்க்கையால் உண்டானது எனத் தெரிந்து உள்ளனர். அவற்றைக் கொண்டு கற்பங்களைத் தயாரித்து உள்ளனர். கற்பத்தைக் கொண்டு கும்பமுறையில் குழந்தையை உருவாக்கியுள்ளனர் (தமிழில் மருத்துவ இலக்கியங்கள், ப.320).

> துரும்பைப் பெருந்தூணாகத் தோற்றச் செய்குவோம்
> ஆணைப் பெண்ணும் பெண்ணை ஆணுகும் ஆகச்
> செய்குவோம்
> ஆராவாரித்து எதிராய் நின்று ஆடுபாம்பே (பா.27)

என்று பாம்பாட்டிச் சித்தர் பாடுகின்றார். இப்பாடல் ஆணைப் பெண்ணாக, பெண்ணை ஆணாக மாற்ற முடியும் என்கின்றது. இது இன்று நவீன அறிவியலில் செயற்கை அறுவை மருத்துவம் வழி நடைமுறைப்படுத்தப்படுகின்றது.

சித்தர்கள் எட்டுவகைச் சித்துகளில் வல்லவர்கள். தம் விருப்பப்படி அணுவின் செயல்களை மாற்றிக் காணும் ஆற்றல் பெற்றவர்கள். அறிவியலில் அணுக்கரு சிதைவு Neuclear Fission) எனும் முறையின்படி ஒரு பொருளின் கருவைச் சிதைப்பதன்வழி அப்பொருளை வேறு பொருளாக மாற்ற முடியும் எனக் கண்டுள்ளனர். ஒரு பொருளைப் பற்றிய அறிவும், அப்பொருளின் கருவைப் பற்றிய அறிவும் பெற்றவர்கள் எப்பொருளையும் மாற்றியமைக்கவும் உயிரற்ற பொருளுக்கு உயிரைத் தரவும் முடியும்.

மனிதர்களுக்கு D.N.A. என்ற உயிர்ப்பொருள் இன்றியமையாக் கருவாக உள்ளது. இதுவே இயல்புகளையும் குணங்களையும் நிர்ணயிப்பது என்பது அறிவியலார் கூற்று. எனவே ஒவ்வொரு உயிரின் D.N.A. வைப் பற்றியும் தெளிவாகத் தெரிந்து கொண்டால் D.N.A. கருவை மாற்ற முடியும். அப்படி மாற்றத் தெரிந்து கொண்டால் வேண்டிய வடிவங்களில் மாற்றிக் கொள்ள முடியும். இதைத்தான் திருமூலர் கூடுவிட்டுக் கூடுபாய்தல் என்கின்றார். இறந்த பொருளுக்கு உயிருட்டித் தன்உயிரை அதில் புகுத்துவது. மீண்டும் த்ன்னுடலில் உயிரைச் சேர்ப்பது ஆகிய

அரியகலையில் வல்லவராகத் திருமூலர் விளங்கினார் என்பது திருமூலர் வரலாற்றில் நாம் அறிந்ததாகும்.

சித்தர்களின் உடற்கூறு, உடலியக்கம், மருந்து வேதியியல், நோய்நாடல், நோய் முதல் நாடல் முறை, மருந்தியல், அறுவை மருத்துவம், மருந்து மூலிகையியல், வேதகம், காயகல்ப அறிவியல், யோகமுறை, சாகாக்கலை போன்றன அறிவியல் ஆய்வுக்கு உரியன என்கின்றார் மூலிகைமணி க. வேங்கடேசன்; இன்றைய மேனாட்டு மருத்துவ முறையில் காணப்படும் அறிவியல் நெறிக்கு ஏற்பவும் அமைந்துள்ளது என்கின்றார்; இவற்றுக்கான சான்றுகளையும் தருகின்றார்.

## சித்தர்நெறி

அறிவை அறிவால் அறிந்தவர்கள் சித்தர்கள். மனிதன் உட்பட அனைத்து உயிரினங்களும் நோயின்றி வாழ மருத்துவம் கூறியவர்கள். மனித வாழ்க்கை முறைகளையும், அதன் தத்துவங்களையும் தெளிவாக அனைவருக்கும் புரியும்படி கூறியவர்கள்.

இத்தகைய ஞானநிலையைக் கடுந்தவத்தின் மூலமாகத்தான் எய்தமுடியும்.

> **ஒழிந்தேன் பிறவி யுறவெனும் பாசம்**
> **கழிந்தேன் கடவுளும் நானும் ஒன்றானேன்** (திரு.2958)

இதுவே சித்தர்நெறியாகும். ஆன்மவலிமையே மனத்திற்கு உறுதியான வலிமையைக் கொடுக்கும். அதுதான் உடலுக்கு உறுதியையும் வலிமையையும் கொடுக்கும். அதுதான் மனிதனின் உண்மையான வலிமை. மனிதன் வலிமை பெறுவதற்கும், நேர்மையான வழியில் நடப்பதற்கும் பல நெறிமுறைகளைச் சித்தர்கள் சொல்லியுள்ளனர்.

வாழ்வில் துன்பத்தைத் தவிர்க்கச் சிலவற்றைச் செய்யக்கூடாது. உலகம் எப்படி இருக்க வேண்டும் என்று நாம் தீர்மானிக்கக் கூடாது. நாம் இப்படித்தான் நடக்க வேண்டும் என்ற தேவையற்ற கட்டுப்பாடுகளும் நமக்குத் தேவையில்லை. திருமந்திரம் சித்தர் நெறியைப் பற்றிக் கூறும் சீரியநூல். சித்தர்கள் கண்ட நெறி சிக்கல் பல மிகுந்தது. எனவே அது பற்றி அறிய வேண்டுவது இன்றியமையாததாகின்றது. சித்தர்கள் உண்மையில் வாழ்ந்தனர்; வாழ்கின்றனர். இவர்கள் மனித மேம்பாட்டிற்கு வழிவகுத்தனர். மருத்துவம், சோதிடம், மாந்திரிகம்,

யோகமுறைகள், ஞானம், வாசியோகம், சமயம், தத்துவம், இரசவாதம் போன்ற பல துறைகளைப் பற்றி இவர்கள் பேசியுள்ளனர். இவர்கள் கூறியதைப் பின்பற்றினால் நோயில்லா உலகம், மாசுபடாத வாழ்க்கை போன்ற நல்வழிகளை அடைய முடியும். ஒவ்வொருவர் உள்ளும் சீவன் சிவலிங்கமாக உள்ளது. எனவே மனிதன் தன்னை, தன் ஆற்றலை உணரும்போது அவனே இறைவன் ஆக முடியும் என்ற பேருண்மையை உணர்த்தியுள்ளனர்.

சித்தத்தைச் சிவன்பால் வைத்து, பரம்பொருளையே எப்பொழுதும் தியானித்து, தியானித்துச் சீவனே சிவமாக மாறியவர்கள்; சீவாத்மாவே பரமாத்மா என்பதை உணர்த்தியவர்கள்; உடலில் உயிர் சூட்சுமத்தை அறிந்து சக்தி நிலையைத் தெரிந்து, புரிந்து ஞானநிலையில் பூரணமான சக்தியைப் பெற்றுச் சுவாசத்தின் தன்மையை அறிந்து கொள்ள வேண்டும்; திலர்த காலத்தில் உள்ளொளியைக் காணவேண்டும் என்று கண்டறிந்தவர்களாவர்.

தமிழ்நாட்டுச் சித்தர்கள் சாதி, மத, இன வேறுபாடுகளைக் கடந்தவர்கள். கருவூரார் ஓர் அந்தணர்; இராமதேவர் இசுலாமியர். இவர்கள் மனித நலனில் அக்கறை கொண்டு மூடநம்பிக்கைகளில் இருந்து விடுவிக்க வேண்டும் என்ற விருப்பம் கொண்டவர்கள்; சிவவாக்கியர் சாதியாவதேதடா? சலந்திரண்ட நீரெலாம் என்கின்றார்.

இவர்கள் வெட்டவெளி தன்னை மெய்யென்று உணர்ந்தவர்கள். சித்தர் என்ற சொல் சித்தி பெற்ற அனைவரையும் குறிக்கின்ற சொல்லாக உள்ளது. உலகியலைத் துறந்தவர்கள். உலகியல் நடப்புக்கு மாறானவர்கள். சித்துக்கள் ஆடுவதில் வல்லவர்கள். சித்தத்தைச் சிவன்பால் வைத்தவர்கள். அலைபாயும் சித்தத்தை அடக்கியவர்கள். கூடுவிட்டுக்கூடு பாய்தல் என்ற கலையைக் கற்று அதனைச் செய்து காட்டியவர்கள். உலகம் அனைத்தையும் சிவமயமாகக் கண்டவர்கள். பிறப்பறுத்தவர்கள், யான், எனது என்னும் செருக்கை அறுத்தவர்கள். 36 தத்துவப் படிகளையும் கடந்து உள்ளொளிப் புக்கு சிவம் கண்டு அனைத்தும் சிவமே என்று அறிந்தவர்கள். சிவம் எங்கும் நிறைந்துள்ளது. அதுபோல இவர்களும் எங்கும் நிறைந்திருப்பவர்கள். அனைத்தையும் சிவன் செயலாகவே காண்பவர்கள். இந்தச் சித்தர்கள் எப்பொழுதும் மூச்சை அடக்கித் தியானத்திலே இருப்பர். அறிவுடைய சாத்திரங்களை உணர்ந்திருப்பர். எந்த நாட்டில் எந்த மூலையில் எது நடந்தாலும் அதனை அறியக்கூடிய ஆற்றல் பெற்றிருப்பர். எண்வகைச் சித்துமூலம் கூடுவிட்டுக் கூடுபாயும் கலையை அறிந்தவர்கள்.

*சித்தர்*

சித்தன் என்பவன் மெய் உணர்ந்தவன்; முழுமை அடைந்தவன்; வாழுங் காலத்திலேயே கடவுளைக் கண்டு தெளிந்தவன். இவர்கள் ஆன்மிக வாழ்வை முன்னுக்கு வைத்தனர்; உலக வாழ்வைப் பின்னுக்குத் தள்ளினர். இருப்பினும் உலக மக்கள் உடல், மன நலத்துடன் வாழ வேண்டும் என்ற விருப்பம் கொண்டவர்கள். திருமூலர், சிவவாக்கியர், ஔவை, பட்டினத்தார், பத்ரகிரியார், பாம்பாட்டிச் சித்தர், இடைக்காட்டுச் சித்தர், அகப்பேய்ச் சித்தர், குதம்பைச் சித்தர், கடுவெளிச் சித்தர், அழுகணிச் சித்தர், ஏனாதிச் சித்தர், போகர், கொங்கணநாயனார், சட்டைமுனி, உரோமமுனி, கருவூரார், மதுரை வாலைசுவாமி ஆகியோர் பதினெண் சித்தர் ஆவார். இவர்களில் முதன்மையானவர் திருமூலர் ஆவர். ஆயின் சித்தர் வரிசையில் இன்னும் பலர் வருகின்றனர்.

## திருமூலர் வரலாறு

திருமூலர் என்ற பெயரில் பலர் இருந்துள்ளனர். திருமூலர் கருக்கடை 600இல் காயகற்ப மூலிகள் 108 எனக் கூறப்படுகின்றது. திருமூலர் கருக்கடை 600 இல் காயகற்ப மூலிகைகள் 118 எனக் கூறப்படுகின்றது. திருமூலர் ஒருவராக இருந்தால் இவ்வாறு மாற்றிக் கூறியிருக்கமாட்டார். இதுபோன்ற முரண்பாடுகள் திருமூலர் என்ற பெயரில் பலர் இருந்துள்ளனர் என்பதைத் தெளிவுபடுத்துகின்றது. இருப்பினும் திருமந்திரத்தை எழுதிய திருமூலர்தான் காலத்தால் முற்பட்டவர் என்பதில் ஐயமில்லை. சித்த மருத்துவ நூல்கள் பல திருமூலர் பெயரில் கிடைக்கின்றன. அவற்றின்வழி திருமூலரின் இன்னொரு பெயர் நந்தி எனத் தெரியவருகின்றது. ஆனால் திருமூலரின் ஆசிரியர் நந்தி தேவனார் எனத் திருமூலர் கர்ப்ப வாகடத்தில் வருகின்றது.

உற்ற வியாதி உறுதியாம் என்நந்தி (பா.14)

துறையான எல்லாம், சொன்னாரே என்நந்தி (பா.94)

என்நந்தி வன்மையாம் நோய் குன்மம் (பா.94)

நந்தி உரைத்தது நலமாக கர்ப்பத்தில் (பா.102)

நந்தி என்ற பெயரில் பலர் இருந்துள்ளனர். நந்தி கைலாச சித்தன் எனவும் அவரது மாணவர் மூலர் எனவும் நந்திக் கலைஞானம் கூறுகின்றது. காகபுசண்டரின் மாணவர் நந்தி என்று நந்தீசர் நிகண்டில் வருகின்றது. நந்திதேவர் பெயரில் நிகண்டு, கலைஞானம் என்பன உள்ளன. போகர் சனனசாகரம் எட்டு

வகையான நந்திகளைக் குறிப்பிடுகின்றது (பா.91). 1. அகத்தியர், 2. புலத்தியர், 3. காசிபர், 4. மார்க்கண்டர், 5. அட்டாங்கி, 6. கௌதமன், 7. கலைக்கோட்டு முனிவர், 8. சதானந்தர். இவர்கள் கைலாச வர்க்கம் எனப்படுவோர் ஆவர்.

## திருமூலர் குறித்த புனைகதைகள்

**சதுரகிரி புராணம்** திருமூலர் குறித்த வரலாற்றைப் பின்வருமாறு கூறுகின்றது. வீரசேனன் என்ற அரசன் இறந்து போகின்றான். அவன் மனைவி குணவதி அழுகின்றாள். இறந்த உடலில் திருமூலர் புகுந்து கொள்கின்றார். தன்உடலை மாணவன் குருராசனிடம் காக்கும்படி ஒப்படைக்கின்றார். பாம்பு, நஞ்சைப் பூவில் கக்கியது. அதை நுகர்ந்ததால் இறக்க நேர்ந்தது என்று மன்னன் மனைவியிடம் கூறினான். அவனது நடத்தையில் மனைவி ஐயமுற்றாள்; நடந்தவற்றை அறிந்தாள். திருமூலரின் பழைய உடலை ஆட்களால் அழிக்கின்றாள். வீரசேனனின் உடலில் இருந்த திருமூலர் சதுரகிரியை அடைந்தார்.

### *அகத்தியர் 12000*

வீரசேன மன்னன் உடலை யானை உண்டி மரத்தில் மறைத்து, சம்புகேசுரன் என்பவன் உடலில் புகுந்து, சதுரகிரி குகையில் வாழ்ந்தார். கண்ணபெருமானுக்கும் அருளுரை வழங்கினார் என்று அகத்தியர் 12000 இல் வருகின்றது. மேலும் மார்க்கண்ட முனிவர் திருமூலரைப் பார்த்ததாகவும் உள்ளது.

திருமூலர் காலத்துக்குப்பின் அவர் பெயரைக் குறிப்பிடும் முதல் இலக்கியம் சுந்தரரின் திருத்தொண்டத்தொகை ஆகும். சேக்கிழாரின் பெரியபுராணத்தில், திருமூல நாயனார் புராணம் என்ற பகுதியில் உள்ள 28 பாடல்கள் திருமூலர் வரலாறு பற்றிப் பேசுகின்றன. திருவாவடுதுறை ஆதீன சாத்திரம் சாமிநாத முனிவரின் துறைசைப் புராணத்து திருமூலரைத் தடுத்தாட்கொண்ட அத்தியாயத்தில் உள்ள 76 பாடல்கள் திருமூலர் வரலாற்றை அறிய உதவுகின்றன.

திருவாவடுதுறை புராணத்தில் தடுத்தாட்கொண்ட சருக்கத்தில் திருமூலர் வரலாறு காணப்படுகின்றது. திருவாவடுதுறையில் திருமூலர், அகத்தியர், போகர் ஆகிய சித்தர்களைக் காண்கின்றார். திருமாளிகைத் தேவரும், கருவூர் சித்தரும், போகரின் மாணவர்கள் ஆவர். இப்புராணத்தின்படி திருமூலர், அகத்தியர், போகரின் சமகாலத்தவர் எனலாம்.

திருமூலர் மடங்களை நிறுவினார். உடன் காலிங்கர், அகோரர், திருமாளிகைத் தேவர், நாதாந்தர், பிரமானந்தர்,

போகதேவர் ஆகியோரும் மடங்களை அமைத்தவர்கள். திருமூலரைப் பின்பற்றுவோரின் தோற்றம் பற்றி 18 சித்தர் பெரியஞானக்கோவையில் வருகின்றது. திருமூல வர்க்கத்தார், சபைப் பிரம்பு 5, பட்டை உப்பு கதை, படிகமணி, யோகவேட்டி, படிக இலிங்கம், காதுகளில் செம்புருட்டு, புத்தகம், அக்கமணி, பாதக்குறடு, புலித்தோல் ஆகியவற்றுடன் இருத்தல் வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது

*மாடுமேய்க்கும் மூலன்*

நந்தியெம்பெருமானின் அருள்பெற்ற யோகிகளில் சுந்தரர் ஒருவர் ஆவார். அவர் கயிலாயத்திலிருந்து புறப்பட்டுத் தென்திசையில் இருந்த அகத்திய முனிவரைக் காண விரும்பித் தென்னாடு வந்தார். சிதம்பரத்தில் ஆனந்தக் கூத்தும், திருவாவடுதுறை இறைவனைக் கண்டும் வணங்கினார். வரும்வழியில் மூலன் எனும் மாடு மேய்ப்பவன் பாம்பு தீண்டி இறந்துவிட்டான்.

அதுகண்ட பசுக்கள் இறந்தவன் உடலத்தைச் சுற்றிச் சூழ்ந்து கதற, சுந்தரராகிய அவ்வழியே வந்த யோகியார், மாடுகளின் துன்பத்தைத் துடைக்க எண்ணினார். ஒரு புதருக்குள் தமது உடம்பைப் பாதுகாப்பாக வைத்துவிட்டுத் தமது யோக சக்தியால், இறந்து கிடந்த மூலனது உடம்பில் புகுந்தார். மூலன் எழுந்தான்; மாடுகள் மகிழ்ச்சியடைந்தன; மாலைநேரம் வந்தது; மாடுகள் வீடுநோக்கித் திரும்பின; யோகியும் அவற்றின் பின்னே தொடர்ந்து வந்து, அந்தந்த வீடுகளுக்குள் மாடுகள் புகுந்தவுடன், புறப்பட்டார். மூலனின் மனையாள் உண்மை தெரியாமல் யோகியே தம்கணவன் எனக் கருதிப் பின் தொடர, யோகியாரோ ஒதுங்கி ஒதுங்கிச் சென்றார். **என்னைத் தொடாதே! நீ யாரோ?** என்று சொல்லி அருகிலிருந்த ஆவடுதுறை அரசமரத்தின்கீழ் அமர்ந்து சிவயோகத்தில் ஆழ்ந்துவிட்டார். ஊராரும் மூலன் மனையாளிடம், **உன் கணவன் இல்வாழ்க்கையை வெறுத்துத் துறவியாகிவிட்டான்!** என்று சொல்லித் தேற்றினர்.

யோகியார், மீண்டும் தம்உடலைக் கண்டு முன்பு இருந்தநிலையை அடைய விரும்பினார். அவ்வுடம்பை வைத்த இடத்திற்குச் சென்றார். ஆனால், அவரது உண்மையான உடல் அங்கு இல்லை. இறைவன் அருளிய ஆகமப் பொருளை அருந்தமிழில் வழங்கவே இவ்வாறு செய்தான் என நினைத்துத் திருவாவடுதுறைக்கு வந்தார். அங்கே சிவபெருமான் கோயிலில் உள்ள அரசமரத்தின்கீழ் யோக நிட்டையில் அமர்ந்தார். தெய்வத் திருவருளால் மூலன் உயிர் பெற்றது கொண்டு திருமூலர் என்ற

பெயரைப் பெற்றார். திருமந்திரம் 3000 பாடல்களைப் பாடினார். பின்னர் திருக்கயிலாயம் சேர்ந்தார் என்பது சேக்கிழார் தரும் வரலாறாகும். திருமூலர் என்ற பெயரைப் பெற்ற வரலாறு பற்றிப் பார்த்தோம். இவர் சிவனிடம் மாணவனாக இருந்த நந்தியிடம் உபதேசம் பெற்றதால் குருநாதர் என்ற பெயரும் பெற்றார். இவர் நாளும் சிவனைத் தியானித்துத் திருமந்திரத்தை மாணவருக்குக் கூறியுள்ளார். இவருடைய குரு நந்தி ஆவார்.

**நந்தி அருளாலே மூலனை நாடிப்பின்**
**நந்தி அருளாலே சதாசிவன் ஆயினேன்** (திரு.92)

என்னும் திருமூலரின் பாடல்மூலமே இதனை அறியமுடிகின்றது.

திருமூலர் ஓர் ஆண்டுக்கு ஒரு மந்திரமாக மூவாயிரம் பாடல்களைப் பாடினார். இதைப் பலர் மறுப்பர். இவர் பல ஆண்டுகள் வாழ்ந்ததை,

**ஒப்பில் எழுகோடி யுகம் இருந்தேனே** (திரு.74)

எனவும்,

**இருந்தேன் இக்காயத்தே எண்ணில கோடி**
**இருந்தேன் இராப் பகல் அற்ற இடத்தே**
**இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே**
**இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே** (திரு.80)

எனவும் இவரே பாடி இருப்பதன்வழி அறியமுடிகின்றது. சாதாரணமாக 1500 ஆண்டுகள் வாழக்கூடும் என்று இன்றைய அறிவியல் அறிஞர் கூறுகின்றனர். அப்படிப் பார்த்தால் திருமூலர் ஏன் 3000 ஆண்டுகள் வாழ்ந்து இருக்க முடியாது. தான் நெடுங்காலம் வாழ்ந்த செய்தியைத் திருமூலரே பல பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

இருப்பினும் திருமூலர் 3000 ஆண்டுகள் வாழ்ந்தவர் என்பதற்கு நேரான சான்றுகள் எதுவும் இல்லை. சேக்கிழார், திருமூலரின் வாழ்நாள் 3000 ஆண்டுகள் எனக் காட்டியுள்ளார். இவர், திருமூலரின் வரலாற்றை 28 விருத்தங்களில் முடித்துள்ளார். எனவே சேக்கிழார் காலத்திலேயே திருமூலர் 3000 ஆண்டுகள் வாழ்ந்தவர் என்ற கருத்து இருந்திருக்கின்றது.

இந்நூல் 9 தந்திரங்களையும், 195 உள் தலைப்புகளையும் கொண்டது. இந்நூலில் மந்திரம், தந்திரம் என்ற சொற்கள் இடம்பெறுகின்றன.

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை என்ற பாடல் திருமூலரால் எழுதப்படவில்லை என்று ஆய்வாளர் கூறுகின்றனர். அவரது ஒன்றவன் தானே எனத் தொடங்கும் முதல் பாடல் கடவுள் வாழ்த்துப் பாடலே ஆகும். பாடல்களைக் கலிவிருத்தம் எனும் ஒரே வகையான யாப்பு முறையில் பாடியுள்ளார். ஒவ்வொரு தலைப்பிலும் வரையறையின்றி இரண்டு பாடல்கள் முதல் 100 பாடல்கள்வரை பாடியுள்ளார். மொத்தம் 3047 பாடல்கள் உள்ளன. 3000 பாடல்களே நூலாக்கப்பட்டுள்ளது.

## திருமூலர் காலம்

திருமூலர் வரலாற்றை ஓரளவு அறியப் பெரியபுராணம் துணைபுரிகின்றது. சேக்கிழார் இரண்டாம் குலோத்துங்கன் காலத்தவர். இம்மன்னன் காலம் கி.பி.1113-1150 ஆகும். நம்பியாண்டார் நம்பி திருத்தொண்டர் திருவந்தாதியில் திருமூலர் பற்றிக் குறிக்கின்றார். நம்பி இராசராசன் காலத்தவர் (கி.பி.985-1014). சுந்தரர் தன்திருத்தொண்டத் தொகையில் கூறுகின்றார். இவர் கழற்சிங்கன் என்ற இராசசிங்கன் (கி.பி.685-780) காலத்தவர். திருமந்திரத்தில் சங்கச் சாயலோ, சமயகாலத்துச் சாயலோ இல்லை. இருண்ட காலம் கி.பி.3 முதல் 5 வரை. அக்காலத்தில் தமிழகத்தைப் பல்லவர்கள் (4-7) ஆண்டனர். அவர்கள் வடமொழியை ஆதரித்தனர். திருமூலர் கூறுவது ஆகமாந்தம். இம்முறை கி.பி.4,5 ஆண்டுகளுக்குப் பொருந்தும் என்கின்றார் இராசமாணிக்கனார். எனவே இதுவே திருமந்திரத்தின் காலம் எனக் கருத முடியும். மூலர் காலம் கி.பி.100க்குப்பின் 900க்கு முன் என்று யோகி சுத்தானந்த பாரதியார் கூறுகின்றார். எப்படி இருப்பினும் திருமந்திரம் பிற சைவாகம நூல்களுக்கு ஆதி நூலாக உள்ளமை தெரிகின்றது.

## திருமூலரின் சமயம்

திருமூலர் சித்தர் மரபின் முன்னோடியாவார்.சமயம் என்பதை இறைக்கொள்கை என்று கொள்ளலாம். அனைத்துச் சமயங்களும் தோற்றத்தில் வேறுபட்டவை; ஆனால் இறைவனை அடைய அன்பே அடிப்படை என்பதை அனைத்தும் ஏற்கின்றன. மேலும் அன்பு, கருணை, உயிர் இரக்கம் போன்றவற்றில் ஒன்றுபடுகின்றன. இவரது சமயம் அதாவது இறைக்கொள்கையும் அன்பே சிவம் என்பது ஆகும். இவர் அன்பு என்ற சொல்லை 15 இடங்களில் குறிக்கின்றார்.

இதற்குமுன் இருந்த கொள்கைக்கு இவர் புத்துயிரும் புதுவடிவமும் தந்துள்ளார். அன்பு வடிவான இறைவனை அன்பு

வழிநடந்து அடைய வேண்டும். திருமந்திரத்தில் அன்பு, அருள், கருணை முதலியவை மேலோங்கி நிற்கின்றன. புலால் நீக்கி உண்பவர்க்கல்லது இறைவனை உணர்தல் அரிது என்கின்றார். பிறப்பு பற்றின் காரணமாய் வருவது. பிறப்பால் வருவது பெருந்துன்பம்; பிறவாமையே பேரின்பம். இப்பிறவியில் அனுபவிக்கும் இன்பதுன்பங்களுக்கு வினைப்பயனே காரணமாகும். இந்நூலில் சைவம் முதலான பிறமதக் கொள்கையும் பிற உயிர்க்கின்னா செய்யாமையும், புலால் மறுத்தல் கொள்கையும் வலியுறுத்தப்படுகின்றது. மலநீக்கம் பெற்று இறைவனின் திருவடிப்பேறு பெறும் முத்திக்கான வழிமுறைகளையும், ஆறு அந்தங்களையும் இவர் சிறப்பாக விளக்கியுள்ளார்

திருமூலரின் சிறப்பு

யோகநிலையில் இருந்த திருமூலர், உள்ளே சிவம் விளங்கத் திருநடனம் கண்டு ஒளிமயமாக இருந்தார். இதனை,

தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பிலி கோடி யுகம்இருந் தேனே (திரு.74)

என்று இவர் பாடுவதன்மூலம் பல்லாண்டு காலம் இம்மண்ணில் வாழ்ந்தது தெளிவாகின்றது.

தமிழில் திருமந்திரம் செய்யும் பேறு படைத்தமைக்கு அவர் தவமே முதற்காரணமாகும். இதனை,

பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவம் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே (திரு.81)

என்னும் பாடல் திருமூலரின் தவவலிமைக்குச் சான்றாகின்றது. அதனால் அவர் பெற்ற பயனையும் தெரிவிக்கின்றது. தமிழில் திருமந்திரம் என்னும் ஆகமநூலை இயற்றுவதற்கான இப்பிறவி தவத்தால் விளைந்தது என்பது திருமூலர் கருத்தாகும்.

சித்தர்கள் பலருடைய போற்றுதலையும் பாராட்டுதலையும் பெற்றவர் திருமூலர். அவர்களுள் தாயுமானவர் திருமூலரைச் சிறப்பித்துப் பாடுவது குறிப்பிடத்தக்கது.

எந்நாள் கண்ணி என்னும் தலைப்பில் அமைந்த பாடல்களில் அடியார் வணக்கம் என்னும் பகுதியில் தாயுமானவர் எட்டுபேரைப் புகழ்ந்து பாடுகின்றார். அவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், பட்டினத்தார்,

பத்ரகிரியார், சிவவாக்கியர், அருணகிரியார் ஆகியோராவர். இவர்களோடு திருமூலரையும் போற்றுகின்றார் தாயுமானவர். அவர் ஏக்கத்துடன், திருமூலரின் அருளைப்பெற,

**சக்கர வர்த்தி தவராஜ யோகிஎனும்**
**மிக்கதிரு மூலன்அருள் மேவுநாள் எந்நாளோ**

(தாயுமானவர் பா.7)

என்று பாடுகின்றார். இப்பாடலில் திருமூலர் சித்தர்களுள் **சக்கரவர்த்தி** என உயர்ந்து நின்ற நிலை தெளிவாகின்றது. அத்துடன் அவர் திருமூலரைத் **தவராஜயோகி** என்று பாராட்டுவது குறிப்பிடத்தக்கதாகும்.

## திருமூலரின் யோகநெறி

வடமொழியில் **சாங்கியம்** என்னும் நூல் யோகத்திற்கு அடிப்படையாக விளங்குகின்றது. அதுபோலத் தமிழில் **திருமந்திரம்** தவவாழ்வுக்கு அடிப்படை நூலாகக் காட்சியளிக்கின்றது.

### *யோகம் - சொற்பொருள்*

யோகம் என்னும் சொல் **ஒன்றாகக் கட்டுதல்** அல்லது **ஒன்று சேர்த்தல்** என்னும் பொருள் கொண்டது. இருக்கு வேதம் **ஒன்றுதல், அடக்குதல், புலன்களை வெல்லுதல்** என்னும் பொருள்களைத் தருகின்றது. பக்தியுடன் செயல்களை அர்ப்பணித்தலே யோகம் என்று தெரிவிக்கின்றது உபநிடதம்.

### *அட்டாங்க யோகம்*

முதன்முதலாகத் தமிழில் யோகத்தை விரிவாக விளக்கிக் கூறியவர் திருமூலர் ஆவார்; திருமந்திரத்தின் மூன்றாம் தந்திரத்தில் அட்டாங்க யோகத்தை (எட்டு உறுப்புகளையும்) விளக்குகின்றார். அதில் கேசரியோகம், பரியங்க யோகம், அமுரிதாரணை, சந்திரயோகம் முதலான பிற யோகங்களையும் நன்கு தெளிவாக்குகின்றார். மந்திரயோகத்தை நான்காம் தந்திரத்தில் குறிப்பிடுகின்றார். அட்டாங்க யோகத்தைப் **பிரைச்சதம் எட்டு** என்று திருமூலர் குறிப்பதோடு, கட்டுப்படுத்தப்பட்ட 12 அங்குல மூச்சுக்காற்றைக் கடிவாளமிட்ட பரிக்கு இணையானதாகக் கூறுகின்றார். இனி எட்டு வகை யோகங்களையும் காணலாம்.

**இயமம்:** இயமம் என்பது தீயவற்றைச் செய்யாது ஒழுகுதல் ஆகும். புலன் அடக்கலே தீயன விலக்கலுக்கு வழியாகும். எட்டுத்திசைகளிலும் மழை பொழிந்தபோதும் கொலை, களவு,

பொய் நீங்கி இயமத்துடன் நிற்றல் வேண்டும். பிறர்க்குத் தீங்கு செய்யாமலும் பிறரைத் துன்புறுத்தாமலும் வாழ்வதே இயமம்.

நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் (புறம்.195)

என்று புறநானூறு இதனையே குறிக்கின்றது. எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றினாலும் தீயன விளைத்தலாகாது என்பது இதன் கருத்தாகும்.

திருமூலர் இயம ஒழுக்கங்களாகப் பதினொன்றைச் சுட்டிப் பேசுகின்றார்.

கொல்லான்பொய் கூறான் களவிலான் எண்குணன்
நல்லான் அடக்க முடையான் நடுச்செய்ய
வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கட்காமம்
இல்லான் இயமத் திடையில்நின் றானே (திரு.554)

என்பது திருமந்திரம் ஆகும். இதனை மேற்கொள்பவன் இயமத்தான் ஆவான்.

நியமம்: நியமமாவது நல்லனவற்றையே செய்து ஒழுகுதலாகும். நியமத்தான் கடைப்பிடிக்க வேண்டியவை எனப் பத்துக் குணங்களைச் சுட்டுகின்றார் திருமூலர். அவையாவன:

தூய்மை அருள்ஊண் சுருக்கம் பொறைசெம்மை
வாய்மை நிலைமை வரைதலே மற்றிவை
காமம் களவு கொலையெனக் காண்பவை
நேமிஈ ரைந்து நியமத்த னாமே (திரு.556)

என்பனவாகும். நியமநெறிகளுடன் சிவனை உணர்தல் தலையாயதாகும். நியமநெறியில் நிற்பவன் மேற்கண்ட பத்து வகையானவற்றைக் கடைப்பிடித்தலோடு நில்லாமல், தவங்களையும், விரதங்களையும் மேற்கொண்டு சிவபூசைகளையும் செய்தல் வேண்டும் என்கின்றார் திருமூலர்.

ஆதனம்: ஆதனம் என்பது இருக்கை. யோகம் புரிவதற்குமுன் இருக்க வேண்டிய ஆசனமுறை பற்றியும், அதனால் உண்டாகும் பயன் பற்றியும் திருமூலர் ஆறு பாடல்களில் குறிப்பிடுகின்றார். திருமூலர் எட்டு ஆசனங்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். இறுதியில்,

..... எட்டெட்டுப்
பத்தொடு நூறு பலஆ சனமே (திரு..563)

என்று முடிக்கின்றார்.

சுவத்திகாசனம், பத்மாசனம், பத்திராசனம், குக்குட ஆசனம், சிங்காசனம், கோமுகாசனம், வீராசனம், சுகாசனம் ஆகியவை எட்டு வகையான ஆசனங்களாகும்.

**பிராணாயாமம்:** மேற்சொன்ன ஆசனங்களுள் ஏதாவது ஒன்றினைத் தேர்ந்தெடுத்துக் கொண்ட சாதகன் பிராணாயாமம் செய்வான். பிராணாயாமம் என்பது மூச்சினைக் கட்டுப்படுத்தல் ஆகும். இதனைப் பதினான்கு பாடல்களில் விளக்குகின்றார் திருமூலர். ஐம்புலன்களுக்கும் நாயகனான ஆன்மா சுவாசமாகிய குதிரையென்னும் மூச்சினைக் கட்டுப்படுத்துவதால் பிராணசெயம் ஏற்படும் என்கின்றார். இதற்கு இறையருள் தேவை. இப்பயிற்சியால் உடற்சோர்வு நீங்கிச் சுறுசுறுப்பு உண்டாகும். பிராண செயத்தால் பிறவிகள் நீங்கும். பிராணன் ஒடுங்காதபோது பிறப்பிறப்பில் (பிறப்பு இறப்பு) தள்ளப்படுவார்கள்.

**பிரத்தியாகாரம்:** பிரத்தியாகாரம் என்பது புலனொடுக்கத்தைக் குறிக்கின்றது. அட்டாங்கயோகத்தில் இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் என்பன பூர்வபட்சம் ஆகும். பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன உத்தரபட்சம் எனப்படும்.

பொறிகளைப் புறஉலகப் பொருள்களில் இருந்து துண்டித்துக் கொள்ளவேண்டும் என்பதே இதன் நோக்கம். குண்டலினியின் வெளிப்புற உட்புற இடத்தினைத் திருமந்திரம் விளக்குகின்றது.

**எருவிடும் வாசற் கிருவிரன் மேலே**
**கருவிடும் வாசற் கிருவிரற் கீழே**
**உருவிடும் சோதியை உள்கவல் லார்க்குக்**
**கருவிடுஞ் சோதி கலந்துநின் றானே** (திரு.584)

இவ்வாறு புலனெடுக்கத்துடன் மூச்சைக் கவனித்து இறைச் சிந்தனையுடன் இருப்பின் ஒவ்வோர் ஆதாரத்திலும் அதற்குரிய ஒளி கிட்டும். இச்சிவ ஒளியின் துணையால் சாதகன் இருந்த இடத்திலேயே உலகைக் காண்பான் என்கின்றது திருமந்திரம். சிவஒளி கண்ட சாதகனைத் தேவராக்கும் தன்மையுடையது இப்பிரத்தியாகாரம் என்கின்ற புலனொடுக்கம்.

**தாரணை:** தாரணையாவது தரிக்கச் செய்வது. உள்ளுக்கிழுத்த மனத்தை நிலைபெறச் செய்வது. மனத்தை ஒருமுகப்படுத்துவதே தாரணை. புற நிகழ்ச்சிகளைக் **காணாது காணாக் கண், கேளாச்செவி** என இருப்பவன் காலங்கடந்து வாழும் பாலன் ஆவான்; அவனுக்குப் பிறவியின் வழியை அடைக்கும் சாதனமாக இருப்பது இத்தாரணையாகிய தத்துவம் ஒடுங்கிய தற்பர நிலையே ஆகும்.

தியானம்: தாரணையின் முதிர்ந்த நிலையே தியானம் எனப்படும். தியானம் தாரணையின் அடுத்த படிநிலை. தியான நிலையில் உணர்வுகள் பேரின்பத்தை அளிக்கும் தூய அறிவுச் சுடராய் விளங்கும். புலன்கள் காண ஒண்ணாத முழுமுதற் பொருளைத் தியானநிலையில் உணர முடியும். உருவைக் கண்டு தியானிப்பது சகுனத் தியானம் எனப்படும்; இத்தியானம் அருவத் தியானமான நிர்க்குணத் தியானம் என்பதற்கு வழிவகுக்கும். இதனைத் திருமூலர்,

உருவாய சத்தி பரத்தியானம் உன்னும்
குருவார் சிவத்தியானம் யோகத்தின் கூறே (திரு.598)

என்னும் பகுதியில் உணர்த்துகின்றார். உருவோடு கூடிய சக்தியை எண்ணுவது பரத்தியானம் என்பதும், ஒளிபொருந்திய சிவனை எண்ணுவது சிவத்தியானம் என்பதும் யோகத்தின் படிநிலையாகும்.

சமாதி: உயிர், தன்மலம் நீங்கி, தத்துவங்களைக் கடந்து இறைவனோடு சமம் ஆதலே சமாதியாகும். இது அட்டாங்க யோகத்தின் இறுதி நிலையாகும்.

ஒளியும் ஒலியும் சிரசின்மேல் சகஸ்ரதளத்தில் மிகுந்து விளங்கினால் யோகமான சமாதியில் சீவன் பொருந்தியிருக்கும். நினைத்ததைச் செய்யும் மனம் உள்ளவிடத்துப் பிராணவாயுவும் உண்டு; மனம் நினைக்கவில்லையெனில் வாயுவும் அடங்கும். வாயு அடங்கிய நிலையில் மனத்திற்குச் சமாதி கிடைக்கும். மனமாகிய கயிற்றைக் கொண்டே பிராணனைக் கட்டுதல் வேண்டும்.

யோகியர் புறநாட்டத்தை விட்டு அகநாட்டத்தில் பொருந்தியிருப்பர் என்று திருமூலர் கூறுகின்றார்.

பூட்டொத்து மெய்யிற் பொறிப்பட்ட வாயுவைத்
தேட்டற்ற வந்நிலஞ் சேரும் படிவைத்து
நாட்டத்தை மீட்டு நயனத் திருப்பார்க்குத்
தோட்டத்து மாம்பழந் தூங்கலு மாமே (திரு.624)

என்னும் இப்பாடலில் பூட்டை என்பது கிணற்றுச் சகடையைக் (இராட்டினம்) குறிக்கும். கிணற்றுச் சகடையின் உதவியால் கயிறு மேலும் கீழும் செல்லுதலைப்போல், எண்ண அலைகளால் இயங்கும் பிராணன் கீழும் மேலுமாய் இயங்கிக் கொண்டிருக்கும்.

திருமூலர் குண்டலினியின் வடிவம் பற்றி ஒரு பாடலில் (640) விளக்குகின்றார். அது நான்கு இதழ்களோடு கூடிய மூலாதாரத்திலுள்ள முக்கோண வடிவுள்ளது. இக்குண்டலினி, அபானனின் செயல்கெடுத்துப் பிராணனோடு சேர்ந்து, மூக்குத்

துளைகள்வழி புகுந்து பிரமந்திரம் செல்லும். அவ்வாறு சென்று இறைவனைச் சேருவதே சாந்தம் பொருந்திய சமாதி ஆகும்.

**விந்துவும் நாதமும் மேருவில் ஓங்கிடில்**

**சந்தியி லான சமாதியில் கூடிடும்** (திரு.619)

என்கின்றார்.

**பிற யோகமுறைகள்**

அட்டாங்க யோகங்களே அன்றி வேறு சில யோகங்களைப் பற்றியும் திருமூலர் விளக்கியுள்ளார். அவை கேசரியோகம், அடயோகம், லம்பிகாயோகம், இராசயோகம், பரியங்கயோகம், அமுரிதாரணை, சந்திரயோகம், மந்திரயோகம் ஆகியனவாகும்.

**அட்டமா சித்திகள்**

யோகநெறி நின்று,குற்றமற்ற மனத்தால் இறைவனை நினைத்தால் அட்டமாசித்திகள் என்னும் எண்வகைப் பெரும்பேறுகளை அடையலாம் என்கின்றார் திருமூலர். அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன அட்டமா சித்திகளாகும்.

| | | |
|---|---|---|
| அணிமா | - நுண்மையாதல் | - அணுப்போன்றசூக்குமமாதல் |
| மகிமா | - பருமையாதல் | - மலைபோன்று பெருகுதல் |
| கரிமா | - விண்தன்மை பெறல் | - கனமாதல் |
| இலகிமா | - மென்மையாதல் | - பஞ்சைப் போல் இலேசாவது |
| பிராப்தி | - விரும்பிய செய்தல் | - அனைத்தையும் தன்பால் தருவித்தல் |
| பிராகாமியம் | -நிறைவன்மை | - முழுமையடைந்து இன்ப நிலையில் துய்ப்பது |
| ஈசத்துவம் | - ஆட்சியனாதல் | - தத்துவங்களை விருப்பப் படி மாற்றுதல் |
| வசித்துவம் | - தத்துவங்களில் இரண்டறக் கலத்தல் | - பஞ்சபூதக்கலப்பு |

இவ்வாறு யோக சாதனையில் முதலாண்டு தொடங்கிப் பன்னிரெண்டாம் ஆண்டு ஈறாக அடையப்பெறும் யோகப்பேறுகளைத் திருமந்திரத்தில் கூறியுள்ளார்.

**திருமந்திரத்தின் சிறப்பு**

திருமூலர் அருளிச் செய்தவை மூவாயிரம் பாடல்கள் என்ற வழக்கு இருந்தபோதிலும் அச்சிட்டு வெளிவந்தவை 3047

பாடல்களாகும். அண்ணாமலைப் பல்கலைக்கழகம் திருமந்திரம் 300 என்று நூலை விரிவான உரையுடன் பதிப்பித்துள்ளது. திருமந்திரம் 1000 என்ற நூல் மருத்துவம் தொடர்பானதாகும்.

நந்தியம்பெருமானைச் சிவனாகக்காணும் திருமூலரின் உள்ளக்கிடக்கையும் இதில் வெளிப்படுகின்றது. மக்கள் **தொண்டே மகேசன் தொண்டு** என்பதற்கேற்ப சிவனடியார்களின் தொண்டினைச் சிறப்பாகக் கொண்டாடும் பொருட்டு நடமாடும் கோயிலாகவே சித்திரிக்கும் நூலாகும்.

திருமந்திரம் சைவஆகமநூல் எனினும் அனைத்து மக்களும் ஏற்றுக் கொள்கின்ற சமரச கொள்கை முரசாகும். (உ.ம்.) **ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்** (திரு.2104)

சாத்திரத்திற்குத் திருமந்திரம் தோத்திரத்திற்குத் திருவாசகம் என்று வள்ளலார் புகழ்ந்துரைக்கின்றார். திருமந்திரம் ஆன்ம நூல் மட்டுமின்றி நன்கு தேர்ந்த மருத்துவ நூலாகும். யோக முறைகளைத் தெளிவாக்கும் யோகநூலுமாகும்.

திருமந்திரம் என்பது ஒரு நெறியாகும். அந்நெறியைக் கடைப்பிடிப்பவர்களுக்குத் திருவடிப்பேறு நிச்சயம் உண்டு. மனித மனங்களின் மருளை நீக்குவதற்கு இதுவே மந்திரம். ஆதலால் இறைவனை அடையும் மந்திரமும், தந்திரமும் உள்ளடங்கியது. ஆதலால் இது அறநெறி நூலாகும்.

திருமந்திரமே சிவகதிக்கு வித்து, திருமந்திரமே சிவம் எனக் கீழ்வரும் தனிப்பாடல் கூறுகின்றது.

**திருமந்திரமே சிவகதிக்கு வித்தாம்**
**திருமந்திரமே சிவமாம் - அருமந்த**
**புந்திக்குள்ளே நினைந்துபோற்றும் அடியார்-தமக்குச்**
**சிந்திக்கும் தற்பரமே தான்**

சிவபெருமான், மந்திர வடிவினன் ஆவான்; அவனை அடையும் நெறிகளைக் கூறும் மந்திரநூல் திருமந்திரம் ஆகும். ஆதலால், சிவகதிக்கு வித்தாகும் திருமந்திர நூல், சிவம் என்று இச்செய்யுளில் போற்றப்பட்டுள்ளது.

மக்கள் என்றும் நினைவில் வைத்துப் பயன்பெறுதற்கு உரியனவாய் உள்ள சில அருமையான தொடர்கள், திருமந்திரச் செய்யுள்களில் உள்ள தொடர்கள். இவை அறிவுரைத் தொடர்களாக என்றும் நினைவிற் கொள்ளவேண்டியவை. எடுத்துக்காட்டு:

**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்** (திரு.85)

**ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்** (திரு.2104)
**அன்பே சிவம்** (திரு.270)

விழுமிய பொருளை எளிமையில் எடுத்துரைக்கும் சிறப்பு திருமந்திரத்துக்கு உண்டு. முதல் தந்திரம் 18ஆம் அதிகாரத்தில் **அன்புடைமை** கூறப்படுகின்றது.

அனுபவம் இல்லாதவர் **அன்பு வேறு சிவம் வேறு** என இரண்டு பொருள் என்பர். அன்பின் முதிர்வினால் சிவமாகிய அறிவு விளங்கிய சான்றோர் அன்புதான் சிவத்தை விளங்கும்படி செய்கின்றது என்பதை உணர்ந்தபின் அன்பே வடிவாய் சிவமாய் ஆகியிருப்பார் என்கின்றார்.

திருமுறைகள் பெரும்பாலும் இறைவனைத் தொழும் பக்திப் பாடல்களைக் கொண்டவை. அவற்றில் துதித்தலும் வேண்டுதலுமே பெரும்பாலும் காணப்படும். ஆனால் பத்தாம் திருமுறையாக அமைந்த திருமந்திரத்தில், இறைவனைப் பாடிப் பரவுதல், உயிர்கள் நல்வாழ்விற்கு இன்றியமையாத உடல்நலம் பேணுதல் முதலான செய்திகள் கூறப்பட்டுள்ளது. மேலும் திருமந்திரம் சாத்திரமாகவும், தோத்திரமாகவும், சரித்திரமாகவும் திகழ்கின்றது.

**திருமந்திரத்தின் அமைப்பு**

திருமூலரால் இயற்றப்பட்டது திருமந்திரமாகும். இந்நூல் **திருமந்திரமாலை, தமிழ் மூவாயிரம்** எனவும் வழங்கப்படுகின்றது. இதுவே பத்தாம் திருமுறையாகும். நாற்சீர் அடிகொண்ட கலிவகை யாப்பினால் அமைந்துள்ளது. தந்திரம், மந்திரம், உபதேசம் (ஞானக்கல்வி) என்ற மூன்று பகுதிகளாக அமைந்துள்ளது; செப்பலோசையுடையது. திருமந்திரம் ஒன்பது தந்திரங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. ஏழு பாடல்களையுடைய சிறப்புப் பாயிரம், திருமூலர் வரலாறு கூறுகின்றது.

**முதல் தந்திரம்:**

ஞானோபதேசம் வலியுறுத்தப் பெறுகின்றது. யாக்கை, இளமை, செல்வம், உயிர் ஆகியவற்றின் நிலையாமை, கொல்லாமை, கள்ளுண்ணாமை, அறம், அன்பு, கல்வி, கேள்வி போன்ற எச்சமயத்தார்க்கும் பொதுவான அறங்கள் பேசப்படுகின்றன.

**இரண்டாவது தந்திரம்:**

அன்பர்கட்கு ஆண்டவன் அருள்புரிந்தமை, ஐந்தொழில், சில பல புராணக்கதைகள் இடம்பெறுகின்றன.

**மூன்றாம் தந்திரம்:**

அட்டமாசித்தி, அட்டாங்க யோகம், சோதிடம், யோகப்பயிற்சி பற்றிய செய்திகள், வீட்டு நெறிக்குரிய வழிகள் விளம்பப்படுகின்றன.

**நான்காம் தந்திரம்:**

மந்திர நூற்கருத்துகள், சக்கரங்கள் கூறப்படுகின்றன. சிவசக்தி வழிபாடு சிறப்பிக்கப்பட்டுள்ளது.

**ஐந்தாம் தந்திரம்:**

சரியை, கிரியை, யோகம், ஞானமார்க்கங்கள் பற்றிய செய்திகள், சைவசமய பேதங்கள் காணப்படுகின்றன. சைவ சித்தாந்தம் எனும் சொல் வருகின்றது.

**ஆறாம் தந்திரம்:**

சிவகுரு தரிசனம், திருவடிப்பேறு; ஞானோபதேசம், துறவு, தவம், வேடம், நீறு போன்றன விளக்கப்படுகின்றன.

**ஏழாம் தந்திரம்:**

சிவபூசை, குருபூசை, மகேசுரபூசை, அடியார் பெருமை, போசனவிதி, இந்திரிய அடக்கம், சமாதி, சற்குரு பற்றி இங்கு விளக்கப்படுகின்றன.

**எட்டாம் தந்திரம்:**

காமம், வெகுளி, மயக்கமாகிய மாயை, பக்தியுடைமை, புறங்கூறாமை போன்றன பகரப்பட்டுள்ளன. தத்துவமசி (அது, நீயாய் இருக்கின்றாய்) எனும் மொழி இதிலே இடம் பெறுகின்றது.

**ஒன்பதாம் தந்திரம்:**

ஐந்தெழுத்தின் பேதங்கள், சிவதரிசனம், சித்தி மார்க்கம், முக்தி மார்க்கம் பற்றியனவும் இடம்பெறுகின்றன. தத்துவ ஞானத்தின் நிலை அறிந்தபின் தத்துவமற்ற சிவநிலை பெறுதலை உணர்த்துகின்றது.

சித்தாந்தச் சாத்திரம் தோன்றுதற்குமுன் சைவசமய முதல் நூலாக விளங்கியது திருமந்திரம். சிறந்த ஆகமமாகச் சைவரால் போற்றப் பெறுகின்றது. இந்நூல் தேவார மூவர்க்கும் முந்தியதாகக் கருதப்படுகின்றது.

## முடிவுரை

திருமந்திரத்தைப் பற்றிய அனைத்துச் செய்திகளையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற அவாவினை ஏற்படுத்தும் வகையில் ஒரு சில செய்திகள் இப்பகுதியில் எடுத்துரைக்கப்பட்டன.

# 2. திருமந்திரம் பெயரும் பகுப்பும் சிறப்பும்

## முன்னுரை

திருமந்திர விளக்கம், நூற்பெயருக்கான காரணம், ஒன்பது தந்திரங்கள் கூறும் உண்மைகள், திருமூலரின் காலம், சமயம், நூற்பகுப்பு, நூற்சிறப்பு போன்ற செய்திகள் இரண்டாம் இயலில் விளக்கப்படுகின்றன.

## பெயர்

திருமந்திரம் சைவத் திருமுறைகள் பன்னிரண்டில் பத்தாம் திருமுறையாக வைக்கப்பட்டு உள்ளது. திரு,மந்திரம் என்ற இருசொற்களில் திரு என்பது தெய்வத் தன்மை பெற்றது என்ற பொருளைத் தருகின்றது. எனவே இச்சொல் இறைவனைப் பாடும் நூல்களோடு சேர்த்துக் குறிக்கப்பெறுகின்றது. மந்திரம் என்பதற்கு வேதம், ஐந்தெழுத்து, இரகசியச் செய்திகள், மந்திரச் சக்தி தரும் மந்திர எழுத்துகள் எனப் பல்வேறு பொருள்கள் கூறப் பெறுகின்றன. இங்கு மறைபொருள் என்பதைப் பொருளாகக் கொள்வது பொருத்தமாக இருக்கும்.

தொல்காப்பியத்தில் இச்சொல் இப்பொருளில்தான் வழங்கப்பட்டு உள்ளது.

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப

சொல்லின் பொருளைக் குறைவின்றிச் சொல்லும் ஆற்றல் உடையவர் ஆணையால் சொல்லப்படும். இது ஆன்மஞானம் அற்றவர்களுக்குப் புலனாகாமல் நிற்கும் வேத விழுப் பொருளாகும். இந்நூற்பாவிற்கு விளக்கமாகத் திருவள்ளுவரும் நீத்தார்பெருமையில்,

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்

என்று கூறுகின்றார். இக்குறள் மறைமொழியாகிய திருமந்திரம் என்ற பொருளைத் தருகின்றது. இருவகைப் பற்றுகளை நீக்கி,

ஐம்புலன்களை அடக்கி அனைத்து உயிர்களுக்கும் அருளும் பெரியோர் தம்ஆற்றல் தோன்றச் செயல்படுதல் என்பதன் இதன் பொருளாகின்றது.

எனவே மந்திரம் என்பது பலருக்குப் புலப்படாது மறைந்துள்ள அரிய உண்மைகளைத் தன்னகத்தே பொதித்துள்ள மொழி என்றும் கொள்ளலாம்.

இம்மந்திரம் வினைசூழ்ந்தவரைக் காப்பாற்றத்தக்க இரகசிய மொழியாகும். இது மனத்தை உறுதிப்படுத்தக் கூடியது. மனத்தின் ஆற்றல் அனுபவம், கல்வி, சூழ்நிலை போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டது. துன்பச் சூழலில் இருந்து விடுதலை பெற்று நிறைமனமாக விளங்கத் துணை செய்வதே மந்திரமாகும். இத்தகைய நிறைமனம் உடையவர்களைத் தொல்காப்பியரும், திருவள்ளுவரும் நிறைமொழி மாந்தர் என்கின்றனர்.

திருமந்திரத்தில் 65 பாடல்களில் இச்சொல் இடம் பெறுகின்றது. தந்திரம் 25, குழூஉக்குறிச் சொற்கள் 26, கோயில் 27, பஞ்சாட்சரம் 28 எனச் சில பொருட்களில் திருமந்திரம் குறிக்கின்றது. இருப்பினும் பெரும்பான்மையான இடங்களில் இரகசிய எழுத்துகளாகவே குறிக்கப்பட்டு உள்ளன. எனவே நேரடிப் புரிதலின்றி இலைமறைக் காய்போல் வைக்கப்பட்டுள்ளதை உணரமுடிகின்றது.

**நூற்பொருள்**

இத்திருமந்திரம் கூறும் பொருள் ஆகமம். சிவாகமத்தின் சாரம் என இந்நூலைக் கருதலாம். இதனைத் திருமூலர்,

**நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு**
**புத்தியின் உள்ளே புகப்பெய்து போற்றிசெய்து**
**அந்தி மதிபுனை அரனடி நாடொறும்**
**சிந்தைசெய் தாகமம் செப்பலுற் றேனே** (திரு.73).

என்ற பாடலில் தெளிவுபடுத்துகின்றார். நந்தியின் பாதங்களைத் தலைமேல் கொண்ட, நான் ஈசனின் திருவடியைச் சிந்தை செய்து ஆகமம் கூறினேன் என்பது இதன் பொருள். வழிபாட்டுமுறையில் மேலோர் காட்டிய வழியில் ஆகமம் ஆகிய திருமந்திரம் சொல்ல வந்தேன் என்கின்றார்.

**ஆ - ஞானம்; கா - மோட்சம்; ம - மலநாசம்** எனவே ஆகமம் என்றால் ஆன்மாக்களுக்கு மலநாசம் செய்து மோட்சத்தைத் தருவது எனப்பொருள்படும்.

**ஆ - பாசம்; க - பசு; ம - பதி** எனப் பொருள்பட்டு முப்பொருள் உண்மையை உணர்த்துவது என்றும் பொருள் கூறுவர்.

இச்சொல்லுக்குத் தொன்றுதொட்டு வரும் அறிவு என்றும் பொருள் கூறப்படுகின்றது. வந்தது எனப்பொருள் கொண்டு சிவனிடமிருந்து வந்தது என்றும் சொல்வர். இதனைக் கற்று இதன்வழி நிற்பாருக்கு இறைவன் அணுக்கராய் (அணுகி) நிற்பான் என்றும் பொருள் கூறுவர். மாணிக்கவாசகரும் ஆகமமாகி அண்ணிப்பான் தாள் வாழ்க! என்கின்றார்.

ஆனால் பழங்காலத்தில் ஆகமம் என்ற சொல் ஞானம் என்ற பொருளில் குறிக்கப்படுகின்றது. பிங்கல நிகண்டும் ஆகமம் ஞானம் எனக் குறிக்கின்றது. எனவே இது இறைவன் நூல், தொன்மையான நூல் என்று கொள்ளலாம்.

திருமூலர் ஆகமம் குறித்து மிகத் தெளிவான விளக்கத்தை முதலில் கூறியவராகின்றார்.

**அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்**
**எண்ணில் இருபத்தெண் கோடிநூ றாயிரம்**
**விண்ணவர் ஈசர் விழுப்பம் உரைத்தனர்**
**எண்ணிநின் றப்பொருள் ஏத்துவன் நானே** (திரு.58)

சிவன் அருளிய சிவாகமம் எண்ணிக்கையற்றது என்பது திருமூலர் கருத்து. எனவே ஆகமங்கள் இருபத்தெட்டுக் கோடி நூறாயிரம் என்கின்றார்; அப்பொருளை ஆராய்ந்து நான் கூறுவேன் என்றும் கூறுகின்றார். இருந்தாலும் ஆகமங்கள் 28 என்னும் எண்ணிக்கையையும் கூறுகின்றார் திரு.68. இந்த 28 ஆகமங்களையும் 28 பேர் கேட்டனர். இவை இறைவனது முகத்தில் இருந்து அருளப்பட்டன என்கின்றார்.

இந்த 28இல் திருமூலர் ஒன்பது ஆகமங்களைத்தான் குறிக்கின்றார். அவை காரணம், காமிகம், வீரம், சிந்தம், வாதுளம், வியாமளம், காலோத்தரம் என்பவை (திரு.73) 28 இல் இடம்பெறவில்லை. திருமூலர் திருமந்திரத்தை ஒன்பது தந்திரங்களாகப் பிரித்துள்ளார். ஒன்பது ஆகமங்களின் அடிப்படையிலும் அமைத்திருக்கலாம் என எண்ண முடிகின்றது.

**பகுப்புமுறை**

தந்திரம் என்ற பெயரில் பிரிவு அமைவதை இந்நூல் ஒன்றில்தான் காணமுடிகின்றது.தந்திரம் என்பது ஒரு நூலின் சிறுபகுதிக்குச் சூட்டப்பட்ட பெயராகும். சிவாகமம், செய்யத்தக்கது, உபாயம், தொழில், படை, மந்திரம் முதலிய பொருள்களில் தந்திரம் எனனும் சொல் வழங்கி வந்துள்ளது. ஒன்பது ஆகமங்களின் கருத்தும் ஒன்பது தந்திரங்களில் கூறப்பட்டு உள்ளது.

*மந்திரம்*

மந்திரம் என்பது கருத்தூன்றலாகிய உபாசனைப் பகுதி. இச்சொல்லானது நினைத்தலையும், காத்தலையும் சேர்த்துக் குறிப்பிடும் ஒரு சொல்லாகும்.

**நினைத்தல் காத்தல் என்பது மந்திரம்**
**நினைத்தல் என்பது மந்திரம்**
**நினைத்தலைக் காத்தல் என்பது மந்திரம்**
**நினைப்பதனால் காக்கப்படுவது மந்திரம்**
**நினைப்பதற்காகவே காக்கப்படுவது மந்திரம்**
**நினைப்பதிலிருந்து காப்பது மந்திரம்**
**நினைத்ததன் கண் காக்கப்படுவது மந்திரம்**
**நினைத்தலுடைய மனத்தைக் காப்பது மந்திரம்**

மந்திரமில்லாத வழிபாடு பலன் தராது என்பது சிவாகமக்கருத்து. அம்மந்திரமும் சிவத்திற் தோன்றியதாகும். அதாவது மனனம் செய்கின்றவர்களை உய்விக்கின்றது எனலாம்.

நினைத்தல் என்பது மனத்தின் தொழில். அப்படி நினைத்தலைத் தொழிலாகக் கொண்ட மனத்தைக் காத்தல் என்பது பொருளாகும். இங்கே காத்தல் என்ற தொழிலானது மனிதனின் நினைத்தல் தன்மையை ஏதேனும் ஒன்றைக் குறித்த மாறுதல் அற்ற நனைவை நிலைநிறுத்துவது. மனத்தை, பிற நினைவுகளினின்று நீக்கி ஒரு நினைவைக் குறித்து இயக்குவது மந்திரம் ஆகும்.

*தந்திரம்*

தந்திரம் என்பது செயல்முறைகளை விளக்கும் கர்மபாகம். தந்திரம், ஆகமம் என்பவை ஒரு பொருட் சொற்கள் ஆகும். ஆகமத்தைப் பொறுத்தவரை அர்ச்சனை என்பதன் நாள் வகை பகுப்பில் ஒன்று. தந்திரம் என்பது பூசைமுறைகளைக் கற்பிக்கும் முதல்நூல் ஆகும். தந் - என்ற சொல்லானது கீழ்கண்ட பொருளில் பயன்படுத்தப்பட்டு வருகின்றது.

சிவாகமம் தந்திரக்கலை, மந்திரக்கலை, உபதேசக்கலை என மூன்று கலைகளாகப் பிரிக்கப்பட்டு உள்ளது. தந்திரக் கலை என்பது சிவாலய நிர்மானம், விக்கிரக அமைப்பு முதலியவற்றைக் குறிக்கின்றது. மந்திரக்கலை என்பது பிரதிட்(ஷ்)டை பூசை முதலியவற்றைக் குறிக்கின்றது. உபதேசக்கலையில் சிவபெருமானோடு இரண்டறக் கலத்தல் ஆகிய ஞான மார்க்கம் கூறப்படுகின்றது. இம்மூன்று கலைகளும்

சிவபெருமானைப் பற்றியே கூறுகின்றன. எனவே சிவாகம சத்திநிபாதர்க்கு உரிய சிறப்புநூல் என்று கூறப்பட்டது.

*தந்திரத்தின் பாகுபாடுகள்*

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன தந்திரத்தின் பாகுபாடுகளாகும்.

***சரியை:*** சரியை என்பது ஆகமத்தைப் பொருத்தவரை விட்டுவிடவேண்டிய அல்லது பின்பற்ற வேண்டிய புறக்காரணங்களில் இயக்கமற்ற செயல் என்பதைக் குறிப்பிடுகின்றது. (எ.டு.)உண்மையைப் பேசுவது, பிறன்மனை விழையாமை, கல் உண்ணாமை போன்ற சில வகை பழக்கங்களைப் பின்பற்றுவதைப் பற்றிக் கூறுவது ஆகும்.

***கிரியை:*** கிரியை என்பது புறக்காரணங்களைப் பயன்படுத்திச் செய்யவேண்டிய செயல்களைக் குறிப்பிடுகின்றது. இங்கே இறைவனைக் குறித்து அல்லது இறைவனாகக் கருதப்படும் பிரதிமையைக் குறித்துச் செய்யப்படும் செயலைக் குறிப்பிடுகின்றது. (எ.டு) இறைவனுக்கு மலர்மாலை இடுவது, ஆடை அணிவிப்பது.

***யோகம்:*** யோகம் என்பது இயல்பாக நடைமுறையில் இருக்கும் மனநிலையில் இருந்து விளக்கி இறைவனை அடைவதற்கு உண்டான மனநிலையால் மாற்றி அமைக்கும் முயற்சியே ஆகும். மனிதனின் இயல்பு நிலை என்பது புலன்வழி நோக்கிச் செல்வது ஆகும். இறைநிலை என்பது மனிதன் தன் எண்ணங்களை அடக்கி உள்நோக்கிச் செல்வது ஆகும். இதுபோன்ற தெளிவுகளைத் தருவதாக யோகம் என்ற சொற்பொருள் அமைகின்றது.

***ஞானம்:*** ஞானம் என்பது சிவாகமங்களின் முடிந்த முடிவாய் கருதப்படும் விளக்கத்தை அனுபவத்தில் உணர முற்படுவதாகும். மேலும் முயன்று அறிவதும் அடைவதும் ஆகும். அதாவது ஒருவர் தன்னிலையில் முயன்று அறிவதும், அடைவதுமாகும்.

**மூவாயிரம் (3000)**

திருமந்திரம் 3000 பாடல்களைக் கொண்டது. அவை ஆண்டுக்கு ஒன்றாகப் பாடப்பட்டன. அவை 9 தந்திரங்களுள் அடங்கும். இந்த ஒன்பதும் 28 ஆகமங்களின் சாரமாக இருத்தல் வேண்டும்.

**பாடல் எண்ணிக்கை**

திருமந்திரப் பாடல்கள் பதிப்புக்குப் பதிப்பு எண்ணிக்கை வேறுபடுகின்றது.

திரு.வி.க. பதிப்பில் 3047 பாடல்கள் உள்ளன. அதன்பின் 22 பாடல்கள் உள்ளன. எனவே 3069 பாடல்கள் காணப்படுகின்றன. திருப்பனந்தாள் மடத்துப் பதிப்பில் 3047க்குமேல் 61 பாடல் சேர்ந்து 3108 பாடல்கள் உள்ளன. சைவசித்தாந்தக் கழகப் பதிப்பிலும், சிதம்பரனார் பதிப்பிலும் 3000 பாடல்கள் உள்ளன. பாடல் அமைப்பிலும் ஓர் ஒழுங்கு இல்லை.

நூல் சிறப்புப்பாயிரம், பொதுப்பாயிரம், தற்சிறப்புப் பாயிரம் என மூன்று பாயிரங்களையும், ஒன்பது தந்திரங்களையும் உடையதாக உள்ளது. ஐந்து கரத்தனை என்ற பாடல் இடைச்செருகல் ஆகும். கணபதி வழிபாடு கி.பி. 7இல்தான் வந்தது. மேலும் 3000 பாடல்களில் ஓர் இடத்திலும் விநாயகரைக் குறிப்பிடவில்லை. இதேபோல் சிறப்புப் பாயிரத்தில் உள்ள ஏழு பாடல்களும் இடைச்செருகலாக இருக்கலாம். காரணம், திருமூலர் படர்க்கை இடத்தில் வைத்துக் கூறப்படுகின்றார்.

> சுந்தர ஆகமம் சொன்மொழிந் தானே (சிறப்பு. 1)
>
> மூலன் உரைசெய்த மூவாயிரந் தமிழ் (சிறப்பு. 4)
>
> முத்தியாம் என்றுநம் மூலன்மொழிந்ததே (திரு. 7)

எனவே இப்பாடல்கள் திருமூலரால் பாடப்படவில்லை என்று தெரிகின்றது.

பொதுப்பாயிரத்தில் 128 பாடல்கள், கடவுள் வாழ்த்து முதல் அவையடக்கம் வரை 11 பகுதிகள் உள்ளன. முதல் 50 பாடல்களில் ஒன்றுமுதல் எட்டாக விரிகின்ற எல்லையற்ற பரம்பொருளைக் கண்ணுதலான், நஞ்சுண்ட பிரான் முதலான சொற்களால் வாழ்த்துகின்றார். சிவனைப் போற்றுவதுடன் சுமார் 14 பாடல்களில் தம்மை உளப்படுத்திக் கூறுகின்றார். 5 பாடல்களில் அறிவுரை கூறுகின்றார்.

**மும்மூர்த்திகளின் முறைமை**

10 பாடல்கள், அயன், அரி, பிரமம் ஆகிய மூவரையும் இணைத்துப் பேசும் சமயப்பொதுமை இப்பகுதியில் காணப்படுகின்றது. என் சமயம் பெரிது என வாதிடும் சமயவாதிகள் சாடப்படுகின்றனர்.

**வேதச்சிறப்பு:**

7 பாடல்கள்; வேதத்தின் சிறப்பு கூறப்படுகின்றது. ரிக் வேதத்தின் பெருமை 2 இடங்களில் குறிக்கப்படுகின்றது.

**ஆகமச்சிறப்பு:**

7 பாடல்கள்; 28 ஆகமங்களைச் சிவன் 28 பேருக்கு அருளினான். அவை சிவன் சக்திக்குச் சொல்ல, சக்தியிடம் இருந்து சதாசிவன், உமாமகேசர், உருத்திர தேவர், மால், நந்தியங் கடவுள் ஆகியோர் பெற்றனர். அவை ஒன்பது கரணம், மகுடம் முதலானவை ஆகும்.

**அந்தணர் ஒழுக்கம்:**

10 பாடல்கள்; சத்தியம், தவம், தான்அவனாதல், புலனடக்கம், அனைத்துயிரையும் ஒன்றாகக் கருதுதல், பாசம் நீக்குதல், அந்தணர் ஒழுக்கம் வேட்கை ஒழிந்த இடம் வேதாந்தம் என்ற விளக்கம் ஆகியன இப்பகுதியில் இடம்பெறுகின்றது.

**ஆகுதிவேட்டல்:**

10 பாடல்கள்; மூலக்கனலை எழுப்பிச் செய்யும் யோகமாகிய வெளி பற்றிக் கூறுகின்றது.

**ஆட்சிமுறை:**

10 பாடல்கள்; ஆட்சித் தலைவனுக்கான கருத்துகளைக் கூறுகின்றது. பசு, மகளிர், அறவோர், துறவிகள் முதலியோரைக் காவலன் காத்தல் வேண்டும். ஆறில் ஒன்றே திறையாகப் பெறுதல் வேண்டும். மக்கள், மன்னன்வழி நிற்பாராதலின் மன்னன் அறவழி நிற்றல் வேண்டும். தீயநெறியில் செல்பவர்களைத் தண்டித்தல் வேந்தர் கடன் எனக் கூறுகின்றது. எனவே இந்நூல் உலகியல்நெறி காட்டுவதாகவும் விளங்குகின்றது.

**வானச்சிறப்பு:**

2 பாடல்கள்; அமுரிதாரணை பற்றிய கருத்துகளைக் கூறுகின்றது. மழையைப் பற்றிப் பாடுவது வெளியில் தெரியும் பொருளாகின்றது. நரை, கரை, மாசு, உரை இல்லா ஆறு எனக் கூறியுள்ளது உட்பொருளை உணர்த்துகின்றது.

**அறஞ்செய்வான் திறம்:**

10 பாடல்கள்; அறங்களில் சிறந்தது அன்னதானம் என்கின்றது; சாப்பிடும்போது ஒரு கைப்பிடி உணவையாவது பிறருக்குத் தர வேண்டும். அதுவும் இயலாது என்றால் இனிய சொற்களை யாவது சொல்ல வேண்டும் என்று கூறுவது நோக்கத்தக்கது. அனைவருக்கும் உதவுங்கள். அறம் செய்தால் உங்களுக்கும், உங்கள் சுற்றத்திற்கும் கேடில்லாத புகழ் கிட்டும் என்றும் கூறுகின்து.

**அறம் செய்யான் திறம்:**

10 பாடல்கள்; அறம் செய்யாவிட்டால் ஈசனை நினைக்க முடியாது; இருமல் முதலிய நோய்களும் வரும் என அச்சுறுத்துகின்றது.

**அவையடக்கம்:**

2 பாடல்கள்; கடவுளின் பெருமையை நான் கூறுவது என் அறியாமையே என்கின்றார்.

**தற்சிறப்புப் பாயிரம்**

இப்பகுதி குரு பரம்பரை, திருமூலர் தம்வரலாறு கூறல் என இரண்டு பிரிவுகளை உடையது. குருபரம்பரையில் உள்ள 6 பாடல்களில் சனகர் முதலிய எண்மர் பற்றியும், மூலன் என்ற பெயர் பெற்றது பற்றியும், நாதன் என்ற பெயர் பெற்றது பற்றியும், மாலங்கன் முதலிய எழுவரும் இவரின் வழிவந்தவர் என்பது பற்றியும் கூறப்படுகின்றது. திருமூலர் வரலாறு எனும் பகுதி 22 பாடல்களை உடையது. இதில் திருமூலர் வரலாறு கூறப்பெறுகின்றது.

**முதல் தந்திரம்:**

உபதேசம் முதல் கள்ளுண்ணாமைவரை 17 உட்பிரிவுகளையும் 166 பாடல்களையும் கொண்டுள்ளது. பதி, பசு பாசத்தின் இயல்பு, சித்தர் பற்றிய விளக்கம், உடம்பே கோயில், இறைவன் அனைத்துயிருமானவன், யாக்கை, செல்வம், இளமை, உயிர் முதலியன நிலையற்றன. கொல்லாமை, புலால் மறுத்தல், பிறன்மனை நயவாமை, மகளிர் இழிவு (5 பாடல்கள்), அன்பே சிவம், அன்பே அவனை அடையும் வழி, அன்புடைமை, அன்பு செய்வாரை அறிவான், கல்வி, ஈசன் திறம் கேட்பதே கல்வி,

நடுவுநிலைமை என்னும் தலைப்புகளில் கூறப்பட்டு உள்ளது.

**இரண்டாம் தந்திரம்:**

208 பாடல்கள்; அகத்தியம் (2 பாடல்கள்) முதல் பெரியாரைத் துணைக்கோடல் வரை 25 உட்பகுதிகள் உள்ளன. பதியில் வீரட்டம் எனும் பகுதியில் சிவன் எண்மரை அழித்தமை கூறப்படு கின்றது. லிங்கபுராணம் (8 பாடல்கள்) மலையரசன் மகள் சக்தி சிவனை வணங்கியது, திரிபுரம் எரித்தது, மால் பிரமன் சிவனின் அடிமுடி தேடியது, இராவணன் கைலையைத் தூக்கியது, சண்டேசுவரர் மணலால் லிங்கம் அமைத்து வழிபட்டது முதலிய புராணக் கதைகள் குறிக்கப்படுகின்றன.

படைப்புமுதல் அருளல்வரை இறைவனின் ஐந்தொழிலையும் 68 பாடல்களில் கூறுகின்றார். மருத்துவக் கருத்து நிறைந்த கருவுற்பத்தி, தீர்த்தம் முதல் மகேசுவரர் நிந்தை இறுதியாக உள்ள பகுதிகளில் சித்தாந்தக் கருத்துகள், பாத்திரம், அபாத்திரம் எனும் பகுதிகளில் ஈகையின் திறம், இறுதிப் பகுதிகளில் பொறையுடைமை, பெரியோரைத் துணைகோடல் போன்றன உள்ளன.

**மூன்றாம் தந்திரம்:**

அட்டாங்க யோகம்முதல் சந்திர யோகம்வரை 21 உட்பிரிவுகளைக் கொண்டது. 333 பாடல்கள் உள்ளன. இப்பகுதி முழுதும் யோகமார்க்கம் பற்றியது. இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்ற எட்டையும் யோகத்தின் அங்கமாகக் கூறுகின்றார். அடுத்த அட்டாங்க யோகப்பேறு எனும் பகுதியில் எட்டு அங்கங்களின் பயனையும், அட்டமாசித்தி எனும் பகுதியில் எட்டு சித்திகளையும் விளக்குகின்றார்.

காயசித்தி உபாயம், காலச்சக்கரம் ஆகியவை யோகவழி நின்றால் உடலுக்கு அழிவில்லை

என்று கூறுகின்றன. கேசரியோகம், பரியங்கயோகம், அமுரிதாரணை, சந்திரயோகம் முதலியன அட்டாங்க யோகத்தோடு தொடர்புடையனவாகும்.

**நான்காம் தந்திரம்:**

1520 பாடல்கள்; அசபை முதலாக நவாக்கரி சக்கரம் வரையில் 13 உட்பிரிவுகளை உடையது. இது சக்கரங்களைப் பற்றிக் கூறுகின்றது. மூச்சுக்காற்று ஹ என்ற ஒலியுடன் வெளிப்படுகின்றது. ஸ என்ற ஒலியுடன் உள் நுழைகின்றது. இதுவே அசபை நிலையாகும். இதுவே ஓரெழுத்து மந்திரம் ஆகும். சக்கரங்களில் காணப்படும் எழுத்துகள் அனைத்தும் இவ்வசபையினின்றே தோன்று கின்றன. எனவே இதை முன்வைத்தார்.

அருச்சனை எனும் பகுதி இச்சக்கரங்களை வழிபடும் முறை பற்றிக் கூறுகின்றது. நவகுண்டம் என்பது மூலாக்கினியைக் குறிக்கின்றது. இது நாற்கோணம், முக்கோணம், அறுகோணம், எண்கோணம், பதுமம் முதலிய அமைப்புகளைக் கூறுகின்றது. மற்ற பகுதிகள் பல்வேறு சக்கரங்களைப் பற்றிக் கூறுகின்றன.

**ஐந்தாம் தந்திரம்:**

156 பாடல்கள்; சுத்த சைவம் முதல் உட்சமயம் வரை 20 பகுதிகளை உடையது. சைவத்தின் நான்கு வகைகளான சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சுத்த சைவம் முதலியன பற்றிக் கூறுகின்றது. அவற்றின் அடிப்படை பொதுமுறைகளான சரியை. கிரியை, யோகம், ஞானம் பற்றியும் அவை சார்ந்துள்ள சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திர மார்க்கம், தாசமார்க்கம் பற்றியும் சொல்லப்படுகின்றது. அடுத்து அவற்றின் முடிவாகிய சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் முதலியவை கூறப்படுகின்றது. உடம்பில் நின்ற கடவுளே

சமயம் கடந்தது என்னும் கொள்கையே இப்பகுதியில் வலியுறுத்தப்படுகின்றது. சுத்த சைவமாவது, சடங்குகளில் நில்லாமல் தலைவனையும், தன்னையும் தளையையும் அறிவது. தளையின் நீங்கித் தலைவனின் திருவடிச் சார்பு பெறுதல் முதலியன பேசப்படுகின்றது.

உட்சமயம் எனும் பகுதி சமயங்களைச் சாடுகின்றது. அனைத்துச் சமயங்களுக்கும் இறை ஒன்றே என்ற பொதுமையைக் கூறுகின்றது. உடம்புள் உள்ள இறையை உணரும் அறிவு பற்றியதாக உள்ளது.

**ஆறாம் தந்திரம்:**

128 பாடல்கள்; சிவகுருதரிசனம் முதல் பக்குவன் ஈறாக 14 உட்பிரிவுகளை உடையது. சைவசித்தாந்தத்தின் இரண்டாம் நிலையைக் கூறுகின்றது. சிவமே அனைத்துக்கும் தெய்வம், அதை உணர்ந்து செய்யும் தரிசனம், திருவடி வணங்கும்பேறு, உண்மை துறவு, தவம், தவசிந்தனை, அதனால்பெறும் தவஞானம், தவவேடம் அதற்குத் தேவையான திருநீறு போன்றவற்றின் இயல்புகள் படிப்படியே விளக்கிச் சொல்லப்படுகின்றன. அபக்குவ ஆன்மாக்களின் அவவேடமும், பக்குவ ஆன்மாக்களின் தவவேடமும் கூறப்படுகின்றன.

**ஏழாம் தந்திரம்:**

407 பாடல்கள்; ஆறாதாரம் முதல் இதோபதேசம் வரை 30 உட்பிரிவுகள்; ஆறு ஆதாரங்களில் குறிக்கப்படுகின்ற 51 எழுத்துகளைப் பற்றி ஆறாதாரம் எனும் பகுதியில் சொல்லப்படுகின்றது.

அண்டம் என்பது உலகம்; பிண்டம் என்பது உடல்; அண்டத்தில் காணப்படும் உருவக் கோயில் பற்றிய கருத்துகளை அண்டலிங்கம் எனும் பகுதியும், பிண்டத்திலுள்ள உளக்கோயில் கருத்துகளைப் பிண்டலிங்கம் எனும் பகுதியும் சுட்டுகின்றன.

சதாசிவலிங்கம், ஆத்மலிங்கம், ஞானலிங்கம், சிவலிங்கம் எனப் பலவகை லிங்கங்கள் கூறப் பெறுகின்றன. ஆறு ஆதாரங்களின் தெய்வமாக ஆறு லிங்கங்கள் சுட்டப்பெறுகின்றன.

*சம்பிரதாயம்* எனும் பகுதியில் *சீவனும்* சிவனும் வேறல்ல, ஒன்றை ஒன்று அறியின் *சீவன்* சிவனாகும் எனும் கருத்துகள் சொல்லப்படுகின்றன. சிவபூசை எனும் பகுதியும் இதே கருத்தைக் கூறுகின்றது. உள்ளம்தான் கோயில் என்பது சுட்டப்படுகின்றது.

குருபூசை என்பது ஆறாதார நிலையில் சாக்கிராதீதத்தில் சிவனை வணங்கும் தன்மை ஆகும். சமாதியை ஞானியரும், யோகியரும் அடையும் நெறி பற்றி, பூரணகுகை நெறிச் சமாதி, சமாதிக் கிரியை ஆகியவை கூறுகின்றன.

விந்துற்பனம், விந்துசயம் என்பன போக காலத்தில் அமையும் பிராண இயக்கம். இதில் விந்தின் இயல்பு, அதனை வெல்லும் இன்றியமையாமை சுட்டப்பெறுகின்றது. அத்துடன் பசுவின் இலக்கணமும், அது இயக்கும் ஐந்து இந்திரியங்களின் இயக்கமும், அவற்றை அடக்கும் முறையும் விளக்கப்படுகின்றன.

உண்மையறிவு பெறா மூடன், வேதாகம நெறி காணாதான், பணிவிலான், பரநிந்தை செய்வோன் முதலிய குணங்களை உடையவன், குருவிற்கான தகுதியற்றவன் என்பனவற்றை அசற்குருநெறி என்ற பகுதியில் காணலாம். வேதாகமம் கூறி, சத்து, அடுத்து இவற்றின் இயல்பை மலமகற்றும் வழி உணர்த்துபவனே உண்மை குரு என்பதைச் சற்குரு எனும் பகுதியில் கூறுகின்றார். உடலில் இறை இருக்க உலகில் தேடும் முறையைக் கூடா ஒழுக்கம் எனும் தலைப்பிலும், பெறுதற்கரிய பிரான் அடிபேணாமல் உலகியலில் இறங்கி அழிவதற்கு இரங்குவது கூறும் பகுதி கேடுண்டு இரங்கல் எனும் தலைப்பிலும் குறிக்கின்றார். இனிப் பிறவாமை என்பனபோல உபதேசங்களை இதோபதேசம் எனும் பகுதியில் கூறுகின்றார்.

**எட்டாம் தந்திரம்:**

உடலிற் பஞ்சபேதம் முதலாகச் சோதனை இறுதியாக 33 உடற்பகுதிகள்; 518 பாடல்கள். தூலஉடலின் இயல்பை உடலில் பஞ்சபூதம், உடல் விடல் கோசங்களைப் பற்றியும், அவத்தை பேதம் (208 பாடல்கள்), ஆன்மா தன்னை அறியும் திறம் (14 பாடல்கள்), ஆறு அந்தங்களின் இயல்பு (37 பாடல்கள்), பதி பசு பாசங்களின் இயல்பு, முக்குற்றம், சோதனை போன்ற பிரிவுகளில் தன்னை அறிதல், சித்தாந்தநெறி முதலியன கூறப் பெறுகின்றன.

**ஒன்பதாம் தந்திரம்:**

குருமடதரிசனம்முதல் சர்வ வியாபிவரை 22 உட்பிரிவுகள்; 400 பாடல்கள். இப்பகுதி சித்தாந்தக் கூறுகளைப் பற்றிக் கூறுகின்றது. இதுவரை கூறிய அனைத்தையும் சுருங்கச் சொல்வதுபோல் அமைந்துள்ளது இப்பகுதியின் சிறப்பாகும். முன்னுள்ள தந்திரங்களில் கூறிய கருத்துகளை இப்பகுதியில் உட்பொருள் உடைய சொற்களால் குறித்துள்ளார்.

நூல் தொகுப்பு

திருமூலர் பெரும் யோகியாக வாழ்ந்தவர். எனவே இவரது பாடல்களை இவரே தொகுத்து இருக்கமாட்டார்; அடியார்களுள் அடியாராக, ஞானிகளுள் ஞானியாக, யோகியருள் யோகியாக, சித்தருள் சித்தராக விளங்கியவர் திருமூலர்.

தொடக்கத்தில் நூலைத் தொகுத்தவர் ஏதேனும் ஓர் அடிப்படையில்தான் தொகுத்து இருக்க வேண்டும். இதில் ஒன்பது ஆகமங்களின் பெயர்கள் வருவதால் ஒன்பது தந்திரம் எனப் பிரித்தனர். நூலின் பொதுவான அமைப்பு ஒன்றுபோல் இல்லை. 100; 50; 30; 20; 10 என்ற முறையில் பாடல்களைக் கொண்டு இதன் பகுதிகள் உள்ளன. ஐந்துக்கும் குறைவான பாடல்கள் உள்ள பகுதிகள் சிதைவுற்ற பகுதிகளாக இருக்கலாம். 716 பாடல்கள் தொடர்ந்தும், விட்டுவிட்டும் அந்தாதிப் போக்கில் உள்ளன. 112 பாடல்களை அறிஞர் ரமண சாஸ்திரி இடைச்செருகல் என்கின்றார்.

திருமந்திரம் என்பதில் திரு என்பது தெய்வத் தன்மை என்று பொருள் தருகின்றது. மந்திரம் என்பது மறை அல்லது

இரகசியமான செய்தி என்று பொருள் தருகின்றது. எனவே இந்நூலைத் தெய்வத் தன்மை வாய்ந்த மறை செய்திகளைக் கூறும் சொல்மாலை என்று பொருள் கொள்ளலாம்.

ஆகமம் என்பது இறைவன் நூல் எனப் பொருள் தருகின்றது. திருமந்திரம் 28 சிவாகமங்களின் சாறைப் பிழிந்து அவற்றை ஒன்பது ஆகமத்துள் அடக்கியுள்ளது. இந்த ஒன்பது ஆகமக் கருத்தே ஒன்பது தந்திரத்தில் 3000 பாடல்களில் பாடப் பெற்றுள்ளது. தந்திரம் என்பது ஆகமம் எனும் பொருளைத் தருகின்றது. திருமூலர் 3000 பாடல்களை இயற்றியிருக்கலாம். ஆனால் இன்று கிடைப்பதில் இடைச்செருகல்களும் உள்ளன.

திருமந்திரம் நம்பியாண்டார் நம்பிக்கும், சேக்கிழாருக்கும் இடைப்பட்ட காலத்தில் தொகுக்கப்பட்டு இருக்கலாம். தொகுத்தவர்கள் ஓர் ஒழுங்குடன் தொகுத்து இருப்பர். இருப்பினும் இடைச்செருகல், சிதைவு என்ற நிலைகளையும் காணமுடிகின்றது. இந்நூல் ஒன்றே குலம் ஒருவனே தேவன், யான்பெற்ற இன்பம் பெறுக வையகம் என்பன போன்ற அரிய வாழ்வியல் நெறிகளைத் தாங்கியுள்ள அனைவரும் படித்துப் பயன் பெற வேண்டிய ஒரு நூலாகும்.

திருமூலரின் நூற்சிறப்பு

தமிழ் இலக்கியங்களில் குறிப்பிடத்தக்க அளவு சிறப்புடைய இலக்கியமாகத் திருமந்திரம் உள்ளது. இது பெயருக்கு ஏற்றபடி மந்திரம்போல் சுருங்கிய சொற்களில் ஆழ்ந்தபொருளைத் திட்பமாகக் கூறுகின்றது. பெரும்பாலான பாடல்கள் வேதாந்த சித்தாந்த சமரசக் கருத்துகளைக் கூறுகின்றன. இந்நூல் வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கான அனைத்து வழிகளையும் காட்டுகின்றது. மிக ஆழமான பொருளை மிக எளிதாக விளக்குகின்றது. மிக எளிதுபோல் பாடல் அமைந்து அது மிக ஆழமான பொருளை உடையதாக இருக்கின்றது. எளிமை, இனிமை, புதுமை, அருமை எனப் பல்வேறு சிறப்புகளைத் திருமந்திரப் பாடல்கள் பெற்றுள்ளன. உவமை, பழமொழி, அந்தாதி, யாப்பு, சந்தம், ஆன்மிக இலக்கியச் சுவை, எளிமை தமிழைப் போற்றுதல், புராணக் கருத்து போன்ற இலக்கண, இலக்கியச் சுவைகள் இந்நூலில் இடம்பெற்றுள்ள முறை பற்றி இப்பகுதியில் காண்போம்.

**உவமை**

திருமந்திரத்தில் உவமை அணியே மிக அதிகம். 18 இடங்களில் இவ்வணி வருகின்றது.

**காய்ந்த இரும்பு கனலை அகன்றாலும்**
**வாய்ந்த கனலென வாதனை நின்றாற்போல்**
**ஏய்ந்த கரணம் துறந்த துரியத்துத்**
**தோய்ந்த கருமத் துரிசக லாதே** (திரு.2309)

கொல்லன் உலைக்களத்தில் காய்ந்த இரும்பினை நெருப்பில் இருந்து வெளியே எடுத்தால் அதன் தீவண்ணம் மாறியதுபோல் இருக்கும். இருப்பினும் அதன் தன்மையாகிய சூடு உள்ளே கரந்து இருக்கும். அதுபோல உலகியலில் இருந்து நீங்கிக் கரணங்கள் இறந்த துரிய நிலையிலும் ஆன்மாவைப் பற்றிய கன்ம வாதனையானது நீறுபூத்த நெருப்பென நிற்கும். இதுவே பாடற்கருத்து. நெருப்பாக உலகியலையும், இரும்பாக ஆன்மாவையும், நெருப்பின் ஒளியாகக் கர்மவினைகளையும் திருமூலர் குறித்துள்ளார். அதுபோல் இவ்வுடலைவிட்டு உயிர் நீங்கினாலும் ஆன்மாவில் நல்வினை தீவினை விலகாது என்கின்றார். பதிவு ஆன்மாவை விட்டு விலகுவதில்லை.

இரும்பு நெருப்பில் இருக்கும்வரை ஒளிவிட்டு அனல்விட்டு நிற்கும். வெளியே எடுப்பின் ஒளியும் இருக்காது. அனலும் விடாது; ஆனால் தொட்டால் உட்கரந்த சூடு சுடும் என்ற அரிய கருத்தை எளிய உவமைவழி விளக்குகின்றார். இதுபோல் சுவையுடைய மிகச் சாதாரண வழக்கில் உள்ளவற்றை எல்லாம் உவமையாகப் பயன்படுத்தி உள்ளார். உவமைவழி பல அரிய கருத்துகளை நயம்பட எடுத்துரைக்கின்றார்.

பழமொழி

உவமையைப் போலவே பழமொழிகளும் கருத்துகளை விளக்குவதற்கு உதவுகின்றன. திருமூலர் சுமார் 11 இடங்களில் பழமொழிகளைக் கையாண்டுள்ளார். அவை பெரும் சிறப்புடையனவாக உள்ளன.

நீர்ப்பையாகிய விந்து நீக்கத்தைக் கெடுத்து அதனை நெற்றிப் பிரதேசமாகிய குளத்தில் (புருவமத்தி) ஒளியகப் பெறுவாரை ஒப்பாக மாட்டான் அகத்தேடல் வேண்டும். கடலில் போட்டுக் குளத்தில் காண முயல்வது போலும் பயனற்றது என்று

கூறுகின்றார். கடலில் போட்டுக் குளத்தில் காணல் என்பது பழமொழி. இதனை உவமையாக்கிக் கூறுவது கவனிக்கத் தக்க சிறப்பாகும்.

கடலிற் கெடுத்துக் குளத்தினில் காண்டல்
உடலுறத் தேடுவார் தம்மையொப் பாரிலர்
திடமுற்ற நந்தி திருவரு ளாற்சென்று
உடலில் புகுந்தமை ஒன்றறி யாரே (திரு.513).

### அந்தாதி

ஒரு பாடலின் முடிவு தொடர்ந்து வரும் பாடலுக்கு முதலாக அமைவது அந்தாதி ஆகும். திருமந்திரத்தில் சுமார் 716 பாடல்கள் அந்தாதிப் பாடல்களாக உள்ளன.

### யாப்பு

இந்நூலைத் திருமந்திர யாப்பு என வழங்குதல் தகும் என யாழ்நூலாசிரியர் விபுலானந்தர் கூறுகின்றார். தொல்காப்பிய இலக்கண முறைப்படி தரவு கொச்சகக் கலிப்பா என்ற பாவகையைச் சார்ந்தது. பிற்கால இலக்கண நூல்கள் இதனைக் கலிவிருத்தம் எனக் குறிக்கின்றன. திருமந்திரத்தில் வரும் பாடல்கள் முழுமையும் கலிவிருத்தம் என்னும் பாவினத்தால் அமைந்துள்ளது. 3000 பாடல்களும் ஒரே வகையான யாப்பில் உள்ளது. இது இந்நூலின் தனிச்சிறப்பாகும். பெரும்பாலும் இயற்சீர் வெண்டளையும் சிறுபான்மை வெண்சீர் வெண்டளையும் அமைந்துள்ளன. கலிவிருத்தம் என்பது ஒரு பாடலில் 4 அடிகள் இருக்கும். ஒவ்வொர் அடியிலும் நான்கு சீர்கள் இருக்கும். முதற்சீரும் மூன்றாம் சீரின் முதலெழுத்தும் ஒன்றிவரும் பொழிப்பு மோனை அடிதோறும் பொருந்தி வருகின்றது.

### சந்தம்

யாப்பொடு தொடர்புடையது சந்தம். இது 34 வகையாக வரும். திருமூலர் பலவகையான சந்தங்களைப் பயன்படுத்தி உள்ளார். தோத்திரநூலில் பல சந்த வகைகளை உடைய பெருமை திருப்புகழுக்கு உண்டு. சாத்திர நூல்களில் அச்சிறப்பைத் திருமந்திரம் பெறுகின்றது. இது சந்த இன்பம் நிறைந்து காணப்படுகின்ற ஒப்பற்ற சாத்திர நூலாகும். இதில் 314 பாடல்களில் வெவ்வேறு சந்த அமைப்பினைக் காணமுடிகின்றது.

### ஆன்மிக இலக்கியச்சுவை

இறை இயல்பை விளக்கும் பாடல்கள் மிகுந்த சுவையுடையன. இறைவன் என்பவன் விளக்குதற்குரிய இயல்புடையவன் அல்லன். அனுபவத்தில் அறிதற்குரியவன். அகத்தின்கண் கொண்டு காண்பதே ஆனந்தம் என்கின்றார் திருமூலர்.

பாலொடு தேனும் பழத்துள் இரதமும்
வாலிய பேரமு தாகும் மதுரமும்
போலுந் துரியம் பொடிபட வுள்புகச்
சீல மயிர்க்கால் தொறுந்தேக் கிடுமே (திரு.2831)

பால், தேன், பழச்சாறு, இன்னபிற மதுரப் பொருள் எல்லாம் கூட்டியுண்ட சுவையைவிட உடலெங்கும் சுவை தேக்கிட நிற்கும் சிவானுபவம் என்கின்றார் திருமூலர். எளிய சொற்களில் எளிய முறையில் கருத்துகளை விளக்குகின்றார். இந்த எளிமைச் சுவையானது நயமும், ஆழமான கருத்தும் பொதிந்தது ஆகும்.

### குழூஉக்குறிச் சொற்கள்

சித்தர் பாரம்பரியத்தின் தலைவராய் விளங்கியவர் திருமூலர். இவர் பல குழூஉக்குறிச் சொற்களைப் பயன்படுத்து கின்றார். இவை அருமையான உட்பொருளை உடையன.

### காட்டுகள்

| | | |
|---|---|---|
| குதிரை இரண்டு | - | இடகலை, பிங்கலை |
| பசுக்கள் | - | ஆன்மாக்கள் |
| அன்னம் | - | சிவன் |
| மலை (மேரு) | - | புருவமத்தி |
| மழை | - | அமுததாரை |
| பாம்பு | - | அஞ்ஞானம் |
| தூய்மணி | - | யரிக்கண்ணில் விளங்கும் அக்கினி. |

### பிற இலக்கியங்கள்

சித்தாந்த சாத்திர நூல்கள் 14 ஆம் திருமந்திரத்திற்குப் பின் எழுந்தவை. சாத்திர நூல்களுக்கு முதல் நூலாக விளங்கும் சிறப்புடையது திருமந்திரமே. எனவே அந்நூல்களில் காணப்படும் கருத்துகள் திருமந்திரக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டவை என்பது பொருந்தும்.

### தமிழைப் போற்றுதல்

திருமூலர் சில இடங்களில் தமிழைப் போற்றுகின்றார். இறைவன் முத்தமிழாகவும் உள்ளான். எல்லாவற்றிலும் உள்ள

இறைவன் இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழிலும் உள்ளான் என்று தமிழையும் வைத்துக் கூறுவது இவரது தமிழ்ப்பற்றைக் காட்டுகின்றது.

**என்னைநன் றாக இறைவன் படைத்தனன்**
**தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே** (திரு.81)

என்ற இவ்வரிகளில் தமிழில் பாடும் அருள் கிட்டியதன் பெருமிதம் தொக்கி நிற்பதை உணரமுடிகின்றது. என்னைப் பாடச் செய்தனன்; தன்னைப் பாடச் செய்தனன்; தமிழில் பாடச் செய்தனன் எனப் பிரித்துப் பொருள்கொண்டால் இவரது தமிழ்ப்பற்று நன்கு விளங்கும்.

**புராணக் கருத்து**

தக்கன் தலையை அரிந்து தீயிலிடல், திருமால் வாமன அவதாரம், கண்ணன் உலகை உண்டுமிழ்தல், முருகன் சூரனை அழித்தல், பாம்பு நிலவைத் தின்னுதல், மலையரசன் மகளாக உமை, திருமால் தங்கை உமை, வயிரவ அவதாரம், பிரமன் தலை ஓட்டில் பிச்சை ஏற்றல், குபேரன் அளகாபுரி வேந்தனாதல் முதலான புராண இதிகாசக் கதைகள் கருத்து விளக்கத்திற்காக எடுத்தாளப்படுகின்றன. இவை சுவையைக் கூட்டுமாறும் உள்ளன. இவர் காலத்துக்கு முன்பே இத்துணைப் புராண இதிகாசக் கதைகள் வழங்கி உள்ளமை தெரிகின்றது.

முப்புரங்களைச் சிவன் அழித்தான் என்பதற்குத் திருமூலர் மும்மலமே முப்புரம் என்கின்றார்.

**முப்புரம் செற்றவன் என்பர்கள் மூடர்கள்**
**முப்புர மாவது மும்மல காரியம்** (திரு.329)

இப்படிப் பல புராணக் கதைகளுக்கு உட்பொருள் விளக்கத்தைத் திருமூலர் தருகின்றார்.

**விலங்குகள்**

மனிதப் பிறவியை நீக்கி வீடுபேறடையச் செய்து, அழிவற்ற ஆன்மாவை இறைவனோடு ஒன்றச் செய்யும் நோக்கத்திற்குத் துணையாக விலங்கு, பறவை, தாவரங்கள், உலோகங்கள், மணிகள் முதலானவற்றை எடுத்துக்காட்டுகளாகக் கொண்டுள்ளார் திருமூலர்.

**பசு:** திருமூலர் தம்கருத்துகளை விளக்க விலங்குகளை எடுத்துக் காட்டுகின்றார். உலகப் பற்றுடைய ஆன்மாக்களைத் திருமூலர்,

**கொல்லையின் மேயும் பசுக்களைச் செய்வதென்** (திரு.2016) என்று கூறி வருந்துகின்றார்.

கன்று தாய்ப்பசுவின் பாலை உண்ணுதல் போன்று சீவன் இறையுணர்வு பெறுதல் வேண்டும். தாய்ப்பசுவைப் பிரிந்த கன்று கதறுவதைப்போலச் சீவன் கதறிச் சிவனை அடைய வேண்டும். பாலில் நெய் கலந்திருத்தலைப் போன்றும், நீரில் பால் கலந்து இருத்தலைப் போன்றும் சீவனில் கலந்துள்ள சிவனை அறிய வேண்டும்.

எருது : வெண்ணிற எருது போன்ற வெண்மையான ஒளியைச் சீவன் தன்னுள் காணவேண்டும். இடகலை, பிங்கலைகளை ஒன்றுபடுத்தச் சுழுமுனை என்னும் கடா அமையும். சுழுமுனை திறக்கச் சகஸ்ரதளமும் திறக்கும். இதுவே இறைவனை அடைய முதற்படி. ஆன்மாவாகிய அமைச்சன், சித்தமாகிய எருதுக்கு அறிவுரை கூற, அச்சித்தம் இறையுணர்வு பெறும். நந்தியம்பெருமான் காளையுருவில் அமர்ந்திருப்பது சிந்திக்கத்தக்கது.

ஆடு : ஆட்டின் மடியில் பால் ஊறும்; அதரில் அன்று. அதுபோல் சிவகுருவின் அருளால் மட்டுமே சீவன் சிவானந்தம் அடைய முடியும். சரியை, கிரியை, மந்திரம் முதலியவற்றால் அடைய முடியாது. யோகம் வேண்டும்.

நாய் : மனம், நாய் போன்றது; அலையும் தன்மையுடையது; அதைக் கட்டுப்படுத்த வேண்டும். நாய் கதிரவனைப் பார்த்துக் குரைப்பதுபோலச் சமயவாதிகள் தத்தம் மதம் பெரிதென வாதம் செய்கின்றனர். இதனால் இறைவனை அடைய முடியாது. மாயவித்தை காட்டிப் பொருள் சேர்க்கும் போலி ஞானிகள் கழுவடி நாய்களைப் போன்றவர்கள்; வினை நீங்கிய சிவஞானிகள் அப்படிப்பட்டவர்கள் அல்ல. உயிருள்ளபோதே பிராணசெயம் பெறாதவர் மடம்புகு நாயினைப் போன்றவர்கள்; நாய் தேங்காயை உருட்டிய கதைபோல.

குதிரை: சூரிய சந்திர கலைகளாகிய குதிரைகளைத் தம்மை அறிந்து இயக்குபவன் இறையடியைச் சேருவான். உடம்பைவிட்டு அகண்டத்தைப் பற்றி இருப்பவர்களுக்குப் பிராணன் ஆகிய குதிரை வசப்பட்டு நிற்கும்; ஐம்புலவேடர்களை அடக்கி வாசியாகிய குதிரையை மேல்நோக்கிச் செலுத்தினால் சீவயாத்திரை செய்து சிவனை அடையலாம்.

யானை: பூதங்கள், தன்மாத்திரைகள், புலன்கள் அனைத்தும் யானைகள். இவற்றை அடக்கி வென்றவனே இறையின்பம் பெறமுடியும். பிரணவமாகிய விந்து

நாதங்களில் யானை போன்ற இந்திரியங்கள் வசப்படும். புலன்களாகிய யானைகள் கரும்பாகிய உடலை அழிக்கும்முன் சீவன் யானை வடிவ இறைவனை மனத்தில் தியானிக்க ஞானம் உண்டாகும். சீவன் குருவருளால் ஆகம ஒளியை உணரும்போது ஐம்பூதங்கள் முதலானவை பரத்தில் ஒடுங்கி விடும்.

**முயல் :** முயலாகிய சிவன் ஞான சாதனையில் தர்க்கம் செய்பவர்களுக்கு அப்பாற்பட்டவன்; சரியை, கிரியை, யோகம் ஆகிய நெறி நிற்பவர் ஞானம் பெற்று அவனை அடைவர்.

**சிங்கம்:** காடாகிய உடலில் புலன்களாகிய சிங்கங்கள் உள்ளன. அவற்றின் பல்லையும் நகத்தையும் வெட்டினால் அவை அடங்கிவிடும். அதுபோல் புலன்களை வெளியே செல்ல விடாமல் அடக்க வேண்டும். அடக்கினால் இறைவனை அடையலாம்.

**புலிகள்:** புலிகள் போன்றவை தசநாடிகள்; ஆன்மாவாகிய புலி பதுங்கினாலும் புலனை வென்றால்தான் மன அடக்கம் வரும்; வந்தால் கோள்களின் இயக்கம் மனிதனைப் பாதிக்காது.

**நரி :** காமவாயு நரியை ஒத்தது; அது தங்கும் கொட்டில் விந்துப்பை. காட்டு நரியின் ஊளை கேட்டு நாட்டு மக்கள் அஞ்சுவது இல்லை. அதுபோல் மனம் ஒன்றுபடாத சாதகன் செய்யும் சரியை முதலானவற்றால் எந்தப் பயனும் இல்லை.

**மான் :** சீவன் மான் கன்றினைப்போல் எப்போதும் இளமையுடன் இருக்கும். சிவனது கருணையும், இளமையும், சக்தியும், அசுத்த மாயையும் மானாக உருவகிக்கப்பட்டு உள்ளன.

*பிறவிலங்குகள்*

காமம், குரோதம் முதலிய ஆறும் ஒட்டகங்கள். புலன்களை அடக்குதல் ஆமை ஓட்டினுள் தன்னை அடக்கிக் கொள்வது போன்றது. நல்ல தவம் செய்யாதவரின் இல்லறம் எப்படி இருக்கும் என்றால், முதலைக்கு அஞ்சி, கரடியின் கையினால் சிக்கியதற்கு ஒப்பாக இருக்கும். மாயையில் சிக்கி, மும்மலங்கள் சூழ விளங்கும் சீவன் பன்றியோடு ஒத்தது; குண்டலினி பாம்பை ஒத்தது; அதைச் சித்ரணி நாடிவழி மேலே ஏற்றினால் அமுதம் பெறுவர்; சிவனை அடைவர்.

சீவனாகிய வெள்ளெலி முக்குண வசப்பட்டு நிற்கக் கூடியது. நம்முடைய சீவன் உடும்புபோலப் பிரணவத்தைப் பற்றிக்

கொள்ள வேண்டும்; பற்றிக் கொண்டு குண்டலினி யோகம் செய்தால் சிவநிலை கிட்டும்.

இதுபோன்று விலங்குகளை முன்வைத்துத் திருமூலர் பல அரிய ஆன்மிகச் சிந்தனைகளை வெளிப்படுத்தி உள்ளார்.

*பறவைகள்*

திருமூலர் ஐம்புலன்களைக் கூடும் பறவைகளாக உருவகிக்கின்றார். இவை உலக மாயையில் சிக்கினால் சீவன் சிவஒளியில் திளைக்க முடியாது. காமம் முதலிய ஆறனையும் ஆறு பறவைகள் என்றும், கீழிறங்கும் நூறு நாடிகளை நூறு பறவைகள் என்றும் திருமந்திரம் கூறுகின்றது. புலன்களாகிய உப பறவைகள் தம்செயல் ஒழிதல் வேண்டும் என்றும் சுட்டுகின்றது. சீவன்கள் பறவைகள்; அவை தங்கும் காடுகளே உடல்கள்.

கோழி : வீரியநீர் சிற்றின்பத்தால் வீணாகின்றது. இது உத்தி வளர்த்த கோழிப் புள்ளிற்கு ஒப்பாகும். ஏனென்றால் அதை அவள் தன்னிடம் வந்தவனுக்கு உணவாக்கி விடுவாள்.

கிளி : கிளியின் மொழி இனிமையானது; அதுபோல் குண்டலினி யோகத்தாலும் இனிமை தோன்றும்.

பருந்து: இல்லறத்தின்போது உலக நினைவுடன் இருக்க வேண்டும். இல்லறக் கடமை முடிந்தபின் சிவசிந்தனையுடன் இருக்க வேண்டும். இப்படிப்பட்ட சீவனைப் பாசம் அணுகாது. அது பனையுள் இருந்த பருந்துக்கு ஒக்கும்.

பருந்தின் நிழல்பட்டு பாம்பு அடங்கும். அது போன்றது ஆன்மாவின் விருப்புவெறுப்பற்ற உபசாந்த நிலை. பாம்பு கடித்தவனுக்குக் கருடமந்திரம் தேவையான ஒன்று. அதுபோல் சீவனுக்கு ஞானகுருவின் நினைவும் தேவையானதாகும்.

வண்டு : உடல் இன்பத்தில் திளைக்காத ஆன்மா பிறவாத வண்டு ஆகும். ஆன்மா, பெட்டைவண்டு; சீவனுக்கு ஒளிகாட்டும் சிவன் ஆண் வண்டு ஆகும். வண்டு மலருக்கு மலர் தாவி அலையக்கூடியது. அன்னம் தான்வாழும் தாமரை மலர்தடாகத்தில் இருந்து மகிழும். அதுபோலக் கிரியையாளர் இறைவழிபாடு செய்தல் வேண்டும்.

**கொக்கு:** கொக்காகிய சீவன் இறையருள் ஆகிய மீன் கிடைக்கும்வரை பாசி படர்ந்த குளமாகிய உலகை நோக்கிக் காத்து இருக்கும். அதுபோல் பிராணாயாமம் செய்யும் சீவன் இறையொளி முழுமையாகக் கிடைக்கும்வரை கொக்குபோல் பொறுத்து இருக்க வேண்டும்.

**குயில் :** இறைவனின் ஆன்மா தாயின் உடலில் வளர்தல் என்பது குயிலின் முட்டையைக் காக்கை வளர்ப்பதற்கு இணையாகும். இதுவே தவநிலையில் தசநாதங்களின் ஒலியாகும். இது குயிலின் குரலை ஒத்தது.

**மயில் :** சக்தியின் பாதங்கள் மயிலின் தோகைபோன்று மிகவும் மென்மையானவை; மையலை உடையது மாயை சக்தியாகும்.

**அன்னம்:** சிவன் சீவனிடம் உள்ள வினைகளைப் பிரிப்பது அன்னம் நீரில் இருந்து பாலைப் பிரிப்பது போன்றதாகும். அல்லவை தேய அறம் பெருகும்.

**முட்டை:** உடம்பானது அழியக்கூடிய முட்டை போன்றது. சூரியசந்திரர்கள் இரண்டு முட்டைகளாகும். இவர்களுடைய கண்களின் உதவியால் உடம்பை அழியாது ஆக்க வேண்டும். இதுவே அண்டபிண்ட தத்துவம் ஆகும்.

இதுபோன்று (அண்டம் - முட்டை), விலங்குகள், பறவைகள் பற்றிய உவமஉருவகங்களின் வாயிலாகத் திருமந்திரம் ஆன்மிகத் தத்துவச் செய்திகளை வழங்குகின்றது.

***தாவரங்கள்***

**நிலம்:** சிவப்பயிர் செழித்து வளர, மனம் எனும் நிலம் பண்பட்டு இருத்தல் வேண்டும்; சுக்கிலம் விளைநிலம்; இடகலை, பிங்கலை ஆகியன கரைகள்; பிராணாயாமம் நீர்; இவற்றின் சிறப்பால் சிவப்பயிர் தழைக்கும். இது தழைக்க ஞான உழவே வேண்டும்; அடயோகமாகிய களருழவு பயன் தராது.

**வித்து:**சிற்றன்பத்தில் ஈடுபடுதல் வித்தினைக் குற்றி சமைத்து உண்பது போன்றதாகும். விந்துசெயம் பெற்று, சீவனுள் இறைநடம் காணல் வித்தினை வறுத்தலாகும். சுரோணிதம், அத்திப்பழம்; சுக்கிலம், அரைக்கீரை வித்து, தாயின் வயிறு,

உலை; அடும் கூழ், உயிர்.

ஞானசாதனையின் முதல் துடிப்பு, வழுதலை வித்து; வைராக்கியத்தின் அடுத்த வெளியீடு, பாகற்கொடி; தத்துவ ஆராய்ச்சி செய்யப் பூசணிமலர் பூக்கும்; இறுதியில் ஞான வாழ்வின் தலைமைப் பேறாகிய வாழைக்கனி கிட்டும்.

உடலாகிய வித்து வளர்ந்து புலனடங்கி இறுதியில் பேரின்பம் அடைந்தால் அவ்வான்மா மெய்வித்து; இல்லை என்றால் பொய்வித்து.

நெல்லின் முளை, ஆன்மா; சூழ்ந்து இருக்கும் உமியும் தவிடும் மும்மலங்கள்.

சீவன் குண்டலினி யோகத்தால் சிரசில் உள்ள சகஸ்ரதள மலரில் சிவனொடு ஒன்றுதல் என்பது கூகை குருந்த மரத்தின்மீது ஏறுவதற்கு ஒப்பானது.

சிவன் ஆலமரம்; ஆல்-அமர்-அம், அதாவது நஞ்சு அமரும் அழகிய கண்டத்தை உடையவன். ஆலகால விடத்தை அருந்தியவன். ஆல் அமர்ந்த குரு தட்சிணாமூர்த்தி.

மலரும் மணமும் இணைந்திருப்பதுபோலச் சிவனும் சக்தியும் ஒன்றி இருப்பர்.

உலகவாழ்வு காஞ்சிரம்பழம் (எட்டி) போன்றது; அதை ஒதுக்குதல் வேண்டும்; பற்று நீங்குதல் வேண்டும்.

உலகில் வாழும் போது, உலக நடப்புகளில் பற்றற்று விளங்கும் மக்கள் புளியுறு புன்பழமும் அதன் தோடும் போன்றவர்களாக ஒட்டாமல் வாழ்தல் வேண்டும்..

சீவன் எட்டியும் வேம்பும்போல் கசந்திடும் உலகபோகம் விட்டு வாழையும் கற்கண்டும் தேனும்போல் இன்பம் செய்யும் சிவபோகத்தை நாட வேண்டும்.

இதுபோன்று தாவரங்களின் அடிப்படையில் திருமந்திரம் பல வாழ்வியல் சிந்தனைகளைத் தருகின்றது.

***உலோகங்கள்***

சுரோணிதம் பொன்னிறம், சுக்கிலம் வெண்ணிறம்; இவ்விரண்டும் அழியாது இருப்பின் சுழுமுனை திறக்கும்.

விந்துசெயம் பெற்றவர் சிவநீரால் தம் உடல் பொன்னிறமாக்கப் பெறுவர். பொன்தகட்டில் நாவக்கரி, சாம்பவி

சக்கரங்களை வரைந்து வழிபட்டால் வளம் பெருகும். செம்பு போன்ற மலம் நிறைந்த உடலில் சிவாயநம என்று செபித்தால் உடல் பொன்னொளி பெறும். இரும்பு பொன்னானபின் மீண்டும் இரும்பாகாது; அதுபோலக் குருவருளால் சிவத்துடன் இணைந்த சீவனுக்கு மீண்டும் பிறவி இல்லை. இவை உலோகங்களின் அடிப்படையில் திருமந்திரம் தரும் செய்திகளாகும்.

*விளையாட்டு*

தாயம் ஆடுவதற்குப் பலகை, காய்கள், கட்டை ஆகியன தேவை. இருப்பினும் மனிதன் இல்லாவிட்டால் ஆட முடியாது. அதுபோல, உடலில் உள்ள புலன்களைக் கட்டுப்படுத்திச் சிவானந்தம் பெறுவதற்குச் சீவன் இல்லாவிட்டால் ஒரு பயனுமில்லை. விளையாட்டைக் கொண்டு திருமந்திரம், உடல் இருந்தால்தான் சீவன் நிலைக்கும் என்பதைத் தெளிவுறுத்துகின்றது.

*நவமணிகள்*

பவளம், மாணிக்கம், மரகதம், முத்து,படிகம் முதலானவற்றால் லிங்கம் செய்து வழிபடலாம். சூரியகாந்தக் கல்லின் வழியாகச் சூரியஒளி பாய்ந்தால் சூழ்ந்த பஞ்சு எரியும்; அதுபோல, சீவன் குருவருளால் பாசத்தைச் சுட்டெரித்துப் பதியுடன் சேர்க்கும்.

இங்ஙனம் விலங்குகள், பறவைகள், தாவரங்கள், உலோகங்கள், விளையாட்டு, நவமணிகள் முதலியவற்றின் வாயிலாகத் திருமந்திரம் பல அரிய வாழ்வியல் சிந்தனைகளை மக்களுக்கு வழங்கி உள்ளது.

முடிவுரை

திருமந்திரம் சிறப்பாக நல்லொழுக்கத்தோடு கூடிய மனித நேயத்தையும், உலகத்தோடு ஒட்ட ஒழுகலையும் பாடறிந்து ஒழுகுதலையும் குறிப்பிடுகின்றது. இதில் ஆன்மநேய ஒருமைப்பாட்டுச் சிந்தனைகள் நிறைந்துள்ளன; பதி,பசு. பாச நிலை, அடியார் நிலை, உடல் இயல்பு, தசகாரிய அமைப்பு, தேகசித்தி, முப்பால், அறம், தத்துவம், சமயம், தோத்திரம், சாத்திரம், மந்திரம், எந்திரம், தந்திரம் போன்ற வாழ்வியல் இறையியல் தொடர்பான பண்பட்ட வரையறைகளைக் கூறுகின்றது.

இந்நூலிற்கான பெயர்க் காரணம், இந்நூலில் இடம்பெற்றுள்ள செய்திகள், தந்திரங்களின் சிறப்பு போன்றவை இப்பகுதியில் ஆய்வு செய்யப்பட்டு உள்ளது. விளக்குவதற்கு அரிய கருத்துகளை எளிய உவமை அணியின் துணையோடு மிக எளிதாகத் திருமூலர் விளக்குகின்றார். இயல்பாகவே நூலின் சொல்லும், பொருளும் நயம் மிக்கதாகத்தான் உள்ளது. இருப்பினும் இந்நூலுள் பயின்று வரும் அணிகள் சிறப்புக்குச் சிறப்பு சேர்க்கும் வகையில் அமைந்துள்ளன. கருத்துகளை விளக்கப் பழமொழிகளையும் துணையாகக் கொள்கின்றார். அந்தாதி மிகுதியான பாடல்களில் வந்துள்ளது. 3000 பாடல்களையும் கலிவிருத்தம் என்னும் பாவினத்தாலேயே பாடிய முதற்புலவராக இவர் விளங்குகின்றார்.

பல்வேறு சந்தங்களைப் பெற்று எளிமையான போக்கில் அரிய சுவையுடைய கருத்துகளை நூல் வழங்குகின்றது. குழூஉக்குரியை அதாவது சித்தர்களின் பரிபாசைச் சொற்களை ஆழ்ந்த பொருளில் பயன்படுத்தி உள்ளார். தமிழ்மொழிப் பற்றையும் நூலில் காட்டுகின்றார். உட்பொருள் உடைய புராணக் கதை விளக்கங்களைத் தருகின்றார். விலங்கு, தாவரம், உலோகம், விளையாட்டு, நவமணி போன்றவற்றைக் கருத்து விளக்கத்திற்கு அழகுறப் பயன்படுத்தி உள்ளார். இங்ஙனம் இந்நூல் இலக்கண இலக்கியச் சிறப்பும், சொல்பொருள் வளமைச் சிறப்பும் பெற்றுத் திகழ்கின்றது என்பதைத் தெளிவாக அறியமுடிகின்றது.

# 3. சமுதாய வாழ்வு

## முன்னுரை

மனிதனாகப் பிறந்தவன் எப்படியும் வாழலாம் என வாழ்தல் கூடாது. இப்படித்தான் வாழ்தல் வேண்டும் என்ற குறிக்கோளுடன் வாழ்தல் வேண்டும் என்பதைத் திருமந்திரம் உணர்த்துகின்றது. இத்தகைய வாழ்க்கைக்கு மனத்தின் செம்மையும், மனத்தின் திடமும் ஆற்றலும் தேவையான ஒன்றாகின்றது. எனவே நம்முடைய வாழ்க்கையில் எதைப் பின்பற்ற வேண்டும் எதைப் பின்பற்றக் கூடாது, எது நல்லது, எது கெட்டது எனத் தெரிந்து செயல்படுதல் வேண்டும். அப்படிச் செயல்படும்போது மனத்தின் வலிமையால் முறையான வாழ்க்கை வாழ்தல் இயலும். அதற்காக நாம் புரிந்து அறிந்து செயல்பட வேண்டிய முறைமைகளை எடுத்துரைப்பதாய் சமுதாயவாழ்வு என்ற பகுதி அமைகின்றது.

பொய், களவு போன்ற தீய எண்ணங்கள் பிறப்பின் குணங்கள் என நன்னூல் கூறும். இதுபோன்ற தீய குணங்கள் பல மனிதனிடத்தில் மறைந்திருக்கும். ஒரு மோசமான சூழ்நிலையில் இவை அவனை அறியாமல் வெளிப்பட்டுப் பெருந்துன்பத்தைத் தரும். இதுபோன்ற பண்புகளை நீக்கி நல்முறையில் வாழ்வதற்கு வழிகாட்டும் நூலாகத் திருமந்திரம் அமைவதையும் இப்பகுதி எடுத்துரைக்கின்றது.

## சமூகக் கடமை

நல்லொழுக்கமானது அடிப்படையில் தனிமனிதன் வாயிலாகச் சமூகத்தின் முழுவெளிப்பாடாக அமைகின்றது. ஈகை முதலிய அறங்கள் செய்யத் தகுந்தவை. ஈயாதவர்கள் நரகத்திற்கே செல்வார்கள் என்று அப்பர் உறுதிபடக் கூறுகின்றார். பேராசை, அகங்காரம், வீணாகப் பொழுது போக்குதல் போன்றவை தவிர்க்கப்பட வேண்டியவையாகும். தத்தமக்குரிய கருமத்தில் இன்புறுகின்ற மனிதன் நிறைநிலையை அடைகின்றான் என்று பகவத்கீதை கூறுகின்றது. நன்மை, தீமை என்பவற்றைப் பிரித்துணர்ந்து நன்மையைப் பின்பற்ற வேண்டும் என்பது சமூகக்கடமையாகும்.

அறத்திற்கு உட்பட்டு எதையும் செய்ய வேண்டும். அதாவது யார் மனத்தையும் புண்படுத்தாமல் இனிய சொற்களுடன் பழகுதல் வேண்டும். பிறர் பொருளைக் கவரக்கூடாது. விட்டுக் கொடுத்து நடுநிலைமையுடன் வாழ வேண்டும். நன்றி மறவாது இருத்தல் வேண்டும். தமக்கு வரும் துன்பத்தைப் பொறுக்க வேண்டும். பிறருக்கு எள்ளளவும் துன்பம் தரக்கூடாது. பிறர் துன்பப்பட்டால் ஓடிச்சென்று உதவுதல் வேண்டும். இப்படி வாழ்கின்றவர்களுக்கு அறம் முன்னிற்கும். எனவே நல்லவனாய் இருத்தல் வேண்டும். நல்லவனாய் இருப்பதுபோல் நடிக்கக்கூடாது.

**அன்பு**

அன்பு என்பது அகத்தே உணரும் மென்மையான உணர்வு. இதற்குப் புறவடிவம் என்ற ஒன்று இல்லை. அன்பு ஒருவனை உந்த, அவன் ஆக்கம் தரும் செயலில் ஈடுபடுவான்; அதுவே அன்பின் அடையாளமாகும். அன்பு தெரிந்தவர்களிடையேயும் பழகியவர்களிடையேயும் மலரக் கூடியது. ஆனால், அருள் என்னும் அன்பின் குழவி எல்லா மனிதரிடையேயும் வேறுபாடு காண இயலாத நிலையில் தோன்றுவது. உலகில் அன்புடையோர் பலர்; அருளுடையோர் மிகச் சிலரே. அன்பும் அருளும் மனித சமுதாயத்தை உயர்த்துவன ஆகும். இறைவனிடம் ஏற்படும் அன்பு முதிர்ந்த இறைபேரின்பத்தையும் ஏற்படுத்தும். உறவினரிடம் ஏற்படும் அன்பு சிற்றின்பமாகவும் மாறுகின்றது.

***இறையன்பு***

அன்பு இல்லாமல் அறமும் இல்லை; அருளும் இல்லை; இன்பமும் இல்லை. இந்தத் தூய அன்பே சிவமாகும். இந்த அன்பைப் பற்றி அறியாதவர் அன்பு வேறு சிவம் வேறு என்கின்றனர். அறிந்தவர் தம்மிடத்துள்ள அன்பையே சிவமாகத் துலங்கக் காண்பர். மனிதனுக்கு யோகப்பயிற்சியினாலும் பக்தி உள்ளுணர்வினாலும் இறைவன்பால் உருவாவது இறையன்பு எனப்படும். திருமூலர் அன்பும் சிவமும் ஒன்றே, இரண்டல்ல என்று கருதினார். இதனைத் திருமந்திரம்,

**அன்பும் சிவமு மிரண்டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே** (திரு.270)

என்று கூறுகின்றது.

அன்பையும் சிவத்தையும் வேறுவேறாகப் பிரித்துப் பார்ப்பார்கள் தெளிவில்லாத மக்கள். ஆன்ம தெளிவுற்றவர்கள் அவ்வாறு கருதாமல் சிவநிலை அடைந்திடுவர்.

உடலை வருத்திச் செய்யும் அசுர வழிபாட்டைவிட மனத்தில் நெகிழ்ந்துருகும் அன்பு வழிபாடே மிகச் சிறந்தது. இத்தகைய அன்பில்லாதவர் இறைவனை அடைய வழி அறியாது தவிப்பர் (272).

அன்பு என்று பலவாறு பேசுவதால் பயன் இல்லை. அன்பால் மனத்தை உருக்கி இறைவனை ஏத்தி வழிபடுங்கள். அவன் அகண்ட உலகமாக உள்ளான். அவன் அன்பு ஒளியில் நின்று சிவஒளியைப் பெருகச் செய்வான். பலர் இறைவனை அன்போடு நாடாது உலக போகத்தில் விருப்பம் காட்டுகின்றனர். அவர்கள் எல்லாம் நாம் பார்த்து வருந்தக் கூடிய பாவிகள் ஆவர்.

இறைவன் உலகாய், உலகத் தலைவனாய், உலக உயிர்களாய் உள்ளான். அனைவர் இடத்திலும் தோன்றாத் துணையாய் உள்ளான். எங்குமுள்ள அவனைச் சிற்றறிவும், பலநோயும் கொண்ட நம்மால் அறிய முடியவில்லை. அன்பால் அவனைப் பிடிக்க முடியும். அவன் அன்பிற்கு அடங்குபவன். அன்பில் மூழ்கியவரை அவன் அணைத்துக் கொள்வான், என்றும் துணையாக இருப்பான். துணையாய் இருந்து தீயன விலக்கி நன்மை பல துலக்கி ஆட்கொள்வான். அவன் அன்பெனும் பிடியுள் அடங்கிடும் கடலாவான்.

அன்பின் முதிர்வாகச் சிவன் விளங்குகின்றான். இறைவன் எல்லா உயிர்களிடமும் நீக்கமற நிறைந்துள்ளான் என்பதனை நன்குணர்ந்து, எல்லா மனிதர்களையும் சிவனாகப் பார்க்கும் அன்பு உள்ளம் உடையவர்களுக்கு அன்பும் சிவமும் ஒன்று என்பது தெளிவாகும். மாணிக்கவாசகரும்,

**ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த**
**இன்பமே என்அன்பே**

என்று சிவனைக் குறிப்பிடுகின்றார். இறைவன்பால் அன்பு செலுத்துபவர்களுக்குத் தாயினும் நல்லவனாகச் சிவன் விளங்குவான். சிவனை மாறாத அன்பினால் வணங்கினால், அவன் வெளிப்பட்டு அருளை வழங்குவான்.

திருமந்திரம் அனைவர் நெஞ்சையும் உருகவைக்கும்; உண்மைகளை உணர வைக்கும்; அனைத்து நெஞ்சிலும் இடம்பிடிக்கும்; வாழ அஞ்சுவோரை வாழ வைக்கும்; சில கணமாவது சிந்திக்க வைக்கும்; மலையாய் இருக்கும் துன்பத்தை, பஞ்சாய் பறக்க வைக்கும். இப்படிப் பலதரப்பட்ட நம்பிக்கையை வழங்குகின்ற நூலாகத் திருமந்திரம் விளங்குகின்றது.

போற்றி என்பார் அமரன் புனிதன்அடி
போற்றி என்பார் அசுரன் புனிதன்அடி
போற்றி என்பார் மனிதர் புனிதன்அடி
போற்றி என்அன்புள் விளங்க வைத்தானே (திரு.44)

தேவரும், அசுரரும், மக்களும், அன்பரும், தூய மனமுடைய ஈசனின் திருவடியை வாழ்த்தினார்கள். அதனைக் கண்ட நான், என் அன்பினால் ஏற்றித் தொழுது வணங்கினேன். ஈசன் என் நெஞ்சில் குடிகொண்டான். எனக்கு ஒளியாகக் காட்சி அளிக்கின்றான் என்கின்றார்.

பற்றின்றித் தொண்டு செய்ய வேண்டும். இதற்கு அன்பைப் பெருக்கவேண்டும். அதுபோது ஆணவமாயை நம்மைவிட்டு ஒழியும் அடியார்க்கு அடியனாய் இறைவன் இருந்து அருள்புரிவான்.

அன்பு நடந்தேற ஆணவப்புல் தேய்ந்தொழியும்
தொண்டர்க்குத் தொண்டன் இறை

என்றும் கூறுகின்றார்.

உடம்பை அன்பால் கனியச் செய்தால், இறைவன் அதை நெடுங்கோயிலாகக் கொள்வான் என மாணிவாசகர் கூறுகின்றார்.

அன்பே சிவம் என்ற அன்பின் தத்துவத்தை முதன்முதலாகத் தெரிவித்தவர் திருமூலர். சுயநலம் இல்லாத அன்பு, அனைத்து உயிர்களிடத்தும் அன்பு, வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடும் அன்பு இத்தகைய அன்பின் கொள்கை என்பதே திருமந்திரம் உரைக்கும் கடவுள் தன்மையாகும். அன்பு எனும் பண்பு நிறையும்போது உள்ளமானது விசலாமாகின்றது. அந்நிலையில் அவர்களை அறியாமலே ஒரு நாள் இறைவன் அவர்களது உள்ளத்தையும் ஆட்கொண்டு விடுவான்.

*உறவன்பு*

உற்றார் உறவினர்பால் ஏற்படும் இயல்பான பாசம் உறவன்பு எனப்படும். இவ்வுலகில் இறந்து கிடப்பவரிடம் ஏற்பட்ட

அன்பின் காரணமாகச் சற்று நேரம் அழுது, பின் சடலத்தை விட்டு அகன்று செல்வர் மக்கள். வறுமையில் வாடுபவர்களிடம் சுற்றத்தினரும் அன்பு செலுத்தமாட்டார்கள். அன்பில்லாத காரணத்தால் வறுமையாளர் துன்பம் கண்டு இரங்கி அவருக்கு உதவாது மேலும் துன்பத்தில் உழலவிட்டு விலகிச் செல்வர் மக்கள். இதன்வழி இறந்தவரது உடலைக் கண்டு அழும் செயல் அன்பின் காரணமாக ஏற்படுவது என்பதும், வறியவருக்கு உதவாது அவரை விட்டு விலகுவது அன்பில்லாத காரணத்தால் ஏற்படுவது என்பதும் திருமந்திரத்தின்வழி பெறப்படுகின்றன. இதனால்தான் திருவள்ளுவரும்,

> பொருளில்லார்க்கு இவ்வுலகில்லை

என்று குறிப்பிடுகின்றார். உறவின் காரணமாக ஏற்படும் அன்பும் அன்பின்மையும் அன்பின்பாற்பட்டதாகவும், பணத்தின்பாற் பட்டதாகவும் உள்ளன என்று கொள்ளுதற்கு இடமுண்டு.

### அன்பினால் வன்முறை குறையும்

மனிதனுக்கும் இறைவனுக்கும் அன்பினால் ஏற்படும் பிணைப்பினையும் அதன் சிறப்பினையும் திருமந்திரப் பாடல்கள் பல சுட்டிக் காட்டுகின்றன. இப்பிணைப்பால், மனிதரிடையே பொருளால் ஏற்படும் உயர்வு தாழ்வுக்கு இடம்தாராத பக்குவத்தை இன்றைய சமுதாயம் பெற்றுவிட்டால் வன்முறைகளுக்கு இடம் இராது. ஒற்றுமையும் ஒருமைப் பாட்டுணர்வும் அன்பு வழியினால்தான் உருவாகும் என்பதைத் திருமந்திரம் உணர்த்துகின்றது.

### அறம்

> அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
> இழுக்கா இயன்றது அறம் (குறள்.35)

என்று அறத்திற்குச் சிறந்த விளக்கங்களைத் தருகின்றார் திருவள்ளுவர். மனத்தூய்மையே அறம் என்பதையும், பொறாமை, பேராசை, சினம், கடுஞ்சொல் ஆகியன இல்லாமையே அறம் என்பதையும் குறட்பாவால் அறியமுடிகின்றது.

அறம் சார்ந்து தோன்றிய பழக்க வழக்கங்கள் மேலைநாட்டிலும் நம்நாட்டிலும் ஒழுக்கத்தை வலியுறுத்துவனவாக உள்ளன. ஒழுக்கத்தின் அடிப்படையில் நன்மை தீமைகள்

வரையறை செய்யப்படுகின்றன. இவற்றின் தொடர்பால் இருவினைகள் தோன்றி உயிரைப் பற்றுகின்றன; வினைப்பற்று உள்ளவன் பிறவி தொடரும்; பிறவி தொடர்ந்தால் ஆன்மா இறைவனைச் சென்று சேர முடியாது. எனவே உயிர் பேரின்பத்தில் திளைப்பதற்கான அடிப்படையாக ஒழுக்கத்தை வற்புறுத்த அறம் விளங்குகின்றது. அறமற்ற உயிர் மரத்தன்மை வாய்ந்து மக்கட்பண்பை இழக்கும்.

சமுதாயத்தில் நல்லன எல்லாமே அறம் என்று பொதுவாகக் கொண்டாலும் அறம் என்னும் சொல் ஒழுக்கம், வழக்கம், நீதி, கடமை, ஈகை, புண்ணியம், அறக்கடவுள், சமயம் என்னும் எட்டுப் பொருட்களில் வழங்கி வருகின்றது.

திருமந்திரம், கொல்லாமை, புலால் மறுத்தல், நல்குரவு, அறம் செய்யாமை, கல்லாமை, கள்ளுண்ணாமை, திருக்கோயிலிழிவு, அவா ஆகியவற்றை அறத்திற்குப் புறம்பானவையாகக் குறிப்பிடுகின்றது.

ஈகை

பயன் எதனையும் கருதாது உணவு, உடை முதலான வற்றைக் கொடுப்பது ஈகையாகும். திருமூலர் ஈகையைப் பல நிலைகளில் கூறுகின்றார். பொருளாகவும், உணவாகவும், உடையாகவும், பொன்னாகவும் ஈகைக்குரிய பொருள்கள் அமையும் எனத் திருமூலர் கூறுகின்றார். திருமந்திரம் ஈகையை ஏற்றுக் கொள்பவர்களை 1. பசு, 2. இரவலர், 3. தவமுனிவர்கள், 4. பிச்சை ஏலாத முனிவர்கள், 5. சிவபெருமான் ஏற்கும் பிச்சை என்று பிரித்துக் காட்டுகின்றது.

பிறருக்குக் கொடுப்பதால் ஏற்படும் இன்பமறிந்தும் கொடுக்காமல் வாழும் மக்களைத் திருமந்திரம்,

இன்பம் அதுகண்டும் ஈகிலாப் பேதைகள் (திரு.267)

என்கின்றது. ஈயினது தலையளவும் இரவலர்க்குக் கொடுக்காதவர்கள் பலர் உள்ளனர். இவர்களது செல்வம் இறுதியில் வீணாகி எவர்க்கும் பயன்படாது அழியும். இதனை,

ஓட்டித் துரத்திட் டதுவலி யார்கொள (திரு.171)

என்று திருமந்திரம் உணர்த்துகின்றது. சிவஞானியர்க்கு உணவளிப்பது மிகவும் சிறந்தது என்பதைத் திருமந்திரம்,

**பண்ணிடில் ஞானிஉஊண் பார்க்கில் விசேடமே** (திரு. 1851) என்றும்,

**தாமகிழ்ந்து உண்டது மூன்று புவனமும் உண்டது**

என்றும் கூறுகின்றது. சிவஞானியர் உண்ட உணவு மூன்று உலகங்களிலும் உள்ள மக்கள் உணவு உண்டதற்கு ஒப்பாகும். இத்தகைய நிகழ்ச்சி வில்லிபாரதத்திலும் இடம்பெறுகின்றது. கண்ணன் பருக்கை உண்டு பசி நீங்கியதால் குசேலனது பசியும் நீங்கியது என்பது பாரதத்தில் நிகழ்ந்ததாகும்.

சமுதாய மேன்மைக்காக வாழும் உண்மை ஞானிகளுக்கும், வறுமையால் வாடுபவர்களுக்கும் உணவு முதலான பொருள்களை அளித்தல் சிறந்த அறமாகும்.

### சாதிமதச் சடங்கு

தொடக்கத்தில் மக்கள் தொழில் அடிப்படையிலேயே பாகுபடுத்தப்பட்டனர். தொல்காப்பியர்கூடத் தம்நூலில் பல இடங்களில் உயர்ந்தோர் என்றும், இழிந்தோர் என்றும் சுட்டுகின்றார்; சாதியில் உயர்ந்தவர், சாதியில் இழிந்தவர் என்று பொருள் கொண்டு அந்தணர், அரசர், வணிகர் ஆகியோரை உயர்ந்தவராகவும், வேளாளரைத் தாழ்ந்தவராகவும் சுட்டிக் காட்டுகின்றனர் என்பதைத் தொல்காப்பியத்தின் உரையாசிரியர்கள்மூலம் அறியமுடிகின்றது.

திருமந்திரத்தில், நால்வகை வருணத்தார்க்கும் உரிய இலிங்கங்கள் சாதி அடிப்படையில் குறிப்பிடப்படுகின்றன. பரத்தையர் தன்மைகள் சுட்டப்படுகின்றன. அந்தணர்கள் தானம் பெறுவதும், வேதம் ஓதுவதும், வேள்வி செய்வதும் அவர்தம் தொழில்களாகத் திருமந்திரத்தில் காட்டப்படுகின்றன. இவையாவும் அன்றைய சமுதாயநிலையைக் குறிப்பனவே அன்றிச் சாதிகளிடையே உயர்வு தாழ்வு கற்பிக்கும் நோக்கில் சுட்டப்படவில்லை.

திருமந்திரத்தில் பல்வேறு தொழில்கள் அடிப்படையிலான பிரிவுகள் காணப்படுகின்றன. கட்டட வேலை செய்வோர், சிற்பிகள், தட்டார், கொல்லர், தச்சர், தேர், தோணி முதலியன செய்வோர், குயவர், பறையர், சக்கிலியர், நெசவாளர், மீன்பிடிப்போர், உப்புக் காய்ச்சுவோர், வாணிகர், மருத்துவர், கள்வர், வண்ணார் முதலான பல்துறைத் தொழில் செய்வோர் திருமந்திரத்தில் குறிக்கப்படுகின்றனர். இருப்பினும், இவர்களுக்குள் ஏற்றத்தாழ்வு இருந்ததாக எடுத்துக் காட்டப்படவில்லை. இத்தொழில்கள்

வாயிலாக மனித சமுதாயம் பண்படுவதற்கான தத்துவக் கருத்துகள் எளிமையாக விளக்கப்பட்டுள்ளன. எனவே திருமந்திரம் சாதி வேறுபாடுகளுக்கு இடமளிக்கவில்லை எனலாம்.

தீண்டாமையை ஆதரித்த மக்கள் அக்காலச் சமுதாயத்தில் இருந்தனர். திருமந்திரத்தில் தீண்டாமை ஆசூசம் என்னும் சொல்லால் குறிப்பிடப்படுகின்றது. இச்சொல் அசுத்தம் என்னும் பொருளை உடையது. தாழ்த்தப்பட்ட மனிதர் உடலே தீட்டு என்னும் கருந்து இருந்தது. இதனை,

ஆசூச மானிடம் ஆசூச மாமே (திரு.2551)

என்னும் திருமந்திரப் பாடலடியால் அறிமுடிகின்றது. எல்லோரும் இறைவனின் வடிவம் என்ற எண்ணமுடையவரிடம் இவ்வெண்ணம் எழாது.

*மதம்*

மதம் என்பது இறைவன், உலகம், மனிதன் ஆகிய மூன்று அடிப்படைத் தத்துவங்களின் உறவாகும். இவ்வுலகில் பயணம் செய்யும் மனிதன் களைப்படையும்போது, அவனுக்கு ஆறுதல் கொடுப்பது மதமாகும். இந்த உலக வாழ்க்கையின் மறைபொருளை மனிதனுக்கு விளக்குவதும் மதமேயாகும். அழியாத பேரின்ப வாழ்விற்கும் வீடுபேற்றிற்கும் வழிகாட்டுவது மதமேயாகும்.

பிறருக்கு நன்மை செய்வதிலும், பிறரிடம் அன்பு காட்டுவதிலும், பிறிதோர் உயிர்க்கு இரக்கம் காட்டுவதிலும், உண்மை பேசுவதிலும் தூய்மை இருக்க வேண்டும் என்று மதம் வலியுறுத்துகின்றது.இந்து மதமானது சைவம், வைணம் என்ற இருபெரும் பிரிவுகளாக உள்ளது. இவற்றுள் சைவத்தின் விளக்கமாகவும், ஆகமங்களின் சாரமாகவும் திருமந்திரம் திகழ்கின்றது.

சைவ சமயத்தின் உட்பிரிவுகளாக ஆறு சமயங்கள் அமைந்துள்ளன. அவற்றுள் சிறந்தது சிவனை வழிபடும் சுத்த சைவம் ஆகும். திருமந்திரம் சிவனை வழிபடுதலை விளக்கிக் கூறுகின்றது. திருமந்திரத்தின் அடிப்படைக் கொள்கையினை,

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே (திரு.2104)

என்னும் பாடலால் அறியமுடிகின்றது.

திருமந்திரத்திலுள்ள சிவனின் வடிவாக உள்ள வைரவர் சக்தியின் வடிவாக உள்ள சாம்பவி, இராஜேஸ்வரி, எண்வகைக் காளிகள், சிற்சக்திகள் குறிப்பிடப்படுகின்றன. மேலும் முருகனை ஆன்மாகவாகவும் திருமந்திரம் சுட்டுகின்றது.

**ஐந்து கரத்தனை யானை முகத்தனை**
**இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை**
**நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்**
**புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே** (திரு.1)

என்ற பாடல் திருமந்திரத்தில் இடம்பெறும் காப்புச் செய்யுள் ஆகும்.

*திருமூலர் சிவனைத் தேடி அலைந்தமை*

ஒரு காலத்தில் உண்மையறியாது திருமூலர் உய்தி பெறும் பொருட்டுச் சிவனைத் தேடி அலைந்துள்ளார். சைவமே தக்க சமயம் என்பதறிந்தும், தெளிவில்லாமல் வேறு பிற சமயங்களை நாடி வருந்தியிருக்கின்றார். இதனை,

**அரனெறி யாவ தறிந்தேனும் நானுஞ்**
**சிவநெறி தேடித் திரிந்தஅந் நாளும்**
**உரநெறி யுள்ளக் கடல்கடந் தேறுந்**
**தரநெறி நின்ற தனிச்சுடர் தானே** (திரு.1562)

என்னும் பாடல் தெரிவிக்கின்றது. இத்தவம் நல்லது, அத்தவம் நல்லது என்று வேறுபடுத்தும் பேதஞானம் படைத்த அறிவிலிகள் உயர்வு தாழ்வு ஏற்படுத்திப் போர்புரிகின்றனர். இப்பித்தர்களைக் கண்டு சிவன் ஏளனம் செய்வான்.

**எத்தவ மாகிலென் எங்குப் பிறக்கிலென்**
**ஒத்துணர் வார்க்கொல்லை யூர்புக லாமே**

என்றும் திருமந்திரம் குறிப்பிடுகின்றது. இதனால் இந்நூல் சமயப் பொதுமையை விரும்பும் நூல் என்பதும் தெளிவாகின்றது.

இறந்தவர்களுக்குச் செய்யப்படும் சடங்குகள் திருமந்திரத்தில் சுட்டப்பட்டுள்ளன. உடலைவிட்டு உயிர் பிரிந்து விடுதலை என்கின்றது திருமந்திரம்.

**மூக்கினிற் கைவைத்து மூடிட்டுக் கொண்டுபோய்க்**
**காக்கைக் குப்பலி காட்டிய வாறே** (திரு.147)

மூக்கில் கைவைத்து மூச்சு வரவில்லை என்று அறிந்தபின், உடலை மூடி மயானத்திற்குக் கொண்டு சென்று, அங்குள்ள காகங்களுக்கு அரிசி போட்டு இறுதிக்கடன் செய்வர் என்பது இப்பாடலின் கருத்தாகும். இறந்தவுடன் ஊர்மக்கள் ஒன்று கூடி அழுவர்; பின் இயற்பெயரினை ஒழித்துப் பிணம் என்று சுட்டுவர். பாடை கட்டிச் சுட்டுகாட்டுக்கு எடுத்துச் செல்வர்; பாடையின்பின் மக்கள் திரண்டு செல்வர். சுடுகாட்டிற்குப் பிணத்தை எடுத்துச் செல்லுமுன் பெண்களும் பிறரும் நீர்த்துறைக்குச் சென்று புதுநீர் கொண்டுவந்து நீராட்டுவர். ஊர் எல்லையில் பெண்கள் நின்று விடுவர்; சுடுகாடுவரை செல்லும் வழக்கம் இல்லை. தீக்கி ரையாக்கியபின் சுற்றத்தார் நீரில் மூழ்குவர்.

எவ்வளவுதான் அன்பு கொண்டிருந்தாலும் இறந்தவரின் உயிரோடு எவரும் தொடர்பு கொள்ள முடியாது. இறந்தவரோடு எவரும் செல்ல இயலாது.

கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழிநட வாதே (திரு.144)

என்று விரதமும் ஞானமும் மட்டுமே இறந்தவரோடு செல்லக் கூடியவை எனத் திருமந்திரம் விளக்குகின்றது.

நிலையாமை

சீடன், உபதேசம் என்னும் அதிகாரத்துக்கு அடுத்து வரும் நான்கு அதிகாரங்கள் ஒழுக்க நெறியைப் பின்பற்றுவதற்குக் காரணமாக முன்உணர வேண்டிய உலகப் பொருட்களின் நிலையாமையைத் தெரிவிக்கின்றன. நிலையாமைத் தத்துவம் வாயிலாகத்தான் ஒருவனது அறிவு அறநெறியை நாடும்.

திருக்குறள் நிலையாமை என்ற தலைப்பில் பத்துக் குறட்பாக்களைக் கூறுகின்றது. திருமூலர், யாக்கை, செல்வம், உயிர், இளமை என்னும் நான்கு நிலையாமைகளை அடக்கிக் கூறுகின்றார். யாக்கை நிலையாமைக்கு 25 பாடல்கள், செல்வ நிலையாமைக்கு 9 பாடல்கள், இளமை நிலையாமைக்கு 10 பாடல்கள், உயிர் நிலையாமைக்கு 10 பாடல்கள் ஆக நிலையாமைக்கென 54 பாடல்களைக் கூறுகின்றார். அதாவது 54 மந்திரங்களைக் கூறுகின்றார் என்றே சொல்லலாம்.

நல்வினைகள், தீவினைகள் ஆகியவற்றால் அடைக்கப் பட்டது உடம்பாகும். அத்தகைய உடம்பு சிலகாலம்தான் உலகில் வாழும். அக்காலத்தில் தனக்கு என்று அறுதி வைக்கப்பட்ட வினைபோகங்களை உடம்பு அனுபவிக்கும். அவற்றையெல்லாம் உடனிருக்கும் மனைவி மக்களும் அனுபவிப்பர். காலனால் கைப்பற்றப்பட்டு உயிர் சென்றபின் கூடவே இன்பசுகங்களை அனுபவித்த மனைவியும் மக்களும் உடன் வரமாட்டார்கள். அவன் வாழ்கின்ற காலத்தில் கடைப்பிடித்து வந்த விரதத்தின் பயனும் ஞானமும்தான் கூட வரும். இதனை,

> **பண்டம் பெய்கூரை பழகி விழுந்தக்கால்**
> **உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செலார்**
> **கொண்ட விரதமும் ஞானமும் அல்லது**
> **மண்டி அவருடன் வழிநட வாதே** (திரு.144)

என்று திருமந்திரம் காட்டுகின்றது. அதாவது உடம்பு நிலையற்றது என்பதை விளக்குகின்றது.

மனிதன் தன்னைச் சுற்றியுள்ள இயற்கை, விலங்கு, தாவரம் ஆகியவற்றின் அழிவைக் காண்கின்றான். இவற்றைக் கண்டு தன்அழிவை எண்ணாது இருக்கின்றான். இதனை,

> **மண்ணொன்று கண்டீர் இருவினைப் பாத்திரந்**
> **திண்ணென் றிருந்தது தீயினைச் சேர்ந்தது**
> **விண்ணின்று நீர்விழின் மீண்டும் மண்ணாவதுபோல்**
> **எண்ணின்றி மாந்தர் இறக்கின்ற வாறே** (திரு.143)

என்று திருமந்திரம் மனிதருக்கு அறிவுறுத்துகின்றது. இப்பாடலில் யோகத்தீயில் சுடப்பட்ட உடலினர் சுட்டமண் பாத்திரம்போல் உடல் அழியாதிருப்பர். யோகசாதனை உணராதவர் தீயில் சுடப்படாத மண்பாத்திரம் மழைநீரில் கரைவதுபோல் உலகில் பிறந்து இறப்பர் என்று தெளிவுபடுத்துகின்றது.

மேலும் மன்னன் தனக்குரிய குடையும் வாளும் படைகளும் சுற்றி நின்றாலும் உயிர்போகும்போது அவை மன்னன் உயிரைத் தடுத்து நிறுத்த முடியாது என்பதைச் சுட்டுகின்றது.

> **குடையும் குதிரையுங் கொற்ற வாளுங்கொண்**
> **டிடையுமக் காலம் இருந்தது நடுவே**
> **புடையும் மனிதனார் போகுமப் போதே**
> **அடையும் இடம்வலம் ஆருயி ராமே** (திரு.166)

இவற்றைக் கண்டுணர்ந்தும் மக்கள் யாக்கை நிலையாமையை உணராதிருக்கின்றனரே என்று திருமூலர் வருந்துகின்றார். இதனை உணராதவர்களை,

தூண்டு விளக்கின் சுடரறி யாரே (திரு.178)

என்று இழித்துக் கூறுகின்றார். நிலையாமையை உணர்ந்து இளமையிலேயே சிவனைத் தேர்ந்து கொள்ள வேண்டும் என்பதை,

ஓர்ந்துற்றுக் கொள்ளும் உயிருள்ள போதே (திரு.179)

என்று தெரிவிக்கின்றார்.

முப்பது வயதிற்குள் உலகினியல்பு உணர்ந்து ஆன்ம அறிவைப் பெறல் வேண்டும். அவ்வாறு பெற்றவர் சூரியசந்திரன் இயக்கமறிந்து வீடு பேறடைவர். இதனை உணராதவர் உலகில் பிறந்து இறந்து அழிவர்.

**செல்வ நிலையாமை**

பொருட்செல்வம் நிலையற்றதாகும். அது சக்கரம் போன்று ஓரிடத்திலிருந்து வேறோரிடத்திற்கு உருண்டு செல்லக் கூடியது திருவள்ளுவர் தம்குறளில்,

பொருளில்லார்க்கு இவ்வுலக மில்லை (குறள். 247)

என்று கூறுகின்றார்.

திருமந்திரம் பொருட்செல்வத்தின் நிலையாமையை விரிவாகப் பல பகுதிகளில் எடுத்துரைக்கின்றது. சான்றாக,

அருளும் அரசனும் ஆனையுந் தேரும்
பொருளும் பிறர்கொள்ளப் போவதன் முன்னம்
(திரு.168)

இயக்குறு திங்கள் இருட்பிழம் பொக்கும்
துயக்குறு செல்வத்தைச் சொல்லவும் வேண்டா
(திரு.169)

தன்னது சாயை தனக்குத வாதுகண்டு
என்னது மாடென் றிருப்பார்கள் ஏழைகள் (திரு.170)

ஆற்றுப் பெருக்கிற் கலக்கி மலக்காதே
மாற்றிக் களைவீர் மறுத்துங்கள் செல்வத்தை (திரு.172)

மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே
கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லும் கலம்போல்
(திரு.173)

இப்பாடல்களில் நிலையாத பொருட்செல்வத்தைத் திருமூலர் நிலவில்லா இருளிற்கும், தனக்குதவா நிழலுக்கும், நில்லாதோடி வறளும் ஆற்றுவெள்ளத்திற்கும், கடல்நீரில் கவிழ்ந்தழியும் கலத்திற்கும் ஒப்புமையாக்கி மனிதருக்கு அறிவூட்டுகின்றார்.

பொருளின்றி வறுமையால் வாடுபவரைச் சமுதாயம் இகழ்ந்து புறக்கணித்தல் இயல்பாகும். அவர்களைப் பற்றித் திருமந்திரம்,

புடைவை கிழிந்தது போயிற்று வாழ்க்கை
அடையப் பட்டார்களும் அன்பில ரானார்
கொடையில்லை கோளில்லை கொண்டாட்ட மில்லை
நடையில்லை நாட்டில் இயங்குகின் றார்கட்கே
(திரு.209)

என்று கூறுகின்றது. ஆடை கிழிந்து பயனற்றதுபோல வறியவர் வாழும் வாழ்க்கையும் பயனற்று விட்டது என்று கருதிச் சுற்றியிருந்த சுற்றத்தினர் அன்பின்றி வெறுத்து விலகுவர் என்று திருமந்திரம் விளக்குகின்றது.

வறுமையின்றி வளத்துடன் வாழ வேண்டுமானால் மனிதன் சிவனைச் சிந்திக்க வேண்டும். சிவசிந்தனையுடன் இறைவனை வேண்டுபவர்க்கு வினையின் காரணமாகத் தொடரும் வறுமை விலகும். இவ்வாறு நல்வினையை ஈட்டிப் பெறுவதற்குப் புலனடக்கமும், சிவசிந்தனையோடு வேண்டிக் கொள்ளுதலும் வழிகளாகும்.

எனவே, செல்வம் அழியக் கூடியது; அது உயிருக்குத் துணையாகாது; ஆனால் அருட்செல்வமோ உயிருடன் இறுதிவரை வரக்கூடியது. வீடுபேற்றினைத் தரக்கூடியது. தீவினை காரணமாக வறுமை ஒருவனைப் பற்றிக் கொள்கின்றது. அவனுக்கு நல்லாடையும் இருக்காது. சுற்றத்தாரும்கூட இருக்கமாட்டார்கள். நல்ல நாளும் கோளும் கூட அவனுக்கில்லை. வயிற்றுப் பசிக்காக அவன் அலைவானே தவிரச் சிவசிந்தனை அவனுக்கு இருக்காது. ஆதனால் அவனுக்கு உய்கதி இல்லை. புலன்களை அடக்கிச் சிவசிந்தனையுடன் இறையை வேண்டினால் தீவினை நீங்கும், வறுமை விலகும்; வீடுபேறு கிட்டும். இவை செல்வ நிலையாமை குறித்து திருமந்திரம் கூறுகின்ற செய்தியாகும்.

## இளமை நிலையாமை

கட்டான உடல், வலிமையான தோள், முறுக்கான மீசை, துடுக்கான பருவம் இத்தகைய வாலிபப்பருவத்தில் உள்ளவரைக் கண்டு எந்தப் பெண்ணும் மயங்குவர். அதே வாலிபர் முதுமைப்பருவம் வந்துற்றபோது தளர்ந்த உடலினராயும் வலிமையற்ற தோள்களையும், சக்தியற்றவராயும், சுருக்கம் விழுந்த முகத்தினராயும் விளங்குகின்ற காலத்து அவரால் எந்தப் பெண்ணையும் மயக்க முடியாது. அதேபோலப் பெண்களும் அவரைக் கண்டு மயங்கமாட்டார்கள்.

விரும்புவர் முன்னென்னை மெல்லியல் மாதர்
கரும்பு தகர்த்துக் கடைக்கொண்ட நீர்போல்
அரும்பொத்த மென்முலை ஆயிழை யார்க்குங்
கரும்பொத்துக் காஞ்சிரங் காயும் ஒத்ததே (திரு.180)

மென்மையான சாயலையுடைய பெண்கள், கரும்பைப் பிழிந்து வருகின்ற சாற்றினை அனைவரும் விரும்புவது போல இளமைக் காலத்தில் பெணகள் அவனை விரும்பினார்கள். தாமரை அரும்பு போன்ற முலையினையும் அழகிய அணியையும் உடைய பெண்கள் இளமையில் கரும்பைப் போன்று இருப்பார்கள். ஆனால் முதுமையில் எட்டிக்காய் போன்று கசப்பாக ஆகி விடுவார்கள். எனவே இளமை நிலையாதது, இளமைக்குப்பின் வருகின்ற முதுமைப் பருவம் பலராலும் வெறுக்கப்படக்கூடிய ஒன்று என்பது இந்தத் திருமந்திரப் பாடல்மூலம் பெறப்படுகின்றது.

பாலன் இளையன் விருத்தன் எனநின்ற
காலங் கழிவன கண்டும் அறிகிலார்
ஞாலம் கடந்தண்டம் ஊடறுத் தான்அடி
மேலும் கிடந்து விரும்புவன் நானே (திரு.181)

பாலன், இளையன், முதியோன் என்ற பருவ காலங்கள் கழிவதை உலகினர் அறியவில்லை. கிழக்கே தோன்றிய சூரியன் மாலையில் மறைதலைக் காண்கின்றனர். இளமையான கன்று சில நாளில் மூப்படைந்து இறந்து விடுவது கண்டும், உலகினர் இளமையின் நிலையாமையை உணராமல் இருக்கின்றனர். அவர்கள் இவ்வுலகத்தைக் கடந்து அதற்கு மேலாக உள்ள அண்டங்களையும் ஊடறுத்து நிற்கின்ற இறைவனடி (மென்மேலும் பொருந்தி) அன்பு செய்தல் வேண்டும். இளமையோடிருக்கும் போதே இறைவன் திருவடியை எண்ணுதல் சிறப்பு.

*உயிர் நிலையாமை*

இறைவன் ஊனாய் உயிராய் எங்கும் நிறைந்துள்ளான் என்பதை உணர்ந்தவர்கள் ஆருயிரை உணர்ந்தவர்கள் ஆவார்கள்.

**வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை**
**வேங்கடத் துள்ளே விளையாடு நந்தியை**
**வேங்கடம் என்ற விரகுஅறி யாதவர்**
**தாங்கவல்ல ஆருயிர் தாம்அறி யாரே** (திரு.190)

இறைவன் சிரசின்மேல் வடக்குத் திக்கில் விளங்குபவனாகவும், வாக்கு உருவமாக இருந்துகொண்டு நர்த்தனம் புரிபவனாகவும், வெந்து போகின்ற உடம்பினுள்ளே விளையாடும் தீயாகவும் உள்ளான். இவ்வாறு உள்ள இறைவன், அழிகின்ற உடம்பிலே உள்ளான் என்ற தன்மையை அறியாதவர்கள் அவ்வுடம்பினைத் தாங்குகின்ற அருமையான உயிரின் தன்மையை அறியாதவர்கள் ஆவார்கள் என்பதைத் திருமந்திரம் உரைக்கின்றது.

உயிர் நிலையாமையை அறிந்து அறவாழ்வு வாழ வேண்டும் என்பதை,

**அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்மின்**
**வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வன்மின்**
**செவ்விய னாகிச் சிறந்துண்ணும் போதொரு**
**தவ்விக்கொடு உண்மின் தலைப்பட்ட போதே**
(திரு.196)

என்ற இந்தப் பாடல் உணர்த்துகின்றது. அதாவது வஞ்சனையோ பொறாமையோ பேசி அறம் அழிய நடவாதீர்கள். கொடியராகிப் பிறர் பொருளைக் கவராதீர்கள். செம்மையுடையோனாகி நாம் உண்ணும்போது யாரேனும் வந்தால் அவர்கட்கும் ஓர்கைப்பிடி உணவு கொடுத்துப்பின் உண்ணுங்கள். இவைபோன்ற மனிதவாழ்வுக்குரிய அறமார்க்கங்களை உயிர் உடலில் இருக்கும்போதே செய்யுங்கள் என்று திருமூலர் வலியுறுத்துகின்றார். பிறர் பசி கண்டு இரங்குவது மனிதப் பண்பாகும்.

**நம்பிக்கை**

நம்பிக்கை என்பது ஒரு சக்தியாகும். அது மலைகளை நகர்த்தும்; மலைப்பைப் போக்கும்; காரியங்களைச் சாதிக்கும்; மனத்தை உறுதிப்படுத்தும்; எண்ணங்களுக்கு வலிமையூட்டும்.

எதிர்காலத்தை ஒளிமயமானதாக்கும். மனிதன் தன்னிடமுள்ள தன்னம்பிக்கை என்ற சக்தியுடன் தெய்வசக்தியையும் இணைக்கும் பொழுது புதுமைகளைக் காண்கின்றான். புதுமைகளைப் படைக்கின்றான். ஆன்மிக வாழ்வில் ஈடுபட்ட ஞானியர் உணர்ந்து கண்ட உண்மைகள் நம்பிக்கைகளாக இன்றும் மக்களிடையே நிலவி வருகின்றன. அதோடு மட்டுமின்றி முக்காலத்தையும் உணரும், உணர்த்தும் ஆற்றல் படைத்தவர்களாகத் திகழ்கின்றனர்.

நம்பிக்கைகளில் முதலிடம் பெறுபவை மனிதன் செய்யும் செயல்களில் விளைவான இருவினைகளாகும். அவை நல்வினை, தீவினை என்பனவாகும். நல்லன செய்வதால் மறுபிறவியில் நல்வினையும், தீயன செய்வதால் தீவினையும் உண்டாகின்றன. துன்பங்களின் தோற்றத்திற்குக் காரணம் இவ்வினைப்பயனே என்பதனை உணர வேண்டும். உணர்ந்து வினைகளை நீக்க முயற்சி எடுக்க வேண்டும். அவ்வாறு நீக்கிக் கொள்ளாதவர்கள் வினைகள் ஏற்படுத்தும் பிறவியில் சிக்கி அல்லற்படுவர்.

திருமந்திரம் வினையின் தன்மையையும் வினையின் விளைவையும் ஒரு பாடலில் அழகாக எடுத்துச் சொல்கின்றது

வினையாம் அசத்து விளைவது உணரார்
வினைஞானந் தன்னில் வீடலும் தேரார்
வினைவிட வீடென்னும் வேதமும் ஓதார்
வினையாளர் மிக்க விளைவறி யாரே (திரு.2557)

மனிதர்கள் மயக்கத்தில் இருப்பதாலேயே அசத்தாகிய மாயை அவர்களை வினைவயப்படுத்துகின்றது. அந்த மயக்கத் தாலேயே வினை நீக்கிக் கொள்ளவும் முனையமாட்டார்கள். மாயை விலகி, மயக்கம் நீங்கினால் மனிதர்களை வினை பற்றாது. அப்போது அவர்களுக்கு முக்தி நிச்சயம் என்கின்றது வேதம், இல்லையென்றால் அவர்களைத் தீவினை சூழ்ந்து அதன் பலன்களை அனுபவிப்பார்கள்.

வினைகளின் விளைவே சொர்க்கமும் நரகமும் ஆகும். நல்வினை ஒருவன் இறந்தபின் அவனைச் சொர்க்கத்தில் கொண்டு சேர்க்கும். தீவினை செய்பவர்கள் அதன் காரணமாகவே நரகத்தில் அழுந்தித் துன்புறுவர்.

ஆமா றறியான் அதிபஞ்ச பாதகன்
தோமாறும் ஈசற்குந் தூய குரவற்குங்

**காமாதி விட்டோர்க்குந் தரல்தந்து கற்பிப்போன்**
**போமா நரகில் புகான்போதங் கற்கவே** (திரு.2046)

பஞ்சமா பாதகன் நல்லோர்க்கு ஈவதன் நன்மையை அறிய மாட்டான்; கெடுவான். ஆனால் குற்றமற்ற ஞானகுருவுக்கும், காமத்தை நீங்கிய பெரியோர்கட்கும் ஈதலைச் செய்து அந்நிலையிலே நிற்கச் செய்பவன் ஞானத்தைப் பெற்றமையால் பஞ்சமா பாதகன் ஆழும் நரகில் புகமாட்டான் என்பதை விளக்குகின்றது. நரகம் ஏழு வகைப்படும் என்பதைத் திருமந்திரம்,

**அடைவது தானேழ் நரகத்து ளாயே** (திரு.2194)

என்னும் பாடலடியால் தெரிவிக்கின்றது.

இவ்வாறு நரகத்தின் இயல்புகளைச் சொல்லி, நல்லன செய்து சொர்க்கம் புக முயலவேண்டும் என்று திருமந்திரம் அறிவுறுத்துகின்றது.

**சோதிடம்**

கதிரவன் இயக்கத்திற்கேற்பக் கணிக்கப்படும். சோதிடத்தில் நம்பிக்கை உடையவர்களாக மக்கள் விளங்குகின்றனர். **ஏரொளிச்சக்கரம்** என்னும் தலைப்பில் அமைந்த பாடல்கள் இதனை விளக்குகின்றன. சீவன் ஒளியுடல் பெறும் முறையைச் சொல்லும்பொழுது பல செய்திகளைச் சொல்கின்றார் திருமூலர்.

கதிரவன் இயக்கத்தால் காலம், ஆண்டு, திதி, பருவம், திங்கள் முதலியன கணிக்கப்படுகின்றது. பன்னிரு இராசிகளில் சூரியன் இயங்கும்முறை சூரியவீதியாகக் கொள்ளப்படும். இச்சூரியவீதியும் மூன்று வகையாக உள்ளது. சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்றும் ஒன்றி வெளிப்பட்டு, சகஸ்ரதளத்தை நிமிரச் செய்யும். அப்போது ஆன்மா என்ற தாரகை பூரணமாகும். அதன்மேல் சிவந்த சிவ ஒளியும், கருமையான சக்தியின் ஒளியும் ஒன்றும். இக்காரொளியால் சீவன் ஒளியுடல்பெறும் என்று திருமந்திரம் தெளிவுறுத்துகின்றது.

***சாதகம் கணித்தல்***

மூவகை சூரிய வீதிகளுக்கு உரிய பன்னிரு இராசிகளின் அமைப்பு மட்டும் இவ்வுலகியல் வாழ்வை மேற்கொள்ளும் மக்களால் ஏற்றுக் கொள்ளப்படுகின்றது. பிறந்த நேரத்திற்கு ஏற்ப வாழ்வில் நடக்கவிருக்கும் நிகழ்ச்சிகள் கணிக்கப் பெறுகின்றன. இதுவே சாதகம் என்று வழங்கப்படுகின்றது. சூரியனின் இயக்கத்திற்கு ஏற்பத் தங்களது இராசிக்கு ஏற்படும்

நன்மை தீமைகளை முன்கூட்டி அறிந்து, அதற்கேற்பத் தம்வாழ்க்கையை அமைத்துக் கொள்வது சமுதாயத்தில் ஒரு கூறாகிவிட்டது.

*வாரசூலம்*

வாரசூலம் என்பது இந்த நாளில் இந்தத் திசையில் பயணம் மேற்கொள்வதால் நன்மையோ தீமையோ விளையும் என்பதைச் சுட்டுகின்றது.

| | |
|---|---|
| சனி, திங்கள் | - கிழக்குத் திசையில் பயணம் கூடாது |
| செவ்வாய், புதன் | - வடதிசையில் பயணம் கூடாது |
| ஞாயிறு, வெள்ளி | - மேற்குத் திசையில் பயணம் கூடாது |
| வியாழன் | - தென்திசையில் பயணம் கூடாது |

இவ்வாறு கூறும் திருமந்திரம் புறப்படும் ஊருக்குப் பின்பக்கமாகவும் இடப்பக்கமாகவும் உள்ள திசையில் சென்றால் நன்மை விளையும் என்றும், முன்பக்கமாகவும் வலப்பக்கமாகவும் உள்ள ஊருக்குச் சென்றால் தீமை விளையும் என்றும் குறிப்பிடுகின்றது.

அரசு

அரசன் எப்படி இருக்க வேண்டும் என்பதை, அரசநீதி அறிந்தவனாக இருத்தல் வேண்டும்; குடிகளைக் காத்து நல்வழிப்படுத்தும் பாதுகாவலனாக விளங்க வேண்டும்; குடிகளைக் காப்பதுபோல் தன்நிலப்பரப்பைப் பாதுகாத்தல் வேண்டும்; பொய் வேடத்தாரை இனங்கண்டு தண்டித்து நல்வழிப்படுத்த வேண்டும்; தனக்குக் கிடைக்கும் வருவாயில் ஆறில் ஒரு பங்கு மட்டுமே தான் செலவிடவேண்டும். ஏனைய ஐந்து பங்கினையும் ஐவர்க்கு வழங்கிட வேண்டும் எனத் திருமந்திரம் வலியுறுத்துகின்றது.

படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்ற ஆறு அங்கங்களை உடையவனே சிறந்த அரசனாக மதிக்கப்படுவான். இத்தகைய சிறப்பு வாய்ந்த அரசன் நாளும் நல்வழிகளை ஆராய்ந்து நீதி பரிபாலணம் செய்ய வேண்டும். அங்ஙனம் செய்யா விடில் நாடு வளமிழக்கும் நாட்டு மக்களும் அறியாமையின் பிடியில் சிக்கி வீணாக அழிவர். மேலும், நாடாள்வோனின் செல்வமும் குறையும் என்பதை,

நாள்தோறும் நாடு கெடுமூட நண்ணுமால்
நாள்தோறும் செல்வம் நரபதி குன்றுமே (திரு.96)

என்று திருமந்திரப் பாடல் வலியுறுத்துகின்றது.

நாட்டையும் குடிமக்களையும் காப்பவன் அரசனாவான். அவன் ஆட்சி சரியில்லை என்றால் அறநெறிகள் அவனுடைய நாட்டில் நிலைபெற்று நிற்காது. மேலும் அரசன் கல்வி கேள்வி களிலும், அருளுணர்விலும், வீரத்திலும், வினைத்திட்பத்திலும், படைவலிமையிலும் சிறந்து விளங்க வேண்டும். நீதிநூல்கள் வழி நின்று, நன்னெறியில் சென்று, செங்கோல் பிடித்து, நாட்டைக்காக்காத அரசன் எமனினும் கொடியவன் ஆவான். ஏனெனில் எமன் ஓர் உயிரைக் கொல்வதில் ஒரு வரைமுறையைக் கடைப்பிடிப்பான். ஆனால் அறநெறியற்ற கொடுங்கோலன் எந்தவொரு வரைமுறையைப் பற்றியும் கவலைப்பட மாட்டான். மனம்போன வழியில் நடப்பான். எவற்றையும் ஆராயாது தண்டனை கொடுப்பான். இதனைத் திருமந்திரம்,

கல்லா அரசனும் காலனும் நேரொப்பர்
கல்லா அரசனின் காலன் மிகநல்லன்
கல்லா அரசன் அறம்ஓரான் கொல்என்பான்
நல்லாரைக் காலன் நணுக நில்லானே (திரு.238)

என்று கூறுகின்றது.

அரசன் நாட்டு நலனில் அக்கறையுடையவனாய் இருத்தல் வேண்டும். அதனால் அவன் சில அறங்களை மேற்கொள்ள வேண்டியவனாகின்றான். பொய்த்தவ வேடம் பூண்டு வாழ்பவரையும், பொய்குருவையும், கள் உண்பவரையும், தத்தம் சமயவழி நில்லாதவரையும் அரசன் ஒறுத்தல் வேண்டும். போர் நாட்டம் அரசனுக்கு இருக்கக் கூடாது. அரசன் தானும்அறவழி நின்று மக்களையும் அந்நெறியில் செலுத்தல் வேண்டும். இல்லையென்றால் மக்களை வந்தடையும் தீவினையில் ஆறில் ஒரு பங்கு மன்னனை அடையும்.

ஆவையம் பாவையும் மற்றற வோரையும்
தேவர்கள் போற்றும் திருவேடத் தாரையும்
காவலன் காப்பவன் காவா தொழிவனேல்
மேவும் மறுமைக்கு *மீளா* நரகமே (திரு.243)

பசு, பெண், அறவோர், துறவோர் முதலானோரை மன்னன் காத்தல் வேண்டும் என்கின்றது திருமந்திரம்; அவ்வாறு

காக்கவில்லையெனில் அரசனுக்கு நரகமே கிட்டும் என்பதை எடுத்துரைக்கின்றது.

**விளையாட்டு**

மக்களின் பொழுதுபோக்கு விளையாட்டு. இதில் நன்மை தருவனவும் உண்டு; தீமை பயப்பனவும் உண்டு; நன்மை தரும் விளையாட்டுகளை ஏற்றுக்கொண்டு தீமைதரும் விளையாட்டுகளை விலக்குதல் வேண்டும். இறைச் சிந்தனையற்ற மனித வாழ்க்கை தீமைதருகின்ற விளையாட்டைப் போன்றது என்று குறிப்பிடுகின்றது திருமந்திரம். சூதாட்டம் மனித மனத்தை மயக்கமடையச் செய்து, உடலைச் சோர்வுடையதாக்கிக் கடமைகளைப் புறக்கணிக்கச் செய்கின்றது. அதுபோலச் சீவனும் இவ்வுலகில் தான்யார், தனக்கு விதிக்கப்பட்ட கடமையாது என்பனவற்றை உணராது தன்னைச் சூதாட்டம் போன்ற உலகியல் வாழக்கையில் பிணைத்துக் கொள்கின்றது. இதனை,

காயம் பலகை கவறைந்து கண்மூன்றாய்
ஆயம் பொருவதோர் ஐம்பத்தோ ரக்கரம்
ஏய பெருமா னிருந்து பொருகின்ற
மாயக் கவற்றின் மறைப்பறி யேனே (திரு.2866)

என்கின்றது திருமந்திரம். இதில் இடம்பெறும் சூதாட்டம் தாயம் எனப்படும் விளையாட்டு. இதற்குத் தாயப்பலகை, காய்கள், தாயக்கட்டை ஆகியன வேண்டும். தாயக்கட்டையில் நான்கு பக்கங்கள் உள்ளன. அதில் ஒருபக்கத்தில் ஒருகண் அல்லது புள்ளி இருக்கும். இரண்டாவது பக்கம் இரண்டு கண்கள் அல்லது இரண்டு புள்ளிகள் இருக்கும். மூன்றாவது பக்கத்தில் மூன்று கண்கள் அல்லது மூன்று புள்ளிகள் உண்டு. நான்காவது பக்கம் கண் அல்லது புள்ளி ஏதுமிராது. இவையனைத்தும் இருந்தாலும் இவற்றை இயக்கும் மனிதன் முக்கியமானவன் ஆவான். தாயம் விளையாடும் பலகை போன்றது மனிதஉடல் ஆகும். ஐம்புலன்கள் சூதாடும் காய்களேயாகும். தாயக்கட்டையில் உள்ள புள்ளிகளைப் போன்று விளங்குவன மனிதனிடம் உள்ள ஆசை, ஞானம், காரண காரியங்கள் ஆகிய கிரியைகள், இவற்றிற்குப் புலப்படாத நிலையில் சூக்குமமாய் மனிதஉடலில் நிலைபெற்று இருப்பவை ஆறு ஆதாரங்களும் ஐம்பத்தோர் எழுத்துகளும் ஆகும். இவற்றில் இறைவன் பொருந்தியிருப்பதைச் சீவன் உணராதவரை உலக வாழ்வாகிய சூதாட்டத்தில் ஈடுபடுகின்றது. சூதாட்டத்திற்குப் பலகையும், கண்களும் மட்டும் போதாது. இயக்குபவனும் தேவை.

அதுபோலவே உடலில் உள்ள புலன்களைக் கட்டுப்படுத்திச் சீவன் சிவனாவதற்கு இவ்வுடலுள் உள்ள சீவன் இன்றியமையாது வேண்டப்படுகின்றது. இச்சீவன் புலனுணர்வு உடையதாய் இருக்கும்வரை சிவானந்தத்திற்கு வாய்ப்பற்றதாக உள்ளது. ஆனால் சீவன் புலனடக்கமுடைய தாயின் இறைநினைவுடையதாயின் அதுவே சிவனாகும் என்று திருமந்திரம் தெளிவுபடுத்துகின்றது.

**கொல்லாமை**

பிற உயிர்களைக் கொல்லக்கூடாது; கொல்லாநெறியில் நிற்க வேண்டும். பொறுமை, இரக்கம், நல்லறிவு, மெய்த்தவம், அன்பு, புலனடக்கம் இவை இருக்க வேண்டும். இவற்றைக் கொண்டு சிரசின் உச்சியை நாளும் தியானிக்க வேண்டும்.

கொல் என்றும் எறி என்றும் குத்து என்றும் கூறிக் கொடுமை செய்யும் மக்கள் விலங்கினை ஒத்தவர்கள். இவர்களைக் கூற்றுவனின் ஏவலர் தீவாய் நரகிடை வீழ்த்துவர்.

**புலால் மறுத்தல்**

புலால் உண்பவர்கள் எமனின் தூதுவர்கள் ஆவர். நீங்காப் பெருந்துன்பம்தரும் நரகத்தில் வீழுவர். கொல்லும் எண்ணம் இல்லாதவரையும், கொல்லும் ஆற்றல் இல்லாதவரையும் கொல்லும்படி சொல்பவர் உண்டு. துணைநின்று தூண்டுவதும் உண்டு. புலால் விரும்பாதவரை வற்புறுத்தி உண்ணச் செய்பவர்களும் உண்டு. இவர்கள் ஏழ்நரகத்தின் இடையே வீழ்ந்து துன்பத்தை அடைவர். பஞ்சமாபாதகங்களை நீக்கிச் சிவன் திருவடி அடைந்தவர்களுக்குப் பாவங்கள் இல்லை. பாவங்களால் வரும் துன்பங்கள் இல்லை. இவர்கள் பேரின்பத்தில் திளைப்பர். ஆதலால் கொல்லாநெறியே குவலய நெறியாகும்.

**பிறன்மனை நயவாமை**

ஒருவனும் ஒருத்தியுமாய் வாழ்தலே இல்வாழ்க்கை அறமாகும். அன்பு மனைவி வீட்டில் இருக்க அயலானின் மனைவியை விரும்புபவரும் உள்ளனர். இவர்கள் ஆசைப்பட்டு அதனால் துன்பத்தை விலைக்கு வாங்குபவராவார். இதனால் இவர் கெடுவதுடன் இவருடைய குடும்பமும் கெடுகின்றது.

சிற்றறிவு உடையவரும், பொருளில் பெரும்பற்று வைத்தவரும் பேதமையால் பெண்மயக்கம் கொள்வர். இவர்களது மயக்கமானது அத்தனை எளிதாய் நீங்கிவிடக் கூடியதல்ல.

மகளிர் இழிவு

பெண்ணின் கவர்ச்சியில், அவர்தம் புன்னகையில் மன உறுதியை இழக்கக் கூடாது. அவர்கள்பால் செல்லும் மனத்தை அடக்கி நன்னெறியில் நடத்தல் வேண்டும். மனைவியால் அடைவதே சுகம். மற்றொருவர் மனைவியை விரும்புவதால் சிக்கல் எனும் சுழலில் சிக்கிப் பெருந்துன்பம் உண்டாகும். முறையற்ற கனவை நடைமுறைப்படுத்தும் முயற்சி இருத்தல் கூடாது. பெண்கள் முகமலர்ச்சியுடன் இருந்தபோதும், பொருளை மனத்துள் கொண்டவர்கள். எனவே எந்த நேரத்தில் வேண்டுமானாலும் தம்புறக்கணிப்பைச் செயல்படுத்தத் தயங்கமாட்டார்கள். எனவே இவர்களிடம் நீடித்த இன்பத்தை எதிர்பார்ப்பது முட்டாள்தனமான செயல் ஆகும்.

நல்ஒழுக்கம் உள்ள மக்களைப் பெறுதற்கே விந்து ஆணுக்குள் வைக்கப்பட்டது. ஆனால் அவனோ முறையற்ற பெண்ணிடம் விந்துவை விரயப்படுத்த முயல்கின்றான். அவனது போக்கு தடுக்கப்படாவிட்டால் அவனுக்கும், பிறருக்கும் கிடைக்க உள்ள நற்பயனை இழப்பான்.

நல்குரவு

வறுமை இருப்பின் நெருங்கி நின்ற சுற்றத்தாரும் அன்பின்றி விலகி விடுவார்கள்; கொடுக்கல் வாங்கள் இருக்காது; குதூகலம் இருக்காது; ஊரார் நடுவே நிமிர்ந்து நடக்கும் கம்பீரம் இருக்காது.

வயிறு நிரம்ப வேண்டும் என்பதற்காகத்தான் மிகவருந்திப் பொருள் தேடுகின்றனர். பசி மட்டுமல்ல, நோய், வறுமை, பிறவி இவையெல்லாம் உங்களுக்கு நிறைவைத் தரவேண்டும் என்றால் இறையின் புகழைப் பாடவேண்டும். இதனால் வறுமை ஒழிந்து வளமான வாழ்வு அமைந்து வீட்டின்பப் பேறுகிட்டும். உண்மைப் பொருளை நாடினால் மனமாசுகள் நீங்கும்; பிறவியையும் பசிப்பிணியையும் போக்க முடியும். பெருந்தீனியில் விருப்பம் உள்ளவர்கள் விலங்குக்கு ஒப்பானவர்கள். அறுசுவை உணவை விரும்பி உண்டாலும் அச்சுவைகள் அவரைத் துன்பத்தில் ஆழ்த்தி விடும். மிகுந்த உணவு உடலைப் பாதித்துக் கொடிய வினைகளால் வாழ்க்கையில் வேதனைப்படுபவன் இறையடி வேண்டி அவற்றை வெறுக்க முடியும்; விட்டு விலக முடியும்.

ஆகுதி வேட்டல்

வேதத்தை முதலாகக் கொண்டு நடத்தப்பெறும் வேள்வியில் வானவரும், நிலத்திடை வாழ்பவரும், திசைகளில்

வாழ்பவர்களும் நலம் பெறுவர். சிவவேள்வியே தவவேள்வி ஆகும். வேள்வி செய்பவர்கள் சுவர்க்கத்தை விரும்பி அக்கினிக் காரியம் செய்து தானம் கொடுத்து உணவை உட்கொள்வார்கள். இவர்கள் ஊழின் பயனை உள்ளத்தில் கொள்வதில்லை. உடலின் வினையால் ஏற்பர்; மெய்நெறி நிற்பர். அறிவைச் சிரசின் மேல்செலுத்தி வாழ்வர்.

வேதியர்கள் அக்கினித் தத்துவம் அறிந்தவர்கள். புறத்தே மட்டுமின்றி அகத்தேயும் அதனை உணர்வர். உணர்ந்து மனைவியோடு கூடி உண்மைப்பொருளில் பொருந்துவர். இறை திருவடியை எண்ணி ஆகுதி செய்தால் நான், எனது என்ற இருவகைப் பற்றும் நீங்கும்.

அகலும் தீயும், திரியும், நெய்யும் ஒன்று கூடி எரிந்தால் புறவிருள் அகலும். இறையடி உணர்வில் அகத்தே பற்றிய ஆணவ இருள் அகலும். ஐந்தெழுத்தை இடைவிடாமல் எண்ணுவார்க்கு அந்தத் திருவடி உணர்வு வாய்க்கும். மலம் அகலும். சிவனுக்கு வேள்வி செய்ய வாழும்நாள் நீட்டிக்கும். இருவினை நோய்கள் அழியும்.

சிவாக்கினி சிரசின்மேல் உதிப்பதை நினைந்து ஞானச் செல்வத்தை நாடி அக்கினி காரியம் செய்ய வேண்டும். வேள்வியில் மட்டுமல்லாமல் உடம்பிலும் சகல அக்கினி காரியங்களிலும் சிவன் மறைந்து உதவுகின்றான். இறந்த பின்னும் சூக்கும உடலில் பொருந்தி உதவுவான். நாத ஒலியில் வினைகள் கெடும். சிவவழிபாடு செய்து வேள்வி நடத்தும் சிவ மறையோர் இத்தவத்தவராவர். அவர்களது அக்கினிக் காரியம் இம்மை, மறுமை இன்பங்களைப் பெற்றுத் தரும்.

**அந்தணர் ஒழுக்கம்**

அறச்செயல்களை நாளும் செய்து பிறப்பினை அறுக்கும் தொழிலை உடையவர் அந்தணராவர். அவர்கள் அறவோர் எனச் சிறப்பித்துச் சொல்லப்படுவார்கள். இவர்கள் உயிர்கள் இடத்துக் கருணை உள்ளவர்கள். இவர்கள் இறைப்பணியில் நிற்பர்; ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என அறுதொழில் புரிவர்; நியமத்துடன் சிவனை வழிபட்டுத் திருமுறை ஓதுவர்.

இத்தகைய அந்தணர் இருவேளைகளிலும் முத்தீ (ஆகவனீயம், காருகபத்தியம், தட்சிணாக்கினியம்) ஓம்பி, சிவத்தை இடைவிடாது நினைப்பதன்மூலம் உலகம் மேன்மையுறும்.

அந்தண்மை பூண்ட அருமறை அந்தத்துள்
சிந்தைசெய் அந்தணர் சேரும் செழும்புவி
நந்துதல் இல்லை நரபதி நன்றாகும்
அந்தியும் சந்தியும் ஆகுதி பண்ணுமே (திரு.234)

வேதத்தின் முடிவானவன் சிவன். இவனை இடைவிடாது நினைக்கும் அந்தணர்கள் அடைகின்ற பூமி வளம்குன்றுதல் இல்லை. அந்நாட்டு அரசனும் நல்லவனாக இருப்பான். அதன் காரணமாக அந்தணர்கள் காலையிலும் மாலையிலும் ஆகுதி செய்வார்கள்.

இறையை எண்ண அகபுறப்பற்று நீங்கும். அகங்காரம் அறுபடும். அதன்பின் வேறு எதையும் தேடாது. அந்தணனால் செய்யப்படும் அவியை உண்ணப் பற்றுகள் நீங்கும்; பிரணவம் பொருந்தும்; யான் எனது எனும் பற்றுகள் நீங்கும்.

வான்சிறப்பு

இது மழையின் பெருமையைக் கூறுகின்றது. குற்றங்களை நீக்கி, அறத்தைப் போற்றும் அரசனுடைய நாட்டில் வான்மழை தவறாது பெய்யும். அம்மழையால் தாவரங்கள் செழித்து வளரும். இதுபோல் சிவானந்த மழையால் துன்பமுடைய எட்டி போன்ற இவ்வுலக வாழ்வானது அமுதம்போல் இனிக்கும். துரிய நிலையாகிய மலையில் இருந்து இறங்கும் வானருவி உரைப்பதற்கு உரையில்லாமல், நுரையில்லாமல், மாசில்லாமல், கரையில்லாமல், நுண்ணிய தெளிந்த சிற்சக்தி நீராக உள்ளத்தில் தோன்றும். அதுவே சிவனின் ஞானநதியாகும். நீரின்றியமையாது உலகுபோல் இறைவனின்றி உலக வாழ்வில்லை.

தானச் சிறப்பு

பிறருக்கு இயன்ற அளவு ஈகை வழங்குதலின் பெருமையைத் திருமூலர் கூறுகின்றார்.

ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந்து உண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை யுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே (திரு.250)

அனைவருக்கும் கொடுங்கள்; உதவுவதில் உயர்வு தாழ்வு பார்க்காதீர்கள். செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்து உண்ணுங்கள். பழமை என்பதாலேயே ஒன்றைப் போற்றாதீர்கள். இம்மை மறுமை இரண்டிலும் இன்பம் விரும்புபவர்களே, எவற்றையும் தமக்கே என்று விரைந்து அனுபவிக்காதீர்கள். பிறர்க்குத் தானம் செய்ய நினையுங்கள்.

**அறம்செய்வான் திறம்**

தம்மை அறியும் ஞானிகள் இறையடி வணங்குபவர்கள் ஆவர். இவர்கள் அறநெறியில் நிற்பர். அவர்களே உண்மையை உணர்வர். அவர்களுக்கு உறவெல்லாம் பரமனேயாவான். இறைவனும் தம்மைத்தாம் அறியும் அத்தகைய ஞானிகளுக்கு உறவாக இருப்பான்.

தாமறி வார்அண்ணல் தாள்பணி வார்அவர்
தாமறி வார்அறந் தாங்கிநின் றார்அவர்
தாமறி வார் சிவதத்துவ ராவர்கள்
தாமறி வார்க்குத் தமர்பர னாமே (திரு.251)

அறம் என்பது மனத்தால், வாக்கினால், செயலால் செய்யப்படுவது. நல்அறம் செய்வோர் சிவத்தை உணர்ந்தவராவர். சிவகுலத்தைச் சேர்ந்தவராவர்.

யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே (திரு.252)

இப்பாடல் அனைவரும் செய்யக் கூடிய எளிமையான அறத்தைக் கூறுகின்றது. உண்பதற்குமுன் சிவனைப் பக்தியுடன் பத்திர வாயிலாக (வில்வம், துளசி, வேம்பு) ஆகியன இட்டு வழிபடுவதும், பசுவுக்கு ஒரு வாயளவு புல் கொடுத்தலும், நாம் உண்பதற்குமுன் ஒருபிடி அளவேனும் பிறர்க்குக் கொடுப்பதும், பட்சிகளுக்குக் கொடுப்பதும் அனைவருக்கும் எளிதான ஒரு செயற்பாடே ஆகும். இவையும் முடியவில்லை என்றால் பிறர் மனம் நோகாதவாறு இனிமையாகப் பேசுவது என்பதும் அனைவராலும் பின்பற்ற முடியும் என்பதே இப்பாடலின் பொருளாகும்.

துறவிகளுக்கும் ஞானியருக்கும் உணவு படைப்பதே அறத்தில் சிறந்தது. இதுவே இல்லற தர்மம். ஆணவம் அகற்றி இறை உணர்வைப் பெருக்க வேண்டும். புண்ணியங்களைச் செய்ய வேண்டும். பொருட்பற்றைக் குறைத்து அறத்தைச் செய்யுங்கள். கூற்றுவன் வரும்முன் உடலை நிலைபேறாகச் செய்யும் நல்ல தவத்தினை மேற்கொள்ளுங்கள் என்கின்றார் திருமூலர்.

பற்று இல்லாதவரிடம் சுற்றம், உலகியல் சிற்றின்பம் இவை இருப்பதில்லை. சிவனை மறந்தவரிடம் அவன் வருவதில்லை. சிவனை மறந்தவர் அறத்தின் எல்லையை அறிய முடியாது. அறத்தின்வழி தவம் செய்யலாம். பிறவியைக்

கடக்கலாம். பொருளை அறவழியில் தேடி அறவோர்க்கு மனமுவந்து கொடுத்தால் அதுவே அவர்களுக்கு வழித் துணையாக அமையும்.

**அறம்செய்யாதவன் திறம்**

திருமூலர் தருமம் செய்யாதவரது இயல்பினை இங்குக் கூறுகின்றார். எட்டிப்பழம் எவராலும் விரும்பப்படுவதில்லை. அதுபோல் நல்லறம் செய்யாதவர் செல்வம் ஒருவருக்கும் பயன்படுவதில்லை. கடும்வட்டி வாங்குவோர், வஞ்சனையால் பிறர் பொருளைக் கவருவோர் அறம்செய்யார் ஆகியோர் இறைப்பண்பை அறியமாட்டார்.

அறநெறியை அறியாதவர் இறையின்பாதம் அறியும் திறன் அற்றவர்கள். சிவலோகம் செல்லும் திசை அறியாதவர்கள். அன்பும் அருளும் இல்லாச் சுயநலவாதிகள், அதர்மமே தர்மம் என எண்ணி அதையே செய்வர். பிறரை எளிதில் பகைத்துக் கொள்வர். இதனால் இவர்கள் தொடர்ந்து பிறவியை அடைந்து கொண்டே இருப்பர். முக்தி நிலையாகியபேறு கிட்டாது.

அறம் செய்பவர் நோய்நொடியின்றி இருப்பர். இரவலர்க்கு ஈயாதவர்கள், நீர் ஊற்றிச் செடி வளர்க்காதவர்கள் நரகத்தில் அல்லல்பட்டுத் துன்புறுவர். சன்மார்க்கத்தில் நிற்பவர்கள் வினைகளைக் கடந்து நிற்பர். சாயுச்சிய நிலையை அடைவர். பிறவுயிர்களை நேசிப்பதன்மூலம் பரோபகார எண்ணத்தில் சிவநிலை எய்துவர்.

தக்கார்க்கு ஒன்று இடுதலையும், வறியார்க்கு ஒன்று ஈதலையும் நினையுங்கள். பிறர் இன்பம் கெடும்படி நடப்பது விலங்கிற்கு ஒப்பான குணமாகும். பொருள் ஆசையால் அதைப் பெற ஒருவரை வாழ்த்தக் கூடாது. இறைவனை வாழ்த்துங்கள்; அப்பொருளை வழங்கி, வறுமையைப் போக்கிப் பேரின்ப வாழ்வைத் இறைவன் அருளுவான்.

**அன்பு செய்வாரை அறிவன் சிவன்**

அன்பின் கொள்கையே சைவக் கொள்கையாகும்; சிவநெறியாகும். அன்புதான் சிவம் என்று உணர்ந்தவர்கள் சிவனால் அறியப்படுவர். உலகில் நடப்பையும் நம்மையும் அறிபவன் இறைவனே. உள்ளன்போடு வழிபடுபவரை அவன் அறிவான். அவரவர் பக்குவத்திற்கு ஏற்றபடி அவன் அருள் செய்கின்றான். அவனே மேலானவன்; உத்தமன் அன்பும் அருளும் கொண்டு வழிபடுபவர்க்கு அருள்புரிந்து அன்பு செய்வான். ஏனெனில் அவன் அன்பர்க்கு அன்பன்.

பிறவிக் கருமங்கள் மலைமலையாக இருந்தாலும், பல்வேறு தீவினைகள் செய்திருந்தாலும், அன்பும் அருளும் உடைய இறைவன் அருளில் கலந்து நின்றுவிட்டால் மனிதப் பிறவியானது முடிவடையும். அன்புறு சிந்தைமேல் எழும் சிவஒளி இன்பம் தரும். சிற்சக்தியோடு அருள் புரியும். ஐம்பொறிகள் அடங்கும். பக்தியால் தொழுது வணங்கும் அடியார்க்கே இறைவன் முத்தி கொடுத்திட முன்வருவான்.

இடைவிடாது அன்பு வைத்துப் போற்றுபவர்களை ஈசன் அறிவான். எனவே அன்பு செய்தலைத் தவிர வேறு செயலைச் செய்யாது ஒழித்தல் வேண்டும். அந்நிலையில் ஈசன் நம்மிடம் வருவான்; அன்பு நெஞ்சினரிடை அமர்வான்.

உலகவாழ்வு, தொல்லையின் காரணமாய் இறைவனை மறந்து விடுகின்றோம்; மீண்டும் நினைக்கின்றோம். அப்படி இல்லாது எப்பொழுதும் அவனைச் சிக்கெனப் பற்றிக் கொண்டு அவன் வழியே செல்ல வேண்டும். உயிருக்கு உயிராய்க் கலந்து நின்ற இறைவனை, அருள் சோதியை அன்போடு கலப்பதே முக்திப்பேறாகும்.

**கல்வி**

உடல் என்பது வினையின் பொருட்டு வந்தது. உண்மையான கல்வியால் ஞானக்கண் புலனாகும். அப்போது புலனாகும் உண்மைக் கருத்துகளைச் சிந்தித்துப் பிறருக்கு உரைக்க முடியும். பிரணவ அறிவில்லாத உலகியல் கல்வியைக் கற்றவர்கள் குண்டலினியின் ஆற்றலைப் பெருக்காது தம் வாழ்நாளை வீணாக்குகின்றனர். இரவும் பகலும் இறையை நினைக்கும்போது குண்டலினி ஆற்றலால் அழியா உடல், அதாவது பிரணவ தேகம் அமையும்.

பிரணவக் கல்வியே பிறவியின் துணையாக இருந்து உயிர்களுக்கு வீடுபேற்றை அளிக்கும். கற்றறிவாளரின் ஞானக்கண் கற்ற அறிவைக் காட்டுந் தன்மை உடையது. பெற்ற உண்மை அறிவை மற்றவர்களுக்குப் பகிர்ந்து அளிப்பது. மெய்யுணர்வுக் கல்வியைக் காலந்தாழ்த்தாது கற்றிடல் வேண்டும். நிலையான இக்கல்வி பாவத்தை நீக்கக் கூடியது. எப்போதும் சத்சங்கத்திடை இருத்தல் வேண்டும். இறைவுணர்வே இன்பந்தரும் கல்வியாகும்.

**கேள்வி கேட்டமைதல்**

சிவானுபவம் பெற்றவர்களிடம் சென்று கேட்கத் தக்கனவற்றைக் கேட்டு மனம் அடங்கியிருத்தல் என்பதே கேள்வி

கேட்டமைதல் என்பதன் பொருளாகும். கற்றல், கேட்டல், சிந்தித்தல் ஆகியவை கல்விக்கு மிக இன்றியமையாதனவாகும். இதுவே சிவகதிக்கு இட்டுச் செல்லும் வழிஆகும். எனவே ஞானம்பெற விரும்புபவன் ஞானியர்களிடம் அறநெறிகளைக் கேட்க வேண்டும். செந்நெறி அந்தணர் வாய்மொழி கேட்டு ஒழுக வேண்டும். தேவர்களின் மந்திர உபதேசங்களைக் கேட்டு அறிய வேண்டும். உண்மையை அறியும் பொருட்டுப் புறச்சமயங்களின் உண்மை தத்துவங்களைக் கேட்டறிதல் வேண்டும்.

உயிர், மனம், உடம்பு, கல்வி, கேள்வி ஆகியன அனைத்தும் பிறவியை ஒழிக்கத் துணையாதல் வேண்டும். உலகினர் கற்றல், கேட்டலால் மட்டும் உண்மைப் பொருளினை உணர முடியாது. உடம்புக்கு உறுதுணை உயிராகும். அதற்கு உறுதுணை ஞானியர்பால் பெறுகின்ற பெறுதற்கரிய கேள்விச் செல்வமாகும். அக்கேள்விச் செல்வத்தால் இறை திருவடியை எண்ணி இருத்தலே சீவாத்மாவுக்குத் தக்க துணையாம்.

கல்லாமை

பல நூல் கற்றும் பெறுதற்கரிய சிவானுபவமாகிய தன்னுணர்வு பெறாமையே கல்லாமை எனப்படும். ஆசிரியர்பால் சென்று முறையாகத் தேர்ந்து முன்செய்த நல்வினையால் தெய்வக் காட்சியை உணர வல்லவராயின் அவர்கள் இறைவன் திருவருளினைப் பெற்றவர்கள் ஆவார்கள். இவர்கள் சிவானுபவத்தில் மூழ்கி இருப்பர். முறையாகக் கல்வி கற்றோரும் இறையருள் இல்லையெனில் கல்லாதவராகவே கருதப்படுவார்கள். அத்தகையவர்களால் சிவானுபவத்தைப் பெறமுடியாது. மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும் கற்றார் அனைத்திலர்பாடு. இங்கே கற்றல் என்பது இறையனுபவம் பெற்ற கல்வியே ஆகும்.

சிவஅருள் பெற்றவர் உலகில் உண்மை நெறி ஒன்றேதான் என உணர்ந்து வாழ்வர். அருள் பெறாதவர் பல நெறிகள் உள்ளன என எண்ணி உண்மைநெறி எது என்று அறியாது மயங்குவர்; வினைத்துயரைப் பெருக்கிக் கொண்டு அல்லற்படுவர்.

நன்மை, தீமை, தோன்றுவது, அழிவது, வித்தை, அவித்தை, சத்து, அசத்து, அறிவு, அறியாமை, இருள், ஒளி முதலானவற்றைப் பற்றி ஒருவன் தகுதி உடையவர் வாயிலாகக் கேட்டு அறிதல் வேண்டும். தோன்றுவது அழிவது பற்றிய அறிவில்லாமலும் ஆராய்ச்சி இல்லாமலும் அழியும் பொருளை, மெய்யென்று அழியும் இந்த உடலை நிலைபெற்றதென்றும்

அறிவில்லாதவர் கருதி இருப்பர். நீக்கமற நிறைந்த இறைவனைக் கல்லாதார் உள்ளத்தால் உணரமுடியாது. மாயைவசம் நிற்பார்கள்.

கற்க வேண்டும். கற்றதன் பயனாகக் கடவுள் இடத்து அன்பு செய்தல் வேணடும். கற்க வேண்டியவற்றைக் கற்று அன்புவழி நடப்பவரே கணக்கறிந்தவர்கள் ஆவர்; இவரே அறிவு உடையவர்களும் ஆவர்; உண்மைப் பொருளையும் காண்பர். கணக்கு அறிந்து, தத்துவம் அறிந்து, திருவருள் உண்மை கண்டு தெளிந்தவர்களே கற்றறிந்தவர் ஆவர்.

கல்வி அறிவு இல்லாதவரும் இறைவனின் அருட்காட்சியைக் காணும் வல்லமை உடையவர்களாய் உள்ளனர். இவர்கள் இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட அடியவர்கள் ஆவர். அவன் திருவருளால் அறிவு பெற்றவர்கள். சிவானுபவத்தில் மூழ்கி, சிவநாமத்தைக் கற்று, சிவசிந்தனையில் உருகும் திருத்தொண்டர்கள் ஆவர்.

சிவானுபவக் கல்வியைக் கல்லாதவர் உடலையே, உலகையே, உண்மையென நம்பி லோகாயதம் பேசி, பொல்லாத வினைத்துயர்களைப் பெருக்கிக் கொள்வர். உண்மை, இன்மை, நித்தியம், அநித்தியம் போன்றவற்றைக் கல்லாதவர் அறிவிலிகளாவர்; அவர்கள் மூடர்களாவர். அவர்கள் நன்னெறியைவிட்டுத் தீநெறியில் செல்வர். இத்தகைய மூடரைக் காணவும் கூடாது. அவர்கள் சொல்கேட்கவும் கூடாது. ஏனெனில் இவர்கள் மும்மலம் நீங்காதவர்கள். தங்கள் குற்றங்களை நீக்கிக் கொள்ளாத தன்மையர்கள். உண்மைநெறி உணராத அறிவிலிகள் என்று கல்லாமையின் பேரிழப்பையும் கல்லாதவர்களின் நிலையையும் திருமந்திரம் விளக்குகின்றது.

### நடுவுநிலைமை

இன்னார் இனியர் என வேறுபாடு காட்டாது அறத்தொடு நிற்றலே நடுவுநிலைமையாகும். அறவழிச் செல்பவனுக்கு நடுவுநிலைமை இன்றியமையாதது. பிரம்மா, விஷ்ணு, உருத்திராதி தேவர்கள் எல்லாம் நடுவுநிலையில் நின்று முத்தொழில் புரிவர். ஞானியர் நடுவுநிலையில் பற்றற்று வாழ்வர். நடுவாகிய சகஸ்தர தளத்தில் விளங்கும் ஒளியை அறியாதவர்களுக்கு ஞானம் கிட்டாது. நடுவு நின்றோர் நல்ல தேவர் ஆவர்; அவர் நல்ல வடிவு பெறுவர். நாமும் நடுநின்ற ஞானியர்கள் வழியில் பயின்று அவர்களைப் பின்பற்றுதல் வேண்டும்.

**கள்ளுண்ணாமை**

மனித வாழ்வை நரகமாக்குவது கள்ளேயாகும். அதனால் திருவள்ளுவரும் திருமூலரும் கள்ளுண்ணாமையின் அவசியத்தை வற்புறுத்தியுள்ளனர். பஞ்சமாபாதகங்களுள் ஒன்றான கள்ளுண்ணலைத் தவிர்க்க வேண்டியது அவசியம். சிவன் நினைவின்றிக் கள்ளுண்டு, இருத்தலும் கிடத்தலும் உளறலும், கீழ்நிலையை உண்டாக்கும். மதிமயக்கம் ஏற்பட்டு தன்னிலை மறந்துவிடும்.

சிறுதெய்வ வழிபாட்டில் மது அருந்தி அழிகின்றனர். காமவாழ்வில் உள்ளோர் சித்தம் கலங்கிக் கெடுவர். மகாதேவா எனும் தீயிடைவேள்வி செய்வோர் சிரசின் ஒளியை உணர்வர். மூலாக்கினியைத் தூண்டி ஒளிபெறுவர். மனத்தை ஒருநிலைப்படுத்திச் சிவசக்தி வழிபாடு செய்வர் மருள்தன்மை நீங்கி அருள்பெறுவர். கள்உண்போர் நித்தியானந்தம் பெறமாட்டார்; சிற்றின்பத்திலே மூழ்கிக் கிடப்பர். இறைநிலை கிட்டப் பெறார்.

**பெரியாரைத் துணைக்கோடல்**

சிவநெறியைப் பின்பற்றும் ஞானியரைத் துணையாகப் பெறுதல். அத்தகைய பெரியாரது கூட்டுறவு நன்மை பயக்கும். பெரியாரோடு தலயாத்திரை செய்தல், அவர்கள் கூறும் சிவாயநம ஒலியைச் செவிமடுத்தல், அவர்களது திருவடியைப் பொருந்தியிருத்தல் போன்றவை இறையை அடைய உறுதுணை புரியும்.

உண்மையை அறியும் பெரியோர்கள் முழுமுதற் பொருளாகிய இறைவனை விரும்பி அவனிடம் பொருந்தி இருப்பர். அத்தகையவர்கள் ஆன்மதத்துவம், வித்தியாதத்துவம் ஆகியவற்றைக் கடந்து சிவதத்துவத்தில் பொலிந்து விளங்கித் தோன்றுவர். ஞானியரோடு சேர்ந்திருத்தல் ஆனது நன்னெறியைக் காட்டுவதோடு பேரின்பத்தையும் தரும். பெரியாரைக் கூட வல்லவன் கலைஞானத்துள் இருப்பான்; பிறவி நீங்குவான்; உரிமையோடு பழகும் தன்மையில் வல்லவன்; உயிர்கட்கு நண்பன்.

சிவநெறியாளரைத் துணையாகக் கொள்ளல் வேண்டும். அவரது கூட்டுறவு நன்மையைத் தரக்கூடியது. அவர்கள் துணையால் இறைவனை அடைதல் முடியும். இப்பெரியோர்கள் இறைவனை விரும்பி அவனோடு பொருந்தி இருப்பர். சிவ தத்துவத்தில் நன்னெறியில் நின்று ஒழுகுவர். இவர்கள் செருக்கு

அறுத்தவர்கள். இவர்கள் நன்னெறியைக் காட்டிப் பேரின்பத்தையும் பெறச் செய்வர். சிவநெறியில் இரண்டெனக் கலந்தவர்களின் கூட்டுறவு சிவபுரத்தைச் சேர்ப்பிக்கும். சிவபெருமானை அகத்தே உணர்ந்து அழிவின்றி வாழ்பவர்கள் அருமையும் பெருமையும் உரிமையும் உடையவர்கள். இத்தகைய பெரியோரது துணையினைப் பெறுதல் பெரும்பேறு ஆகும்; ஆணவம் நீங்கி அருள் உலகில் வாழலாம்.

## வாழ்வியல் நெறி

வாழ்க்கை வாழும் விதங்களைப் பண்பாடு என்கின்றோம். அன்பினைப் பொழிந்துவாழும் வாழ்க்கையே ஆன்மிகவாழ்க்கை. ஆன்மிகப் பண்பாட்டு வாழ்க்கைநெறியைத் திருமந்திரம் வாழ்வியல் நெறியாக விளக்குகின்றது. உண்ணுதல், உறவாடுதல், உடற்பயிற்சிசெய்தல் ஒழுக்கநெறியைக் கடைப்பிடித்தல், இறைவழிபாட்டு முறைகளை மேற்கொள்ளுதல் போன்ற முறைகளைத் தெளிவாக எடுத்துச் சொல்லும் பாடல்களைத் திருமூலர் விளக்குகின்றார்.

பிறஉயிர்கள் துன்பப்படும்போது கருணையோடு அணுகி அதைப் போக்கும்வழி யோகியர்க்கு வேண்டும் அதற்குதான் கற்றகல்வி, ஞானம். மதிநுட்பம் இவற்றைக்கொண்டு களைதல் வாழ்க்கையின் நோக்கமாக இருக்கவேண்டும். தன்குடும்பம் என்பதைத் தாண்டி சமுதாயத்தின் நலனை முன்னிலைப்படுத்தும் வாழ்வியல் நெறிகளைத் திருமூலர் திருமந்திரத்தில் கூறியுள்ளார்.

மனிதனின் பலவகையான துன்பங்களுக்கு அவனது மனமே காரணமாக அமைகின்றது. புலன் இன்பங்களில் மயங்கி மனக்கட்டுப்பாடு இல்லாதநிலையில் தன்னுடைய ஆளுமையை இழக்கின்றான். இந்நிலையில் இருந்துவிடுபட மனக்கட்டுப்பாடு அடைய உதவும் நெறியோகம் என்னும் வாழ்வியல் நெறி. புலன் வழி நோக்கும் மனத்தை உள்முகமாகத் திருப்பி மனத்தினை ஒருநிலைப்படுத்தும்போது மனத்தினால் உண்டாகும் துன்பங்கள் அகலும். மேலும் மனத்தினுள் மறைந்து கிடக்கும் ஆன்மசக்தியும் வெளிப்படும்.

தன்னைஅறிதல் - உயிர் தன்னைஉணர்தல் - அதாவது தான் அன்பு வடிவானவன் என்று உணர்ந்து அதனையே எல்லா உயிர்களிடத்தும் கண்டு இரக்கம் கொள்ளுதல், எல்லா உயிர்களிடத்தும் உள்ள இறைநிலையை உணர்ந்து அந்த இறைநிலைத் தன்மையை அடைதல். அதுவே இறைவன் தன்னை

ஆட்கொள்வது என உணர்தல். இத்தகைய யோகநெறியின் மூலம் அழியும் தன்மை உடையதாகிய உடலை அழியாமல் நிறுத்தலாம்; இறவாமை என்ற நிலையினை எய்தலாம் வாழ்வின் அறச்செயல்களால் அன்பினை வளர்க்கலாம் மெய்யுணர்வைப் பெற்று முக்தி அடையும் வழியினை அடையலாம்.

உலக வாழ்வியலுக்கும் இறையியலுக்கும் அடிப்படை தனிமனித ஒழுக்கங்களாகிய அகம் சார்ந்த பண்பாடுகளே ஆகும். சமயம் சார்ந்த தோத்திர சாத்திர நூலாகத் திருமந்திரம் தோற்றம் அளிப்பினும் முதல் தந்திரம் முழுவதும் தனிமனித ஒழுக்கங்களையே பேசுகின்றது.

**திருமந்திரம் வெளிப்படுத்தும் வாழ்வியல் நெறிகளின் இன்றைய தேவைகள்:**

1. **தனிமனிதனுக்கான தேவைகள்:** உடம்பைப் பேணிக் காத்தல், மனம்போன போக்கில் வாழாமை, அறநெறியில் பற்றுதல், அமைதியின் சாதனமாகிய அன்பும் நீதியும் பெறுதல், மனிதப்பண்பைப் பேணுதல், இன்பத்தில் அளவுமுறை காத்தல், புலனடக்கம் பெறுதல் ஆசைகளையும் அல்லல்களையும் பெருக்காத வாழ்வு, தொண்டுசெய்தல், உணவைக் கட்டுப்படுத்துதல் போன்றவை திருமூலரின் பண்பாட்டுநெறிமுறைகளாகும். இவை வாழ்வியலுக்கு இன்று பெரிதும் தேவையான ஒன்றாகும்.

2. **சமுதாயத்திற்கான தேவைகள்:** தம்மைத்தாமே திருத்திக்கொள்ளத் தயங்கும் மக்கள், அமைதியின்மையைத் தூண்டும் ஆயுத வியாபாரம், இயற்கையை உணராமல் இயற்கை வளங்களைச் சீரழிக்கும் நிலையிலிருந்து மாற்றம், அணு ஆயுதப் போர், பட்டினிச் சாவுகள் இவற்றில் இருந்து விடுதலை. திருமூலர் கூறும் அடிப்படையான ஒழுக்கத்தோடு கூடிய பண்பாட்டால் சமுதாயம் பக்குவப்படுதல், அப்பக்குவத்தால் மனிதனை மனிதன் மதிக்கும் நிலை உருவாதல். இந்தப் பண்பட்ட நிலைகள் சமுதாயத்தின் எல்லாவகையான அவலங்களையும் களைய உதவும்.

3. **இயற்கை வளங்களைக் காக்கும் சுற்றுச்சூழல் தேவைகள்:** இயற்கையின் தட்பவெட்பம், தூசி, புகை,

நச்சுக்காற்று, நோய்க்கிருமிகள் பரவுதல் போன்றவற்றில் இருந்து காப்புப்பெறுதல்.

4. **இறையுணர்வைஅடைதலுக்கான ஆன்மிகத்தேவைகள்: அனைத்துப் பொருட்களிலும் இறைவனைக் கண்டு அவற்றைப் பேணும் உணர்வை அறிவுறுத்துதல் -**

**எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றும் அறியோம் பராபரமே**

என்பது தாயுமானவர் வாக்கு. திருமந்திரம் இன்பமும் துன்பமும் நிறைந்த மனித வாழ்க்கையை இன்பமாகவே வாழ முடியும் என்று உறுதி கூறுகின்றது.

**யோகநெறி**

திருமந்திரத்தில் பண்டைத் தமிழ்நெறியான சைவநெறியின் சிறப்பினைப் பல இடங்களில் காணமுடிகின்றது. சிவனை முழுமுதற்கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயம் சைவம். உலகத் தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் சிவனே காரணமாகின்றான். அவனே சக்தியும் சிவனுமாகின்றான் என்பன போன்ற கருத்துகளைத் திருமூலரின் பல பாடல்களில் காணமுடிகின்றது. சைவநெறி உணர்த்தும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற கோட்பாடுகளையும், சிவனின் ஐந்து தொழில்களையும், சிவனின் வடிவங்களையும் இவரது பாடல்கள் தெரிவிக்கின்றன. அதேசமயம் சமயம் கடந்த சன்மார்க்க நெறியினையும் அதன் அவசியத்தையும் திருமூலர் தெரிவிக்கின்றார்.

உலகத் தோற்றத்திற்கும் இயக்கத்திற்கும் அணுக்களே காரணம் என்பதைத் திருமந்திரத்தின் வாயிலாக அறியமுடிகின்றது. அணு என்பது ஐம்பூதங்களின் கூட்டுச் சேர்க்கையாகும். அணுவுக்கு உயிராய் விளங்குவது சிவம். அணுக்களின் எண்ணிக்கை 41,500, இவை 96 மெய்களில் அடங்குகின்றது. சைவவாதிகளின் இத்தத்துவத்தைத் திருமந்திரம் முன்பே விளக்குகின்றது. அணுவில் மூன்று முக்கிய அணுக்கள் உள்ளன என்பதை இன்றைய அறிவியலோடு ஒப்பிடும் வகையில் அன்றே திருமூலர் கூறியிருப்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

திருமந்திரம் யோகநெறி வாயிலாக மெய்யுணர்வைப் பெற்று அன்பு, அருளைப் பெற்று முக்தி அடைவதை விரிவாகப் பேசுகின்றது. யோகநெறியின் முடிவாக அன்புநெறியைக் காட்டுகின்றது. இயற்கை உணர்வாகிய அன்பு-அன்புடன்

செய்யப்படும் அறச்செயல்கள், தவநிலை எய்தப் பயன்படும் யோகம் இந்த மூன்றும் இணைந்து மெய்யுணர்வு பெறும் வாழ்க்கைநெறியைத் திருமூலர் உணர்த்துகின்றார். சமுதாயத்தில் காணும் பலவகை துன்பங்களுக்குத் தீர்வாக அமைவது இந்த மெய்யுணர்வு பெறுதல் என்கிற யோகநெறியே. ஆகவேதான் திருமூலர் யோகநெறியாகத் தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்கின்றார். மனிதன் மெய்யுணர்வு பெறுவதன் அவசியமாவது மனவளம் பெறுவது, உயிர்வளம் பெறுவது. என்ற இவ்விரண்டும் அமைவதற்கு உடம்பைக் கருவியாகக் கொண்டு யோகசாதனை வாயிலாக மெய்யுணர்வு மேம்பாடு அடையும்போது மேற்கண்ட மனவளம் மற்றும் உயிர்வளம் பெறுவது சாத்தியமாகும். ஆகவேதான் திருமூலர்,

> உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
> திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார் (திரு.724)

திடம்பட மெய்ஞ்ஞானம் சேர உடல்நலம் காப்பது அவசியமாகின்றது. அதற்கு யோகநெறி துணை செய்யும் என்று கூறுகின்றார்.

முடிவுரை

சமுதாயப் பார்வையில் முதலில் உலகியலைக் கூறுகின்றார். பின்தான் இறையியலைக் கூறுகின்றார். திருமந்திரத்தில் அகம், புறம் சார்ந்த பண்பாடுகளைவிட மிக அதிகமாகச் சமயம் சார்ந்த பண்பாடுகளே விளக்கப்பட்டு உள்ளன. அகம் சார்ந்த பண்பாடாகிய தனிமனித ஒழுக்கங்கள் முதல் தந்திரத்தில் கூறப்படுகின்றது. பொறையுடைமை, பெரியாரைத் துணைக்கோடல் முதலியன இரண்டாம் தந்திரத்தில் கூறப்படுகின்றது. பக்குவப்பட்டவர் உணர்ந்து கடைப்பிடிக்க வேண்டியவை இதில் உணர்த்தப் பெறுகின்றன.

மனிதன் எப்படி வாழ வேண்டும் என்பதை நீதி நூல்கள் பலவாறு எடுத்துரைத்துள்ளன. அவ்வகையில் திருமூலர் வழிநின்று தனக்காக மட்டும் வாழாமல் அனைத்து உயிர்களுக்கும் உதவும் வகையில் அன்பு வாழ்க்கை வாழ வேண்டும் என்பதை உணர்த்தும் நோக்கில் சில செய்திகள் இப்பகுதியில் எடுத்துரைக்கப்பட்டன. மும்மலக்குற்றம் நீங்கி நீதிநெறியில் நின்றோர்கள் அடையும் பேறுகளையும், அவ்வாறில்லாத கீழ்மக்கள் நிலையினையும் இப்பகுதியில் அறியமுடிகின்றது.

# 4. திருமூலரின் கோட்பாடு

## முன்னுரை

திருமந்திரம் பல வாழ்வியல் நெறிகளைச் சிறப்புற எடுத்துரைக்கின்றது. இவற்றிலிருந்து மனித வாழ்விற்கான பல கோட்பாடுகளைப் பெறமுடிகின்றது. இவை பற்றிய விளக்கமாக இப்பகுதி அமைகின்றது.

## கோட்பாடு

அறியாமைதான் மக்களின் துன்பத்துக்குக் காரணமாகின்றது. இதைப் போக்குவதே திருமந்திரத்தின் உயர்ந்த கோட்பாடாகக் கருதி அருளியுள்ளார் திருமூலர். இவரின் கோட்பாடு என்பது ஒன்றே குலம் ஒருவனே தேவன். எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பது, அவர் அடைந்த இன்பத்தை அனைவரும் பெறுவது, தமிழின் சிறப்பை வெளிப்படுத்துவது, ஆன்மிகம் பற்றிய தெளிவை ஏற்படுத்துவது, இல்லறத்தான், துறவறத்தான் மேற்கொள்ள வேண்டிய வாழ்வியல் நெறிகளைச் சுட்டுவது. உடலையும், மனத்தையும் செம்மையாய் வைப்பது.

இவரது சன்மார்க்கம் புறச்செயல் அகச்செயல் என இருகூறுபடும். அறிவு, அது (அருவம்) அருவுருவம், உருவம் என்பவையாகும். இவை திருவுருவங்களுக்கு அப்பால் சத்து, சித்து, ஆனந்தம் என முழு சமவெளியாய் நின்று மனிதனுடைய யாக்கையை ஒளிரச் செய்யும். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற இந்நான்கும் பருவமாற்றமே அல்லாது ஆன்ம அனுபவ மாற்றமுடையது அன்று.

மனித இயல்பை உந்தும் சக்தியான போகமும் யோகமும் பார்வைக்கு ஒன்றுபோல் தெரியும். அதன் உள்ளீடு வேறுபாட்டைத் திருமூலர் சிறப்புறத் தெளிவாக வெளிப்படுத்துகின்றார். போகம் என்பது உருவத்தொடு உருவம் ஒன்றுதல்; யோகம் என்பது அருவங்கடந்த சிவபரம்பொருள் நிலையோடு ஒன்றுவது.

சங்க இலக்கியத்துக்கு முன்புதொடங்கி, வரையறை செய்து தெளிவாகக் காணக்கூடிய வரலாறு பொதிந்த 5000 ஆண்டுகளாகத் தமிழகத்தில் சித்தர்கள் தத்துவம் நிலவி வருகின்றது. அவர்களிடையே ஒரே பண்போடு கூடிய தனித் தன்மை, ஒருமைப்பாடு, மாறுபடாத கோட்பாடு நிலவி வருகின்றதைக் காணமுடிகின்றது. இது ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற திருமூலரின் தத்துவமே ஆகும். இது சரியை என்கின்ற தொண்டிலும், கிரியை என்கின்ற வழிபாட்டிலும், யோகம் என்கின்ற பயிற்சியிலும், ஞானம் என்கின்ற மன ஒடுக்கத்திலும் ஆக நான்கு நெறிகளில் கிளைவீசிப் படர்ந்துள்ளது. இந்த நான்கு நெறிகளையுமே பேரறிவின் கலமாகிய உள்ளத்தைக் கொண்டு இயக்கிச் சமாதி நிலைக்குச் செல்வதே திருமூலரின் கோட்பாடாகும்.

திருமந்திரம் உலக நாடுகள் அனைத்திற்கும் பயனுடைய கோட்பாடுகளைக் கூறுகின்றது. இதுவே இந்த இலக்கியத்தின் மாண்பாகும். திருமந்திரத்தில் கூறப்பட்ட யோகத்தை அடிப்படையாகக் கொண்டே இன்றைய யோகங்கள் பலவும் வளர்ச்சி பெற்றுள்ளன. உலக நாடுகளிலும் ஏதேனும் ஒரு வடிவிலோ பெயரிலோ யோகம் நடைபெற்றுக் கொண்டு வருகின்றது.

திருமந்திரத்தில் இன்றைய அறிவியல் உலகம் ஆய்வு நிலையில் நுணுகி ஆராய வேண்டிய பல வியப்பான செய்திகள் உள்ளன.இவற்றுள் சில, மக்கள் சமுதாயத்தின் பழக்க வழக்கங்களிலும், வழிவழியாக வழங்கி வருகின்ற நம்பிக்கைகளிலும் பின்னிப்பிணைந்துள்ளன. அறிவியல்கண் கொண்டும் பகுத்தறிவுக்கண் கொண்டும் மேலும் ஆராய வேண்டிய செய்திகள் திருமந்திரத்தில் பல்கிக் கிடக்கின்றன.

நூலில் கூறப்பட்டுள்ள பின்வருவன போன்ற தொடர்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கோட்பாடு என்று கூறும் சிறப்பினைப் பெறுகின்றன. இவை அரிய பொருளை எளிய சொற்களால் கூறுகின்றன.

**சிவனொடொக் குந்தெய்வம் தேடினும் இல்லை**
(திரு.5)

**என்னைநன் றாக இறைவன் படைத்தனன்**
**தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே** (திரு.81)

நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம் (திரு.85)

பதியனு கில்பசு பாசம் நில்லாவே (திரு.115)

தெளிவு குருவின் திருமேனி காண்டல் (திரு.139)

யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி (திரு.270)

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார் (திரு.270)

ஆர்வம் உடையவர் காண்பார் அரன்தன்னை (திரு.273)

உடம்பார் அழியின் உயிரால் அழிவர் ....
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேன் (திரு.724)

உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன் (திரு.725)

ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில் இல்லை (திரு.1467)

தெளிவு அறியாதார் தீரார் பிறப்பே (திரு.1480)

உணர்வு உடையார்கள் உணர்ந்து காண்பாரே (திரு.1786)

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம் (திரு.1823)

நடமாடக் கோயில் பகவற் கொன்றீயில்
படமாடக் கோயிற் பகவற்க தாமே (திரு.1857)

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் (திரு.2104)

தானே தனக்குப் பகைவனும் நட்டானும் ...
தானே தனக்குத் தலைவனு மாமே (திரு.2228)

தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை (திரு.2355)

அறிவுக்கு அழிவில்லை; ஆக்கமும் இல்லை(திரு.2358)

ஆசை அறுமின் ... ஈசனோடாயினும் ...
அறுமின், ஆசைப்படப்பட... துன்பம் .. விடவிட
ஆனந்த மாமே (திரு.2615)

சிவ சிவ என்றிடத் தீவினைமாளும் (திரு.2716)

உய்ய வல்லார்க்கு உயிர் சிவ ஞானமே (திரு.2822)

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பதி
அன்பே சிவம் குருவே சிவம் திருவடிவே சிவம்
நினையாதவர்க்கு இல்லை நின்இன்பந் தானே
பதியினைப் போல்பசு பாசம் அனாதி
பதி யணுகில் பசுபாசம் நிலாவே.
உள்ளத்தின் உள்ளே பல தீர்த்தங்கள்
உண்டி சுருங்கில் உபாயம் பலஉள
செயலற்றிருக்கச் சிவானந்த மாகும்
திருமூல தேவனையே சிந்தை செய்வார்க்குக்
கருமூலம் இல்லையே காண்

சமுதாயச் சீர்திருத்தம்

சித்தர்கள் அனைவரும் சமுதாயச் சீர்திருத்தவாதிகளாக விளங்கினர். திருமூலரும் 113 பாடல்களில் உலகிற்கு அரிய அறிவுரைகளைக் கூறுகின்றார்.

மயக்கும் சமய மலமன்று மூடர் (திரு.316)

எனச் சமயத்தினைச் சாடுகின்றார். சமயம் அறிவை மயக்கும் என்கின்றார். அறிவு அழிந்தால் தனித்தன்மை கெடும். மனிதன் உணர்வு மேலோங்கப் பெறுவான். விலங்கோடு ஒத்த நிலையை அடைவான். சமய காலத்தில் இருந்த சண்டைகள் அனைத்தும் இதனால் நடந்தவையாக உள்ளன. ஏனெனில் இவர் இறைவன் ஒன்றே என்ற கோட்பாடுடையவர்.

சாத்திரம் ஓதும் சதுர்களை விட்டுநீர்
மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின்
(திரு.1604)

சமயத்தைச் சாடுவதுபோலவே அதன் அடிப்படையாய்த் தோன்றிய சாத்திரங்களையும், சடங்குகளையும், சம்பிரதாயங்களையும் சாடுகின்றார். சரத்திரம் பேசிக் காலத்தைக் கழிக்காதீர்கள். அதை விடுத்துச் சிறிது நேரம் உள்ளே இருக்கும் உயிர்ப்பொருளை நோக்குங்கள். அது பயனுடையதாக இருக்கும். இறைவன். விளக்கி அறியப்படுபவன் அல்லன். விளங்கி உணரப்படுபவன். இதையே மேற்கண்ட வரிகளில் கூறுகின்றார்.

இறைவன் வடிவத்தைக் கோயில் கோயிலாகச் சென்று தரிசித்து வருபவர்களைப் பார்த்து நகைக்கின்றார்.

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
(திரு.2904)

என்பன அவ்வரிகள். இறைவனை முகத்தில் உள்ள கண் கொண்டு பார்க்கக் கூடாது. உள்ளத்தின் கண்கொண்டு பார்க்க வேண்டும். இதுவே இன்பம் தரும். இறைவன் உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டவன், இயங்கும் உயிர்கள் அனைத்தும் இறைவனுடைய கோயில்கள் என்பதே திருமூலரின் கோட்பாடு. இக்கோட்பாட்டின் அடிப்படையில்தான் அவரது உலக அறிவுரை பிறக்கின்றது. அனைத்து உயிரும் இறைவன் கோயிலாக இருக்குமானால் அனைத்து உயிரிலும் இறைவன் குடி கொண்டுள்ளான் என்பதும் உயர்வு தாழ்வு வேறுபாடு இல்லை என்பதும் தெளிவு.

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நனைமின் (திரு.2066)

இது அவருடைய அறிவுரை. உயிர்க்கூட்டம் அனைத்தும் ஒன்றுதான். அவற்றின் தலைவனும் ஒன்றுதான் என்பதே இதன் பொருள்.

ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீர்உல குக்குயி ராவதும் (திரு.2922)

எனவரும் பாடல் மேற்கண்ட கருத்துக்குத் துணைபுரிகின்றது. இங்ஙனமே உலகிற்கு வேறுசில அறிவுரைகளையும் தருகின்றார்.

ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்றன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
(107)

யார் எது கேட்டாலும் உங்களிடம் இருந்தால் என்ன முடியுமோ அதைத் தருக. இவர் பகைவர், இவர் நண்பர் என வேறுபாடு காட்டுவது கொடுத்தலில் இருத்தல் கூடாது. இல்லாதவர் எவராயினும் தருதல் வேண்டும். உண்ணும்முன் யாராவது வருவார்களா, அவர்களுக்குக் கொடுத்து உண்ணலாமே என்ற மனம் இருத்தல் வேண்டும். தேவையற்ற சடங்கு சம்பிரதாயங்களைத் தவிர்க்க வேண்டும். நடமாடும் கோயில்களாகச் சீவான்மாக்களை எண்ணுதல் வேண்டும்.

இவ்வுலகியல் ஆசை ஆனாலும் சரி, மேல் உலகு பற்றிய ஆசை ஆனாலும் சரி அதனை அறுத்தல் வேண்டும் என்கின்றார்.

ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள் (திரு.2570)

இதன்மூலம் ஆசையால் பற்று மிகுந்து ஆன்மலாபத்தை அடையாமல் போய்விடும், பற்றற்றவர்களே பற்றாளனைப் பற்ற முடியும் என்பதை இப்பாடலில் கூறுகின்றார். அதுபோல் பொருட்செல்வத்தைச் சாடுகின்றார்.

செல்வம் கருதிச் சிலர்பலர் வாழ்வெனும்
புல்லறி வாளரைப் போற்றிப் புலராமல்
இல்லங் கருதி இறைவனை ஏத்துமின் (திரு.126)

பொருள் தேவை என்பதற்காகக் கீழ்த்தரமான இயல்பு உடையவர்களாக இருந்தால் அவர்களை வீண்முயற்சி எடுத்துப் பாராட்டாதீர்கள். அம்முயற்சியை இறைவனை ஏத்தச் செலவிட்டால் அவன் உறுதியாக அருளை நல்குவான். புல்லறிவாளனை ஏத்தினால் அவன் தந்தாலும் தருவான்; தராமலும் விடுவான்; தந்தாலும் குறைவான பொருளே தருவான். அப்பொருளும் நிலையானதல்ல. எவ்வளவு பெற்றாலும் மீண்டும் பொருள் இன்மை ஏற்படும். ஆனால் இறையருள் குறையாதது. அட்சயப் பாத்திரம் போன்று ஆனந்தத்தை அளிப்பது.

அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்மின்
வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வன்மின்
(திரு.235)

என்று வஞ்சனை பேசி அறங்கெடும் நிலையைச் சாடுகின்றார்.வஞ்சனையால் அறங்கெடுமாறு வாழ்தலைத் தவிர்க்குமாறு கூறுமிவர், பேராசை காரணமாகப் பிறர் பொருளை விரும்பாதீர்கள் என்று இதன்வழி உணர்த்துகின்றார்.

இதுபோல் சமுதாயச் சீர்திருத்தம் என்ற கோட்பாடு இவருள்ளே இருப்பதை இவை போன்ற பாடல்கள்வழி அறியஇயலும். எல்லாத் தந்திரங்களிலும் சீர்திருத்தப் பாடல்கள் உள்ளன. இருப்பினும் முதலாம் தந்திரத்தில் பெரும்பான்மையான பாடல்கள் சமூகச் சீர்திருத்தம் கருதிப் பாடிய அறிவுரைப் பாடல்களாகவே அமைந்துள்ளன.

**திருமூலர் காலச் சமுதாயநிலை**

இவர் காலத்தில் பல சமயங்கள் இருந்துள்ளன. சைவம், வைணவம், சமணம், சாங்கியம்,பௌத்தம் முதலான சமயங்களுள் மனிதர்களுக்குள் பூசல்களும் பகைமையும் தோன்றியுள்ளன. சமயப் பற்று உள்ளவர்களை,

நீங்காச் சமயத்துள் நின்றொழிந் தார்களே

என்று சாடுகின்றார். சமயத்துறையில் ஈடுபட்ட முதிர்ந்த அறிவு உள்ளவர்கள் கூட இறை பற்றிய தெளிவு இன்றி இருந்தனர் என்கின்றார். இவர் ஆறு சமயங்கள் என்று கூறுவதால் மக்கள் இடையே காழ்ப்புணர்வு இருந்தது என்பது தெரிகின்றது. அதனால்தான் திருமூலர் சமயங்கள் ஆறும் ஒன்றே; அவற்றின் தலைவன் ஒருவனே என்கின்றார். பேரூர் ஒன்றுக்கு வழி ஆறு. அதாவது ஓர் ஊரை அடையப் பல வழிகள் இருக்கலாம். இதுபோல்தான் இறை என்பது ஒன்றுதான். அதை அடையத்தான் பல சமயங்கள் எழுந்துள்ளன. அந்த இறையையும் நாம் நம்முள் காணமுடியும் என்று கூறி அடைவதற்கான வழிமுறைகளையும் கூறுகின்றார். இருந்தாலும் உருவவழிபாடு மக்களிடையே இருப்பதால்தான் பல வேறுபட்ட கருத்துகள் எழுந்துள்ளன. எனவே இது தேவையில்லை என்கின்றார். உருவவழிபாடு என்பது நாம் உள்ளத்தால் இறையை உணர இது ஒரு வழிகாட்டியாக அமையும் என்பதற்காகத்தான் வைத்தனர். எனவே நமக்கு வழிகாட்டி வழிதான் காட்டும் என்று புரிந்து கொள்ள வேண்டும். அது எந்த ஊரையும் சென்று அடையாது. வாகனத்தின்வழி அல்லது நடந்து சென்று நாம்தான் அடைய வேண்டும். எனவே சமயங்கள் அன்பை வலியுறுத்துகின்றன; சமரச எண்ணத்தை ஏற்படுத்துகின்றன. **அன்புதான் இறைவன் என்பது திருமூலர் கோட்பாடு.** எனவே இவர் அன்புநெறியே சிவநெறி என்பதால் அன்புநெறியை வற்புறுத்துகின்றார்.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார் (திரு.257)

என்ற பாடலில் இறைவன் வேறு அன்பு வேறு அல்ல. இரண்டும் ஒன்றே என்பதை உணர்த்துகின்றார்.

பொருளைச் சேர்த்து வைத்துத் தாமும் உண்ணாது பிறருக்கும் தராதவர்களால் சமூகத்திற்கு எவ்விதப் பயனும் இல்லை என்கின்றார். உடல், இளமை, செல்வம் முதலியன என்றும்

மயக்கத்தைத் தருவன. உலகியல் வாழ்வில் அவை நிலைத்து இருப்பதில்லை. எனவே அவை நியைானவை அல்ல என்பதை முதல் தந்திரத்திலேயே எடுத்துரைக்கின்றார். இறப்பில்லாத பெருநிலையை அடையலாம் எனும் கொள்கை கொண்டவர் திருமூலர். பின்வந்த சித்தர் பலரும் இதனைக் கூறியிருப்பதை நாம் அறியமுடிகின்றது. இம்மெய்யினுள் மெய்யான இறைவனைக்காண உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன் என்று கூறுகின்றார்.

**தன்னது சாயை தனக்குத வாதுகண்டு**
**என்னது மாடென் றிருப்பர்கள் ஏழைகள்** (திரு.214)

என்று செல்வம் நிலையாதது என உணர்த்துகின்றார். அதாவது நம் உடம்பின் நிழல் நமக்குப் பயன்படாது. அதுபோல் தன்னுடைய செல்வமும் பயன்படாது. எனவே செல்வம் சேர்க்கும் பெருவிருப்புடன் இருக்கும் செல்வம் படைத்தோரையும் ஏழைகள் என்கின்றார்.

கதிரவன் கிழக்கே உதயமாகி, வெம்மையாகி உச்சிப்பொழுதை அடைந்தபின் மெல்ல மெல்ல வெம்மை குறைந்து மறைகின்றான். அதேபோன்று இளமையும் நிலையில்லாதது என்கின்றார். செல்வம், இளமை, யாக்கை முதலியவற்றைப் போற்றியவர்கள் பலர் இருந்திருக்கின்றனர். எனவே அவர்களுக்கும், எதிர்காலச் சமுதாயத்தினருக்கும் நிலையாமைக் கொள்கையைத் திருமூலர் எடுத்துக் கூறுகின்றார். துறவிகள்போல் வேடமிட்டுப் போலித்துறவிகளாய் உலவியவர்களும் இருந்துள்ளனர். பொய் பேசுவது, அறம் செய்யாது இருப்பது, உயிர் நிலையில் இருந்தும் குற்றமும் குணமும் பற்றித் தெளிவு இல்லாதவராய் இருப்பது, விதி எனச் சோர்ந்து போவது என்பன போன்ற சமுதாய நிலைகளை உணர்ந்து இவற்றைச் சீர்செய்வதைக் குறிக்கோளாகக் கொண்டு பல கருத்துகளைத் திருமந்திரத்தில் கூறியுள்ளார்.

கோயில்களில் முறையாகச் செய்யும் பூசைகள் தவறின் மன்னருக்குத் தீங்கு நேரும்; நாட்டில் வளமை குன்றும்; கோயில் கட்டடத்தில் இருந்து கல் பெயர்க்கப்பட்டால் கூடப் பெயர்த்தவர்க்கும் அரசர்க்கும் தீங்கு உண்டாகும் போன்ற பல மூடநம்பிக்கைகள் தேவையற்றது என்பதையும் உணர்த்துமுகத்தான் நூலை எழுதியுள்ளார்.

### கடவுள்

கடவுள் வாழ்த்துள் கடவுள் என்ற சொல் இல்லை. ஆனால் எங்கும் கடந்து நின்றவன், பொதுஇயல்பினன் என்பது காட்டப்படுகின்றது. சிவன், பசு, பாசத்து நாதன், பரமன், ஈசன், கண்ணுதலான், அரன், வாணுதல் பாகன், பிஞ்ஞகன், நந்தி எனும் சொற்கள் சிவனைக் குறிக்கின்றன. சிவனைக் குருவாகக் கொண்டு நெறிகாட்டுவதுபோல் அமைகின்றது. கடவுள் வாழ்த்தில் வரும்,

நரைபசு பாசத்து நாதனை உள்ளி
உரைபசு பாசத்து ஒருங்கவல் லார்க்குத்
திரைபசு பாவச் செழுங்கடல் நீந்திக்
கரைபசு பாசங் கடந்தெய்த லாமே (திரு.49)

என்ற பாடல் ஆன்மாவாகிய பசு பாசத்தன்மைகளை உணர்ந்து பதியோடு பொருந்தியிருந்தால் பாவக்கடலைக் கடந்து முக்திக் கரையை அடையலாம் என்பதை உணர்த்துகின்றது.

### வேதச்சிறப்பு

கடவுள் வாழ்த்தை அடுத்து வேதச்சிறப்பும், ஆகமச்சிறப்பும் கூறப்பெறுகின்றன. திருமூலர் தாம்பயிலும் யோகநெறியின் விளக்கமாகவே வேதத்தைக் குறிப்பிடுகின்றார். இங்குக் குண்டலினி, சூரியநாடி, சந்திரநாடி, நடுநாடி போன்ற சிந்தனை இருக்குவேதம் கூறும் உண்மையாகவே கொள்ளப்படுகின்றது. (93) எனவே தம்கோட்பாட்டை வேதக்கோட்பாடாகவும் இவர் விளக்கி இருக்கின்றார். வேதத்தின் முடிவு சிவநெறியே என்பதையும் கூறுகின்றார். இதன்வழி வேதாந்தம் கூறும் அடிப்படை உண்மையும், சிவநெறி கூறும் அடிப்படை உண்மையும் ஒன்று என்ற விளக்கம் நமக்குக் கிடைக்கின்றது (54).

### ஆகமச்சிறப்பு

சைவ ஆகமங்கள் 28; இவற்றைச் சிவனே தன் ஈசான முகத்தில் இருந்து அருளினான். இறைவன் மேல்நின்று பரம் - அபரம் எனும் வேறுபாட்டினைக் காணச் செய்தான். அவனை வழிபடும் நிலையில் வழிபாட்டு நூலாகிய ஆகமமாகவும் அவனே விளங்குகின்றான். ஒன்பது ஆகமங்களும் ஒன்பது திருக்கோலங்கள் வழி உபதேசம் மூலமாகத் தரப்பெற்றவை (62). இதை நந்தி திருமூலருக்கு உணர்த்தினார்.

வேதஆகமச் சிறப்பு கூறுவதன்வழி, சிவனைப் பரம் பொருளாகவும், வேதஆகமங்கள் அவனை அடைய

வழிகாட்டுபவையாகவும் கொள்ளும் கருத்தே திருமூலரால் கூறப்படுகின்றது.

### குரு பாரம்பரியம்

இது பற்றிக் கூறும்போது நந்தி பரம்பரை கூறப்பெறுகின்றது. நந்தி, நந்தி அருள் பெற்ற நால்வர், சிவயோக மாமுனி, பதஞ்சலி, வியாக்ரமர், திருமூலர் ஆக ஒன்பதுபேர் குறிப்பிடப்படுகின்றனர். அடுத்து மூலன் வழிவந்தவர்களாக எழுவர் கூறப்படுகின்றனர். நந்தி சிவனே ஆகும். சிவானுபவத்திற்கு மூலனை நாடும் யோக சாதனையே திருமூலர் மேற்கொண்டது. இறைவன் பெருமை யாராலும் கூறமுடியாதது என்பதை அவையடக்கத்தில் கூறுகின்றார்.

மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ் (திரு.99)

முத்தி முடிவிது மூவா யிரத்திலே (திரு.100)

என்ற தொடர்கள் திருமூலர் மூவாயிரமே பாடினார் என்பதற்குச் சான்றுகள் ஆகின்றன. திருமூலர் தவிரப் பிற திருமுறை அடியவர்களை ஒரு குழுவினரில் ஒருவராகக் கருத முடியவில்லை. ஒரு குறிப்பிட்ட குழுவினரில் ஒருவராகவே திருமூலரைத் திருமந்திரம் காட்டுகின்றது.

திருமூலர் சந்தான பரம்பரை போன்ற ஒரு குழுவினரின் கருத்தை எதிரொலிப்பவர். அவர் கூறவிரும்பும் கோட்பாட்டினை நேராக வேதங்களில் கண்டு கூறமுடியாவிட்டாலும் வைதிக சைவமாகவே கூறுபவர். இச்செய்திகள் பாயிரத்தில் உள்ளன.

முதல் தந்திரத்தில் கூறும் நீதிகள் ஒருவனைச் சிவானந்தத்தில் தலைப்படச் செய்பவை. எனவே இவர் சைவ நீதி அல்லது சிவ-தருமம் பற்றிக் கூறுகின்றார் என அறியமுடிகின்றது. தருமம் என்பது சிவதருமமாக வாழ்க்கையில் மலர வேண்டும் என்ற கருத்தை வற்புறுத்துவதே முதல் தந்திரம். அகவழிபாடே இவர் உள்ளத்தில் சிறப்பிடம் பெற்றிருந்தது. இதை உபதேசப் பகுதியில் சிவயோகத்தை விளக்கிச் சொல்வதால் அறியலாம்.

### முதல் தந்திரம்

இதில் உபதேசம் முதல் கள்ளுண்ணாமைவரை 24 தலைப்புகள் உள்ளன. திருமூலர் இப்பகுதியில் தமக்குரிய தனித்தன்மையோடு நீதிகளை விளக்குகின்றார்.

உபதேசம் எனும் பகுதி பதி, பசு, பாசம் என்ற முப்பொருள் உண்மையைப் பேசுகின்றது. உண்மையில் நம் ஒவ்வொருவரின்

வாழ்க்கைப் போக்கினை விளக்க முயல்கின்றது; நாம் அன்போடு சேர்ந்து நின்று தெய்விக வாழ்க்கை வாழ வேண்டுமென வற்புறுத்துகின்றது; இன்பவாழ்வு என்பது செத்தபின் அடைவதன்று; இவ்வுடம்போடு இங்கேயே பெறமுடியும் என வழிகாட்டுகின்றது.

*நிலையாமை*

யாக்கை, இளமை, செல்வம் என்பன இவ்வுலக இன்பத்திற்குக் கருவிகள். இக்கருவிகள் நிலையற்றவை; இக்கருவிகளோடு வாழும் வாழ்க்கையும் நிலையற்றது. விரத ஞானங்களால் உடம்போடு கூடிய இல்வாழ்க்கையை ஒளிபெறச் செய்ய வேண்டும் (144). கூற்றுவனை வெல்ல, வீடுபேறு அடைய ஞானமே நிலையான செல்வத்தைத் தரும். இளமையினைத் தெய்வ சாதனைக்காகவே பயன்படுத்த வேண்டும். ஒருவன் வாழப்போவது சாகா வாழ்க்கையா, சாக்காட்டு வாழ்க்கையா என்பதை அவன் இளமைப் பருவத்திலேயே தெரிந்து கொள்ளலாம். இளமை மாறுவதற்கு முன்பே முப்பது வயதிற்குள்ளாகவே ஒருவன் தெய்வ வாழ்க்கையில் தலைப்படுவதும்; தலைப்படாததும் தெரிந்துவிடும். இல்வாழ்க்கை முடிவதற்கு முன்பே இறைவன் திருவடியை ஏத்தி உய்ய வேண்டும். ஏனென்றால் உயிர் நிலையில்லாதது. திருமூலர் நிலையாமையை உணர்த்த சைவ நீதியை அதாவது சிவவழிபாட்டினையே கூறுகின்றார். விவேகத்தோடும் ஒழுக்கத்தோடும் வாழ வேண்டும். அதற்காகப் பின்வரும் சிலவற்றைச் செய்யக் கூடாது என்கின்றார்.

*யாக்கை நிலையாமை*

ஊரெல்லாம் கூடி (145) இறந்தபின் அந்த உடலுக்கும் பலவிதச் சிறப்புகளைச் செய்வதால் பலனில்லை. எனவே உடலின் நிலையாமையை உணர்ந்து அறிவு, செறிவு, சீலம், நோன்பு எனும் நால்வகை நெறியுள் நின்று ஒழுகி, உயிருக்கு உறுதி தேட வேண்டும். அதுவே நல்ல விரதமும் ஞானமும் ஆகும்.

*உயிரின் அனாதி நிலை*

பசு அனாதிநிலை உடையது. இதற்கு உடலில்லை. உடல் இந்த உயிருக்கு எப்படி வந்தது. வினை போகமே ஓர் உடல் என்பார். உடல் இருந்தால்தானே வினை செய்யும்? அப்படியானால் உடல் எப்படி வந்தது. உயிர் எப்படி அதில் பொருந்தியது. பசு அனாதி என்றாலும் அது ஆணவத்தோடு இயல்பாகவே அத்துவிதமாகி இருந்தது. ஆணவத்தோடு உயிர் கலந்து நின்றது.

உயிர்தானே எதையும் அறியாது. அறிவித்தால்தான் அறியும். மாயையே உடல் ஆனது. அதில் உயிரை வைத்தான்; முறையாக அறிவை ஊட்டினான். இவை இயற்கையாகவே அமைந்தது.

முதலில் புல்லே உடலாகியது. அதன்வழி ஓர் அறிவைப் பெற்றோம். ஓர் அறிவைப் பெற ஓராயிரம் ஓர் அறிவுப் பிறவியே கொடுத்தான். பிறவி மாட்சியுற எல்லாப் பிறப்புங் கொடுத்தான். இதையே மாணிக்கவாசகர்,

புல்லாகிப் பூடாகிப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா நின்ற இத்தாவரச் சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்

என்கின்றார்.

உயிர்கள் அறிவுபெற மனம் முக்கியமானது. அது ஓர் அறிவுமுதல் ஆறறிவுவரை வந்த பிறவி அனைத்திற்கும் உண்டு. மனம் எல்லாப் பிறவிகளுக்கும் உண்டு. இதை எல்லாப் பிறப்பும் **என்னை விட்டு அகலாத நன்நெஞ்சே!** என விளித்தார் வள்ளலார். உயிர்கள் இச்சையின்வழி இன்பமும் துன்பமும் அடைகின்றன. அதற்குத் தக உடல்களைப் பெறுகின்றன.

நிலைபேறுடைய பதியினை நாடுதல், செல்வம் நிறையற்றது என உணர்தல், அகங்காரம் தவிர்த்தல், உயிர்க்கொலையைத் தவிர்த்தல், மாதரை இழிவு செய்யாமை, மக்களிடம் உயர்வு தாழ்வு பாராமை, பரத்தையரை நாடாமை, கள்ளுண்ணாமை, புறங்கூறாதிருத்தல் போன்ற பின்பற்றத் தகாதவற்றை விலக்க வேண்டும் என்கின்றார். அன்பும் சிவமும் வேறு வேறானவை என்று கூறுபவர்களை அறிவற்றவர் என்கின்றார்.

*அறிவின் பாகுபாடு*

அறிவை, நுட்பம், அறிவு, ஞானம் என மூன்றாகத் தமிழ்மறை கூறியது. இயல்பாக விளங்கும் அறிவை மதி நுட்பம் என்றும், நூல் பயின்று வரும் திறத்தை அறிவு என்றும், குருமொழி கேட்டு விளங்கும் திறத்தை ஞானம் என்றும் வகைப்படுத்துவர்.

மதிநுட்பமும் நூல்நுட்பமும் உடையோர் எதையும் சமன் செய்து சீர்தூக்கும் சான்றோர். அவரே ஞானம் எய்துதற்கு உரியவர்.

நடுவு நின்றார்க் கன்றி ஞானமும் இல்லை
நடுவு நின்றார்க்கு நரகமும் இல்லை
நடுவு நின்றார் நல்லதேவரு மாவர்
நடுவு நின்றார் வழிதானும் நின்றேனே (திரு.320)

***கள்ளுண்ணாமை***

கள் உண்டாரை மயக்கும்; வெறிக்கொள்ளச் செய்யும்; அறிவைக் கெடுக்கும்; அமைதியைக் குலைக்கும். எனவே மயக்கத்தைத் தூண்டவது கள் எனப் பெயர்பெறும்.

வெறியைத் தூண்டும் கள்ளாக அமைவது, சாதி, மதம், இனம், 'மொழி, நாடு போன்றவை ஆகும். நடை, உடை முதலியனவாகவும் உள்ளன.

வெறியில் வீழ்ந்தவர்கள் மீள்வது இல்லை. நெறி உரைத்தாலும் கேட்பதில்லை. மேலும் மேலும் கள் உண்பானைப் போல் வெறியை விளைவிக்கும் சிந்தனையில் மூழ்குவர். இதனையே திருமூலர்,

காமமும் கள்ளும் கலதிகட்கே ஆகும் (திரு.326)

வாமத்தோர் தாமும் மதுஉண்டு மாள்வர்
காமத்தோர் காமக் கள்உண்டே கலங்குவர் (திரு.327)

என்றும்,

மயக்கும் சமயமலம் மன்னும் மூடர்
மயக்கு மதுஉண்ணும் மாமூடர் தேரார்
மயக்குறு மாயையின் மாமாயை வீடு (திரு.329)

என்றும் விளக்கியுள்ளார். கள் என்ற சொல்லுக்குத் தேன் என்றும் பொருள் உண்டு. இந்த ஆனந்தத் தேனைப் பருகுதல் மேலான துன்பம், கள் பருகுதல் கீழான துன்பம். இரண்டு நிலைகளும் துன்பமே. இதைக் கீழாலவத்தை, மேலாலவத்தை என்பர்.

காமம் கண்டால் மயக்குவது. கள் உண்டால் மயக்குவது. இவை இரண்டுமே கலதிகள் என்ற கீழ்மக்களுக்கே ஆகும். காமம் தன்னலமானது. தன்னிடத்திலும் பிறரிடத்திலும் முழுதும் அழிப்பது. கள் உண்டானைக் கெடுக்கும். உயர்ந்த குடியை எரிக்கும். தீயினும் கொடியது. தீயில் சாம்பலாவது எஞ்சும். கள்ளுண்டால் அதுவும் எஞ்சாது. இவை இரண்டும் பழைய மலத்தைப் புத்துயிர் பெறச் செய்யும். சமய மயக்கத்தையும் நிலைபெறச் செய்யும்.

அறியாமையை விளைவிக்கும். ஆனந்தம் என்ற பேரின்பத்தைக் கெடுக்கும். பிறவிபெறும் பயனைப் பெற ஒட்டாமல் தடுக்கும்.

அகரத்தில் உகரங் கலந்தால் ஓ ஆகும். அதுவே உணர்வு என்ற ஆனந்தத் தேனாகும். அச்சுவையே என்றும் நிலையாகும்.

**வாமயத்தோர்:** என்றால் சக்தியை வழிபடும் குழுவினர். இவர்களை வாமசமயத்தோர் என்பர். சக்தியைச் சிவன்பால் ஒன்றிய நிலையே ஆனந்த மயமானது. ஆனந்தம் என்ற மதுவை அம்மை உண்டாள் என்பர். ஆனால் சக்தியை வழிபடுவோர் கள்ளை உண்பர்; உண்டு உண்டு மாய்வர்.

**காமயத்தோர்:** காமநூல் கற்றவர்கள்; போகமே விரும்பிக் கலப்பர். காதலோ கசிவோ ஒரு சிறிதும் இல்லாதவர்கள். புலன் வெறிகொள்ளப் புணர்ச்சியுள் மயங்குவர்.

**ஓமயத்தோர்:** ஓம் மயத்து ஓர் ஓ என்ற ஓசையுள் உ என்ற நிறை சுடரை உணர்வு வெளிக்குள்ளே ஒளியாய்க் காண்பார் அடியார். இதுவே மெய்ப்பொருள் உணர்வாகும்.

**நாமயத்தோர்:** இறை திருப்பெயரை இடைவிடாது ஓதுவோர். எளிதில் திருவடிப் பேறு எய்துவோர்.

தான் விரும்பிய உலகச் சுவையில் மூழ்கி மீளாதவர் கள் உண்ணும் மாந்தராவர். அதனால் அறிவு மயங்கியும் கலங்கியும் நிற்பர். இதில் இருந்து விடுபட்டுத் தெளிவு பெறாதவரை அழிவு என்பது இவர்களை நெருங்கியே நிற்கும்.

புலன்கள்வழி நின்று எச்சுவையில் மூழ்கினாலும், அவர்கள் கள் உண்டோர் ஆவர். திருமூலர் கள்ளுண்ணும் மாந்தர் கருத்தறியார் என்றார். ஒளி, இருள் என்ற இரு இயக்கத்தின் உள்ளீடு தூய அறிவே ஆகும். எதிலும் அளவாக ஒன்றி மகிழ்தல் வேண்டும்.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு (குறள்.355)

என்கின்றது குறள். மெய்ப்பொருள் தெளிவே சிவயோகம், சிவநெறி ஒழுக்கமும் ஆகும்.

ஆன்மாவில் உள்ள ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றும் கள்ளே . சமய வெறியும் கள்ளே. இவர்கள் மாமாயை, மாயை முதலிய அறியாமையில் இருந்து விடுபடார். இம்மாயைகள் 36 தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டவையாகும்.

இரவும் பகலும் ஆணவமும் மாயையும் ஆகும். இவை இரண்டும் அற்ற இடமே திருவருள் நிலையமாகும். அது உள்உணர்வு மலர்கின்ற வெளியாகும். அந்த இடத்தை அடைந்தோர் பரபரப்பு அற்றவராவர். ஆனந்தத் தேன் பருகுவர். இராப்பகல் அற்றது இணையடி ஒன்றே. அதுவே அகத்தும் புறத்தும் இன்பமயமாய்த் திகழ்வது.

வெறியைத் தூண்டும் அனைத்துமே கள் எனப்படும். அதில் மூழ்கி மயங்குவோர் பிறவிப் பயனை எய்தார். நெறியைத் தூண்டும் அனைத்துமே தேன். அதைப் பருகுவோர், அதில் திளைத்தோர் தெளிவு பெறுவர். பிறவிப் பயனை எய்துவர்.

**திருவருள் இயக்கம்:** உயிருக்கு நிலைக்களமாகிய 36 தத்துவத்தையும் அதற்கு ஆக்கமாகிய கிளர்ச்சிகள் அறுபதையும் அருளே உள்நின்று இயக்குகின்றது.

**மருள்நீக்கம்:** புறநிலைப் பொருட்களில் மனம் மயங்குவதும், அதில் ஒன்றுவதும் மருளாகும். அருளின் துணையால் இந்த மருள் நீங்கும். யோகத்தில் மனத்தை நிறுத்தினால் அனுபவவழி அமுதம் உண்டு உரம் பெறுவர். அதனால் எண்சித்தி பெறுவர். இந்த ஆற்றல் அறிவின் விளைவில் மகிழ்ந்து மயங்குவர்.

இவை போன்ற நல்லொழுக்க நெறியை முதல் தந்திரத்தில் பதினேழு தலைப்புகளில் விதி முகத்தாலும், விலக்கு முகத்தாலும் திருமூலர் தெளிவாகக் கூறியுள்ளார்.

மனிதனைக் கொல்லக்கூடாது; எந்த உயிருக்கும் தீங்கு செய்யக்கூடாது. இதனால்தான் திருமூலர் மற்றோர் அணுக்களைக் கொல்லாமை என்றார். புலால் மறுத்தல், பிறன்மனை நயவாமை, மகளிர் இழிவு, நல்குரவு (வறுமை) போன்றவை கூடாது என்கின்றார். நல்குரவில் பொருள் வறுமை கொடிது, அதினினும் கொடிது ஞான வறுமை என்கின்றார். அந்தணர் வேள்வி உலகிற்கு நன்மை தரும். தம்பால் அடங்கிக் கிடக்கும் குண்டலி நெருப்பை எழச்செய்து தெய்வ அருள் பெறுவது வேள்வி வேட்டலாக விளக்கம் பெறுகின்றது. வேதியர் வேட்கையற்று வாழ வேண்டும். சிவபரத்தை உணர்ந்து வாழ வேண்டும். நித்திய கருமானுட்டானங்களை விட யோகநெறி நின்று சமாதி கூடுதலே உயர்ந்தது. அந்தணர்கள் வாழும் இடம் நலம்பெறும். அவர்கள் ஆகுதி வேட்டலே அதற்குக் காரணமாகின்றது.

சமயத் தலைவர்கள் தம்ஒழுக்கம் குன்றாது இருக்க வேண்டும். இதைப் பார்த்துக் கொள்வது அரசனது கடமையாகும்.

நல்லாட்சி என்பது தெய்விக வாழ்க்கைக்கு ஏற்ற சூழலைப் படைத்துத் தருவதாகும். அகத்தில் ஞானம் இல்லை என்றால் புறக்கோலம் களையப்பட வேண்டும்.

கடவுள் கல்வி அதாவது ஞானக் கல்வியே கல்வியாகும். தேவர் பிரானை அறிந்தபின் அவன் திறம் கேட்டுத் தெளிதலே கேள்வி கேட்டமைதல் ஆகும். ஞான முயற்சியின் எதிர்மறையே கல்லாமையாகும். அனைத்திற்கும் நடுநாயகமாக உள்ள இறைவனைச் சார்ந்து நிற்றலே நடுநிலைமையாகும். ஞான முயற்சியால் சிவனோடு இரண்டறக் கலத்தல் நிலையே சிவானந்தம் ஆகும்.

## இரண்டாம் தந்திரம்

இத்தந்திரத்தில் அகத்தியம் முதலாகப் பெரியோரைத் துணைக்கோடல் ஈறாக 25 தலைப்புகள் உள்ளன. திருமந்திரம் சிவபிரானின் முழு முதன்மையினைப் புராணங்கள்வழி நிறுவ முயல்கின்றது. இதிலுள்ள முதல் எட்டுத் தலைப்புகள் புராணம் சார்ந்தவையே. அகத்தியம், பதிவலியில் வீரட்டம், இலிங்கபுராணம், தக்கன் வேள்வி, பிரளயம், சக்கரப்பேறு, எலும்பும் கபாலமும், அடிமுடிதேடல் என்பதே எட்டுத் தலைப்புகளாகும். இவற்றில் மாலுக்கும் பிரமனுக்கும் மேம்பட்ட நிலையில் உள்ளவன் சிவன் என்பது காட்டப்படுகின்றது. மூவருக்கும் பரத்துவம் கூறும் புராணங்கள் உள்ளன. சிவபரத்துவத்தைச் சைவப் புராணங்கள்வழி நிறுவ முயல்கின்றார் திருமூலர். இக்கதைகளுக்குத் திருமூலர் ஆங்காங்கே கூறும் விளக்கமே திருமூலரை நமக்கு இனங்காட்டுகின்றது. புராணங்களை அகத்தே நிகழ்ந்து கொண்டிருக்கும் அனுபவமாக யோக-சாதனை விளக்கமாகக் கொள்ள வேண்டும் என்பது இப்பகுதியில் உணர்த்தப்படுகின்றது.

உலகை நிலைபெறச் செய்ய இவ்வுலகோடு கலந்து நிற்கின்றான். ஆன்மாக்கள் அனுபவம் பெற ஆன்மாக்களோடும் கலந்து நிற்கின்றான். அனுபவமாகவும் இறைவனே உள்ளான்.

இறைவன் உயிர்களோடு ஒன்றும் யோகத்தால் உயிர்கள் காக்கப்படுகின்றன. ஆன்மாக்கள் இறையோடு ஒன்றும் யோகத்தால் இறைவனின் காத்தல் தொழிலின் பயனை அவை அடைகின்றன.

நுகர்ச்சி முடிந்த பின்னர்த் தத்தம் கரணங்களுள் ஒடுக்குதல் சங்காரம் (அழித்தல்) எனப்படும். ஆன்ம அனுபவத்துக்கென்று படைக்கப்பெற்ற கருவிகள் ஒடுங்கி நிற்றலே சங்காரம் ஆகும்.

இவ்வொடுக்கம் வாழ்க்கையில் அன்றாடம் நிகழ்வதும் உண்டு. சாதனையால் இறையருளுக்கு ஆளாகி ஒடுங்கி நிற்றலுமுண்டு. இறைவனிடம் இருந்து தோன்றிய இவ்வுலகு இறைவனிடமே சென்று ஒடுங்குகின்றது.

சிவஞானிகளுக்கு எள் அளவு கொடுத்தாலும் பெரும்பயன் விளையும். மூடர்களுக்குப் பேரளவு பொன்கொடுத்தாலும் பயனில்லை; தெய்விக அனுபவமும் குறையும். சிவஞானிக்கு ஈதல் வேண்டும்; பிறருக்குக் கூடாது. கங்கையில் நீராடுதல் புண்ணியமாகும். அவன் வழிபாடாகக் கருதி ஆடும் தீர்த்தங்கள் உள்ளத்து உள்ளேயும் உள்ளன. புறவழிபாட்டைவிட அகவழிபாடே சிறந்தது. கோவில்களில் செய்யப்படும் பூசைகள் பலவும் சமுதாய நலன் கருதிச் செய்யப்படுகின்றன. எனவே பூசை செய்வித்தல் வேண்டும். திருக்கோவில் நிந்தை கூடாது. பூசலார் நாயனாரின் பூசையையும் இறைவன் ஏற்றுக்கொண்டது நினைவு கூறத்தக்கதாகும்.

அதோமுகதரிசனம் யோகசாதனையால் ஒருவனுக்குக் கைகூடும். சிவநிந்தை, குருநிந்தை, மகேசுர நிந்தை கூடாது. சிவனை இகழ்தல் கூடாது. அடியவர்களை மதிக்க வேண்டும். ஆண்டவன் அடியவரான மகேசுவரரைப் பழித்தல் கூடாது.

இறைவனிடம் ஒடுங்கிக் கிடத்தல் என்பது யோகநிலையில் பெறும் சிவானுபவமே. தலைவனை நாடி அவனோடு கலந்துள்ள பெரியோருடன் கூடுதல் பேரின்பம்.

முதல்தந்திரம் நீதி நூற்களின் எதிரொலிபோல் சிவ தருமத்தைப் பேசுகின்றது. இரண்டாம் தந்திரத்தில் சைவ உலகு ஒன்று தெளிவாகத் தெரிகின்றது.

1. புராணவழியே சிவபரத்துவத்தைப் பேசுவது; அவன் முதன்மையினை, ஐந்தொழில்களையும் அவனுக்கு ஏற்றிக் கூறுவதன்வழி நினைவூட்டுவது.

2. இறையருளோடு மக்கள் பிறப்பெடுத்துள்ளனர். இவர்கள் இயல்பிலேயே மூன்று பிரிவினர் என்பது.

3. அ. ஆன்மாக்கள் மேற்கொண்டு ஒழுகும் தருமமாக, பாத்திரம்-அபாத்திரம் அறிந்து உதவுதல்

   ஆ. வழிபாடாகத் தீர்த்தமாடல், திருக்கோவிலைப் பேணல், அவன் அருள்முகத்தைத் தரிசித்தல் முதலியவற்றைக் கூறல்

   இ. விலக்கத்தக்க ஒழுக்கங்களாகச் சிவ,குரு, மயேசுர நிந்தைகளைக் கூறல்

ஈ. பொறையுடைமையும், பெரியோரைத் துணை கொள்ளலும் விரும்பிக் கொள்ளத்தக்கவை எனல்

ஆகிய இவற்றைப் பேசுவது இத்தந்திரம் வெளிப்படுத்தும் சைவ உலகின் கூறுகள் எனலாம். இருப்பினும் இத்தந்திரத்திலும் அகவழிபாட்டு எண்ணமே திருமூலரிடம் இருந்தது என்பது தெரிகின்றது.

## மூன்றாம் தந்திரம்

இதனை வீராகமம் என்பர். இத்தந்திரத்தில் அட்டாங்கயோகம் முதல் சந்திர யோகம்வரை 21 தலைப்புகள் உள்ளன. இத்தந்திரம் பெரிதும் யோகசாதனைகளையே பேசுகின்றது. அட்டாங்கயோகம், கேசரியோகம், பரியங்கயோகம், சந்திரயோகம் எனும் தலைப்புகள் யோகநெறியிலும் பல பிரிவுகள் இருந்ததை உணர்த்துகின்றன. பிற தலைப்புகளும் பொதுவாக யோக வாழ்க்கையோடு தொடர்புடையனவே.

### *அட்டாங்கயோகம்*

எட்டு உறுப்புகளோடு கூடிய யோகம் என்பது கருத்து. இதனை **இராசயோகம்** என்று கூறுவர். இதற்குப் பதஞ்சலியையே மேற்கோளாகக் காட்டுவர். ஆயின் திருமூலர்யோகம் இனம்கண்டு பாராட்டக் கூடிய தனிச்சிறப்பு உடையது. இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பவை இவ்வெட்டு உறுப்புகள் ஆகும். யோகத்தின் பயன் ஞானம் என்பது இவற்றின் பயனாகும்.

தேவியை முன்வைத்துச் சில சடங்குகளோடு கவசம், நியாசம், முத்திரைகள் தொடங்குவதாக இவ்வட்டாங்கயோகம் குறிப்பிடுகின்றது. மேலும் நந்தியங் கடவுளே இந்நெறியை வகுத்தளித்ததாகவும் (549) கூறுகின்றது. இவ்வாறு கூறும்போது பதஞ்சலிக்கு வேறாக, தெளிந்த ஒரு சைவ மரபில் நின்றே அட்டாங்க யோகத்தைக் கூறத் தொடங்குகின்றார்.

அட்டாங்க யோகத்தின் பயனைக் கூறும்போது இயமத்தால் அமராபதிக்கே செல்வர், நியமத்தால் சிவபதம் சேர்வர். ஆசனத்தால் அமராபதிச் செல்வன் ஆவர், பிராணாயாமத்தால் சிவகதி சென்று எய்துவர், பிரத்தியாகாரத்தால் அரனாவர், தாரணையால் நமன்வழி மாற்றுவர், தியானத்தால் மும்மூர்த்திகளும் தன்னிடமாவர் எனத் திருமூலர் விளக்குகின்றார்.

**ஆதனம்:**

யோகம் சித்தி பெறுவதற்கு உடம்பின் அசைவற்ற நிலை தேவைப்படுகின்றது. உடலை அசையாமல் நிலையாக இருத்துவதே இருக்கை அல்லது ஆசனம் எனப்படும். ஆசனம் என்பது உறுதியாகவும் வசதியாகவும் இருத்தலாகும். யோகம் புரிவதற்குமுன் ஒரு மனிதன் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதையும், ஆசனத்தைச் செய்யுமுன் செய்ய வேண்டிய உடல் இளக்கத்தையும் முறைகளையும், பயன்களையும் செய்முறை பயிற்சிகளுடன் கீழ்கண்டவாறு காண்போம்.

**திருமூலர் காட்டும் ஆதனங்கள்**

***1. சுவத்திகாசனம்***

நாம் நீண்ட நேரம் அமர்ந்து யோகசாதனை செய்வதற்கு அமரும் நிலை மிக முக்கியமானது. அதில் பங்கய ஆசனம் என்கின்ற பத்மாசனத்தைவிட, சுவத்திகம் என்கின்ற சுகாசனமே சிறந்தது என்கின்றார். இது உட்காருவதற்குச் சுகமானது. ஆசன வகை எட்டில் சுவத்திகாசனம் முதலாகக் கூறப்படுகின்றது.

பங்கய மாதி பரந்தபல் ஆதனம்
அங்குள வாம்இரு நாலும் அவற்றினுள்
சொங்கில்லை யாகச் சுவத்திக மெனமிகத்
தங்க இருப்பத் தலைவனு மாமே! (திரு.558)

**முறை:**

முழங்காலுக்கும் தொடைக்கும் நடுவில் இரு பாதங்களையும் கீழே வைத்து உடல் நிமிர்ந்து உட்கார்ந்திருப்பது சுகாசனம்.

**பயன்கள்:**

மனத்தை ஒருநிலைப்படுத்தி மனசஞ்சலத்தையும், சோர்வையும் நீக்கும். முழங்கால் மூட்டுவலி நீங்கும்.

***2. பத்மாசனம் (தாமரை இருக்கை)***

ஓரணை யப்பத மூருவின் மேலேறிட்
டார வலித்ததன் மேல்வைத் தழகுறச்
சீர்திகழ் கைகள் அதனைத்தன் மேல்வைக்கப்
பார்திகழ் பத்மாசனமென லாகுமே! (திரு.559)

**முறை:**

இருகால்களையும் முயற்சியால் தொடைமேல் சேர்த்து இரு தொடையின் மத்தியுலும் இருகைகளையும் ஒன்றன்மேல் ஒன்றாக

மலர்ந்த பாவனையில் வைத்து மூக்குநுனியில் கண்பார்வையை அசைவர வைத்து மூச்சினைக் கவனிப்பதாகும்.

பயன்கள்:

இது உடலுக்கும், மனத்துக்கும் ஆன்மாவுக்கும் ஒரே நேரத்தில் பயனளிக்கும் உன்னத ஆசனமாகும். குதிங்கால்வலி, இடுப்புவலி, பிடிப்பு, நரம்பு நோய்கள் நீங்குவதுடன் அடிவயிறு பிரச்சினைகள் நீங்கிச் சுவாசம் நேர்படும்.

*3. பத்திராசனம் (இலை இருக்கை)*

துரிசில் வலக்காலைத் தோன்றவே மேல்வைத்து
அரிய முழந்தாளி லங்கைகளை நீட்டி
உருகி யிடுமுடற் செவ்வே யிருத்திப்
பரிசு பெறுமது பத்திரா சனமே (திரு.560)

முறை:

பத்திராசனமாவது வலக்காலை இடப்பக்கத் தொடையின் மேல்வைத்து முழந்தாள்களில் இரு கைகளையும் நீட்டி உடம்பை நேராய் நிமிர்த்தி இருத்தல் ஆகும். பத்திரமான பரிசுப் பொருளைப் பெறுவது இவ்வாசனமாகும்.

பயன்கள்:

தியானநிலைக்கு மிகச்சிறந்த ஆசனம். ஆண்பெண் இருபாலருக்குமே செனன உறுப்புகளின் நோய் நீங்கும்; மாதவிடாய் கோளாறு நீங்கிச் சுகப் பிரசவம் நடக்கும். ஆணுக்கு உயிரணு உற்பத்தியாகும்.

*4. குக்குட ஆசனம் (கோழி இருக்கை)*

ஒக்க அடியினை யூருவில் ஏறிட்டு
முக்கி யுடலை முழங்கை தனில்ஏற்றித்
தொக்க அறிந்து துளங்கா திருந்திடிற்
குக்குட ஆசனங் கொள்ளலு மாமே! (திரு.561)

முறை:

குக்குடம் என்பது கோழியாகும். குக்குட ஆசனமாவது பாதங்கள் இரண்டையும் தொடையின்மேல் மாறி ஏற்றிக் கணைக்காலுக்கும் தொடைக்கும் இடையே இருகைகளையும் நுழைத்துத் தரையில் ஊன்றி உடம்பை முழங்கை வரையில் முக்கித் தூக்கி நிறுத்துதல் குக்குட ஆசனமாகும்.

**பயன்கள்:**

கால் நோய், மூட்டுப்பிடிப்பு, வாயுத்தொல்லை நீங்கும். உடல் எடையும் குறையும், தொந்தி வராது.

**5. சிங்காதனம் (சிங்காசனம்; சிம்மாசனம்)**

**பாத முழந்தாளிற் பாணி களைநீட்டி**
**ஆதர வோடும்வாய் அங்காந் தழகுறக்**
**கோதில் நயனங் கொடிமூக்கி லேயுறச்**
**சீர்திகழ் சிங்கா தனமெனச் செப்புமே!** (திரு.562)

**முறை:**

பாத நுனிகளைப் பூமியில் ஊன்றியிருந்து, முழங்கால்களில் கைகளை நீட்டி, வாயைத் திறந்துகொண்டு புருவநடுவைப் பார்த்திருப்பது. கேசரி முத்திரையில் நாக்கை மடித்து உண்ணாக்குப் பிரதேசத்தில் செலுத்தி இருப்பதால் வாய் மூடாதிருக்கும். இது சிங்கம் போன்றிருத்தலின் சிங்காதனம் எனப்படுகின்றது.

*6. கோமுகாசனம்*

**பத்திரம் கோமுகம் பங்கயங் கேசரி**
**சொத்திரம் வீரஞ் சுகாதனம் ஓரேழும்**
**உத்தம மாமுது ஆசனம் எட்டெட்டுப்**
**பத்தொடு நூறு பலஆ சனமே** (திரு.563)

**முறை:**

**கோமுகாசனம்** என்பது பசுவின் முகம்போல் இருத்தல். இடப்பக்கம் பின்பாகத்தில் வலக்கால் பரட்டினையும் வலப்பக்கம் பின்பாகத்தில் இடக்கால் பரட்டினையும் சேர்க்க அமைவதால் இது பசுமுகம்போல் தோன்றும்.

*7. வீராசனம்*

**முறை:**

**வீராசனமாவது** வலப்பக்கத் தொடையின்மேல் இடக்கால் பரட்டினைச் சேர்த்து இறுமாந்திருத்தல் வீராசனம் ஆகும்.

**பயன்கள்:**

ஆண்களுக்கு விந்து வலுப்பெற்று உயிரணு எண்ணிக்கை கூடும். நீடித்த தாம்பத்தியம்; பெண்கள் மகப்பேறுக்குப்பின் அடிவயிற்றுச் சதை குறையும்.

ஆசன வகைகள் நூற்றிருபத்தாறும் மேலும் பலவும் உள்ளன. பத்திரம், பங்கயம், கேசரி சுவத்திகம் முதலியன முன்பு கூறப்பட்டன. சுகமாய் சாதகன் அவரவர்க்கு ஏற்ற நிலையில் அமர்ந்து யோகசாதனை புரிதல் வேண்டும்.

**திருமூலர் காட்டும் சமாதிநிலை**

திருமூலர் அட்டாங்க யோகத்தின் இறுதி உறுப்பான சமாதியைப் பற்றி விரித்துரைக்கின்றார். இச்சமாதிநிலை இயமம் முதலாகக் கொண்டு பழகிவந்த பயிற்சியாளனுக்கு அல்லது சாதகனுக்குக் கிடைத்த பெறும்பேறாகும். சமாதியாவது உயிரும் இறைவனும் ஒன்றிய யோகநிலையாகும். சமாதிக்கு முன்னுள்ள ஏழு அங்கங்களை முறையாகக் கடைப்பிடித்துவரின் தத்துவங்கள் மறைந்து சமாதிநிலை கைகூடும்.

விந்துவும் நாதமும் மேருவில் ஓங்கிடில்
சந்தியி லான சமாதியிற் கூடிடும்
அந்த மிலாத அறிவின் அரும்பொருள்
சுந்தரச் சோதியுந் தோன்றிடுந் தானே (திரு.1019)

விந்துவும், நாதமும் மேருவாகிய சிரசின் மேலுள்ள சகஸ்தரதளத்தில் மிகுந்து விளங்கினால் யோகமான சமாதியில் சீவன் பொருந்தி நிற்கும். அந்தமிலாத அறிவின் அரும்பொருளான ஞான சொருபம் தோன்றும். அது சோதியாய் வெளிப்படும். விந்துவாகிய ஒளியும், நாதமாகிய பரையும் (சக்தியும்) இணையும்போது சிவம் தோன்றும். மனம் அடங்குதலே சமாதி நிலை. அகப்பொருளைக் கண்டு ஆனந்தம் மேலெழுந்த நிலையில் மனத்தோடு பிராணனும் அடங்கிவிடும். மன் மனத்துள்ளே மனோலயம் என்கின்றார் திருமூலர். பிராணனாகிய புரவியை (குதிரையை) மனமாகிய கயிற்றைக் கொண்டு கட்டுவிப்பதே பிராணனை அடக்கும் வித்தையாகும். அவ்வாறு சிரசின்மேல், விரிந்த சகஸ்தரதளத்திற்குமேலே அகண்டத்தைத் தரிசித்தபின் காலனுக்கு வரவேண்டிய வேலையில்லாமல் போய்விடுகின்றது. இவர்களை இறப்பு தீண்டுவதில்லை. யோகியர் உலக நாட்டத்தை விட்டு அகநாட்டத்தில் பல்லாண்டு காலம் பொருந்தியிருப்பர். வேண்டும்போது சமாதி கலைந்து எழுந்து வந்து தாம்விரும்பிய வேலை முடித்து (திருமூலர் போன்று) மீண்டும் சமாதியில் ஆழ்ந்து விடுவர்.

சமாதிசெய் வார்க்கு தகும்பல யோகஞ்
சமாதிகள் வேண்டாம் இறையுட னேகிற்
சமாதிதா னில்லை தானவ னாகிற்
சமாதியில் எட்டெட்டு சித்தியும் எய்துமே (திரு.1202)

சமாதியில் ஆழ்ந்திருப்போர்க்குப் பல யோகங்கள் சித்திநிலைகள் சித்திக்கும். எனினும் இறைவனோடு கலந்தவர்களுக்குச் சமாதிகள் வேண்டாம் என்பது திருமூலரின் இன்னொரு கருத்தாகவும் இருக்கின்றது. தான் அதுவாகி விட்ட அத்வைத நிலையில் சீவான்மாவும் பரமான்மாவும் ஒன்றிய நிலையில் சமாதி ஏன் என்பது கேள்விக்குறியாக உள்ளது. எட்டெட்டு சித்தியும் எய்துமே என்கின்றார். சமாதிநிலையில் 8x8=64 சித்திகளும், கலை ஞானங்களும் வந்து பொருந்தியபின் சமாதி ஏன்? ஏனெனில் அச்சீவர்கள் சிவமாயிருந்திட்டபோது ஐந்தொழில் புரியும் ஆற்றலும் அட்டமாசித்திப் பேறுகளையும் பெற்றிருப்பார்கள், உடலை விடவும் முடியும், விரும்பிய உடலில் சேரவும் முடியும், மண்ணிலும் இருக்க முடியும் விண்ணவரோடும் உறவாடிக் களிக்க முடியும் தூலஉடலோடும், சூக்கும உடலோடும் எங்கும் எப்போதும் உலவமுடியும். இராப்பகலில்லா நிலை ஏற்படும்போது யுகயுகமாய் இவ்வண்டத்தில் வாழ்ந்திருப்பர். பஞ்சபூதங்களும் அவர்களுக்கு அடங்கி நிற்கும். திருமூலர்,

தப்பிலா மன்றில் தனிக்கூத்து கண்டபின்
ஒப்பில் எழுகோடி யுகம்இருந் தேனே (திரு.74)

என்று கூறுகின்றார். ஏழுகோடி யுகம் என்பதில் ஆதார சக்கரங்களும் அண்டத்தில் இருந்து உதிக்கின்ற சூரியனும் பிண்டத்தில் இருந்து உதிக்கின்ற சூரியனும் ஒன்றானபின் அதன்பின் அண்டத்திலுள்ளதே பிண்டத்தில் எனும் கூற்றுக்கேற்ப தில்லைக் கூத்தான நடராச தரிசனம் அம்பலவானின் அருட்காட்சி கிட்டும். கிடைத்தபின் முடிவில்லாத ஆன்ம பயணத்தில் இலயித்திருப்பர். இந்நிலையில் திருமூலர் சிதம்பரத்தில் உள்ள தில்லை நடராசப் பெருமான் ஆலயத்தில் சமாதி கொண்டுள்ளார் என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். அவ்வாறு சமாதியானவரின் உடலை முறையாகப் பக்குவப்படுத்த வேண்டும். இல்லையேல் மண்ணுலகு அனைத்தும் தீப்பற்றி எரியும் எனத் (ஞானியர் உடலை எரித்தால்) திருமூலர் கூறுகின்றார். இதனைப் பஞ்சமாபாதகம் என்கின்றார்.

எண்ணிலா ஞானி யுடலெரி தாவிடில்
அண்ணல்தங் கோயில் அழலிட்ட தாங்கொக்கும்
மண்ணில் மழைவிழா வையகம் பஞ்சமாம்
எண்ணரு மன்னர் இழப்பார் அரசே. (திரு1911)

எண்ணத்தைச் சுட்டெரித்த ஞானியரின் உடலைத் தீயிலிட்டு எரித்தால் (எரியூட்டுதல்) வரும் கேடுகளையும், அவர்களைச் சமாதி முறைப்படி புதைப்பதே புண்ணியமாகும் என்று சமாதிக் கிரியையில்

அறிவுறுத்துகின்றார். சிவஞானியின் உடலைப் புதைப்பதே புண்ணியமாகும். தமிழர்களின் வழக்கமும் சமாதியில் இருத்துவதே. இடையில், ஆரியர் வருகையால் நிலைமை மாறியது என்பது குறிப்பிடத்தக்கது. அவ்வாறு சமாதியடைந்த ஞானியைப் பத்மாசனத்தில் அமர்த்தி, முக்கோண வடிவிலும், நாற்கோண வடிவிலும் ஆறடி நீள அகலத்தில் ஒன்பதடி ஆழத்தில் விபூதி மலர், பத்திரங்களையிட்டு மூடி தண்டனையிலோ, குளத்தங்கரை, ஆற்றின்படுகை, நன்மலர் சோலை, மலைச்சாரல், காடு இவை போன்ற இடங்களிலோ சமாதி வைக்கலாம். சமாதிக்குப் பல முறைகளையும், அளவுகளையும் கூறியிருப்பினும் குகையின் மேல் குருவைப்போல் சிவலிங்கம் அல்லது அரசங்கன்றை வைத்து வழிபடச் சொல்கின்றார். இக்கூற்றே சித்தர்கள் இல்லாமற் சிவன் கோயில் ஏதுகாண் எனும் நிலை எய்தியது. இன்று ஆலயங்களாக நிற்கும் கோயில்கள் அனைத்தும் சித்தர்களது சீவ சமாதி என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

*அட்டமாசித்தி*

தெய்வசாதனையில் ஈடுபட்டு வெற்றி அடைந்தவர்கள் பெறும் எட்டு சித்திகள் யோகசாதனையின் பெருமைக்குச் சான்றாகின்றன. அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன அட்டமா சித்திகளாகும். குரவன் அருளால் சாம்பவி, கேசரி, திரிபுரை அருள்கூட எண்சித்தி வாய்க்கும். 12 ஆண்டுகள் யோகப்பயிற்சி செய்யின் இது கைகூடும். அட்டாங்க யோகப் பயிற்சியால் பிராணனை அடக்கி ஆண்டால் இளமையோடு வாழலாம்.

ஒவ்வொரு சித்திக்கும் ஓர் அதிதேவதை கூறப்படுகின்றது. சித்தர்கள் அட்டமாசித்திகளுடன் பரஞானமும் கைவரப் பெற்றவர்கள். இவை அக-அனுபவத்தின் விளைவாகவே திருமூலரால் விளக்கப்படுகின்றன. தேவியின் துணையை ஆங்காங்கே விளக்கிச் சொல்லுகின்றார். யோக சூத்திரத்தின்படி இவை தாரணையின் விளைவாகக் கொள்ளப்படுகின்றது.

**கலைநிலை**

இங்குக் கலை என்பது அமிழ்த கலையாகும். அது யோகசாதனையால் புருவ நடுவழியே பெறும் சிவ அனுபவமாகும். அந்தக் கரணங்களைத் தூயதாக்கிப் பெறும் தெய்வஅனுபவமும், நடுநாடியில் பிராணனைச் செலுத்திப் பெறும் தெய்வஅனுபவமும், கலைகளின்வழி இறைவனைக் காணும் தெய்வ அனுபவமும் கலந்த ஒன்றே யோகஅனுபவம் எனத் தெரிகின்றது.

***சரீர சித்தி உபாயம்***

யோகம் உடல்நலனுக்கு மிகவும் தேவையானது. இப்பயிற்சியால் நோய்கள் அகலும். காலசக்கரம், ஆயுள் பரீட்சை, வாரசரம் என்பன ஒருவன் உடம்போடு கூடி வாழும் உயிர் வாழ்க்கையைக் கூறுகின்றது. வாழ்நாளைக் குறைத்துக்கொண்டு செல்லும் காலமே காலச்சக்கரம் எனப்படுகின்றது. காலத்தை வென்று அகத்தே சிவதரிசனத்தில் கலந்து நிற்றலையே இங்குக் கூறுகின்றார். ஓங்காரத்தில் உள்ளொடுங்கி நிற்கும் அனுபவமும் கூறப்படுகின்றது.

காற்றின் இயக்கத்தை உணர்ந்து அதன்வழி ஆயுள் பரீட்சையைச் செய்ய முடியும் என்று கூறுகின்றார். வாரசரம் எனும் பகுதியில் மூச்சை நடுநாடி வழி செலுத்திச் சிவானுபவம் பெறும் வழியைக் கூறுகின்றார். இந்துக்கள் பயணம் செய்யும்போது இன்ன இன்ன திசைக்கு இன்ன இன்ன நாட்கள் பொருந்தா எனக்கூறுவர். திருமூலரும் அக்கருத்தினையே இங்குக் கூறுகின்றார்.

சீவன் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் ஆற்றலைப் பெறுவது கேசரியோகம். இதனை அடயோகமுறை, இலம்பிகா யோகமுறை, இராசயோகமுறை ஆகியவற்றால் மேற்கொள்ள முடியும் என விளக்குவர்.

ஆண்பெண் கூட்டுறவாகிய போகம். விந்து செயத்தால் எவ்வாறு யோகமாக மாறுகின்றது என்பதைப் பரியங்கயோகம் கூறுகின்றது. இல்லறத்தில் வாழ்வோர் மனைவியோடு இன்புற்று வாழும் போக நிகழ்ச்சியும், உடலை மெலியச் செய்து வாழ்வைப் பாழாக்காமல், உடலை வலுவுடையதாக்கிப் பேரின்ப வாழ்க்கைக்கு உதவும் பொருளாகவும் மாறுதற்கிடமுண்டு எனத் திருமூலர் இதன்வழி உணர்த்துகின்றார்.

காம உணர்வினால் விந்து, நாதத்தைக் கீழே விடாமல் காமவாயுவை மூலவாயுவுடன் கலக்கச் செய்து விந்துவை வீரியமாக்கிப் பதி மண்டலத்தில் அமுதநீராய் மாற்றுவதே அமுரிதாரணையாகும். சந்திரனை உடம்பில் இயங்கச் செய்யும் யோகம் சந்திரயோகமாகும். ஒளிக்கூறுகளை - மேனோக்கிச் செலுத்தும் யோகப் பயிற்சியினையே இத்தலைப்பில் கூறுகின்றார். மூச்சை, மேல்நோக்கிச் செலுத்துதல், விந்துவை மேல்நோக்கிச் செலுத்துதல், கலைகளை மேல்நோக்கிச் செலுத்துதல் என்ற அடிப்படையில் யோகப்பிரிவுகளைக் கூறுகின்றார். இவை சிவானுபவத்திற்கு இட்டுச் செல்லும் அகவழிபாடாக உள்ளன. சுழுமுனை நாடி வழியே பெறும் ஞானஅனுபவம் என்பதையே சாதனையாளன் பெறுகின்றான்.

## நாலாந்தந்திரம்

இது அசபை முதலாக நவாக்கிரி சக்கரம் ஈறாக 13 தலைப்புகளை உடையது. இவற்றுள் ஏழு தலைப்புகள் சக்கரம் பற்றியன. இத்தந்திரம் சைவ உலகில் ஒரு குறிப்பிட்ட சிந்தனை ஓட்டத்தைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றது.

பிராணன் வெளியே செல்லாது சிரசின்மேல் அமைவதே அசபாவித்தை. இங்குப் பிரணவ மந்திரமே சிறப்பாகப் பேசப்படுகின்றது; பஞ்சாக்கரமும் இப்பகுதியில் விளக்கப்படுகின்றது. இம்மந்திரங்களையும் யோகசாதனையின் விளைவாகத் தோன்றும் அனுபவங்களாகவே விளக்குகின்றார். பஞ்சாக்கரத் தியானத்தால் சிவத்தாண்டவத்தைத் தரிசனம் செய்வது பற்றிக் கூறுகின்றார். அடங்கிய - ஒலி அம்பலமாக அமைய இறைவன் ஆடுவதையே இங்குக் குறிப்பிடுவதாகத் தோன்றுகின்றது. இறைவனை மந்திர வடிவினனாகவும் கூறுகின்றார். இம்மந்திரம் சிவன் திருமேனி (900) என்பர்.

மந்திர - எந்திர வழிபாடுகளில் உலகியல் இன்பம் எடுத்துப் பேசப்படுதல் குறிப்பிடத்தக்கது. இப்பகுதியில் அசபைக்கும் - மந்திரத்துக்கும் தாண்டவத்துக்குமுள்ள தொடர்பு பலவிடங்களில் கூறப்படுகின்றது. பஞ்சாக்கரத்தையே அம்பலமாகக் கொண்டு இறைவன் திருக்கூத்து நடத்துகின்றான் எனும் கருத்து புலப்படுகின்றது. திருவம்பலச் சக்கரத்தை வரைந்து பஞ்சாக்கரத்தைச் செபிக்கக் கூறுவதும் கருதத்தக்கது.

நாதம் - விந்து என்னும் இரண்டை எண்ணிச் செய்யப்படும் முயற்சியை, சாதனையைத் திருமந்திரத்தில் பல இடங்களில் காணமுடிகின்றது. இச்சக்கர உபாசனையால் தெய்விக அனுபவத்தையே நோக்கமாகக் கொள்ள வேண்டும். இருப்பினும் உலகியல் நலனையும் இவ்வழிபாட்டில் பெறமுடியும். தம்பனம், மோகனம், உச்சாடனம், மாரணம், வசியம், ஆகர்சனம் என்ற கருமங்களுக்கு வெவ்வேறு வகையாகச் சக்கரப் பூசையினை மேற்கொள்ளக் கூறுகின்றார். திருமூலர் இவ்வழிபாட்டினைப் பெரிதும் தெய்விக வாழ்க்கைக்கே கூறுகின்றார்; அருச்சனை செய்வதால் பலவகைப் பேற்றினையும், முத்தியையும் பெறமுடியும் என்கின்றார்.

எய்தி வழிப்படில் எய்தாதன இல்லை
எய்தி வழிப்படில் இந்திரன் செல்வமும்
எய்தி வழிப்படில் எண்சித்தி உண்டாகும்
எய்தி வழிப்படில் எய்திடும் முத்தியே (திரு.1006)

முத்தியைக் கூறுவதோடு அட்டகருமச் சித்தியையும் திருமூலர் கூறுகின்றார்.

உலகியல் வாழ்வில் பகை ஒழிந்து வாழலாம் என்ற நம்பிக்கையைத் தரவல்லதாக இது அமைகின்றது. அருச்சனை முதலான புறவழிபாடு அகவழிபாட்டுக்குத் துணைசெய்யும் எனத் திருமூலர் உணர்த்துகின்றார். இவ்வழிபாட்டின் முடிவில் ஒருவன் **சிவமாதல், தானவனாதல்** என்ற இறுதிப் பேற்றையும் அடைய முடியும் (1011) என்று கூறுகின்றார்.

ஆகம முறைப்படி வேள்வி செய்வோர் ஒன்பது வகையான குண்டங்களை அமைப்பதுண்டு. **வேள்வித் தீயால் நன்மைகள் பல** (1015) எனக் கூறுகின்றார். இருப்பினும் சிவயோக சாதனையின் விளைவாக அகத்தே எழுப்பும் சிவசோதியைப் பற்றியே இங்குச் சிறப்பாகச் சிந்திக்கின்றார். **செஞ்சுடரை உள்ளே நாடிக் கொண்டேன்** (1017) எனும்போது ஓமத் தீக்குரிய குண்டமும் அகத்து இருப்பதாகவே கொள்ள வேண்டும்.

மூலாக்கினியை மேலே எழச் செய்யும் யோக சாதனையே நவகுண்ட வழிபாடாகக் கருதப்படுகின்றது (1019). இச்சாதனை சிவசோதியோடு கலக்கும் (1042). சிவசோதியை உடலாகிய நவகுண்டத்தில் காத்துத் தியானிப்பவர் அழியாப் பெருவாழ்வு எய்துவர். நவகுண்டமாகிய ஒன்பதையும் ஒன்றாக அகத்தே தரிசிக்கப் பெற்றவன் அகத்தே சிவசோதி தரிசனத்தைப் பெறுகின்றான்.

**பராசக்தியின் பல்வேறு திருக்கோலங்கள்**

திரிபுரை சக்கரம் என்னும்போது திரிபுரை நிலைகொள்ளும் இடம் என்பதன்றித் திருவம்பலச் சக்கரம், நவாக்கிரி சக்கரம் போன்று இங்குச் சக்கரம் எதுவும் விளக்கப்படவில்லை. திரிபுரை என்பது அகஅனுபவத்தில் கண்ட ஓர் அனுபவ உண்மை. அகவழிபாட்டுடன் தியானத்திற்குரிய தேவியின் திருக்கோலங்கள் சில குறிப்பிடப்படுகின்றன.

தேவி சிவத்தோடு ஒன்று கலந்து இருப்பவள். ஆன்மாக்களுக்கு வினைப்பயன்களை அவளே நுகர்விக்கின்றாள். ஞானத்திற்கும் அவளே கொழுகொம்பு. பராசக்தியைக் கலைமகளாக, *இராசராசேசுவரியாக, சண்டிகையாக,* வராகியாகக் காண்கின்றார். வயிரவி வயிரவக் கடவுளின் சக்தி என்பர். வயிரவிக்குரிய மந்திரமும், வயிரவி வழிபாட்டில் பயன்படுத்தும் சில முத்திரைகளும் கூறப்படுகின்றன. ஓம் ஐம் ஔ ஆதி **பைரவனே** நம என்பது வயிரவி மந்திரம். ஐம் என்பதை வயிரவி **பீஜம்** என்பர்.

வாகீசுவரி, பராசக்தி, சண்டிகை, புவனை, சிவகாமி என்னும் கோலங்கள் அனைத்தும் ஒரு தேவியினையே குறிக்கின்றது. இத்தேவியே சக்தியாவாள். சக்கரவழிபாடு இறுதியான இலட்சியத்துக்கு வழிநடத்துவதோடு உலகில் பகை நீங்கி இன்பமாக வாழ ஒருவனுக்கு ஆறு செயல்களைச் செய்ய உதவும் என்பர். ஒன்பது அட்சரங்களுக்கும் உரிய வடிவமாக ஒன்பது சக்திகளை எண்ணுவதுபோலத் தோன்றுகின்றது.

மந்திரோபாசன முறையை விளக்கும் நான்காம் தந்திரம் சாக்தத்தின் பிரிவு என்பர். இதில் மந்திரச் சக்கரங்களின் வடிவம், அளவு, வரைகள், அவற்றுள் அடைக்கப்படும் மந்திர எழுத்துகள், உரிய மந்திரங்கள், வழிபாட்டு முறைகள், அவ்வவற்றின் அதிதெய்வம், வலிமை, பயன் முதலியன விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இவற்றுள் பெரும்பாலானவை சக்தி பேதங்களைப் பற்றியன. திருவைந்தெழுத்தின் சிறப்பு, சக்கர அர்ச்சனை, அதற்கு வேண்டும் நவகுண்டம் முதலியனவும் விளக்கப்படுகின்றன. பலவகைச் சக்திகளையும் தேவி பூரண சக்தி ஆதலையும் விளக்குகின்றன. இந்நிலையில் தேவி ஆதார ஆதேயமாக நிற்கின்றாள் எனக்கூறி அப்பொலிவு காட்டும் ஏரொளிச் சக்கரமும் அப்பனின் வயிரவச் சக்கரமும் பின்னர் நிற்கின்றன. சக்தியின் வடிவு, ஏந்திய படைகள், அதோமுகநாயகியாதல் (1357, 8, 1402, 17) இவற்றைக் கூறி அம்மை வழிபாட்டால் பெறற்கரிய பயன் பெறலாம் என்பன இப்பகுதியில் உணர்த்தப் பெறுகின்றன.

இதிலுள்ள மந்திரப் பாடல்கள் முன்னூற்று மூன்றையும் மந்திரம் முன்னூறு எனக் குறிப்பிடலாம். சக்கரம், மந்திரம் என இரண்டைக் கூறினாலும் அடிப்படை மந்திரோபாசனை என்றே தோன்றுகின்றது. பஞ்சாக்கரத் தியானத்தையும், திருவம்பலச் சக்கரத்தையும் எண்ணும்போது, பாரம்பரிய சைவமரபினை எண்ண முடிந்தாலும், பலவகை சக்தி பேதங்களைப் பற்றிய குறிப்பு இங்குத்தான் முதன்முதலாகக் காணப்படுகின்றது. தேவியின் பல வடிவங்களையும் காணமுடிகின்றது. எனவே இதனைச் சாக்தத்தின் பிரிவு எனக் கூறுகின்றார். இத்தகைய சிந்தனை, திருமந்திரத்தின் பிற பகுதிகளோடு எவ்வாறு இணைந்து நின்று தெளிந்த நெறியைக் காட்டவல்லது என்பதை அறிஞர்கள் சிந்திக்க வேண்டும்.

**ஐந்தாம் தந்திரம்**

இத்தந்திரத்தில் சுத்தசைவம்முதல் உட்சமயம்வரை 20 தலைப்புகள் உள்ளன. வாழ்க்கைத் தத்துவத்தை உணர்ந்து, வாழ்வின் அடிப்படை உண்மைகளைக் கண்டறிந்து, இரட்டை

நிலையிலிருந்து விடுபட்டு, பரனிடத்தில் நேயத்தோடு வாழ்பவர் சுத்த சைவர். சைவர்கள், சரியை, கிரியைகளை மேற்கொண்டவர்களாகச் சிவசின்னங்களோடு காட்சியளிப்போர் எனக் குறிப்பிடுகின்றது. ஞானத்தில் நான்கு படிகளை ஞானத்தில் ஞானம், ஞானத்தில் யோகம், ஞானத்தில் கிரியை, ஞானத்தில் சரியை எனக் குறிப்பிடும்போது சித்தாந்த நூல்கள் கூறுவதுபோன்று, சரியை, கிரியை, யோக, ஞானங்களிலும், நன்னான்கு நிலைகளைச் சிந்திக்க இடமுண்டு.

திருவருட் சக்தி, பிறப்பையும் மறப்பையும் போக்கித் தவம் நல்கித் தன்வழிபடச் செய்கின்றாள் என்பதை, சத்திநிபாதம் என்னும் பகுதி தெரிவிக்கின்றது. மாந்தர் தம்வாழ்வில் மேற்கொள்ள வேண்டிய ஒழுக்கம், சைவ ஒழுக்கமே என்பதை வற்புறுத்துவதாக நிராசாரம் என்ற பகுதி அமைகின்றது.

***குருநெறி***

சன்மார்க்க நெறியாகிய குருநெறியினையே சிறப்பாக எடுத்துக் கூறுகின்றார். இத்தந்திரத்தில் பல தலைப்புகள் சைவசாத்திர உலகில் பேசப்படுவனவேயாயினும், முதலில் நால்வகைச் சைவம் எனக்கூறி, சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சுத்த சைவம் எனக் குறிப்பிடுவது புதுமையே. இங்குச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நெறிகளையே இவ்வாறு கூறியிருக்க வேண்டும். சரியையினைச் சுத்த சைவத்து உயிர் என்றும், கடுஞ்சுத்த சைவம் பர-சாயுச்சியத்தைத் தருவதென்றும், மார்க்க சைவம் சிவாகமாய் சிவம்-அகம் விளங்கச் சென்றவர்கள் எனப்பொருள் கொள்ள முடிந்தால், கிரியையாளர்களையே குறித்ததாகக் கொள்ளமுடிகின்றது.

**ஆறாம் தந்திரம்**

இத்தந்திரத்தில் சிவகுருதரிசனம் முதல் பக்குவன் வரை பதினான்கு தலைப்புகள் உள்ளன. துறவுக்கோலம் கொண்டு ஒழுகும் ஒரு குறிப்பிட்ட சைவநெறியினரையே இத்தந்திரம் விளக்குகின்றது. முதல் மூன்று தலைப்புகள் அவ்விலட்சியத்தைச் சுட்டவும் ஏனைய தலைப்புகள் அவ்விலட்சியத்தை அடையவும் ஏனையோரை நெறிப்படுத்தவும் முயலும், துறவிகளை விளக்க எழுந்தனவாகத் தோன்றுகின்றன.

***சிவகுருவின் பணி***

சிவனே குருவாக எழுந்தருளி வந்து ஆருயிர்களை ஆட்கொள்வான் என்பதே சைவக் கோட்பாடாகும். சுத்த சிவன் குருவாய் வந்து தூய்மை செய்தத்தனை (1578) என்பர்.

சிவகுருவின் பணியினை விளக்கும் திருமூலர்,

பத்திப் பணித்துப் பரவும் அடிநல்கிச்
சுத்த உரையால் துரிசறச் சோதித்துச்
சத்தும் அசத்தும் சதசத்தும் காட்டலால்
சித்தம் இறையே சிவகுரு வாமே (திரு.1573)

என்பர்.

பத்திமை கொள்ளச்செய்து, பரவுதற்குத் திருவடி தந்து, உபதேச மந்திரத்தால் அழுக்கு நீங்கி ஒளிபெறச் செய்து, சத்து (இறை), அசத்து (உலகு), சதசத்து (உயிர்) இம்மூன்றன் உண்மையினையும் உணரச் செய்வது சிவகுரு ஆகும். குருவின் அருளால் ஒருவன் பெறுவதே திருவடிப்பேறு. திருவடிப்பேறு என்பது சிவஞானப்பேறே. குருபதம் உள்ளத்து வந்தது என்னும்போது இது ஓர் அக அனுபவம் என்பதையும் விளக்குகின்றார்.

*துறவுநெறி*

காட்சிப் பொருளாகிய பெருமானிடம் அவன் திருவடியில், உறைந்து நிற்பார்க்கு ஞானம் நிலைத்து நிற்கும்; அதன் விளைவாக ஆன்மா விடுதலை பெற்று அப்பெருமானிடம் தங்கும். இம்மூன்றும் அனுபவ நிலையில் ஒன்றாகி நிற்றல் உண்டு. ஆன்மா வேறு இறைவன் வேறு என்ற நிலை அகன்று அத்துவித அனுபவம் பெறுவர். துறவுக்கோலம் கொண்டு நாம் மேற்கொள்ளத் தக்கநெறியினை நமக்கு அறிவுறுத்துகின்றான் என்றும், எனவே துறவுக்கோலம் கொண்டவர்களுக்கு அவன் அருள்வான் என்றும் கூறுவர். இவ்வாறு கூறுவதோடு துறவே மேற்கொள்ளத்தக்க நெறி என்றும், அது இறைவன் படைத்த நெறி என்றும் கூறுவர். துறவைத் தொடங்கும்போதே, இறப்பும் பிறப்பும் இருமையும் நீங்கித் துறக்கும் தவம் (1614) எனக் கூறுவதில் இருந்து, துறவிகள் மேற்கொள்ளும் வழிபாட்டு முறையினையே தவம் எனக் குறிப்பிடுவதாகக் காணமுடிகின்றது. அவ்வழிபாட்டு முறையை அகப்பூசை அல்லது தியானம் என்றே திருமூலர் குறிப்பிடுகின்றார்.

தவத்தின் இயல்பு அறிவார்கள் என்றும் இத்தவம் ஞான சமாதிக்கு இட்டுச் செல்வது என்றும் கூறுவர். யோக சமாதிக்கு வேறான ஞானச்சமாதிக்கு இட்டுச் செல்லும் ஒரு வழிபாட்டினையே தவம் எனலாம்.

ஞானப் பேற்றுக்குத் தவத்தைக் காரணமாக்கிக் கூறியவர், இறைவனருளே அதற்கு அடிப்படைக் காரணம் என்கின்றார். இதன்வழி எல்லாப் பெருவாழ்வும் இறைவன் அருளால் சித்தித்தனவே என்று

தெளிவாகின்றது. துறவு மேற்கொண்டு தவமியற்றி வாழ்வதும் சிவனருளின் விளைவு என்பது திருமந்திரத்தில் தெளிவுபடக் காட்டப்படுகின்றது. அவன் அருளாலே அவன் தாள் வணங்குவதுபோல் ஆகும்.

உண்மைத் தவவாழ்க்கை மேற்கொள்ளாதவர் கொள்ளும் தவவேடமே அவவேடம் எனப்படும். அவ்வாறு வேடம் கொள்வோரால் சமுதாயத்துக்கே கேடு. அதனைக் கழிப்பித்தல் வேண்டும். வேடத்தைவிடவும் உண்மைத் தவமுயற்சியிலேயே நாட்டமிருக்க வேண்டும் என்பதைத் தெளிவாக்குகின்றது. உண்மைத்தவம் மேற்கொள்ளாதாரைக் கொலைவேடர் என்று (1661) வள்ளுவர் கூறுவது ஒப்புநோக்கத்தக்கது. உண்மைத் தவவேடத்தை விளக்குகின்றார்.

சைவத்துறவிகள் மேற்கொண்டிருந்த சிவ சின்னங்களைக் குறிப்பிடும்போது திருநீற்றின் சிறப்பைத் தனியாக எடுத்துக் கூறுகின்றார். சிவபிரான் பூசியிருப்பது, பூசுவோர்க்குக் கவசமாவது; உடம்பனைத்தும் பூசி மகிழ்ந்தால் வினைகள் அகலும். இறைவன் திருவடி சேரலாம் எனத் திருநீற்றின் சிறப்பைப் பேசுகின்றார்.

துறவிகள் தவவேடம் கொண்டு வாழ்வதைச் சிந்தித்தவர், ஞானவேடம், சிவவேடம் என இருவேடங்களைக் குறிப்பிடுகின்றார். வெளிவேடத்திற்கு வேறாக உண்மைச் சாதகர் இயல்பு இன்னது என்பது கூறப்படுகின்றது.

குரு, மாணாக்கர்கள் தகுதியினையே பக்குவம் என்றும் தகுதியின்மையினையே அபக்குவம் என்றும் குறிப்பிடுவர். தவநெறிக்குப் புறம்பாக வாழ்பவர்களையே கருதுகின்றார். பொருந்தாத மாணாக்கன் யார் என்பதைக் கூறுகின்றார்.

இத்தந்திரம் சைவத் துறவியர்களைப் பற்றிப் பேசுவதாகத் தோன்றுகின்றது. துறவுக்கோலம் மேற்கொண்டு, அக்கோலத்தோடு கூடாத ஒழுக்கமுடையவர்களைத் திருவள்ளுவர் போன்று கடிந்தும் கூறுகின்றார். அரசன், கூடா ஒழுக்கத்தினரைத் தண்டித்தல் வேண்டும் எனப் பிறவிடத்தும் கூறுவார். இத்துறவியர்கள் சமய வாழ்க்கையைப் பொறுத்தமட்டில், உயர்ந்த ஞானநாட்டத்தோடு வாழ்வோர்களாகவே குறிப்பிடப்படுகின்றனர்.

வாழ்க்கை இலட்சியத்தை அடைய முயலும் இத்துறவிகள், குருவாகவிருந்து பிறருக்கு நெறியும் காட்டினர். நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான் எனக் கூறும்போது சைவ உலகில் துறவுநெறியினர் ஒரு தனிப்பிரிவாக இயங்கி வந்தனர், என உணர்த்துகின்றார்.

துறவு நெறியையே நெறியாகக் கூறுவது பௌத்தர்கள், சமணர்கள் போன்று, துறவினை வற்புறுத்தும் ஒரு கூட்டத்தினரையும் சைவமரபு பெற்றிருந்தமையினையே உணர்த்தும். அவ்வாறாயினும் இத்துறவிகளின் தவம் இறைவன் அருளைப் புறக்கணிப்பதன்று; இறைவன் அருளை நம்பி எழுந்த ஒன்று எனல் வேண்டும்.

## ஏழாம் தந்திரம்

இத்தந்திரத்தில் ஆறாதாரம்முதல் இதோபதேசம்வரை 38 தலைப்புகள் உள்ளன. முதல் ஆறாதாரங்களையும் குறிப்பிடும்போதே இத்தந்திரத்தில் ஒரு யோகக் கோட்பாட்டை விளக்க முற்படுகின்றார்.

*ஆறாதாரம்*

1. நாலிதழ்த் தாமரை வடிவாகவுள்ளது மூலாதாரம்
2. ஆறிதழ்த் தாமரை வடிவாகவுள்ளது சுவாதிட்டானம்
3. பத்திதழ்த் தாமரை வடிவாகவுள்ளது மணிபூரகம்
4. பன்னிரண்டிதழ்த் தாமரை வடிவாகவுள்ளது அனாகதம்
5. பதினாறிதழ்த் தாமரை வடிவாகவுள்ளது விசுத்தி
6. இரண்டிதழ்த் தாமரை வடிவாகவுள்ளது ஆக்கினை

யோக சாதனையில் ஆன்ம - உணர்வு எவ்வாறு ஆறாதாரங்களையும் தாண்டிச் சென்று, சிவானந்தத்தில் திளைக்கின்றது என்பது கூறப்படுகின்றது. சிறந்த யோகிகள், உண்மையில் யோகஅனுபவத்தில் கிடைக்கும் அமுதையே உண்கின்றனர்; பிச்சையினால் கிடைக்கும் உணவையன்று என்பர். பிச்சை எடுத்தல் உடற்பசியைத் தணித்து உடம்பை வளர்த்தற்கன்று, உயர்ந்த சிவானுபவத்தை எண்ணி வாழும்போதுதான் அடியவர் வாழ்க்கை சிறப்படைகின்றது என்னும் கருத்தும் பிட்சா விதி எனும் தலைப்பில் வற்புறுத்தப்படுகின்றது. பிச்சை ஆணவத்தை ஒழிக்கவல்லது.

அடியவர்களை இறைவன் திருவடியில் செலுத்தும் ஞான முத்திரைகளின் வகைகளையே எண்ணுகின்றார். தாந்திரிக வழிபாட்டில், மந்திரம், சக்கரம், முத்திரை என்பன சிறப்பிடம் பெறுகின்றது. முத்திரையின் பயனையும் முத்திரை வகைகளையும் விளக்குகின்றது. சிவஞானியர்கள், உடல் உகந்த நிலையில் எவ்வாறுள்ளனர்? எந்தெந்த நிலைகளை அடைவதற்கு வாய்ப்புண்டு என்பதே பூரண குகைநெறிச் சமாதி எனும் தலைப்பில் மிகுதியாகக் காணப்படுகின்றது.

1. வளர்பிறையில் உயிர் பிரிந்தால் ஞாயிற்று மண்டிலத்தும், பிதிர் உலகத்தும் சென்று, திங்கள் மண்டிலத்தே தங்கலாம் (1902)

2. முற்றான சமாதி கைகூடாத நிலையில், சிவனருளால், சிறந்த யோகியாக வந்து பிறக்கலாம் (1903, 1904); சிவஞானம் சேர்ந்து நிற்கலாம், (1905),

3. சிறந்த முத்தராய் மீளா நிலையும் அடையலாம் - (1906).

ஞானியர்கள் எய்தும் பெருநிலை குறித்தும் பேசுகின்றார். விந்துற்பனம், விந்துசயம் என்னும் தலைப்புகள் இல்லறத்தில் இருந்து யோகசாதனை மேற்கொண்டு வாழ்வோரைச் சிந்திப்பதாகக் தோன்றுகின்றன. விந்துவின் தோற்றம் பற்றிய தலைப்பில் விந்து இரண்டு பொருளில் விளக்கப்படுகின்றது. உலகிற்கு முதற்காரணமாகிய சுத்த மாயையினை விந்து என்பதோடு, உடம்பில் தோன்றும் சுக்கிலத்தையும் விந்து என்பர். விந்துவைச் சுத்தமாயை என்றால் அதனை உலகப் படைப்பிற்கு முதற்காரணமென்றலே சித்தாந்த மரபு. விந்துற்பனத்தில், ஒருவன் உடம்பில் உருவாகும் விந்து (சுக்கிலம்)வைப் பற்றியும் குறிப்பிடுகின்றார். இவ்விந்து பேணப்பட வேண்டிய ஒன்று; தெய்விக வாழ்க்கையால் இதனைப் பேணலாம்; உலகியற் போகம் இதனை அழிக்கும்; இவ்விந்துவின் அழிவு மக்களுக்குத் தீங்கு தரும்.(1935, 36). யோகசாதனையில் வாழ்வோர் விந்துவைப் பேணிக் காத்தல் வேண்டும்.

பெண்ணின்பத்தை அனுபவிக்கும்போது, விந்துவைக் கெடுத்தல் கூடாது. போகத்தைச் சிவபோகமாக மாற்றுவதே யோகம்; பெண்கள் ஆசையினையும் இதனால் தீர்த்துவிட முடிகின்றது என்கின்றார். முதன்மையான சிந்தனை, விந்துவை அழியாது காத்தலே ஆகும்.

ஆதித்தன் சிவனே; இதனை அண்டாதித்தன், பிண்டாதித்தன், மனவாதித்தன், ஞானாதித்தன், சிவாதித்தன் என்னும் தலைப்புகளில் விளக்குகின்றார். புறத்தே தோன்றி மறையும் சூரியனையே அண்டாதித்தன் என்கின்றார். பிண்டாதித்தன் என்பது உடம்பினகத்துத் தரிசிக்கும் ஆதித்தன் என்பது பொருளாகும். யோகசாதனையின் விளைவாக ஏற்படும் சிந்தைத் தெளிவினையே மணவாதித்தன் என்று கூறுகின்றார். யோகசாதனையில் சிந்தைத் தெளிவினும் மேம்பட்ட ஒரு நிலையை ஞானாதித்தன் என்று கருதுகின்றார். இது ஆன்மா, சுத்த தத்துவ நிலைக்குச் சென்று விடுவதைக் குறிப்பிடுவதாகும்.

தத்துவம் கடந்த நிலையில், சிவசூரியன் எங்கும் நிற்பதை யோக அனுபவத்தில் உணர்வதாகக் கூறுவர். யோகசாதனையின் விளைவாக ஒருவன் பெறும் சிவானுபவத்தின் பல்வேறு நிலைகள் நூலில் காணப்படுகின்றன. யோகசாதனையில் அனுபவத்தைப் பெறும் உயிர்களின் (பசு) இயல்பைப் பல நிலைகளில் விளக்குகின்றார். அவ்வாறு விளக்கும்போது, பிராணன், புருடன், சீவன், பசு, போதன் என்னும் தலைப்புகளில் விளக்குதல் குறிப்பிடத்தக்கது.

இறைவன் ஆன்மாக்கள் ஈடேற அனாதியாகவே, வைகரி முதலிய வாக்குகளையும் மாயை முதலிய மலங்களையும், புருடத் தத்துவத்தையும், இவற்றைக் கொண்டு ஞானத்தையும்; செய்தருளியுள்ளான். மேலும் இறைவனே எல்லாவுயிர்களிலும் சராசரங்களிலும், அந்தர்யாமியாக உள்ளான். திருமூலர் உயிரை அணு அளவினதாகவே கூறுகின்றார். இங்குப் புருடதத்துவத்தினும் நுண்ணிய நிலையில் உயிரைக் காண்கின்றார். இது ஒரு வகையில் ஒடுங்கிச் செல்லும் திறம் என்கின்றார்.

பாசத்தால் கட்டுண்ட உயிர்களைப் பசு என்பது சித்தாந்தத் தத்துவமாகும். சிவனே சீவனாக வரையறைக்குள் நிற்கின்றான். ஐந்து இந்திரியங்களையும் அடக்க வேண்டிய அவசியத்தைக் கூறுகின்றார். முதலில் அடக்கும் அருமையினைக் கூறிப் பின் அடக்கும் முறைமையினைப் பேசுகின்றார்.

சிவபோதம் இல்லாமல், சீவபோதத்திலேயே நிற்பவன், உண்மை நெறியை உபதேசிக்கத் தக்கவனல்லன். சிவன் திருவடியை, சிவஞானத்தைத் தரவல்லவனே உண்மையான குரு; அவனே ஞானத்தால் தன்னையும் உணரச் செய்கின்றான்; பாசவுணர்வைக் கெடுத்துத் தத்துவம் கடந்த நிலையில் ஒருவன் பெறும் பேரனுபவத்தையும் அவனே தருகின்றான். துயர் தீர்ப்பதற்குச் சிறந்த சிவநெறியைச் சிந்தை செய்யுங்கள். சிவநெறி வாழ்வு என்பது மனமொழி மெய்கள் தூயராக வாழ்தல், ஒரு குலத்தவராக வாழ்தல், ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என வாழ்தல், இறையை யோகநெறி நின்று அடைதல், அதன் விளைவாகச் சிவஞானத்தைப் பெற்றுய்யலாம்.

விந்துற்பனம், விந்துசயம், போகசரவோட்டம் என்பன இல்லறத்தில் இருந்து கொண்டே, உபதேசம் பெற்று, யோக வாழ்க்கை வாழ்வோரைக் குறிக்கின்றன. பொதுவாக இவர்கள் அனைவரும் யோக வாழ்க்கையில் சிவ-சூரியனை எவ்வாறு தரிசிக்கின்றனர். யோக அனுபவத்தால் சிவதரிசனம் பெறும் ஆன்மாக்களின் பல்வேறு இயல்புகள் போன்றவற்றைப் பசு

இலக்கணம் என்னும் பகுதியில் பிராணன், புருடன், சீவன், பசு, போதன் என்னும் ஐந்து தலைப்புகளில் கூறுகின்றார். புலனடக்கத்தை வற்புறுத்துகின்றார். உபதேசம் பெற்று யோக வாழ்க்கை வாழவேண்டியவர்கள் உண்மையான குரு யார்? உண்மையில்லாத குரு யார்? என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்; வேடத்தோடு பொருந்தாத கூடாஒழுக்கம் வாழ்வோரையும் அறிந்துகொள்ள வேண்டும் என்கின்றார். வாணாளை வீணாளாக்காது, சிவநெறியைச் சிந்தை செய்யக் கூறுகின்றார். யோகவாழ்வைப் பொதுவாகப் பேசினாலும், சில குறிப்பிட்ட அனுபவ நிலையினை ஏழாம் தந்திரம் விளக்குகின்றது.

## எட்டாம் தந்திரம்

இத்தந்திரத்தில் உடலிற் பஞ்சபேதம் முதல் சோதனை என்ற நாற்பத்து மூன்று தலைப்புகள் உள்ளன. பூதவுடம்பை விட்டுப் படிப்படியாகச் சிவத்தையே தனுவாகக் கொண்டு உய்ய வேண்டும். உடல் உணர்ச்சியைவிட்டு நுண்ணுடம்பைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்.

மனத்தைச் சிரசின்மேல் நிறுத்திச் சிந்தித்திருப்பார்க்கு உடல்நினைவு அற்றுப்போகும்; காம உணர்வில் திளைக்காது, நெஞ்சத்தினைச் சிவன்பால் திருப்பிவிட்டால் உயிர், சிறந்த ஒளியுடலைப் பெற்று நிற்கும். சித்தத்தில் சிவன் குடிகொள்ள யோகப் பயிற்சியினைச் செய்தல் வேண்டும். உயிர்களின் ஒரு குறிப்பிட்ட அனுபவ நிலையினையே அவத்தை என்கின்றார். சாக்கிர நிலையில் ஆன்மா இவ்வுலகமே தானாய் நிற்பதைக் குறிப்பிடுகின்றார் (2153). சாக்கிரத்தில் பெற்ற அனுபவங்களையே கண்டத்தில் ஒளிமயமாகக் காணுதல் சொப்பனம் என்பர் (2154). சுழுத்தியினை விளக்கும்போது பிரித்தறிய முடியாத ஒரு பொதுஅனுபவமே கூறப்படுகின்றது (2155). ஆன்மா மூலப் பிரகிருதியுடன் பொருந்தியிருத்தலையே துரியம் என்பர். உந்திக் கமலத்தின் உள்ளே இருந்து மூலப்பிரகிருதியுடன் பொருந்தியிருப்பதுதான் துரியாதீதம். இது ஆன்மா அவத்தையை விட்டு நீங்கி நிற்கும் நிலையாகும். சைவ உலகில் மலத்தின் கூட்டுறவை அசுத்தம் என்றும்; மலம் நீங்கிய நிலையினைச் சுத்தம் என்றும் கூறுவர்.

கன்மங்களை ஈட்டுதற்குரிய கருவிகளை அறிந்து, அவற்றையே விடுதலைக்குரிய வழியாக எவ்வாறு மாற்றுவது என்பதையும் கூறுகின்றார். சுத்த நிலையில் நிகழும் நனவுத் தொடக்கத்து ஐந்து அவத்தைகளையும் கூறுகின்றார். சுத்த நிலையில்,

நனவு அவத்தையில் தூலத் தத்துவங்கள் சூக்குமமாகத் தோன்றும் என்கின்றார். நனவு அவத்தையில் ஏனைய நான்கு அவத்தைகளும் கலந்து நிற்றல் உண்டு. அந்நிலையில் ஆன்மா எத்தகைய அனுபவத்தைப் பெறுகின்றது என்பதையும் குறிப்பிடுகின்றார். ஆன்ம அனுபவம், படிப்படியாக வளரும். இவ்வாறு அவத்தைகளை விளக்கும்போது, ஆன்மாவில் தத்துவச் சேர்க்கையைப் பேசுவதெல்லாம், யோக அனுபவத்தின் விளைவாகப் பேசுவதென்றே கொள்ள வேண்டும்.

கருவி கரணங்களோடு கூடாது நிற்கும் நிலையைக் **கேவல நிலை** என்றும், கூடி நிற்கும் நிலையினைச் **சகலநிலை** என்றும், அவற்றிலிருந்து விடுபட்டுத் தூயனாய் நிற்கும் நிலையினைச் **சுத்தநிலை** என்றும் விளக்குகின்றார். கருவிகளை விட்டு உறங்குவது போலுள்ள நிலை **கேவலத்திற் கேவலம்**; ஒளிமண்டலத்தில் அறிவு குன்றாதிருக்கும் நிலை **கேவலத்தில் சகலம்**. கேவலத்தில் சுத்தம் அடைந்தவர்கள், விஞ்ஞானகலர்; இவர்களுக்கு வீடருளும் மூர்த்தி சிவனே என விளக்கம் தருகின்றார்.

*சிவகதி*

தத்துவம் கடந்த நிலையில் பெறும் ஓர் அக அனுபவமே சிவகதி ஆகும். உலகினையே அண்டம் என்பர்; உலகம் என்பது நாம் வாழும் பூவுலகு மட்டுமன்று. பல உலகங்கள் உண்டு; இவ்வண்டத்திலெல்லாம் இறைவன் செறிந்து ஒளி வீசுகின்றான்; அண்டத்தை விளக்குவது ஒரு குறிப்பிட்ட ஆன்ம அனுபவத்தை விளக்குவதற்கே என்று திருமூலர் கூறுகின்றார். மனம் செற்றமற்று, இறையருளோடு கலந்து நிற்க வேண்டும். நின்மலாவத்தையில் கிடைக்கும் ஒளி அனுபவம் பேரின்பத்தைத் தரவல்லது. உயிர் துரிய நிலையில், தத்துவம் கடந்து சிவகதி அடையும்.

**அறிவு-உதயம்** என்பது ஆன்மா தன்னை அறிதலே; **தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை** (2355) என்கின்றார். அதனை அறியும்போது அறிவு மயமான அவ்வான்மாவில் சிவபெருமான் வீற்றிருப்பதையும் அறிய முடியும் (2356). இவ்வறிவு உதயமும், திருவருளால் உணர்த்தப்படுவதே ஆகும். மேலும் அறிவு மயமான **ஆன்மாவே** அறிவு மயமான பரம்பொருளை அறியவல்லது எனவும் விளக்குகின்றார்.

***ஆநந்தம்***

திருமூலர் பாடல்களில், வேதாந்தம், சித்தாந்தம் என்பன பல இடங்களில் பேசப்படினும், கலாந்தம், நாதாந்தம், யோகாந்தம்,

போதாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் என்னும் ஆறனையும் ஒருங்குகொண்டு ஆறந்தம் என்று கூறுகின்றார். சித்தாந்தம் தியானத்தால் பரன் அடியை அடையச் சொல்கின்றது. இறைவனை ஒலிவடிவில் கண்டு, மந்திர யோகத்தின்வழி அவனைத் தலைப்படுதலையும் கூறுகின்றது.

*யோகாந்தம்*

அட்டாங்க யோகம்வழி அடையும் சமாதி நிலையில் சிவன் முனைத்து நிற்க, சீவன் பரமாக நின்று, பற்றுகளை விட்டுப் பெறுகின்ற உபசாந்த நிலையே (விருப்பு வெறுப்பற்ற நிலையே) யோகாந்தாமாகும். கலைகளின்வழி விந்துவில் சென்று ஒடுங்குதலையே கலாந்தம் என்கின்றார். வேதாந்தம் ஐந்து மலங்களையும் ஏற்றுக் கொள்ளும் நெறி ஆகும். இறுதிநிலையான அத்துவிதத்தைப் பாலும் நீரும் சேர்ந்தாற்போன்று கலப்பதாகும்

*போதாந்தம்*

உபதேசம் பெற்று மேற்கொள்ளும் ஞானநெறி போதாந்தம் ஆகும். வேதங்களின் முடிவு வேதாந்தம்; ஆகமங்களின் முடிவு சித்தாந்தம். ஆகமம், தந்திரம் சித்தாந்தம் என்பன ஒரு பொருட்கிளவிகள். வேதஆகம இணக்கத்தை வற்புறுத்தவே திருமந்திரத்தில் இக்கருத்துப் பலவிடங்களிலும் கூறப்பட்டிருத்தல் வேண்டும். ஆயின் இன்று இவ்வழக்குகள் திருமூலரை ஒட்டி வழங்கப்படவில்லை.

*சிவசாதனை*

பொதுவாகச் சைவக் கோட்பாட்டினர், பதி-பசு-பாசம் என்னும் முப்பொருள் உண்மையினைப் பேசுகின்றனர். திருமூலர் இம்மூன்றும் ஒன்றோடொன்று தொடர்புடையவையாக விளக்குகின்றார். மனத்தினால் நினைந்து காணமுடியாத ஒளியினையும், வாயினால் சொல்லி விளக்க முடியாத பிரணவத் தொனியையும் எனக்கு உணர்த்தினான்; பின் நான் அவனது திருவடிகளான விந்து நாதங்களை எனது தலையில் சூடி நின்றேன் என்கின்றார்.`.

*முக்குற்றம்*

முக்குற்றம், முப்பதம், முப்பரம், பரலட்சணம், முத்துரியம், மும்முத்தி, முச்சொரூபம், முக்கரணம், முச்சூனிய தொந்தத்தசி, முப்பாழ் என்னும் தலைப்புகள் உள்ளன. வள்ளுவர் கூறும் காம வெகுளி மயக்கங்களையே முக்குற்றம் என்கின்றார். முக்குற்றங்களையும் விட்டு நீங்கிப் பிரணவத் தியானத்தில் நின்றால்.

சிவ ஒளியினைச் சென்றடைதல் கூடும். காம வெகுளி மயக்கம் கடிந்து சிவசாதனையிற் செல்லலே நோக்கம் என்பதும் தெளிவாகின்றது.

*முப்பரம்*

தத்துவமசி என்பதற்கு அத்துவிதப் பொருள். **நீ அது** ஆகின்றாய் என்பதைச் சீவன் (பரன்) சிவனாய் நிற்கும் என நந்தி பொருள் கூறியதாக உணர்த்துகின்றார் (2441). ஐம்பது எழுத்துகளும் வாக்கு ரூபமான சக்திகள் ஆகும். ஆன்மா வளர்ச்சியில் **முப்பரம்** என்ற தலைப்பில் மூன்று நிலைகள் கூறப்படுகின்றது.

1. சதாசிவ நிலை அடைதல்
2. சிவஞானம் பெறுதல்
3. பரம்பரமாதல்

இவற்றையே முப்பரம் எனக் கொள்ளவேண்டும். ஆன்மப் பக்குவத்திற்கேற்ப இறைவனும்,

1. எல்லாவற்றையும் கடந்த பரமாகவும்
2. குருமூர்த்தமாகவும்
3. ஆனந்தமயமாகவும்

விளங்குவதுண்டு எனக் கூறுகின்றார். அப்பரம், சிவபரம், ஆனந்தமான பரமாக, இறைவன் நின்று ஆன்மாக்களைப் பக்குவப்படுத்துவதாகக் கொள்ள வேண்டும். குண்டலினியை எழுப்பி, அக்கினிமண்டலம், சூரிய மண்டலம், சந்திர மண்டலத்துள்ளே இறைவனோடு கலந்துபெறும் நலத்தைக் குறிப்பிடுகின்றார்.

*முச்சொரூபம்*

இறைவனைப் பரம் என்பதோடு, ஆன்மா பரமாதல் உண்டு. மூலாதாரத்தில் எழும் நாதமானது, சிரசின்மேல் விளங்கும் சோதியோடு கலத்தல். ஆன்மா, படிப்படியாக ஒடுங்கிச் செல்லும் நிலையில் அது பெற்று நிற்கும் தோற்றத்தையே முச்சொரூபம் என்கின்றார். யோக அனுபவத்தைப் பிரணவத் தியானத்தால் அடையலாம்; மனமொழி மெய்களைக் கடந்த அனுபவத்தால் அடையலாம்.

*சிவசிந்தர்*

சீவ உபாதியைக் காரிய உபாதி என்றும், பரோபாதியைக் காரண உபாதி என்றும் கூறுவதோடு இவ்விரண்டும் அற்ற

நிலையிலேயே அணு சிவமாகிறது என்கின்றார். அமைதி என்ற பொருளைத் தருவது. இந்நிலை காரியகாரண வாதனை பற்றற்றபோது கைகூடுவது என்கின்றார் (2507). உபசாந்த நிலைக்கும் மேற்பட்ட அனுபவ நிலையே சிவானந்த அனுபவம் என்கின்றார். யோக சாதனையில் அகவழிபாட்டில் இறைவனை அடைவதையும் குறிப்பிடுகின்றார். புறங்கூறுதலில் கருத்தூன்றாது, மூன்று பத முத்திகளையும் கடந்த சிவசித்தராக வாழவே வற்புறுத்துகின்றார்.

*துரியநிலை*

ஒன்பது அவத்தைகளையும் கடந்து செல்லும்போது, படிப்படியாக மலப்பிடிப்பிலிருந்து விடுபட்டு, தவமுயற்சியின் இலட்சியமான சத்திய ஞானப் பொதுவில் துரி நிலையிலேயே சீவன், உண்மை சொரூபம் விளங்கும். ஒன்பது அவத்தைகளின் இறுதியிலேயே, சீவபோதம் சிதைய சிவபோதம் தோன்றி, தான் சிவனாதல் அமையும். சுத்தாசுத்தம் என்பது இது சுத்தம் என்றும் இது அசுத்தம் என்றும் பேசும் பேச்சுக்கு உண்மையான யோக சாதகனிடத்தில் இடம் இல்லை. முதலில் ஈசனிருக்கும் இடத்தினை அறிய முற்பட வேண்டும்.

*தத்துவமசி*

புறமே திரியாது அகத்தே ஒளிபெற வாழ்வதே பரகதிக்கு வழியாகும். அக அனுபவத்தின் பயனாக வருவதே சிவகதி என்று கூறுகின்றார். தத்துவமசி என்பது ஒன்றன் மூன்று நிலைகளை விளக்கும் மூன்று சொற்களாகும். தத்துவமசி வேதாந்தம் என்றும், சித்தாந்தம் அதனையே சிவமாம் அது என்கின்றது என்றும் கூறி இரண்டிற்கும் வேறுபாடில்லை (2571) எனவும் கூறுகின்றார். மேலும் பிரணவத் தியானத்தின்வழி இந்நிலை அடைய முடியும் (2574) என்றும் கூறுகின்றார்.

*உண்மை நிலை*

ஐம்புல மயக்கத்தில் வாழ்வது பொய், அதிலிருந்து விடுபட்டு ஞானவாழ்வில் தலைப்படுதலே மெய் (2608) எனக் கூற வேண்டும். மனம்மொழிமெய்களை அடக்கி மௌனியாக வாழ்தலே, ஞானி ஒருவன் வாழ்க்கை என்கின்றார். வேட்கையை விடுத்து, ஞானத்தைச் சார்ந்தவர்களே தம் உண்மை நிலையை அறிய முடியும் என்பதைத் தெளிவாகக் கூறுகின்றார். இக்கருத்தினை வற்புறுத்தவே,

**ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்**
**ஈசனோ டாயினும் ஆசை அறுமின்கள்**

ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே (திரு.2615)

என்று கூறுகின்றார்.

*பக்திநெறி*

இறைவன், அடியவர்கள் பக்தியில் விளங்கித் தோன்றுபவனே தவிர, பிறவிடத்தன்று. முத்தியுடைமையில் முத்தி உண்டு. அது பக்தியினால் அடையப் பெறுவது. முத்திக்குக் காரணம் பக்தி எனக் கூறினாலும் இப்பக்தி, யோக சாதனையோடு பிரிப்பின்றி உள்ளது. சோதிக்கும்போது வழிகாட்டுகின்றான் இறைவன். குருவருளால் கிடைத்த ஞானமே, சோதனைக்குரிய கருவி என்றும் கூறுகின்றார். பக்திநெறி சென்று, குருவருளால் சோதிக்கப்பெற்று சிவமாதலையும் பேசுகின்றார்.

**ஒன்பதாம் தந்திரம்**

இத்தந்திரத்தில் குருமட தரிசனம்முதலாகச் சர்வவியாபி என்ற இருபத்திரண்டு தலைப்புகள் உள்ளன. குருவைப் பற்றிப் பிற தந்திரங்களிலும் குறிப்பிட்டார். இங்குக் குருமட தரிசனம் பற்றிக் கூறுகின்றார். மேலும் குருவின் தரிசனத்தைக் கூறுகின்றார். குருவெனும்போது, மாணாக்கனுக்கு ஞானத்தை உபதேசிக்கின்றவன் என்பதே பொருள். குருமட தரிசனத்தை, யோகசாதனையின் விளைவாக அமையும் ஒன்றாகக் குறிப்பிட்டதற்கேற்ப, ஞானகுரு தரிசனத்தையும் புறநிகழ்ச்சியாகக் கூறாது அகஅனுபவமாகவே கூறுகின்றார்.

*பிரணவ சமாதி*

பிரணவத்தின்வழி ஒடுங்கிச் சென்று, இறைவனோடு கலந்து நிற்றலையே பிரணவ சமாதி என்கின்றார். யோகசாதனையில் பிரணவத்தியானம் என்ற ஒன்றைக் கூறுகின்றார். இந்நெறி நிற்போர் தம்அனுபவமே பிரணவ சமாதியில் கூறப்படுகின்றது. ஒடுங்கிச் செல்லுதல் என்பதற்கேற்ப, பிரணவத்திற்குச் சில படி நிலைகள் கூறப்படுகின்றன. அவை தூலம், சூக்குமம், காரணம் என்பன. இத்தந்திரத்தில் பஞ்சாக்கரம் குறித்து மூன்று தலைப்புகள் உள்ளன. அவை தூல பஞ்சாக்கரம் சூக்கும பஞ்சாக்கரம் அதிசூக்கும பஞ்சாக்கரம் என்பன.

*மந்திரம்*

பொதுவாக மந்திரங்களுக்கு அதிதேவதை கூறும் வழக்குண்டு. ஓம் நமசிவாய என்னும் மந்திரத்தையே

குறிப்பிடுகின்றார். பிறவிக்குக் காரணமாக வினையை அகற்ற, குருவழி நின்று, அருள்வழி காட்டுவது அஞ்செழுத்துத் தியானம் என்பர். ஐந்தெழுத்தை ஓதுவதால் இறைவன் அருள் பெறலாம் என்பர். நாள்தோறும், இறைவன் திருவைந்தெழுத்தை, அவன் திருவடியே சரண் என்ற உணர்வோடு தியானித்தால், துயில்வதற்குமுன் அதனை ஓதியவாறு துயின்றால், இறைவன் அருள் பெறலாம் என்கின்றார்.

*அம்பலவாணர் தரிசனம்*

ஓரெழுத்தில், சிவத்தில் ஒடுங்கி நிற்பதை உணர்த்துகின்றார். (2720) சிகரம் என்ற எழுத்தே உயிர்களைக் கரையேற்றுவது ஆகும். பஞ்சாக்கரத் தியானத்தில் படிப்படியாக உள்ஒடுங்கிச் செல்லுதலைப் பற்றிக் கூறுகின்றார். இறைவன் நிகழ்த்தும் திருக்கூத்தின் செய்கையினைக் கூறுவதே திருமந்திரம் ஆகும். திருமூலரின் அனுபவம் அனைத்திற்கும் அம்பலவாணர் தரிசனமே காரணம் ஆகும். இச்சிந்தனையைத் தொடக்கத்தில் தமிழில் புலப்படுத்தியவர் திருமூலர் ஆவார்.

*திருக்கூத்து*

உருவமில்லாத சிவம், சக்தியைக் கொண்டு ஐந்தொழில் புரிய ஆடுகின்றான். உலகனைத்தும் இறைவன் ஆட்டத்திற்கேற்பவே இயங்குகின்றன. சக்தியே அரங்காக அமைய ஆடுகின்றான். சத்தியைச் சதானந்த சக்தி என்கின்றார். நிலையான ஆனந்தத்தைத் தருவாள் என்கின்றார். இறைவன் நடனம், ஆன்மாக்களைப் படிப்படியாக, சிவானுபவத்துக்கு இட்டுச் செல்கின்றது. இறைவன் ஆட்டம், புறத்திலும் அகத்திலும் நிகழும். உலகனைத்தும் இறைவன் திருவடிக்கீழ் அடங்கி நிற்கின்றது (2738) என்று குறிப்பிடுகின்றார். திருக்கூத்து அண்டத்திலும், பிண்டத்திலும் நிகழ்வது என்னும் கருத்தையும் வெளிப்படுத்துகின்றார். திருக்கூத்தினைப் பிண்டத்தில் நிகழ்வதாகக் காட்டும்போது யோகப் பயிற்சியின்மூலம் பெறும் அகதரிசனத்தின் விளக்கமாகவே இதனைக் கூற வேண்டும் (2802). சத்தியம், ஞானம், ஆனந்தம், பிரம்மா என்னும் கருத்தைத் திருமூலரும் விளக்குகின்றார்.

*பஞ்சாக்கரத் தியானம்*

இறைவன் அருளின்றிச் சிவானுபவம் கைக்கூடாது. அவனை வழிபடும் ஆன்மாக்களும் தம் சிறுமைக் கட்டிலிருந்து விடுபட்டுத்

தமக்கு இயல்பான வியாபகத்தைப் பெற்று அவனோடு கலத்தல் வேண்டும். இத்தந்திரம், திருமடத்தில் குருதரிசனம் பெற்று, பிரணவ சமாதி அடைவதையும் பஞ்சாக்கரத் தியானத்தால் திருக்கூத்துத் தரிசனம், ஆகாச தரிசனம் பெறுவதையும் சிறப்பாகக் கூறுகின்றது. இங்கு, பஞ்சாக்கரமும் - திருக்கூத்தும் முதன்மை பெற்று நிற்பதுபோல் தோன்றுகின்றது. ஒளி அனுபவம் ஞான அனுபவம் எல்லாம் ஆகாச அனுபவமே; திருக்கூத்து அனுபவமே ஆகும்.

இங்கு ஆன்மா பெறும் அனுபவம், தத்துவம் கடந்த அனுபவம், துரிய அனுபவம்; ஞான அனுபவம் இவ்வனுபவத்திலும் இறைவனைத் தோத்திரம் செய்துகொண்டிருக்கக் கூறுகின்றார். ஆன்மா கட்டு நீங்கி வியாபகம் பெற்று (சிவபோகத்தில்) நிற்றலையும் கூறுகின்றார். இதுவரை கூறப்பட்ட ஒன்பது தந்திரங்களின் வழி தெரியவரும் கருத்துகள் சிலவற்றை இனித் தொகுத்துக் காண்போம்.

*அறியாமை*

மனிதன் தன்னைத்தானே அறிந்து கொள்ள வேண்டும். இதுவே பிரபஞ்சத்தைப் பற்றிய அறிவாகும். உள்ளத்தில்தான் பிரபஞ்சமே உள்ளது. அங்கேதான் இறைவனும் உள்ளான். இதைத்தான் திருமந்திரம்,

**தன்னை அறிந்தால் தனக்கொரு கேடில்லை**
**தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்**
**தன்னை அறியும் அறிவை அறிந்தபின்**
**தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தானே** (திரு.261)

என்பதாகச் சொல்கின்றது.

ஞானிகள், இறைவனைத் தேட அறிவைப் பயன்படுத்து கின்றனர். ஆனால் இறைவனோடு தன்னைக் கலந்துவிட்டபின், அறியாமை உடையவராகி விடுகின்றனர். இந்த அறியாமை அறிவினும் மேலானது.

போலிகள் திருமூலர் காலத்திலேயே இருந்துள்ளனர். நல்லோர் வாய்ச்சொல், துன்பங்களில் வழுக்கவிடாமல் உதவுகின்ற ஊன்றுகோல் போலிருக்கும். போலிகளுக்கு அவ்விதக் குணமில்லை.

***இல்லறம்***

இறைவன் மாயையைக் கொண்டு 36 தத்துவம் என்ற படிகளை மலரச் செய்தான். 60 தாத்துவிகம் என்ற தத்துவ ஆக்கமாகிய மணத்தை மணக்கச் செய்தான். தத்துவ மலர்ச்சியும், அதன் ஆக்கமாகிய மணமும் தோன்றும் திறனாய் விரிந்து விளங்கும்.

மாயையின் மலர்ச்சியில் ஆன்மா மயங்குகின்றது. தம்மால் ஆகாத, இம்மலர்ச்சியைத் தமது என்று மருள்கின்றது. அம்மருள் உள்ளவரை ஆனந்தத்தை அடையமுடியாது. எனவே மருளை நீக்க இறை துணையை நாட வேண்டும். அப்பொழுதுதான் திருவருள் துணை நிற்கும். இறைவனை அடைய வேதங்களோ மந்திரங்களோ தேவையில்லை.

யாவர்க்கும் ஆம்இறை வர்க்கொரு பச்சிலை
யாவர்க்கும் ஆம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கும் ஆம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கும் ஆம்பிறர்க்கு இன்னுரை தானே (திரு.252)

பசுவுக்குத் தழை தருவதும், பசியோடு வருபவர்க்கு ஒரு பிடி சோறு தருவதும், இனியசொற்கள் பேசுவதன்வழி பிறரை மகிழ்விப்பதும்கூட வழிபாட்டு முறைகள்தாம்.

இப்படிப்பட்ட அறங்களை ஒருவன் இல்லறத்தின் வழிதான் செய்ய முடியும். அன்பு, கருணை, கொடை, வாய்மை போன்ற நல்ல குணங்கள் எல்லாம் இல்லறத்தின்வழிதான் வெளிப்படுகின்றது. ஆக இல்லறத்தின் துணைகொண்டே பேரின்பத்தை அடையுங்கள் என்பது திருமூலர் காட்டுகின்ற கோட்பாடாகும்.

*இறைவனே குரு*

விண்ணின்று இழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து
உள்நின்று உருக்கி ஓர்ஒப்பிலா ஆனந்தக்
கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே (திரு.113)

என்று திருமூலர் உபதேசம் கூறுகின்றார். களிம்புடைய பாண்டத்தில் வைத்த பண்டமும் கெடும். அதை உண்டாரும் கெடுவர். பாண்டத்தில் பண்டத்தைப் பெய்வதற்குமுன் களிம்பறுக்க வேண்டும். இறைவன் குருவாக வந்து ஆன்மாவிடம் உள்ள களிம்பாகிய மும்மலத்தை, மூன்று உபாயத்தால் அறுக்கின்றான். களிம்பு அற்றது என்பதற்கு அடையாளம், ஆன்மா அன்பு மயமாகும். களிம்பறாத பாண்டத்தில் உள்ள பண்டத்தை உண்டார் கக்குவர்; கழிவர். இதையே,

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று

என்கின்றது குறள்.

குருவைக் காண அற உணர்வு மலரும்; அவன் நாமம் சொல்ல மெய்ப்பொருள் மிளிரும்; வார்த்தை கேட்க இன்பம் பெருகும்.

குருவின் உருவைச் சிந்திக்க வீடு எளிதில் கைகூடும். இதை,

> தெளிவு குருவின் திருமேனி காண்டல்
> தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
> தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
> தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே (திரு.139)

என்கின்றது திருமந்திரம். குருவின் வருகையானது மெய்ப்பொருள் தெளியவும், மலங்கள் அகலவும், ஆன்மாவில் அருள்நலம் பெருகவும் பயன்படுகின்றது.

*மெய்யறிவு*

திருமூலரின் பல சிந்தனைகளைக் கோட்பாடு என்ற அளவிற்குக் கொண்டு செல்ல முடியும். திருமந்திரம் மெய்யறிவைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் உள்ளவர்களுக்குப் போதிக்கப்பட வேண்டிய நூலாகும்.

> தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
> மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
> திருவாசகமும் திருமூலர் சொல்லும்
> ஒருவாசகம் என்று உணர்

என்கின்றார் ஔவையார். நான்கு வேதங்கள், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரது படைப்புகள், அகத்தியரின் (குறுமுனி) நூல், திருஞானக்கோவை, திருவாசகம் ஆகிய அனைத்துமே திருமூலர் கூறும் ஒரு வாசகத்திற்கு இணை என்பதே இந்தப் பாடலின் பொருளாகும். திருமந்திரத்தின் சிறப்புக்கு இதைவிட வேறு சான்று வேண்டியதில்லை.

*வாழ்வியல் நெறி*

திருமூலர் நாயன்மார்களுள் ஒருவராகப் போற்றப்படுகின்றார். இவர் சிவனைத் தன் தலைவனாக்கிக் கொண்டவர். திருமூலர் காலம் கி.பி. 4முதல் கி.பி 6வரை இருக்கலாம் என்பர். அதுபோது பல மதம், பல கடவுள், பல சாதி என்ற நிலை இருந்தது. இந்த நிலையில் ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற புரட்சிகரமான சிந்தனையை வைத்தவர் திருமூலர். ஆதியும் அந்தமும் இல்லாதவன், அவன் உள்ளத்து உள்ளேயே உள்ளான்; அன்புதான் சிவம், செயலற்றிருந்தால் சிவானந்தம் கிட்டும், தானே தனக்குப் பகைவனும் நண்பனும் ஆகும். தன்னையறிய தனக்கு ஒரு கேடில்லை என்பன போன்ற கருத்துகளால் மக்களின் சிந்தனையைத் தூண்டி வாழ்வியல் நெறிகளைக் கற்றுக் கொடுத்தவர்.

*முத்தி*

அகரம் உகரம் மகரம் ஆகிய மூன்று ஒலியின் கூட்டமைப்பை ஓம் என்னும் வடிவமாகத் திருமந்திரம் உரைக்கின்றது. ஓம் என்பதை, பிரணவம் என்றும் ஓங்காரம் என்றும் கூறுவர். அகரம், உகரம், மகரம் ஆகிய எழுத்துகளின் கூட்டணிதான் ஓம் என்னும் ஓங்காரம். ஓம் எனும் சொல்லைச் சொல்லிப் பார்த்தால் மொழி; எழுதிப் பார்த்தால் எழுத்து, தியானித்தால் அதுவோர் மந்திரம் இதுவே முத்தி அடைவதற்கான பாதை.

ஓங்காரத்தில் இருந்து ஐம்பூதங்கள் தோன்றின. அவற்றுக்கு உதவியாகச் சிறுபூதங்கள் அதாவது பலவகை உடம்புகள் தோன்றின. பிரணவத்தில் இருந்து அண்டமும் பிண்டமும் தோன்றின என்பது சித்தர்களின் கருத்து.

*தியானம் - கேசரிமுத்திரை*

தியானம் என்றால் மனத்தை ஒருமுகப்படுத்துவது என்று பொருள். அலைபாயும் மனத்தை அடக்கினால், மனம் அமைதியாகி விடுகின்றது. அமைதியான மனத்தோடு செய்யும் தொழில்கள் வெற்றியைத் தருகின்றன. குழம்பிய மனத்தோடு தொடங்கும் செயல்கள் தோல்வியில் முடிகின்றன. பஞ்சேந்திரயங்களின் பக்கம் கவனத்தைச் சிதறவிடாமல் மனம் ஒருநிலைப்படுவதே தியானம்.

உள்நாக்குப் பிரதேசத்துக்கு முன்பக்கமாக உள்ளது அண்ணாக்குப் பகுதி. இதற்கும் தலைஉச்சிக்கும் இடையில் மூளையின் முன்புறத்தில், பிட்யூட்டரி என்னும் நாளமில்லாச் சுரப்பி இருக்கின்றது. பின்புறத்தில், பீனியல் சுரப்பி இருக்கின்றது. இவ்விரு சுரப்பிகளில்தான் மனித அறிவு பதியப்படுகின்றது.

மனிதன் தன்உடலைப் பற்றியும், உயிரைப் பற்றியும் சிந்திக்கும்போது, அச்சுரப்பிகள் வலுவடைந்து நாதத்தை எழுப்புகின்றது. அந்த நாதம் ஒளி வடிவாகத் தோன்றும். அந்த ஒளியே பரம்பொருள் எழுப்பும் ஒளி. அந்த ஒளியை அகக்கண்ணால் கண்டு அனுபவித்தலே ஆன்ம அனுபவமாகும்.

*தியானம் செய்யும்முறை - கேசரி முத்திரை*

கண்பார்வையைப் புருவத்தின் நடுவில் வைக்க வேண்டும். சோர்ந்து போகாமல் தொடர்ந்து பார்க்க வேண்டும்; சிறிது நேரத்தில் மனத்தின் ஓட்டம் நின்றுவிடும். தன்னைப் பற்றிய அறிவு இருக்காது. ஒளியைத் தவிர இருள் என்பதே இருக்காது. பலவித ஒலிகளின் ஓசைகள் நுண்ணொலியாகக் கேட்கும்.

பரம்பொருள் ஒலி வடிவாகத் தெரியும். இதையே திருமூலர் அகக்கண்கொண்டு பார்க்க வேண்டும் என்கின்றார்.

**முகத்தின் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்**
**அகத்தின் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்**
**மகட்குத் தாய்தன் மணாளனோடு ஆடிய**
**சுகத்தைச் சொல்லென்றால் சொல்லுமாறு எங்கனே**
(திரு.2944)

இவ்வாறான ஆன்ம அனுபவத்தை, யோக இன்பத்தை பாடலில் கண்டவாறு உவமையாக, ஒரு தாய் கணவனுடன் பெற்ற உடலின்பத்தை மகளுக்குக் கூற முடியாது. அதுபோன்ற இன்பம் இது என்கின்றார். அகக்கண்ணாகிய சந்திரகலை, சூரியகலைகளைச் சுழிமுனையாகிய நெற்றிக் கண்ணில் பதிப்பதே சுகானுபவமாகும்.

*மூச்சுக்காற்றின் சிறப்பு*

மூச்சுக்காற்று சுழுமுனை வழியே மேலே ஏறும். அப்பொழுது அதுமீண்டும் கீழ் வராமல் இருக்க நாவின் நுனியால் அண்ணாக்கினை அடுத்துள்ள துளையை அடைக்க வேண்டும். அப்படி அடைக்கும்போது உயிரும் உயிரோடு பொருந்தியிருக்கும் இடமாகிய தலையில் உள்ள அவ் ஆயிர இதழ்த் தாமரையாகவே முடியும்.

தலையின் இரத்தம் ஓடுவது அனைவரும் அறிந்த ஒன்று. ஆனால் மேலே சொன்ன அமுதம் பாய்கின்ற வகையைப் பலர் அறிவதில்லை. அதனை அறிந்து அந்த அமுதத்தை உண்டு அதன் சிறப்பை உணர்தல் வேண்டும். கேசரி யோகத்தில் அண்டத்து அமுதம் பிண்டத்துள் கிடைக்கும் முறை கூறப்பட்டுள்ளது.

*மூச்சுக்காற்றின் கணக்கு*

உயிருக்கு மூச்சு மிகவும் தேவையாகின்றது. மூச்சின் வழியாக நமக்குள் காற்று உள்ளே செல்கின்றது. நேராக உச்சந் தலைக்குச் செல்கின்றது. மீண்டும் நெஞ்சின் வழியாக மூலாதாரத்தை அடைகின்றது. பின் நுழைந்த வழியாகவே வெளியேறி விடுகின்றது.

மூச்சுக்காற்று முறையாக இயங்கினால் உடல் ஒளி பெறும். நாள் ஒன்றுக்கு 21600 முறை மூச்சுக் காற்றை உள்வாங்கி வெளிவிடுகின்றோம். நாம் உள்ளிழுக்கும் காற்றின் நீளம் 12 அங்குலமாகும். இது வெளிவிடும்போது 4 அங்குலமாகக் குறைந்துவிடுகின்றது.மீதமுள்ள இரண்டுபங்கு உடம்பில் தங்குகின்றது.

ஒவ்வொரு நாளும் 7,200 அங்குலம் காற்றானது வீணாகின்றது. இது வீணாகாமல் இருப்பதற்கான மூச்சுப்பயிற்சியை மேற்கொண்டால் நம் ஆயுளை நாம் நீட்டித்துக் கொள்ள முடியும்.

உடம்பிலுள்ள ஒவ்வொரு அணுக்களுக்கும் காற்று தேவைப்படுகின்றது. ஆனால் நாம் ஏனோதானோ என்றுதான் சுவாசிக்கின்றோம். ஏன் சுவாசிக்கிறோம் என்பதை அறிந்து சுவாசிப்பதில்லை. காற்றை இடப்புற மூக்கின் வழியாக உள்ளுக்குள் இழுத்து உள்ளே அடக்கி வைத்திருந்து, பின் வலப்புற மூக்குவழியாக வெளியே விட வேண்டும். இப்படிச் செய்தால் உடல் தளர்ந்து போகாமல் கட்டுக்கோப்பாக இருக்கும். உள் உறுப்புகள் தூய்மை பெறும்; இரத்த ஓட்டம் மிகுதியாகும்.

ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை உதைக்கும் குறியது வாமே (திரு.571)

காற்றைப் பிடிக்கும் கணக்கை அறிந்து கொண்டால் எமனையே எட்டி உதைக்கலாம் என்பது இப்பாடலின் பொருளாகும். அதாவது எமன் நம்மை நெருங்கமாட்டான். ஆயுள் நீடிக்கும் எனக் கூறுகின்றது.

ஒரு நிமிடத்திற்கு 18 முறை சுவாசித்தால் 83 ஆண்டுகளும், 15 முறை சுவாசித்தால் 100 ஆண்டுகளும், 2 முறையானால் 750 ஆண்டுகளும், 1 முறையானால் 1500 ஆண்டுகளும் வாழ முடியும். ஆமையானது ஒரு நிமிடத்திற்கு மூன்று முறைதான் சுவாசிக்கின்றது. எனவே நீண்ட நாள் உயிர் வாழ்கின்றது. இதை உணர்த்தவே மூச்சுப் பயிற்சி பற்றித் திருமூலர் மிகச் சிறப்பாகப் பல பாடல்களில் பேசியுள்ளார்.

இடகலை, பிங்கலை ஆகிய இரண்டு மூச்சுக் காற்றும் ஏழு தாதுக்களில் இருந்து இயங்குகின்றன. அவை வட இடமாகத் தனித்தனியே இயங்கினால் மூலாதாரத்தில் உள்ள உயிர் ஆற்றல் வெளியில் பாய்ந்து வீணாகின்றது. அவை இணைந்து இயங்கினால், உயிராற்றல் மேல்நோக்கிச் சென்று அமுதத்தை விளைவிக்கின்றது.

### *ஐம்புலன்கள்*

ஞானம் பெற ஐம்புலன்களை அடக்கு என்பது முடியாத செயலாகும். ஐம்புலன்களும் அடங்கிவிட்டால் ஞானம் என்பது முடியாது. ஐம்புலன்களின் வழியாகத்தான் மெய்ஞானத்தைக் கண்டுணர முடியும். அறிவால் ஐம்புலன்களை அடக்க முடியாது.

தந்திர யோகத்தின்வழி ஐம்புலன்களை அடக்காமலே ஞானம் பெற முடியும்.

*தந்திரயோகமும் புலன்களும்*

நமது உடலில் சக்கரங்கள் எனும் சக்தி மையங்கள் உள்ளன. நமது உடல் உறுப்புகள் அனைத்தும் இந்தச் சக்கரங்களாலேயே இயக்கப்படுகின்றன. நமது ஐம்புலன்களும் கூடச் சக்கரங்களின் ஆளுமையின் கீழ்தான் இயங்குகின்றன. ஒவ்வொரு புலனும் ஒவ்வொரு சக்கரத்தோடு இணைக்கப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| வாசனை | (மூக்கு) | - | மூலாதாரம் |
| சுவை | (வாய்) | - | சுவாதிட்டானம் |
| பார்வை | (கண்) | - | மணிப்பூரகம் |
| ஸ்பரிசம் | (மெய்) | - | அனாகதம் |
| கேள்வி | (செவி) | - | விசுத்தி |

எந்தச் சக்கரத்தில் பாதிப்பு உள்ளதோ, தடை உள்ளதோ அந்தச் சக்கரத்தோடு தொடர்புடைய புலன் தனது இயல்பு நிலையில் இருந்து மாறுபட்டு அழிவுப் பாதைக்கு நம்மை இட்டுச் செல்லும்.

*புலனடக்கம்*

புலனடக்கம் என்பது புலன்கள் ஆன்மாவிற்கு அடங்கி இயல்பாகச் செயல்படும் நிலை. இந்த நிலையில் புலன்கள் மிகமிக வலிமை கொண்டவையாக இருக்கும். சான்றாகக் கண் எனும் புலன் மணிப்பூரகச் சக்கரத்தோடு இணைக்கப்பட்டு உள்ளது. இச்சக்கரத்தில் உள்ள சக்தித் தடைகளைத் தந்திரயோகப் பயிற்சிகளின்வழி நீக்கிவிட்டால் கண் எனும் புலன் மிகமிகச் சக்தி வாய்ந்ததாக மாறி விடும். பார்வையில் தெளிவு ஏற்படும். வாழ்க்கை குறித்த கண்ணோட்டம் அடியோடு மாறிப்போகும். காணும் காட்சிகளின் உண்மையான பொருளை, அர்த்தத்தை உணர்ந்து கொள்ள முடியும். இத்தந்திரயோகப் பயிற்சிகளைத் தொடர்ந்து செய்து வரும்போது இதன் அடுத்த நிலையாகச் சித்திகள் கைகூடும். கண் எனும் புலன் வலுவாகும்போது ஞான திருஷ்டி போன்ற சித்திகள் கிடைக்கும்.

எனவே புலனடக்கம் என்பது புலன்களைப் பக்குவப்படுத்தி நேர்படுத்துதலே ஆகும். புலன்கள் அடக்கம் அடையும்போது மாயையின் கட்டுகள் அனைத்தும் அறுந்து போகும். மாயையால் உருவான பந்த பாசங்களும், காமம், குரோதம் போன்றவையும் மறைந்து போகும். மெய்ஞ்ஞானம் புலப்படும். இந்தத் தந்திரா யோக வழியையே அஞ்சும் அடக்கா அறிவு அறிந்தேனே (2009) என்று

குறிப்பிடுகின்றார் திருமூலர். இம்முறையில் அடக்காவிட்டால், தான்எனும் ஆணவத்தைச் செயிக்காவிட்டால் மெய்ஞ்ஞானம் சாத்தியமாகாது.

*ஞானப்பயணம்*

ஐம்புலன்களையும், மனத்தையும் தந்திரயோகப் பயிற்சிகளின் வழியே நமது கட்டுப்பாட்டுக்குள் ஒருமுறை கொண்டு வந்து விட்டால் அவை எப்போதும் நமக்குக் கட்டுப்பட்டே இருக்கும். எனவே மனத்தையும் ஐம்புலன்களையும் நம் வசப்படுத்திவிட்டால் ஞானப்பயணம் மிக எளிதாகவும் விரைவாகவும் நடக்கும் எனத் திருமூலர் உணர்த்துகின்றார்.

ஐம்புலன்களை நமது ஆன்மாவே ஆட்சி செய்கின்றது, கண்காணிக்கின்றது. ஆன்மா நலமாக இருந்தால் புலன்களும் நல்வழியில் செல்லும். ஆன்மா கறைபடிந்தால் ஐம்புலன்களும் தறிகெட்டு ஓடும். இந்த ஐம்புலன்களையும் கட்டி மேய்ப்பது ஆன்மாவுக்கு மிகவும் சிரமமான ஒரு காரியமாகும்.

ஐம்புலன்கள் இச்சைக்கு அலைந்து திரியும். அனைத்து இன்பங்களையும் அனுபவிக்கும். அனுபவித்த பின்னர் புலன்கள் அமைதியாகிவிடும். அதன் பின்னர் இந்த இச்சைகளின்மேல் நாட்டம் செல்லாது. இதற்கு நீண்டநாள் மனப்பயிற்சியும் யோகப்பயிற்சியும் அவசியம் ஆகும்.

எனவே தான் பண்டைய காலத்தில் இல்லற வாழ்க்கையை வாழ்ந்து அனுபவித்து முடித்தபின் வயதான காலத்தில் துறவறம் மேற்கொண்டனர். அனுபவிக்காவிட்டால் அவர்கள், நிறைகுடம்போல் இல்லாமல் குறை குடங்களாகத் தளும்பிக் கொண்டே இருப்பர். திருப்தியடையாத புலன் இச்சைகள் அவர்களை வாட்டி வதைத்துக் கொண்டே இருக்கும். ஞானப் பயணம் அவர்களுக்குக் கைகூடாது. எனவே ஐம்புலன்களின் ஆரவாரம் அடங்க வேண்டும். அவை தன்வசப்பட வேண்டும்.

அஞ்சின் உகிரும் எயிறும் அறுத்திட்டால்
எஞ்சாது இறைவனை எய்தலும் ஆமே (திரு.2002)

ஐம்புலன்களால் மனிதன் படும்பாட்டை ஐவர் அமைச்சருள் தொண்ணூற்று அறுவர்கள் (2003) என வரும் பாடலில் கூறுகின்றார். மனிவலிமையும், ஆன்ம வலிமையும் இல்லாத மனிதர்களைப் புலன்களும், அவற்றில் இருந்து உருவாகும் இச்சைகளுமே ஆளத்தொடங்கும். இதே பாடலில்,

ஐவரும் ஐந்து சினத்தோடே நின்றிடில்
ஐவர்க்கு இறைஇறுத்து ஆற்றகி லோமே (திரு.2027)

என்றும் கூறுகின்றார். அதாவது ஐந்து புலன்களும் பகையாக நின்று தன்னிச்சையாகச் செயல்படத் தொடங்கினால் அதாவது சினத்தோடு நின்றால் இந்த ஐவர்க்கும் கப்பம் கட்டி மாளாது என்கின்றார். இங்கு மனிதனின் இயலாமை வெளிப்படுத்தப் படுகின்றது.

வெறுமனே கிரியையால் போற்றிப் புகழ்வதாலோ, பூசைகள், சடங்குகள், வேள்விகள் நடத்துவதாலோ இறைவனை, அதாவது உள்ளே இருக்கும் சுடர் சோதியைக் கண்டு கொள்ள முடியாது என்பதைப் பல திருமந்திரப் பாடல்களில் மீண்டும் மீண்டும் வலியுறுத்தியுள்ளார் திருமூலர்.

***இறையருள்***

சித்தர்களின்வழி அகவழி. தந்திர யோகப் பயிற்சிகள் வழியாக மட்டுமே உள்ளே இருக்கும் சிவனையும் சக்தியையும் உணர்ந்து கொள்ள முடியும். மனித முயற்சியால் நாம் எவ்வளவுதான் முயன்றாலும் நமது புலன்களை நம்மால் முழுமையாக வெற்றி கொள்ளமுடியாது. இறைவன் தனது அருள் எனும் வலையை வீசினால் ஒரு நொடிப்பொழுதில் புலன்களின் துடிப்பும் துள்ளலும் நின்றுபோகும். ஆக இறையருள் இருந்தால் மட்டுமே இது சாத்தியமாகும்.

நாம் நம் புலன்களால் காணும் அனைத்தின் மேலும் கொள்ளும் ஆசைகளே பிறவித் துன்பத்திற்கு வித்தாக உள்ளத்தில் விழுகின்றன. இந்த வித்துக்கள் வளர்ந்து, நம்மை உலக வாழ்க்கை எனும் மாயக் கயிறுகளில் பிணைத்து வினைப் பதிவாகின்றது.

***பண்பட்ட மனம்***

புலன் இச்சைகளை, உலக ஆசைகளை நாம் அதிகப்படுத்த அதிகப்படுத்த நமது துன்பங்களும் மாயையின் கட்டுகளும் அதிகமாகும்; பெருக்கில் பெருக்கும். புலன் இச்சைகளையும் ஆசைகளையும் சுருக்கிக் கொண்டால் பிறவித் துன்பங்களும் சுருங்கும். எனவே மனம் பண்பட்டால் மட்டுமே ஆன்மிகப் பயணத்தில் முன்னோக்கிச் செல்ல முடியும்.

***சீவனே சிவலிங்கம்***

பிறவி இல்லாத முத்தி நிலையை அடையத் திருமந்திரம் பல வழிமுறைகளைக் கூறுகின்றது.

கண்காணி இல்என்று கள்ளம்பல செய்வார்
கண்காணி இல்லா இடம்இல்லை காணுங்கால்
கண்காணி யாகக் கலந்து எங்கும் நின்றானை
கண்காணி கண்டார் கனவு ஒழிந்தாரே (திரு.2067)

மக்கள் பெரும்பாலும் நல்லவர்களாக உள்ளனர். தவறு செய்ய அஞ்சுகின்றனர். சட்டம், காவல் பற்றிய அச்சமே இதற்குக் காரணமாகின்றது. கடவுள் பற்றிய அச்சமும் ஒரு காரணமாகும். இருப்பினும் பலர் தங்களது சுயநலத்திற்காகத் தவறான வழிகளில் செல்லவே செய்கின்றனர்.

*இறைவனை அடையும்வழி*

பரம்பொருள் எங்கும் நிறைந்து உள்ளது. இதனை உணர்ந்தவர்களுக்கு எக்காலத்திலும் மனம் தீயவழிகளில் செல்லாது. இந்தப் பரம்பொருளை எப்படிக் காணுவது எனத் திருமூலர் கூறுகின்றார்.

வடக்குவடக்கு என்பர் வைத்தது ஒன்றில்லை
நடக்க வுறுவரே ஞானம் இலாதார்
வடக்கில் அடங்கிய வையகம் எல்லாம்
அகத்தில் அடங்கும் அறிவு உடையோர்க்கே
(திரு. 2070)

இமயமலைக்குச் சென்று தவம் செய்வது, கங்கை, யமுனை போன்ற நதிகளில் நீராடுவது. திரிவேணி சங்கமத்தில் மூழ்கி எழுவது போன்ற புறச்செயல்களால் கர்மா அகன்று முத்தி அடைய முடியாது. இவையெல்லாம் இறைவனை அடையும் படிக்கட்டுகள்தான். இவற்றின்வழி இவை அனைத்தும் உடலின் உள்ளேதான் உள்ளன என்று புரிந்துகொள்ள வேண்டும் என்ற சூட்சுமத்தை இப்பாடலில் உணர்த்துகின்றார். நம்முடலில் வடக்கு என்பது புருவமையமாகும்.

*ஆக்கினை*

சுழுமுனை, இடகலை, பிங்கலை ஆகிய நாடிகளே புண்ணிய நதிகள். இந்த நாடிகளில் குண்டலினி எனும் வெள்ளம் பாயும்போதுதான் கர்மவினைப் பயன்கள் அகலும். இம்மூன்று நாடிகளும் இணையும் இடம்தான் திரிவேணி சங்கமமாகும். இதில் மூழ்கி எழுந்தவர்களுக்கே முக்திநிலை கிட்டும். கயிலாயம் என்பது ஆக்கினை சக்கரத்தையும், சகஸ்ராச் சக்கரத்தையும் குறிக்கின்றது. கயிலாயத்தில் தவம் செய்வது என்பது ஆக்கினை சக்கரத்தில் தியானம் செய்வதே ஆகும். யோக சூட்சுமங்களைப் புறக்கவர்ச்சி உள்ளவர்கள் எளிதில் பின்பற்ற முடியாது. அதனால்தான் இதுபோல் சூட்சுமமாக எழுதி வைத்தனர்.

காலப்போக்கில் மக்கள் அதன் உண்மையான பொருளை மறந்துவிட்டனர். எனவேதான் புறத்தேடல்களையும், சடங்குகளையும் அதிகப்படுத்தி விட்டனர்.

புண்ணியத் தலங்களும், பரம்பொருளும் நம் உடலின் உள்ளேதான் உள்ளன. அகத்தேடலின் வழிதான் இதை உணர முடியும். இதைப் பின்வரும் பாடல் வலியுறுத்துகின்றது.

காயக் குடிப்பனை காயநல் நாடனை
காயத்தின் உள்ளே கமழ்கின்ற நந்தியை
தேயத்துளே எங்கும் தேடித் திரிவார்கள்
காயத்துள் நின்ற கருத்து அறியாரே (திரு.2069)

உடலில் நிறைந்து இருக்கும் இறைவனை உணராமல் உலகம் முழுவதும் தேடித் திரிபவர்களின் அறியாமையை இப்பாடல் இடித்துரைக்கின்றது.

*தடைக்கற்கள்*

உள்ளத்தின் உள்ளே உறைந்து இருக்கும் இறைவனை உணர்ந்து கொள்ள எவையெல்லாம் தடையாக உள்ளன என்பதைத் திருமூலர் பின்வரும் பாடலில் கூறுகின்றார்.

கன்னி ஒருசிறை கற்றோர் ஒருசிறை
மன்னிய மாதவம் செய்வோர் ஒருசிறை
தன்னியல்பு உன்னி உணர்ந்தோர் ஒருசிறை
என்இது ஈசன் இயல்பு அறியாரே (திரு. 2073)

இப்பாடல், பெண்ணின்மேல் கொள்ளும் மோகம் இறைவனைக் கண்டுணரத் தடையாக உள்ளது என்கின்றது. நிறையப் படித்த கல்வியாளர்களுக்கு அவர்கள் கற்ற கல்வியே இறைவனை உணர மிகப் பெரிய தடையாக அமைந்துவிடுகின்றது. தவவழிகளில் ஈடுபட்டு இறைவனைக் காணமுயற்சிப்பவர்களுக்கு அந்தத் தவமே ஒரு தடையாக அமைந்துவிடுகின்றது. தவத்தால் கிடைக்கும் சக்திகளும் சித்திகளும் அவர்களது ஞானப் பயணத்தைத் திசை திருப்பி விடுகின்றது. இவர்கள் தாமும் கெட்டுப் பிறரையும் கெடுத்து விடுகின்றனர். பாமர மக்கள் இவர்களை நம்பித் தவறான பாதையில் செல்லத் தொடங்கி விடுகின்றனர். ஞானப்பாதையில் பயணத்தை மேற்கொண்டு நான்யார், எனது இயல்பு என்ன என்ற கேள்விகளுக்கு விடைதேடி நான் கடவுளின் அம்சம் என்று உணர்ந்து கொண்டவர்களுக்கு அவர்களது ஞானமே ஒரு தடையாக உள்ளது.

*ஞானத்தடை*

நான் கடவுள் என்பதை உணர்ந்து கொள்வதே ஞானம் ஆகும். இருப்பினும் பரமாத்மா என்பது அண்டம், வெட்டவெளி உள்ளிட்ட உயர் சக்திநிலை. சீவாத்மா (மனித ஆன்மா) என்பது மிகக் குறைந்த சக்தி நிலை. இவை இரண்டுக்கும் சக்தி நிலையில் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடு உள்ளது.

ஓர் ஆன்மா தனது சீவாத்மாவின் சக்திகளை மெல்ல மெல்லத்தான் உயர்த்த வேண்டியுள்ளது. கர்மவினைகள் அனைத்தும் அகல வேண்டியுள்ளது. அதுபோதுதான் யோகத்தால் சக்திநிலை உயருகின்றது. அதன்பின்தான் பரமாத்வாவுடன் இணைய முடிகின்றது. அதுவரையில் ஞானமும் கடவுளை அடைய ஒரு தடையாகவே அமைகின்றது.

*பரம்பொருளை அடையும்வழி*

பெண்மோகம், கல்வி, தவம், ஞானம் ஆகிய அனைத்துமே முக்தி நிலையை அடையத் தடைகளாகவே உள்ளன. அப்படியானால் முக்தியை எப்படி அடைவது. அதற்கும் திருமூலரே வழி கூறுகின்றார்.

பித்தன் மருந்தால் தெளிந்து பிரகிருதி
உய்த்து ஒன்றுமாப்போல் விழியும்தன் கண்ஒளி
அத்தன்மை ஆதல்போல் நந்தி அருள்தரச்
சித்தம் தெளிந்தேன் செயல்ஒழிந் தேனே (திரு.2075)

சித்தம் தெளிந்து செயல் ஒழிந்த நிலையே முக்தியை அடையும் முதல்படி என்பதே இப்பாடலின் கருத்தாகும். இப்படிச் சித்தம் தெளிய நந்தியின் அருள் வேண்டும். பித்தம் பிடிப்பதும், கண்ணில் புரை வளருவதும் இயல்பானவை அல்ல. இவை இரண்டும் நோய்நிலைகள். புத்தி தெளிவாக இருப்பதும், கண்கள் குறையின்றி ஒளியுடன் திகழுவதுமே இயல்பானது, இயற்கையானது. அதுபோன்று செயல் ஒழிந்த நிலையே மனிதனின் இயல்புநிலையாகும். தான்என்ற அகங்காரமும், தனது என்ற சுயநலமும் இல்லாத நிலையில் பெரிதாக எந்தச் செயலிலும் ஈடுபட வேண்டியதில்லை. இதுவே செயல் ஒழிந்த ஆனந்தநிலையாகும். அதாவது உலக மாயைகளில் இருந்து விடுபட வேண்டும்.

ஆனால் உலக இச்சைகளைத் திருப்திப்படுத்த அல்லும்பகலும் செயலாற்றுகின்றோம். ஊன் உறக்கமின்றி உழைக்கின்றோம். ஏன், எதற்கு என்ற தெளிவான இலக்குகள்

இல்லாமல் ஓடிக்கொண்டே இருக்கின்றோம். இதுவே பித்த நிலை; குருடர் நிலை.

இறைநினைப்பால் மட்டுமே இறைஅருளைப் பெறமுடியும். மனத்தில் அவனை நிறுத்தி அவன் நினைவாகவே இருந்தால் வினை ஒழிந்து பேரின்பம் கிட்டும். பஞ்சபூதங்களும் வானில், பூமியில் உள்ள அனைத்தும் பரம்பொருளால் படைக்கப் பெற்றவை. அவனால் உருவாகி அவனால் இயங்குகின்றன (2076).

*உயிரின் தன்மை*

சீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்பது ஒருமைத் தத்துவம் (அத்வைதம்). இரண்டும் வேறானவை என்பது பன்மைத்தத்துவம் (துவைதம்). சீவனும் சிவனும் ஒன்றுதான். உயிரினுள்ளே உள்ள இறைவனை அகக்கண்ணால் காண இயலும். இந்த இறை அனுபவம் உண்டான பின்னரே சீவனும் சிவனும் ஒன்றாகும் பேரின்ப நிலை உருவாகும். உயிரின் தன்மை குறித்துத் திருமந்திரம்,

உயிரது வேறாய் உணர்வு எங்கு மாகும்
உயிரை அறியில் உணர்வு அறிவாகும்
உயிர்அன்று உடலை விழுங்கும் உணர்வை
அயரும் பெரும்பொருள் ஆங்கு அறிவாரே (திரு.2079)

என்கின்றது. உடலை இயக்கும் சக்தியே உயிர். உடல் முழுவதும் ஒவ்வொரு செல்லிலும் சக்தி நிறைந்து நிற்கின்றது. இச்சக்தியே உயிர் ஆகாது. உயிர் வேறு உணர்வு வேறு. உயிர் உடம்பினுள் உறைந்துள்ளது. உணர்வுதான் உடல் முழுவதும் பரவி உள்ளது. உயிரின் சூட்சுமத்தை அறிந்து கொண்டால் மட்டுமே உணர்வின் செயல்பாடுகள் குறித்த அறிவு உருவாகும். அன்றாடம் உடலை இயக்குவது நமது உணர்வுதான். உணர்வுகளின் அடிப்படையில் மட்டுமே வாழ்ந்தால் உயிரை அறிய முடியாது. இறை அருள் இருந்தால் மட்டுமே உயிரை அறிந்து கொள்ள இயலும். உணர்வுகளைப் புரிந்து கொண்டால் புலன்களை அடக்கியாள முடியும். உயிர்தான் இறையின் அம்சம். இறையோடு இணையும்போது பேரானந்த நிலை உருவாகும்.

*ஆன்மவிழிப்பு*

வாழ்க்கையின் மிகப்பெரிய இரகசியத்தை - சூட்சுமத்தைத் திருமந்திரம் பின்வரும் மிகமிக எளிமையான பாடலில் கூறுகின்றது.

தானே தனக்குப் பகைவனும் நட்டானும்
தானே தனக்கு மறுமையும் இம்மையும்

**தானே தான்செய்த வினைப்பயன் துய்ப்பானும்**
**தானே தனக்குத் தலைவனும் ஆமே** (திரு.2228)

ஒரு மனிதனுக்குப் பகைவனும் அவனே; நண்பனும் அவனே! இப்பிறவியிலும், இனிவரும் பிறவிகளிலும் அனுபவிக்கப் போகும் இன்ப துன்பங்களுக்கும் அவன்தான் காரணம். ஆகவே இப்பிறவியிலும் மறுபிறவியிலும் ஒருவன் செய்யும் நல்லவை - தீயவை அனைத்திற்குமான வினைப் பயன்களை அவனேதான் அனுபவித்தாக வேண்டும். அதுபோல் விழிப்படைந்த ஆன்மா தன்னைத்தானே வழிநடத்திக் கொள்ளும். இந்த நிலையில் வழிநடத்தும் தலைவர்கள் என்பது தேவையில்லை.

*ஆகமநூல்*

பலரும் மரபு வழிப்பட்ட விளக்கமாகக் கூறுவது, திருமந்திரம் ஆகமங்களின் விளக்கமாக எழுந்த நூல் என்பதும், எனவே ஆகமங்கள் கூறுவதுபோல், சரியை, கிரியை, யோகம், ஞானங்களையே இந்நூலும் விளக்குகின்றது. ஒன்பது தந்திரங்களுக்கும் ஒன்பது ஆகமங்களின் பெயர்களைக் கொடுத்து வழங்கும் வழக்கம் குறிப்பிடத்தக்கது. ஆகமச் சிறப்புக் கூறும் பகுதியில் ஒன்பது ஆகமங்களின் பெயர்களையும் திருமூலர் குறிப்பிடுகின்றார்.

சைவர்கள் தங்கள் பிரமாண நூற்களாக இருபத்தெட்டு ஆகமங்களைக் கூறுவர். இவ்விருபத்து எட்டனையும் எல்லோரும் ஒன்றுபோல் பெயர் குறிப்பிடுவதில்லை. மரபாகக் கூறிவரும் இருபத்தெட்டு ஆகமங்களில் சிலவற்றை, இருபத்தெட்டு ஆகமங்களைக் குறிப்பிடும் பண்டைய கல்வெட்டில் காணமுடியவில்லை. மேலும் அறிஞர்கள் எழுதுவதைக் கொண்டு பார்த்தால், ஆகமங்கள் கோட்பாடு அளவில், சடங்குகள் அளவில் வேறுபாடுடையன என்றே தோன்றுகின்றது. ஆகமங்களில் இகல் பற்றியும் பேசுவர். தத்துவ அளவில் வேறுபட்டு நிற்போரும், இவ்விருபத்தெட்டு ஆகமங்களையும் பிரமாணமாகக் கூறுவர். ஒன்பது தந்திரங்களும் ஒன்பது ஆகமங்களின் கருத்துகளைப் பேசுவன எனக் கூறிவரும் வழக்கும் திருமந்திரம் அடிப்படையில் ஒரே கோட்பாட்டை விளக்குவதன்று. ஆகமங்கள் சரியை, கிரியை, யோக ஞானங்களைப் பேசுவன. ஆகமப் பொருளைக் கூறுவதாகக் கொண்டு, சரியை, கிரியை, யோக, ஞானங்களைத் திருமூலர் கூறுகின்றார். எல்லா ஆகமங்களிலும் சரியை, கிரியை, யோகம், ஞானங்களும் ஒன்றுபோல் கூறப்படவில்லை. இப்பாகுபாடு ஐந்தாம் தந்திரத்தில் குறிப்பிடப்படுகின்றது.

***வாழ்க்கைத் தத்துவம்***

உலக மக்களுக்குத் திருமூலர் அருளிய திருமந்திரம் வாழும் வழிவகையைக் காட்டித்தரும் ஓர் அருமையான நூலாகும். பக்குவப்பட்ட மனிதனாக, பண்பட்ட மனிதனாக வாழ்தல் என்பது அனைவருக்கும் எளிதான செயல் அன்று. எனவே இந்நிலையை அடைவதற்குரிய படிநிலைகளைத் திருமூலர் தான்உணர்ந்து மக்களுக்கும் எடுத்துக் கொடுத்துள்ளார்.

தோத்திரம் அன்பையும் சாத்திரம் அறிவையும் அடிப்படையாகக் கொண்டுள்ளன. திருமந்திரமோ இவை இரண்டையுமே அடித்தளமாகக் கொண்டது. இத்திருமந்திரம் வாழ்க்கைக்குரிய தத்துவத்தையும் கூறுகின்றது. சிவனை வெளியில் தேடிச் செல்ல வேண்டாம். உடலைக் காக்கும் உபாயம் அறிவோம். சிவனை நமக்குள் காண்போம் என வாழ்க்கைக்குரிய தத்துவங்கள் பலவற்றைக் கூறுகின்றது.

உருவத்தால் மனிதனாக இருப்பதால் மட்டும், மனிதனாகப் பிறந்ததற்குரிய பயன்கிட்டாது. மனிதன் மனத்தினைக் கட்டுப்படுத்திப் புலனடக்கம் செய்து உலகப் பற்றை நீக்கி இறைப்பற்றைப் பற்றுக் கோடாகக் கொண்டு உய்வடைய வேண்டும் என்பது திருமூலர் கொள்கை.

**முடிவுரை**

முதல் நான்கு தந்திரங்களும் சிவஞானத்தைப் பெறுவதற்கு விரும்பியவர்கள், தம்மை அகமும் புறமும் தகுதி உடையவர்களாக்கிக் கொள்வதற்குரிய சாதனங்களைக் கூறுகின்றது. நடுவிலுள்ள ஐந்தாம் தந்திரம் சைவசித்தாந்தச் சமயத் தத்துவங்களைக் கூறுகின்றது. பின்னுள்ள நான்கு தந்திரங்கள் ஞானம் பெறும் நிலையில், உணர்ந்து பெறுவதற்குரிய பயன்களை விரித்துரைக்கும் முறையில் அமைந்துள்ளன. சிவஞானத்தைப் பெறுவதற்கான சாதனங்கள், சரியை, கிரியை, யோக ஞானங்கள், சமயத்தத்துவங்கள் மந்திரங்களின் படிநிலை வளர்ச்சி போன்றவை உணர்த்தும் மெய்ப்பொருள்கள் இப்பகுதியில் ஆய்ந்துரைக்கப் பெற்றது.

> விட்டகுறையும் விதியும் நமக்கு உண்டானால்
> எட்டும் இரண்டும் வந்திங்கெய்தாதோ - முட்ட
> விதியுள்ளோ ராமாகில் விந்து வசமாம்
> மதியுள்ளார்க்கு உண்டே மனம்

என்ற கருவூராரின் கோட்பாட்டிலும் திருமந்திரத்தின் தாக்கத்தையே காணமுடிகின்றது.

# 5. திருமூலரின் கல்வியியல் கோட்பாடு

## முன்னுரை

கற்றல் என்பது நாளும் நடைபெறும் ஒரு தொழில். பிறப்பு முதல் இறப்புவரை இது இடைவிடாது நடைபெறுகின்றது. கற்றல் என்பது ஏட்டுக்கல்வி மட்டுமன்று. கட்செவிபுலன்வழி கற்றல் தொழில் நாளும் நடைபெறுகின்றது. கற்றுக் கொள்பவன் மாணவன். கற்றுத் தருபவர் ஆசிரியர் அல்லது குரு. கல்லாதவர் கயவருக்குச் சமமானவர். கற்றவரே உயர்வானவர். கல்லாதவரைக் காணுதல் இழிவாகும். கற்றவர் பேரின்பம் எய்துவர். திருமந்திரத்திலுள்ள அனைத்துச் செய்திகளும் கற்றல், கற்பித்தல் என்ற கல்வியியல் கோட்பாடாகவே திகழ்கின்றது. எனவே அது பற்றிய விளக்கமாக இப்பகுதி அமைகின்றது.

## கல்வி

திருமூலர் காட்டும் கல்வி சமயக் கல்வியாகிய ஆன்மிகக் கல்வியாகும். கேடில் விழுச்செல்வம் கல்வி என்று கூறும் வள்ளுவர்,

**கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்**

**நற்றாள் தொழாஅர் எனின்**

என்று கூறிக் கல்வியின் பயன் கடவுளைத் தொழுதல் என வலியுறுத்துகின்றார். இறைவன் நம்மைப் படைத்ததன் காரணம் தமிழை நன்றாக வளர்ப்பதற்குத்தான். கல்விக்குள் பெரியகல்வி கடவுளைப் பற்றிய கல்வியே. இதைக் கற்றுத் தேற வேண்டும். கற்றலினால் தான்பெற்ற இன்பம் வையகமும் பெறும் என்பதே தத்துவமாம்.

காலம் பொன்போன்றது; கடமை கண்போன்றது. கற்றல் உயிர் போன்றது. கற்றல் தொழிலை நாளை என்று சொல்லாமல் இன்றே இனிதே நன்றே எனக் கற்றல் வேண்டும். முதல் முப்பது ஆண்டிற்குள் கல்வி ஒழுக்க உணர்வு பெறுதல் வேண்டும். கல்வி என்பது ஒருவனிடம் உள்ள அறியாமையை நீக்கக் கூடியது.

*கல்வியின் சிறப்பு*

ஏடன்று கல்வி; சிலர் எழுதும் பேசும் இயலன்று கல்வி. பலருக்கு எட்டாதென்னும் வீடன்று கல்வி; ஒரு தேர்வு தந்த விளைவன்று கல்வி; அது வளர்ச்சி வாயில், செல்வத்துள் சிறந்தது கல்விச் செல்வமே ஆகும். தொட்டனைத் தூறும் மணற்கேணிபோல் தோண்டத் தோண்டப் பெருக்கெடுக்கும் வல்லமை படைத்தது கல்வி ஒன்றுதான். தெரியாமை, புரியாமை, அறியாமை ஆகியவற்றை விரட்டும் தன்மை படைத்தது கல்வி ஒன்றுதான். இருள் நீக்கி ஒளி பெறவும், மறைந்து கிடப்பதைத் தெரிந்து தெளியவும் கல்வி உதவுகின்றது.

**வேதாத்திரி மகரிசியின் கல்விக் கோட்பாடு**

எத்தகைய கல்வி ஒழுக்கத்தை உருவாக்குமோ, மனவலிமையை வளர்க்கச் செய்யுமோ, விரிந்த அறிவைத் தருமோ, ஒருவனைத் தன்னுடைய சுய வலிமையைக் கொண்டு நிற்கச் செய்யுமோ அத்தகைய கல்விதான் நமக்குத் தேவை என்கின்றார் விவேகானந்தர்.

எந்தக் கல்வி மக்களின் வாழ்வை இனிதாக்கி, உள்ளத்தில் எழும் கேள்விக்கெல்லாம் அறிவு விடை கண்டிடுமோ அந்தக் கல்வியே சிறந்த கல்வியாகும் என்கின்றார் வேதாத்திரி மகரிசி.

கற்றல் என்பது இயற்கையோடு இயைந்து கற்றலாகும். இது மருத்துவநெறி கற்றல், இறை உணர்வு பேறு அடையக் கற்றல் என விரியும். கற்றவர் நெஞ்சத்தில்தான் கடவுளும் கலப்பர். கற்றலே காலத்தை வெல்லும் பெரும் ஆயுதமாம்.

உலகம் அறிவியலின் உச்சம் காண விழைகின்றது. அதில் மக்கள் அமைதியும் நிறைவும் பெற்று வாழ இன்றைய இளைய தலைமுறையைத் தயார்படுத்த வேண்டும். அவர்களுக்குக் கொடுக்கப்பெறும் கல்வி எதிர்காலச் சூழ்நிலையை எதிர்கொள்ளும் ஆற்றல் பெற்றதாக அமைய வேண்டும். எழுத்தறிவுடன் உடல்நலத்தையும் உயர்ந்த மனவளத்தையும் பெறுகின்ற கல்வியாக இருக்க வேண்டும். மனித வாழ்வில் நட்பு நலம் காத்துவாழ இளம்பருவத்திலேயே ஒழுக்கம், கடமை, ஈகை என்ற அறநெறியைப் பெற்று வாழும் கல்வி வேண்டும் என்கின்றார் வேதாத்திரி மகரிசி; இதற்கு இறை உணர்வும், இறைநிலையை உணரப் பிரமஞானத்தை முதலில் கற்றலும் வேண்டும் என்கின்றார். எல்லாம் வல்ல ஒருங்கிணைப்புச் சக்தியைப் பெற மனவளக்கலைப் பயிற்சியை மாணவப் பருவத்திலேயே கற்றுக் கொடுக்க வேண்டும் என்கின்றார்.

மனவளக்கலையில் உயிரை மேலேஎழுப்பி அதன்மீது மனம் வைத்துப் பழகுவதுதான் குண்டலினி யோகம்; உயிர்ச் சக்தியின் மேலே மனத்தை வைத்து உயிரில் அறிவை ஒடுக்கும் பயிற்சிதான் மனவளக்கலைப் பயிற்சி ஆகும். இதை உணரும்போது உயிர் மையத்தில் அறிவாக இருப்பதுதான் படர்க்கையில் மனமாக இருக்கின்றது என்ற உண்மையை உணர முடியும். இப்படி உணரும் அறிவுதான் இறைநிலையாகும்.

வாழப் பிறந்த மனிதன் வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களை உற்பத்தி செய்யும் திறமைகளை இளம் வயதிலேயே, கல்வி கற்கும் காலத்திலேயே தெரிந்து கொள்ள வேண்டும். தெரியாவிட்டால் உழைக்கும் திறனற்றவர்களாக ஆகிவிடுவர். எனவே கல்வி முறையிலேயே வாழ்க்கைக்குத் தேவையான பொருள் உற்பத்தி முறையைக் கற்க வசதிகள் சமுதாயத்தில் அமைய வேண்டும். மெய்ஞ்ஞானமும் அறிவியலும் ஒருங்கிணைந்த கல்விமுறை இக்காலத்தில் இன்றியமையாததாகும். இக்கல்வியைக் கற்க ஆவன செய்யப்பட வேண்டும்.

இம்முறையில் கற்பித்தால்தான் மக்கள் மனித வாழ்வின் தனித்தன்மையையும் மதிப்பையும் அறிந்து கொள்வார்கள். அறிவியல் முறையிலான இயற்கைத் தத்துவக் கல்வியும் மனிதநேயப் பண்புகளையும் உடல்நலத்தையும் மேம்படுத்துகின்ற ஒழுக்கப் பழக்கக் கல்வியும் இன்றைய தலைமுறையினருக்கு அவசிய அவசரத் தேவை என்கின்றார் மகரிசி; இக்கல்வி கிடைத்தால் எதிர்காலத்தில் சாதிச் சமயப் பிளவுகளோ பொருளாதார ஏற்றத்தாழ்வுகளோ இனவேறுபாடுகளோ அவர்களிடம் வளராது என்கின்றார்.

## தாய்மொழி

தமிழ்நாடு அதைச் சுற்றியுள்ள 17 நாடுகள் ஆக 18 நாடுகளில் அவரவர் தாய்மொழிகளாக 18 மொழிகள் இருந்துள்ளன.

பண்டித ராவார் பதினெட்டு பாடையுங்
கண்டவர் கூறுங் கருத்தறிவா ரெங்க
பண்டிதர் தங்கள் பதினெட்டு பாடையும்
அண்ட முதலான் அறஞ்சொன்ன வாறே (திரு.59)

தமிழ் மண்டலம் ஐந்துத் தாவிய ஞானம் என்பதன்வழி திருமூலர் காலத்தில் ஐந்து மண்டலங்கள் கல்வி கற்கும் இடங்களாக இதில் அனைத்திலும் இருந்துள்ளன. அவை சேர, பாண்டி, கொங்கு, சோழ, தொண்டை மண்டலங்களாகும். பதினெட்டு மொழிகளிலும் சிவபெருமான் சொன்ன அறமே விளங்கி வருகின்றது

குறிப்பு அறிந்தேன் உடல்உயிர் அதுகூடிச்
செறிப்பு அறிந்தேன் மிகுதேவர் பிரானை
மறிப்பு அறியாது வந்துள்ளம் புகுந்தான்
கறிப்பு அறியாமிகும் கல்வி கற்றேனே (திரு.290)

என்ற இப்பாடலில் உடல் தோன்றிய காரணம் அறிந்ததால் இறைவன் என்உள்ளம் புகுந்தான். அதனால் உவப்பிலா அனுபவக்கல்வி பெற்றேன் என்கின்றார். இத்தகைய ஞானக்கண் பெற்றவர் ஊனக்கண் கொண்டவர்களுக்கு அந்தச் சிவ அனுபவத்தைச் சொல்வதே கல்வியாகும். சிந்தித்தல், தெளிதல், துதித்தல் ஆகியவற்றைச் செய்யும்போது பாவங்கள் அழியும் (292) என்கின்றார் திருமூலர்.

*ஞானாசிரியர்*

திருமூலர் மேலான கல்வியியல் கோட்பாடுகளைப் பரப்பிய ஞானாசிரியர் ஆவார். அவரது ஏழு மாணாக்கரும் சமயக்கல்வியை, பொதுமைக் கல்வியைப் பரப்பியவராவர். திருமூலர் வரலாறு கல்வியியல் கொள்கைக்கு அரணாக விளங்குகின்றது. ஒருமைக் கண் தான்கற்ற கல்வி எழுமையும் ஏமாப்பு உடைத்து என்பதற்கேற்ப கற்ற கல்வியானது ஏழு பிறப்புகள் தோறும் விரியும், வளரும், சிறக்கும் எனத் திருமூலர் கூறுகின்றார். இவர் கூறும் கூடுவிட்டுக் கூடு பாயும் அதாவது உருமாறும் கல்வியின் நெறி வியப்பிற்குரியது. திருமூலருக்குக் கல்வி கற்பித்தவன் நந்தியே என்பதை,

நந்தி அருளாலே நாதனாம்பேர் பெற்றோம்

சிவபெருமானின் அருட்கடாட்சத்தால் நாதன் என்கின்ற குருவுக்குரிய தகுதியை அடைந்தேன். அதன்மூலமே மூலன் உடலில் புகுந்தேன். இங்கே மூலன் என்பது மூலாதாரச் சக்கரம் எனப் பொருள்படுகின்றது. மூலாதாரத்திற்கு உரிய கடவுளான உருத்திரனை நாடி அருளைப் பெற்றேன். அவரருளாள் மேல்நிலை அடைந்தேன். குருவெனப் பேறு பெற்றேன் என்கின்றார். குரு கல்விக்கண்ணைத் திறப்பவர். அதன்மூலமே அறிவு பெருகி ஞானநிலை அடைய இயலும். அவ்வாறு நல்லகுரு கிடைக்காத நிலையை, திருமூலர்,

குருடர்க்குக் கோல்காட்டி (திரு.2048)

எனும் பாடலில் சிவஞானம் போதிக்கும் குரு அகக்கண் உடையவராய் ஐம்புலன்களை வென்றவராய் நெறியுடையவராய்

திகழ வேண்டும் என்றும் காமசெயம் பெறாத அசற்குரு (அ+சற்குரு) உபதேசத்தால் சீடரும் கெடுவர் என்பதைத் தெளிவாக்குகின்றார்.

திருமந்திரத்தில், எழுத்தறிவுக் கல்வி, கல்வியியல் மொழி, தாவரவியல், கால்நடைக் கல்வி, மருந்து கல்வி பொறியியல் கல்வி, மானுடவியல் கல்வி என்பவை கூறப்பெற்றுள்ளன.

## திருமூலரின் கல்விக் கோட்பாடு

குருவழிபாடு கற்றலின் வித்து. குருவின் அருளால் உயிர் நெடுநாள் வாழும். குரு பக்தி என்பது ஒழுக்கம், அடக்கம், பொய் கூறாமை, பணிவு, இன்சொல் இவையே ஞானக் குருவால் எய்தும் பயனும் பண்பும் ஆகும். ஞானத்தின் சிறப்பு என்பது கற்றல்வழி நடப்பது. கற்றலில் அறிவியல், ஆட்சியல், மருந்தியல், வானியல், சோதிடவியல், மனையியல் எனப்பலவகை உண்டு. இவை அனைத்திலும் தேறுதலே திருமூலரின் அருள் நோக்காகின்றது. இதுவே முத்திக்கும் பக்திக்கும் வழிகாட்டும் தூய்மை நெறிகளாகும்.

கற்றலின்பால் அவரின் மேலான நோக்கம், சிந்தனை எழுச்சி இவற்றின் வெளிப்பாடே கற்றல் கோட்பாடுகள். கருவறையில் தொடங்கிய கல்வி பலநிலைகளில் வளர்ச்சி பெறுகின்றது. உடல், உள்ளம், மனவெழுச்சி இவற்றின் உயிரோட்டத்தை வெளிக்கொணரும் குருதியோட்டமே, சுவாச மெய்ப்பாடே கல்வியியல் என்பதைத் திருமந்திரம் உணர்த்தி நிற்கின்றது.

கல்விநெறி உலகின் பொதுமை நெறிக்கும், அறிவியல் நெறிக்கும் தேவையான ஞானவிளக்கு. முதல் தந்திரத்தில் கல்வி, கேட்டல், கல்லாமை எனும் மூன்று தலைப்புகளில் முழுமையாகக் கல்விநெறிக் கோட்பாடுகள் கூறப்பட்டு உள்ளன. கற்றலின் விழுமிய கொள்கையையும், அதன் உட்கருவையும் உலகியல் நடைமுறைகளையும் திருமூலர் தெளிவாகக் கூறியுள்ளார். இரண்டாம் தந்திரத்தில் நீதியை நிலைநிறுத்தும் புராணங்கள் வாயிலாகக் கல்விக் கோட்பாடுகளைச் சொல்லியுள்ளார். மூன்றாம் தந்திரத்தில் நிறைவுநிலைக்கு, முக்தி நிலைக்குக் கல்வியானது எப்படி ஊன்றுகோலாக அமைகின்றது என விளக்குகின்றார். மேலுமிது கல்வியியல் முறையின் வெளிப்பாடான யோகம் பற்றியும் கூறுகின்றது. கற்றலின்வழி யோகம் கற்றவன் உயர்ந்தவனாகவும், சிறந்தவனாகவும் கருதப்படுவான்.

## கல்வியியல் கோட்பாடுகள்

திருமூலரின் முதல் மந்திரத்தில் வரும் கடவுள் வாழ்த்து, அன்புடைமை, கல்லாமை, கல்வி, கள்ளுண்ணாமை, கொல்லாமை,

நடுவுநிலைமை, புலால் மறுத்தல், பிறர்மனை விழையாமை, வான்சிறப்பு, பொறையுடைமை, பெரியாரைத் துணைக்கோடல், தவம், துறவு, கூடாவொழுக்கம், வாய்மை, புகழ், நல்குரவு, அவா அறுத்தல், புறங்கூறாமை, வாய்மை, நிலையாமை எனும் தலைப்புகள் கல்வியில் கோட்பாடுகளாக உள்ளன.

*கடவுள்*

கல்விக்குள் பெரிய கல்வி கடவுளைப் பற்றிய கல்வியே. இதைக் கற்றுத் தேறுங்கள் என்பதே திருமந்திரம் தரும் கோட்பாடு.

அறிவுடையார் நெஞ்சோடு ஆதிபிரானும்
கமலமலர் உறைவான் அடி
போது உகந்தோறும் புரிசடையான் அடி
தன்னை ஒப்பார் ஒன்றும் இல்லாத் தலைமகன்
ஒப்பிலி வள்ளலை
அறஆழி அந்தணன்
ஆதி பராபரன்
கொடையான் குணம் எண்குணம் ஆகும்
பொறிவாயில் ஒழித்து எங்குமா தானான போதன்
பொருள் அதுவாய் நின்ற புண்ணியன்
ஆரும் அறியார் அகாரம் அவன்

என்ற அடிகள் இறைவன், அறிவுடைய ஞானியரது உள்ளத்தில் என்றும் எழுந்தருளும் தன்மையுள்ளவர் என்பதை உணர்த்துகின்றது.

கல்வியியல் பொருட்கருத்து

கல்வியில் சிறந்த ஆணவமலம் நீங்கிய சான்றோரே கல்விக் கண்ணைப் பெற்றுக் கடவுளைக் காணுவர். மற்றவர் கண்ணிருந்தும் அந்தகராகவே கருதப்படுவர்.

ஒருமையுள் ஆமைபோல் உள்ஐந்து அடக்கி
ஆமை அகத்தினில் அஞ்சும் அடங்கிவிடும்
கூற்றன் வருங்கால் குதித்தலும் ஆமே
காக்கை கரைந்து உண்ணும்
பற்றது பற்றின் பரமனைப் பற்றுமின்
காமம் வெகுளி மயக்கம் இவைகடிந்து
அந்தண்மை பூண்ட அருமறை
கெத்துச் சிந்தைசெய் அந்தணர்
பார்த்திருந்து உண்மின்
காமமும் கள்ளும் கலதிகட்கே ஆகும்
வாணாள் அடைக்கும் வழிஅது ஆமே

**தத்துவ ஞானம் தலைப்பட்ட வர்க்கே**
**அடக்க அறிவெனும் தோட்டியை வைத்தேன்**
**ஆவையும் காவலன் காப்பவன்**
**அமுதூறும் மாமழை**

என்ற அடிகளைக் கொண்ட பாடல்களில் கல்வியின் சிறப்பையும் அதனால் வரும் அடக்கத்தையும் அமரராகின்ற தன்மையையும் திருமூலர் எடுத்துரைக்கின்றார்.

**தமிழின் பெருமை**

தன்னைத் தமிழ் கற்கும் மாணாக்கனாக,

**என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ்செய் யுமாறே** (திரு.81)

என்ற அடிகளில் காட்டிக் கொள்கின்றார். தான்தமிழைச் செய்வதற்கென்றே இறைவனால் படைக்கப்பட்டு உள்ளேன் என்று கூறுவதன்வழி இறைவனுக்கும் தமிழுக்குமுள்ள தொடர்பையும் இறைவன் தமிழ்பால் கொண்டிருந்த மாறாதக் காதலையும் திருமந்திரத்தின்மூலம் திருமூலர் வெளிப்படுத்தியுள்ளார்.

**திருமந்திரத்தின் தனிச்சிறப்பு**

முதல் நான்கு தந்திரங்கள் முறையே அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கினைப் பற்றிக் கூறுகின்றன. இவை வேதமாகக் கொள்ளப்படுகின்றன. அடுத்த ஐந்து தந்திரங்கள் முறையே பேறு, பேற்றுவழி, வழிபாடு, வழிபாட்டுறுதி, வாழ்வு எனும் ஐந்தினையும் கூறுகின்றன. இவற்றின்வழி ஐந்தெழுத்தின் விரிவாகப் பஞ்சாக்கர மகிமையையும் அதன் ஆற்றலையும் அறியமுடிகின்றது.

**கல்வியியல் முறை**

முதல் தந்திரம் 166 பாட்டுகளை உடையது; உபதேசம் முதல் கள்ளுண்ணாமை ஈறாகப் பதினேழு பிரிவுகளைக் கொண்டது. இது அறப்பொருளின் இயல்புநெறி கொண்டது. உலகியல் நடைமுறைகளை அறியத் துணைபுரிவது கல்வியாகும். கல்விப் பயனே கேட்டமைதல் ஆகும்.

**முதல் தந்திரம் - 23 தலைப்பு:**

முதல் தந்திரம் ஒழுக்க நெறியையும் அறநெறியையும், மனத்தூய்மை நெறியையும் தெளிவாக விளக்குகின்றது. இறைவன் ஒருவனே. இருவினை ஒப்பு நிகழும்போது அருட்குருவாய்த்

தோன்றுவான். திருவடித் தீக்கைசெய்து, மாணாக்கன் நெஞ்சில் புகுந்து அன்பை வளர்ப்பான். இன்ப அறிவாகிய அகக்கண்ணைத் திறப்பான். அறிவை மறைத்திருக்கும் மும்மலத்தை நீக்குவான். அறிவியல் அருளைத் தருவான். இப்படிக் கூறுவதன்மூலம் திருவடிப் பெருமை, சற்குருவை வழிபடுவதால் ஞானம் (அறிவு) நிலைபெறும் என்பனவற்றைத் திருமூலர் உணர்த்துகின்றார் (10:141).

**கல்வியின் பயன்**

கல்வி கற்றேனே, ஆசான் செப்பக் கற்றேனே கல்வியினை என்கின்றார் திருமூலர். கல்வியின் மனநோக்கம் குறிப்பறிந்து கற்றலே. குறிப்பறிய மிகுங் கல்வி என்பதில் இவர் கற்பவையே கற்றல் வேண்டும் என்பதைப் புரிய வைக்கின்றார். கற்று உணர்ந்ததை ஆய்ந்து நோக்கினால் திறமை மிகுந்த மேவிய கல்வி அறிவைப் பெறமுடியும். அறிவதற்காகக் கற்றலே சிறப்பு. கல்வியின் சிறப்பானது அதைச் சார்ந்தவருக்கே எய்தும்.

நம்மை நாம் உணரும் கல்வியையும், தன்தலைவனாகிய இறைவனை அறியும் நூல்களையும் படிக்க வேண்டும். படித்தபின் செயல் வடிவங்களை மாறாது கடைப்பிடிக்க வேண்டும். இறைவன்பால் அன்புகொண்டு நாளும் அவற்றை ஓத வேண்டும். இதன்வழி படைக்கவும், உருவாக்கவும் இயலும்.

எனவே கல்வியியலின் உண்மைப் பயன் கடந்தவனாகிய இறையைத் தொழுதலே.

சொற்குன்றல் இன்றித் தொழுமின்
திருவடிக் கல்வியால் வினைநீங்கப் பெற்றார்
அத்திரு வடியைத் தொழுவா ராயின்
அதனைப் பெற்று இன்புறுவ ராகலின்
தொழுதபின் மணி விளக்காம்
வழிபடல் கல்வியே
திருவடிக் கல்வியே கல்வி
உணர்வரிய மெய்ஞ்ஞானம்

எனக் கல்விக்கொள்கையின் சிறப்பும், அதனால் விளைந்த நற்பலனாகி வினைநீங்கப் பெறுதலும், திருவடியை எண்ணி வாழ்தலால் வரும் பேரின்பமும் மெஞ்ஞான உணர்வும் கல்வியால் ஏற்படுகின்ற சிறப்பாகும் என்று திருமூலர் கூறுகின்றார்.

**கல்வியில் குற்றம்**

கல்வி கற்பதன் நோக்கம் செப்பமுற முயற்சிப்பதாகும். முயலாமல் கற்பது பயனற்ற வெற்றிடமாகும். முயற்சியுடன் நூல்

ஏணி ஏறினால் கோட்டையின் உச்சியை எளிதில் அடையலாம். வேறுவழியில் முயன்றால் பயன் அடையமாட்டார்.

நுண்ணறிவால் ஞானநூல்களைக் கற்று, ஒழுக்கமுடன் இருப்போர் உடலும் உயிரும் மகிழும்படி ஈட்டிய வருவாய்ப் பயனை அடைந்து மகிழ்வர். மயக்குறு நூல்களைப் படித்து, அதன்படி வாழ்வோர் சிற்றின்பச் சிறுபயன்களையே அடைவர்.

கையில் கோலுடன் உணவுப் பொருளைக் காத்தால் பறவைகள் அருகே வர அஞ்சிப் பறக்கும். அதுபோல் மெய்யறிவு, நுண்ணறிவு, ஞானவெளி உடையவரை ஐம்புலன்களால் துன்புறுத்த முடியாது. எனவே உண்மையை ஓம்பாத மக்கள் அறியாமையுள் மூழ்கி மயக்கம் அடைகின்றனர்.

எனவே நுண்ணறிவு, மெய்ஞானக் கல்வியே உலகில் வாழ ஏணியாக அமையும். ஆயும் மெய்நூற் கல்வி இன்றியமையாதது ஆகும்.

**கற்பிப்போன்**

கற்றலின் உண்மையைக் கற்பிப்பவன் உணர்ந்து உரைத்த மொழியே கல்வியாகும். கற்றல் என்பதன் பொருளே துணைநிற்பது என்பதாகும். நல்ஆசிரியர் கூறும் உறுதியான மொழிகளே வாழ்வியலுக்கு உறுதுணையாய் நிற்கும். அம்மொழியும், மொழியோடு இணைந்துவரும் சொற்களும் மலரோடு கூடிய நறுமணம்போலத் தூய்மைமிகு கல்வியோடு சேர்ந்து வரும் வாய்மையுரு கல்வியாகும். வளரும் வாழும் உயிருக்குத் துணையாய் இருப்பது கல்வியே. திருவருள் பெறுவது கல்வியால்தான். கற்றல் தொழிலுக்குக் கல்வி பலவகையிலும் வழித்துணையாக இருக்கும்.

**மெய்ப்பொருள் கல்வி**

> பற்றது பற்றிற்....
> பேரின்பம உறுநின் றாரே (திரு.298)

என்ற அடிகளையுடைய பாடல் சிவனின் அருளையும் அதனால் பெறப்படும் கல்வித் தத்துவத்தையும் விளக்குகின்றது. சிவனைப் பற்றுதலே நல்லதொரு துணையாக அமையும். எந்தவொரு பொருளாக இருந்தாலும் அதனை வல்லாரிடத்தே கற்றலும் கேட்டலும் செயற்பாலது.

**கற்றலின் பொருட்பயன்**

உண்மையான கற்கும் கல்வியும் அறிவுடைமையும் ஒருவனது உள்ளத்து இருத்தல் வேண்டும். அது பிழைபட்டு, பொய்மையில்

விழாது இருப்பின் சிவனது கல்வித் தத்துவம் அவனுக்குத் தடையின்றிக் காலம் கடந்த பொருளாய் வெளிப்பட்டு நிற்கும். எனவே மயக்க நூலைக் கற்றலும், மயக்க உரைகளைக் கேட்டலும் கூடாது.

உடம்பும் உயிரும் ஒன்றுக்கு ஒன்று உறுதுணையாய் உள்ளன. இதற்கு உதவுவதே உலகியல் பற்றிய கேள்வி.

யான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைபொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படும் தானே (திரு.85)

என்ற பாடல் இன்பம் பெறுவதற்குக் கல்வியும் கேட்டலும் மிகச் சிறந்த கல்விக்கான நுழைவாயில்கள் என உணர்த்துகின்றது. இதில் இன்பம் என்பது உயிர்கள் பெறும் உணர்வில் தோன்றும் கல்வி கருத்துகளே ஆகும். அண்டத்துள் நீக்கமற நிறைந்திருக்கும் பரம்பொருள் இவ்வூன் உடம்பாகிய உடலிலும், மனத்திலும் உயிரிலும் பற்றி நிற்கின்றது. இவ்வூன் பற்றி நிறை இறைவனே, வேத விழுப்பொருளான மறையோனைக் கற்றல், கேட்டல் மூலமாகத்தான் அறிய முடியும். குருவின் திருவடியின்கண் நிற்றலும் பற்றலுமே இதற்கு வழிவகுக்கும்..

நாட்டை ஆளும் அரசனும் கற்றவனாக இருத்தல் வேண்டும். மன்னர் நெறிவழுவாமல், கல்வி உடையவனாய், அறத்துடன் முறைசெய்து, அனைவரையும் காத்தல் வேண்டும். கல்லா அரசனால் மக்களுக்கு நன்மை உண்டாகாது.

கல்லா அரசனிற் காலன் மிகநல்லன் (திரு.238)

என்று மக்களை ஆளும்முறை தவறிய அரசனைவிட எமனே உயர்ந்தவன். அந்நாடே நரகத்தில் வீழும் என உணர்த்துகின்றார்.

**அருள் நூற்கல்வியின் அவசியம்**

கடலுடை யான் மலை .....
.... நெஞ்சத் தில்லி விழுந்தேனே (திரு.299)

என்ற பாடல் சிவபெருமான் உலகெங்கும் நிறைந்து உள்ளான். இருப்பினும் அவனைக் கண்டு அடைய, அவன் அருளைப் பெற நூற்கல்வி இன்றியமையாதது எனக் கூறுகின்றது.

**கற்றலின் தத்துவமும் விளைவும்**

முக்தி என்பது அறம், பொருள், இன்பம் எனும் உலகியல் பொருள்களை விளக்குவன. முறை என்னும் தத்துவக் கல்விக்குக்

கன்மம், உபாசனம், ஞானம், மெய்நெறிக் கொள்கை போன்றவற்றைக் கற்று வல்லவரிடம் கேட்டலே சிறப்பும் உயர்வும் உடைய கல்வியாகும். கற்றதை, அறிந்ததைச் சிந்தனை செய்து தெளிதல் வேண்டும். அதுவே கல்வியின் இன்றியமையாமை ஆகும்.

**கல்லாமையின் ஏற்படும் இழப்பும், கற்றவர் நிலையும்**

கல்லாதவரும் கருத்தறி காட்சியை
..... இன்பங் காணுகி லாரே (திரு.310)

உலகியல் கல்வியைக் கல்லாத பேர்களுக்கும், குருவிடம் சென்று முறையாய் ஞானக்கல்வியைப் பயிலாதவருக்கும் இறைவன் தோன்றாத் துணையாக நின்று கருத்தறிக் காட்சியாகத் தெய்வக்காட்சியைக் காண்பித்து அருளுவான். இதற்கு முன்பிறவியில் செய்த நல்வினையே காரணமாகும். பல ஞானநூல்களைக் கற்றும், கல்வி கேள்விகளால் சிறந்து விளங்கியும் இருந்தும் இறைக்காட்சியைக் காணஇயலாது. ஆதலால் கல்வி கற்றுவிட்டோம் என்ற செருக்கிலும் இறைவனை அணுக இயலாது கற்றறிந்தோரும் உண்மை அனுபவம் இல்லாதவரும் கல்லாதவரே என்று திருமந்திரம் விளக்குகின்றது.

கல்லாதார் ஒழுகும் உண்மை நெறியையும், பேரின்பத்தை அடையும் முறையையும் அறிய மாட்டார்கள். எனவே கற்றவரே வல்லவராதல் இயலும். வாழ்வு நெறிக்கும் வழிபாட்டு நெறிக்கும் கற்றல் தேவையாகும். கல்லாதவர் சிவனை அடையும் நெறிமுறைகளை அறிந்து கொள்ள முடியாது. சிவன் உயிர்கட்கு முதன்மையானவன். ஆனால் இவனைக் கல்லாதவர் அவர்தம் நெஞ்சில் காணமுடியாது. இவர்கள் வினைசெய்தல், துன்பப்படல், இறப்புக்கு அஞ்சல் என்னும் குற்றங்களை உடையவர்களாக இருப்பர்.

**கல்லாதவர் நிலை**

கல்லாத கீழ்மக்கள் தீவினையால் எழும் பயன்களைத் துய்த்து துன்பத்தையே அடைவர். இதனால் இவர்கள் உயிருக்கு உறுதியும் தேடிக் கொள்ளமாட்டார்கள். கண் உள்ளவன் விளாமரத்தில் உள்ள விளாம்பழத்தைக் கண்டு பறித்து உண்டு மகிழ்கின்றான். கண் இல்லாதவன் இதுவா விளாமரம் எனச் சொல்லக் கேட்டு உணர்கின்றான். கீழே உதிர்ந்து வெதும்பிக் காய்ந்த பிஞ்சு முதலியவற்றைக் கையால் தடவி எடுத்து உண்கின்றான். அது இனிப்பு இன்றி புளிப்பும் கசப்பும் இருப்பதை அறிகின்றான். இதுபோல் தேடுவதால் நன்மை கிடைத்துவிடாது. கடவுளின் மேலான திருவடியை அடைதலே பயன் தரும்.

## பட்டறிவில்லாதவர்

கல்லாதவர் நுண்ணறிவு இல்லாததால் பரவெளியில் கலந்து நிற்கும் முறையையும், பண்புநலனையும் அறிய இயலாது. எனவே இவர்களால் மெய்நெறியை அறிந்து அதன் பயனைப் பெறமுடியாது. கல்லாத மூடர் தக்கவராய்க் காட்டிக் கொள்வதால் அவர்களால் உலகிற்குத் தீங்கு உண்டாகின்றது. உலகியல் நூல்கள் கற்றும் தேர்ந்தும் அவற்றைப் பின்பற்றி ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்கவில்லை என்றால் அவர்கள் மற்றவர்களைக் கெடுக்கக் கூடியவராய் ஆவர். புறப்பற்றுக்கும் அகப்பற்றுக்கும் விடை அறியமாட்டார். எனவே இவர்கள் கல்லாத மூடரேயாவர். கல்வி நெறியின் முதற்பொருள் உயிருக்கு உயிராய் அறிவினுள் நிற்கும் பேரறிவாகும். கல்வி நெறியின் நிறைவு பட்டறிவாகும். இது இல்லாதவர் கற்றவரே ஆயினும் அவரும் கல்லாதவருக்கு ஒப்பானவரே ஆவர்.

## ஞானவியல் கல்விநெறி

கல்வியின் நுண்மை, கேள்வியின் ஆழம், கற்றலின் அகலம், கற்பவரின் நுண்ணுணர்வு, நுண்ணறிவை ஆயும் தன்மை போன்றவற்றுக்கு ஏற்ப கிடைக்கும் பயனே மேலான ஞானநெறி கல்விக் கொள்கைகளாகும். நல்உணர்வுகளால்தான் நற்செய்கைகளைச் செய்ய முடியும். கற்பிக்கும் ஆசான் தமிழாக்கச் சொற்களையும், இனிய மொழியறிவையும் கொண்டுதான் மற்றவர்களுக்குக் கற்பித்தல் என்ற நல்விருந்தைப் படைக்க இயலும். இதனைத் திருமூலரின் குருவருள்மிகு உபதேசம் எனும் மந்திரம் வாயிலாகக் கூறுகின்றார்.

## மாசற்ற சிந்தனைக் கல்வி

தூய்மையான பாலில் நெய் கலந்து இருப்பதுபோல ஞான ஆசிரியன் கூறும் சொல் அசைவற்ற நெஞ்சத்தில் வேற்றுமை இன்றிக் கலந்து நிற்கும். கற்றலில் ஆசிரியரின் மொழி கேட்டல், சிந்தித்தல், தெளிதல் வேண்டும். ஞான நிலையில், மாசற்ற சிந்தனை நிலையில், பட்டறிவின்வழி கற்றல் தொழில் நடைபெறும். இக்கற்றல்நெறி உலகெங்கும் ஞானாசிரியர்களால் உணர்த்தப்படுவது. கற்ற கல்வியானது உச்சி தொடங்கி உள்ளங்கால்வரை அறிவுச் சுடராக ஒளிரும். உயிருக்கு உயிராய் நிலைபெற்று இருப்பது கற்ற கல்வியே ஆகும். இது இம்மைக்கும் மறுமைக்கும் நலம் தரும். இது ஒளிவளர் விளக்கு போன்றது. இதுவே உயிர்களுக்கு உறுதுணையாய்த் திகழும். இதுவே நல்லொழுக்கம், அடக்கமுடைமை, பணிதல் எனும் அறம் வளர்க்கும் தூயநெறிகளாகும். மனிதனுடைய வளர்ச்சிக்குச் செருக்கானது

தீங்கு செய்கின்றது. மேலும் அறிவு வளர்ச்சிக்கும், கல்வி உயர்வுக்கும் தடைகற்களாகின்றது. கல்வி கற்றுவிட்டோம் எனும் ஆணவமலம் ஒழிய வேண்டும்.

### வேத இயல் கல்வி

கற்றல் என்பது கடவுளை வழிபடுவதன் வழியாகத்தான் தோன்றியது. இதுவே ஓதுதல் எனத் தொடங்கி வேதம் ஓதுதல் என்றாகியது. கற்றல் என்பது பயிற்சியாகும். இதனை மறவாத் தன்மை, நினைவூட்டல் என்றும் கொள்ளலாம். கற்ற நினைவு பட்டறிவின்வழி பயன்தரும். மக்கள் உணர வேண்டிய விழுமிய அறங்கள் வேதத்திலே முழுமையாக உள்ளன. அறிவுடையோர் பலர் சொல்வளமும், பொருள்வளமும் உடைய வேதத்தைப் படித்து வீடு எனும் பெரும்பயன் நெறியை அடைந்தனர்.

இளமை முதலே கடவுளின் சிறப்பைக் கூறுகின்ற நூல்களைக் கற்க வேண்டும். இதனால் பாவவினைகள் கழியும். கற்ற கல்வியின் துணையுடன திருவடியை வணங்க வேண்டும். இதனால் ஆன்ம விழிப்பு ஏற்பட்டு ஆன்மா விளக்கம்பெறும்.

### திருமூலரின் கல்வியியல் தத்துவம்

**ஒன்றவன் தானே!** எனும் திருமந்திரத் தொடக்கப் பாடலானது இறைவன் எண்குணத்தையும், ஆறாதாரங்களையும், 96 தத்துவங்களையும் கடந்து நிற்பவன் என்பதை உணர்த்துகின்றது. சிவம்பரம்பொருள் ஒன்றே சக்தியாய் இரண்டாகி, மும்மூர்த்தியாய் முத்தொழிலைப் படைத்து நான்கு வேதங்களின் உண்மைப் பொருளை உணர்த்தி ஆறாதாரங்களிலும் விரிந்து சிரசின் மேற்பொருந்தி நம் உடலிலும், உள்ளத்திலும் அட்டமூர்த்தியாய் விளங்குகின்றான். முதற்பாடலே தத்துவ நிலையில் திருமந்திரத்தைக் கற்பதன்மூலமாய் பெறும் பயனை விளக்குகின்றது.

### கற்றலில் குருவின் பங்கு

கற்றவர் அடையும் நலன்களையும் கல்லாதவர் அடையும் தீமைகளையும் பல்வேறு புராணக் கதைகள்வழி கூறுகின்றார். நிலையான கற்றலே நிறைவான அறிஞனாக வளர உதவும். இதன்வழி நுண்ணறிவு பெற முடியும். நுண்ணறிவு வழி அன்பும் பண்பும் அறனும் ஒழுக்கமும் மிளிறும். கற்றலுக்குக் குருவின் பங்கு மிக அவசியமானது. தொட்டுக் காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வராது என்பதுபோல் குருவால் உணர்த்தாத எந்த ஞானமும் சித்தி பெறாது முழுமையடையாது. ஒரு நல்ல குரு அவரவர் தவமுயற்சியாலேயே கிடைக்கப் பெறுகின்றது. அந்நல்ல

குருவின், தெளிவான குருவைக் காணுதலும், அவர் பெயர் உச்சரிப்பதும், அவர் வார்த்தையைக் கேட்டலும், சிந்தித்தலும் நம்மை மேலும் உயர்த்தும்.

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே (திரு.139)

பதி - பசு - பாசம்

சில சமயங்களில் இச்சீவான்மாக்கள் குரு கிடைக்காத போது இறைவனே ஞானாசிரியனாய் நூல்கள் மூலமாகவும், உள்ள உணர்வின் மூலமாகவும் குருவாகத் தோன்றிப் பசுவைப் பதியிடம் சேர்ப்பான். குருவின் உருவைச் சிவனது உருவாகக் காணுதல், குருவின் பெயரை, சிவனது பெயரான ஐந்தெழுத்தோடு ஒப்பவைத்துக் கூறுதல், குருவின் கட்டளையைச் சிவனின் அருள் ஆணையாக ஏற்றல், குருவிடம் உள்ள பொருள்களும், பாசங்களும் பசுவைப் பற்றும். ஆனால் இப்பாசம் பதியை அணுக முடியாது. பாசங்களை விலக்கிய பசுவே பதியிடத்து அணுக முடியும். பதி - கடவுள்; பசு - உயிர்; பாசம் - உயிர்களைப் பிணித்துள்ள பொருள்கள். இவை முறையே இறை, உயிர், தளை எனத் தமிழில் கூறப்படும். கற்றலின் ஐயத்தை விலக்கும் இக்கருத்தைத் திருமந்திரம்,

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசம் நில்லாவே (திரு.114)

என்று கூறுகின்றது.

வாழ்வியலும் கற்றலும்

யாக்கை நிலையாமை உடையது. இறப்பு எப்பருவத்திலும் நிகழலாம். எனவே யாக்கை நிலையாமை என்னும் தத்துவம் ஓதப்பட்டது. குழந்தை, வாலிபன், முதியவன், வாழ்வியல் வளம், கற்றல், மணவினை, தொழில், பிறப்பு, இறப்பு என நடைபெறுவது உலகோர் மரபு.

தாய் வயிற்றில் இருந்தது முதல் பிறந்து, உலக வாழ்வில் உழன்று ஆண்டுக் கணக்கில் இறைவனை அறியாமலேயே வாழ்கின்றோம். பெற்ற செல்வமும், உற்றார் உறவும் இறுதியில் எப்பயனையும் அளித்துவிட முடியாது. இறைவனின் அருள் மட்டுமே பிறவாநெறி அளித்திடும்.

## வேதியியல் கல்வி

திருமூலரின் கல்விநெறியானது சன்மார்க்கம்-புறச் செயல் அகச்செயல் என இரு கூறுபடும். அறிவு அது அருவம் அருவுருவம், உருவம் என்பவையாகும். இவை திருவுருவங்களுக்கு அப்பால் சத்து, சித்து, ஆனந்தம் என முழுச்சமவெளியாய் நின்று மனிதனுடைய உடலை ஒளிரச் செய்யும் மாற்றமே வேதியியல் கல்வியாகும். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கும் உடலை நிலைக்கச் செய்யும் படிநிலைகளாகும். இதனைக் கடந்த நிலையே சூன்யநிலை அதுவே வெற்றிடம் அதுவே மாசுநீங்கிய சிவநிலையாகும். தன்உடலை வேதிக்கத் தெரிந்தவனே சிந்தனைவான்.

## மருத்துவக் கல்வி

உடல் உயிரோடு வாழ மருத்துவக் கல்வி அவசியம். கல்போலக் கலங்காது உறுதி நெஞ்சம் கொண்டவர்களுக்கு உடல் நோய், காமம், குரோதம் ஆகிய குற்றங்கள் அகலும். பிறப்பதும் இறப்பதும் உயிரன்று உடம்பே. உயிருக்கு உடம்பு பற்றுக் கோடாம். பிறப்பின் தன்மையைக் கருவுற்பத்தி நிலையை இரண்டாம் தந்திரம் 14 அதிகார அமைப்பில் திருமூலர் கூறுகின்றார்.

பிறப்பின் பண்பு, பிறந்த குழந்தையின் பண்பு நலம், உயிரும் பிறப்பின் குறைபாடும், பிறப்பும் ஆயுளும், உயிர் ஆணா பெண்ணா, தாயின் வயிற்றில் குழந்தை வளரும் முறை, நீரும் மருந்தும், மிளகு நீர், யோகமும் மருத்துவமும், கேசரியோகம், பிராணவாயுவின் சிறப்பு, ஞானத்தின் சிறப்பு, உடலும் நலனும், மூவகை நாடிகளின் தன்மை, நாடிகளின் நடை, நாடியின்வழி நோயின்மை அறிதல், வாதநோயால் வரும் துன்பம், நெடுந்துன்பம், பித்த மிகுதியால் வரும் இன்னல், சுவாச கபத்தால் ஏற்படும் நோய்கள், இறப்பின் தன்மையை அறியும்முறை, சுவாசம் வாயின்வழியே வரின் இறப்பு என்பது முடிபு, உதடு, பல், நாக்கு முதலியன நிறம் ஏறினால் இறப்பு, இறப்பை அறியும் முறை, உமிழ்நீர்மூலம் அறியும் குறி, மந்தம், மேகம், சன்னி, மூலநோய், பெண் மலடு, கருப்பகாலச் சன்னி முதலானவை வருவதற்கான காரணம், குன்மம் குட்டம், கிராணி மூலம் தீர நல்லவழி, அனைத்து நோய்களும் அகல ஒரே மருந்து போன்ற பொருண்மைகளில் மருத்துவக் கல்வி பற்றிய செய்திகள் உள்ளன. நல்ல மருந்து என்பது ஞான மாமருந்தாகும். அம்மருந்து இறைவன் அருளினால் கிடைக்கப் பெறுவது. அம்மருந்தே பிறவி நோயைத் தீர்க்கவல்லதாகும்.

**அறிவால் அறிவறிந்தேன்** என்ற பாடலில் உலக அறிவும் வேண்டும். அத்தோடு பேரறிவை அறியும் அறிவும் வேண்டும். இதுதான் உண்மையான கல்வி. இதுதான் ஞானம் . இவ்வாறு திருமூலர் கூறுவது இறுதிவரையில் வரக்கூடிய ஞானக்கல்வியைப் பற்றித்தான் ஆகும். இக்கல்விதான் ஒருவரை ஞான நிலைக்குக் கொண்டு செல்லலும்.

**ஓதுமின் கேள்மின் உணர்மின்** என்று திருமூலர் கூறும் மூன்று சொற்களின் பொருளையே சுவாமி விவேகானந்தர் **எழுமின்! விழுமின்!** என்று இரண்டு சொற்களில் கூறுகின்றார். கற்று **அன்பில்** நிற்பவர் கண்டறிந்தார் என்கின்றார் திருமூலர். இவர் கல்வியை மெய்ஞ்ஞானம் என்கின்றார். அம் மெய்ஞ்ஞானம் பெற்று அன்பில் நில் என்றும் கூறுகின்றார்.

## முடிவுரை

கல்வியின் விழுமிய நிலை என்பது கற்றலில் கட்புலன் வழியாய்க் காண்பது; செவிப்புலன் வழியாய்க் கேட்பது. இதுவே தலையாயத் தூண்டல் கல்வி முறையாகும். கற்போம் கற்பிப்போம் என்பதே ஒழுக்கம், அருள், பண்பு, அறிவு, நடுவுநிலைமை முதலானவற்றின் மேலான தத்துவங்களாகும். சமயக் கல்வியாலும் ஞானக் கல்வியை அடைய முடியும். தூய்மை பெறுதல், அன்பு செலுத்துதல், பிறருக்கு உதவுதல், விருப்பு வெறுப்பற்ற மனநிலை பெறுதல் போன்ற பக்குவநிலைகளைச் சமயங்களும் எடுத்தோதுகின்றன. எனவே சமயம், மொழி, மாநிலம், இனம் எனும் எண்ணங்களைக் கடந்து கல்விப் பயிரைத்தழைக்கச் செய்தல் வேண்டும். கற்பிக்கும் ஆசிரியன் நடுவுநிலைமையுடன், சமரசநிலையில் பேதமற்ற நிலையில் கற்பித்தல் வேண்டும். கற்பித்தவனாலும், கற்றவனாலும் இம்மண் பயனுற வேண்டும் என்பது திருமூலரின் வேட்கையாகும். அவ்வகையில் திருமந்திரம் நமக்குக் கிடைத்த ஞானப்பெட்டகமாகவும் கல்விக் கருவூலமாகவும் திகழ்கின்றது.

**ஒன்றே குலம் ஒருவனே தேவன்**
**யாதும் ஊரே யாவரும் கேளிர்** (புறம்.)

எனும் திருமூலர் தத்துவத்தை உணர்ந்து கற்க வரும் மாணவரை உயர்த்தி நாடும் நாமும் உயர்வோம்.

# 6. மருத்துவம் மற்றும் வானியல் கோட்பாடு

## முன்னுரை

தென்னகத்துச் சித்தர் மரபில் முதன்மையானவர் திருமூலர். ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். வைதிகநெறியும் தமிழ்நெறியும் கலந்து திருநெறி என்றொரு புதியநெறியை அறிமுகப்படுத்தியவர். தத்துவம், யோகம், மருத்துவம் சார்ந்த கருத்துகளை மந்திரத்தைப் போலச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பது திருமந்திரம். மெய்யறிவைத் தெரிந்து கொள்ளும் நூலாக இது உள்ளது. இவர்தம் நூல்களின்வழி சமுதாயத்திற்குப் பெரும்தொண்டாற்றி உள்ளார். குறிப்பாகச் சித்தர்கள் மருத்துவத் துறைக்குப் பெருந்தொண்டாற்றி உள்ளனர். இம்மருத்துவத்தில் திருமூலரது தொண்டும் குறிப்பிடத் தக்கவகையில் அமைகின்றது. அதுபோல் சோதிடம், வானவியல் சார்ந்த கருத்துகளையும் உட்பொருள் விளக்கத்தோடு தம்நூலில் கூறியுள்ளார். அவ்வகையில் திருமூலரின் பல்துறை அறிவை வெளிப்படுத்துவதாக இப்பகுதி அமைகின்றது. சித்தர்கள் கூறும் முறைகள் அனைத்தும் அறிவியல்முறைக்கு ஒத்ததாகவே உள்ளது.

## மனம்

பக்குவப்பட்ட மனமே வளமுடைய மனம். இத்தகைய மனமே ஆற்றல் நிரம்பிய செயல்களைச் செய்து சமுதாய வளமைக்கு வழிவகுக்கும். மனம் சார்ந்து வாழ்கின்ற மக்களின் வாழ்க்கையில் ஒழுங்கு கடைப்பிடிக்கப்படும். இந்த ஒழுங்கு கடைப்பிடிக்கப்படும்போது மனிதவள மேம்பாடு உண்டாகும். இதன் வழி மனிதர்களால் மனிதர்களுக்கு ஏற்படும் அழிவுகள் தடுத்து நிறுத்தப்படும். அறக்கருத்துகள் மனித மனத்தைத் தெளிவுபடுத்துகின்றன. நன்மைகளை எடுத்துரைக்கின்றன. தீமைகளைக் கூறி எச்சரிக்கை செய்கின்றன. செய்ய வேண்டியன எவை, செய்யக் கூடாதவை எவை என்று எடுத்துரைக்கின்றன. மருந்து உடலைக் குணப்படுத்தும். நூல்கள் உள்ளத்தைச் செம்மைப்படுத்தும் என ஏலாதி, திரிகடுகம், சிறுபஞ்சமூலம் ஆகிய நூல்கள் கூறுகின்றன.

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற

அறிவுஅற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அறன்

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட் பண்பில்லா தவர்

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனையது உயர்வு

நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்

என்ற குறட்பாக்கள் மனம் செம்மையடைந்தால்தான் செயல்களும் செம்மை அடையும் என உணர்த்துகின்றன.

### மனிதவள மேம்பாடு

நாட்டுவளம், பொருளாதார வளம் போன்ற பிற வளங்களோடு மனிதவளமும் மேம்படுத்தப் படவேண்டும். மனிதனிடமும் நற்குணமும் தீயகுணமும் உள்ளது. ஆனால் அவன் எதை வெளிப்படுத்துகின்றானோ அதை அடிப்படையாக வைத்தே அவனை நல்லவன் தீயவன் என்கின்றோம். பொதுவாகத் தான்சொல்வது, செய்வது சரியானது என்ற தன்முனைப்பே மனிதனிடம் ஆணவமாக மாறுகின்றது. தன்னைத் தாழ்த்திக் கொள்ள எந்த ஒரு மனிதனும் அவ்வளவு எளிதில் உடன்படுவது இல்லை. இருப்பினும் விட்டுக்கொடுக்கும் பண்பை மக்கள் மெல்ல மெல்ல வளர்த்துக் கொள்ள வேண்டும். நல்லது செய்ய முடியாவிட்டாலும் பிறருக்குத் துன்பம் செய்யக்கூடாது. மனித இயல்புகள் மாறாமல் வாழப் பழகிக் கொள்ள வேண்டும்.

### *மகிழ்ச்சி*

உலகம் இப்படி இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு நமக்கு இருந்தால் அந்த எதிர்பார்ப்பு நடக்காதபோது நமக்குக் கோபம் அல்லது ஏமாற்றம் உண்டாகும். இதுபோல் நாம் பல எதிர்பார்ப்புகளை எதிர்நோக்குகின்றோம். பலரும் நம்மைப் பாராட்ட வேண்டும். இவர்கள் இப்படி இப்படித்தான் நம்மிடம் நடந்து கொள்ள வேண்டும் என்று நினைக்கின்றோம். இவை நடக்காத போது வெறுப்பு, ஏமாற்றம் ஏற்படுகின்றது. எனவே எதிர்பார்ப்பு, தனிப்பட்ட விருப்பம் போன்றவற்றை இயன்றவரை குறைத்துக் கொள்ள வேண்டும். நாம் ஒன்றை விரும்புவதில் தவறில்லை. அது நடந்தால் மகிழ்ச்சி. பதிலாக

வேறு நடந்தாலும் அதைப் பக்குவமாக ஏற்றுக் கொள்ள வேண்டும். நம்முடைய மகிழ்ச்சி என்பது நமக்கு நடந்தவற்றை நாம் எப்படி அணுகுகின்றோம் என்பதைப் பொறுத்துத்தான் அமைகின்றது.

*தன்னம்பிக்கை*

ஒவ்வொருவரிடம் தன்னம்பிக்கை இருக்க வேண்டும்.அது உறுதியை, மனவலிமையை, தீங்கு நினைக்காத தன்மையை, திறமையை, எழுச்சியை, உந்து சக்தியை, வெற்றியை, சாதனையைத் தரக்கூடியது. நம்முடைய சக்தியின் உச்சத்தை இந்தத் தன்னம்பிக்கைதான் தருகின்றது. இதைப் பெற முதலில் நாம் நம்மை மதிக்க வேண்டும். பிறர் நம்மீது கூறும் குறைகளுக்குத் தேவைக்கதிகமாக முக்கியத்துவம் தரக்கூடாது.

*தாழ்வு மனப்பான்மை*

தோல்வி, பின்னடைவு வரும்போது உடனே நமக்குத் தாழ்வு மனப்பான்மை வருகின்றது. மற்றவர் முன்னிலையில் குறைந்துவிட்டோம் என்ற உணர்வு ஏற்படுகின்றது.

புத்திசாலி, அழகு, கெட்டிக்காரன், இனிமையானவன், கறுப்பு, சரியான குறும்பு, சமாளிக்க முடியாது, சைத்தான், தைரியமில்லாதவன், வெட்கப்படுகின்றவன், சபைக் கூச்சம் உள்ளவன், முட்டாள் போன்ற வார்த்தைகள் நம்மைக் குறித்துச் சொல்லப்படும்போது இதுதான் நம் குணங்கள் என்று நம்பி விடுகின்றோம். பொதுவாக மற்றவர்கள் எதிர்மறையான வார்த்தைகளையே குறிப்பிடுவதால் பெரும்பாலும் தன் மதிப்பீடு தாழ்வாகத்தான் இருக்கின்றது.

*தன்மதிப்பீடு*

இவற்றையெல்லாம் சரிசெய்ய நம்மைப் பற்றி நமது மனம் பேசும் ஒவ்வொரு வார்த்தையையும் கூர்ந்து பார்க்க வேண்டும். அப்பொழுதுதான் எவ்வளவு ஆழமாக இந்த எதிர்மறையான தன்மதிப்பீட்டின் தாக்கம் உள்ளது என்று புரியும். அனைத்துமே நம் மனத்தின் பிரதிபலிப்புதான். ஆக்கபூர்வமாகச் சிந்திக்க வேண்டும். நான் வெற்றியடையப் பிறந்தவன், எதையும் சாதிக்க முடியும். அதற்குத் தேவையான திறமைகள் என்னுள் உள்ளன போன்ற எண்ணங்களை வளர்க்கலாம். இப்படியான சிந்தனைகள்தான் நம் தன்மதிப்பீட்டிற்குத் திடம் கொடுக்கும். நாம் அடைந்த வெற்றிகளைவிட அடைய இருக்கும் வெற்றிகளைப் பற்றிய நமது தன்னம்பிக்கையும், திண்ணமுமே நமது சுய(தன்)மதிப்பீட்டை மலையளவு உயர்த்தும்.

### *நோய் வராமல் தடுத்தல்*

மேற்சொன்ன மன உறுதியைப் பெற நாம் உடலையும் மனத்தையும் நலத்தோடு வைத்துக் கொள்ள வேண்டும். அதற்குச் சில முயற்சிகளை நாம் மேற்கொள்ள வேண்டியுள்ளது. அதற்காகச் சில ஆசனங்களையும் உடற்பயிற்சி முறைகளையும் திருமூலர் கூறியுள்ளார். உடலால் நோய்வராமல் தடுக்க முடியும். அதேநேரத்தில் வந்தால் போக்கிக் கொள்ளவும் உடலால் முடியும். இந்த வேலையை சுழன்று ஓடுகின்ற உயிராற்றல் கவனித்துக் கொள்கின்றது. இதை மேலும் மேலும் ஊக்குவிக்க உடற்பயிற்சியும், யோகமும், தவமும் தேவைப்படுகின்றது.

### *வினைப்பதிவு*

நோயைக் குணப்படுத்துதல் என்பதைவிட நோய் வராமல் காப்பதுதான் நல்லது. இரத்தம், வெப்பம், காற்று என்ற மூன்று தன்மைகள் மனித உடலில் மூன்று அடுக்குகளாக உள்ளன

உடற்பயிற்சி, தவம் இவை இரண்டும் பாவப் பதிவுகளைப் போக்கக் கூடியவை ஆகும். நாம் முன்பின் செய்த தவறுகள் காரணமாக உடல் அணு அடுக்குகள் சீர்குலைகின்றன. அந்த இடங்களில் மின்சாரக் குறுக்கு (Short Circuit) ஏற்படுகின்றது. இதனால் மனத்திலும் உடலிலும் நோய் தோன்றுகின்றது. இந்நோய் பரவிப் பின்னர் நிலைத்து இருக்கவும் செய்கின்றது. இதுவே வினைப் பதிவாகும். இது வித்தின் வழியாகக் குழந்தைகளுக்கும் செல்கின்றது.

### உடலும் உயிரும்

உயிரும் உடலும் சேர்ந்து உலகியல் வாழ்வுக்கு வருவதைப் பிறப்பு என்கின்றோம். வினைப்பயன்களுக்கு ஏற்றவாறு உடலும் உயிரும் உருவாகின்றது.

மனிதரிடம் உள்ள பாவப் பதிவுகளை (களங்கங்களை) நீக்கினால்தான் உயிருக்கு வீடுபேறு, விடுதலை கிடைக்கும். உடல் எடுத்து வினைகளை அனுபவிப்பதன்வழி பாவப்பதிவுகள் நீங்குகின்றது. அதுபோல் யோக சாதனைகள் வழியும் களங்கங்களை நீக்கிக் கொள்ள முடியும்.

உயிர்தான் உடலை நடத்துகிறது; காக்கின்றது. நல்ல எண்ணங்கள் நலத்தையும், தீய எண்ணங்கள் தீமையையும் தருகின்றன. அதுபோல் அதிக உழைப்பு, சோம்பல், அதிக உறக்கம், கண்விழிப்பு போன்றவையும் தீய மாற்றத்தை ஏற்படுத்தும்.

உணவு, எண்ணம், செய்கை ஆகியவற்றில் ஏற்படுகின்ற மாற்றங்களுக்குத் தகுந்தவாறு சுரக்கும் இரசாயனங்களிலும் மாறுபாடு ஏற்படுகின்றது. ஒவ்வொரு மனிதனும் அவரவர் கையின் அளவுப்படி தொண்ணூற்றாறு அங்குல உயரமே என்பர். அவரவர் கையின் விரல் பருமன் ஓர் அங்குலம் எனக் கூறப்படும். அங்குலம், சாண், முழம், மார் என்பதும் கையின் அளவைக் கொண்டே கணிக்கப் பெறும்.

சென்ம சரீரந் தொண்ணூற் றாறுயெனச்
செப்புமங் குலமவர்கள் கையால்தான்
(யூகிதத்துவ ஞானம் 106, பா.31)

இந்த உயரத்தின் அளவு அனைவருக்கும் பொதுவானது. இவ்வாறு ஒவ்வொருவர் உயரமும் ஒத்து இருப்பதற்குக் காரணம் என்ன என்பதற்குச் சித்தர்கள் கூறும் முறை அறிவியல் முறைக்கு ஒத்ததாகவே உள்ளது.

உயிரியல் முறை

சுக்கிர நாடியில் தோன்றி வெள்ளியும்
அக்கிர மத்தே தோன்றும் அவ்யோனியும்
புக்கிடும் எண்விரல் புறப்பட்டு நால்விரல்
அக்கிரம் எட்டும் எண்சாண் அதுஆகுமே (திரு.273)

ஆணும் பெண்ணும் கூடும்போது கரு அமையும். அப்போது பெண் விடுகின்ற மூச்சுக்காற்று 12 அங்குல கனஅளவு உடலுக்குள் தங்கி விடுகின்றது. மீதமுள்ள 4 அங்குல கன அளவுள்ள காற்று வெளியே வந்து விடுகின்றது. உள்ளே சேர்ந்த எட்டு அங்குலமே குழந்தையின் உடலாக அமைகின்றது. இது எட்டுசாண் என்ற அளவில் அமைகின்றது என்பது திருமூலர் கண்டறிந்த உயிரியல் முறையாகும் (இரா. வாசுதேவன், தமிழில் மருத்துவ இலக்கியங்கள், ப.122).

*விந்தின் ஆற்றல்*

நஞ்சின் இயல்பு அழிப்பது, அமுதின் இயல்பு நெடிது வாழ வைப்பது. விந்து நஞ்சின் இயல்பை உடையது. அதனை அழிப்பது மெல்ல இறத்தலை ஒக்கும். மூலாக்கினியால் அழிக்கும் இயல்புடைய விந்தினை வீணாக்காமல் மேலேற்றி அமுதமாக்கிப் பருகினால் நெடிது வாழ்தல் கூடும். உறுப்பு சிவக்கும். உரோமம் கருக்கும். இவற்றை அமுரிதாரணை என்ற பகுதியில் திருமூலர் ஏழாம் தந்திரம் விரிவாகக் கூறுகின்றார்.

உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே (724)

என்ற திருமந்திரக் கூற்றை மெய்ப்பிக்க அடிப்படையாக இருப்பது பஞ்சபூதக் கொள்கையாகும்.

**உயிரின் இயல்பு**

சூரியனின் வெப்பத்தால் கடல்நீர் உப்பாகின்றது. அவ்வுப்பு மீண்டும் தண்ணீரில் கரையும்போது அடங்குகின்றது. இதில் இருந்து என்ன தெரிகின்றது. உப்பு தண்ணீரில் இருந்து வந்தது. அதற்குள்ளேயே அடங்குகின்றது. அதுபோல் உயிர் சிவத்தில் தோன்றி சிவத்துள் அடங்கும் என்கின்றார் திருமூலர்.

**எனக்குள்ளே நீயிருக்க உனக்குள்ளே நானிருக்க** என்ற பட்டினத்தாரின் தொடர் சீவனும் சிவனும் ஒன்று என்பதைக் காட்டுகின்றது.

நவசூத்திர வீட்டை நானென்று அலையாமல்
சிவசூத் திரத்தை தெரிந்தறிவ தெக்காலம்

என்ற பத்திரகிரியாரின் மெய்ஞானப் புலம்பல் உடம்பில் இருக்கும் சீவன் சிவனே என்று வலியுறுத்துகின்றது.

உயிர் உய்ய வேண்டும். அறிவிற்கு முழுமைப்பேறு கிட்ட வேண்டும். வீடுபேறு வேண்டும். இதை ஒரு பயணமாகக் கருதினால் அப்பயணத்திற்கு உடல்தானே வாகனம். இந்த வாகனத்தைப் பேணிப் பாதுகாக்க வேண்டும் என்று திருமூலர் கூறுகின்றார்.

**உடல்**

எந்த முயற்சியையும் உடலில் இருந்துதான் தொடங்க வேண்டியுள்ளது. அறிவு சுதந்திரமாக இயங்கவும் உடல்தான் ஆதாரமாகின்றது.

உயிர் உடலை விட்டுப் பிரிந்த பின்னர் அதனைப் பிணம், சவம் என்பர். எனவே உடலுக்கு, உயிர் வெளியேறிய பின் மரியாதை இருப்பதில்லை. ஆனால் ஆன்மா அழிவில்லாதது. இந்த ஆன்மா உடம்பு இரண்டையும் இணைத்தால் உடலினைக் காயசித்தி (அழிவற்ற உடல்) ஆக்க முடியும்.

மனித உடல் பருவுடல், சூக்கும உடல், காரண உடல் ஆகிய மூன்றின் தொகுப்பாகும். மேலுமிது புரதம், சர்க்கரை, கொழுப்பு, தாது உப்பு, வைட்டமின் ஆகியவை தண்ணீருடன் கலந்து உருவாகியுள்ளது. பருவுடலுக்கு மூலமாகச் சூக்கும உடலும், காரண உடலும் உள்ளன.

ஐம்பூதங்களான இவ்வுடலில் கெட்டிப் பொருள் 30 விழுக்காடு உள்ளது. நீர், காற்று, வெப்பம் ஆகியவை 70 விழுக்காடு உள்ளன. உடலில் ஐம்பூதங்கள், ஏழு தாதுக்கள், மூன்று கோசங்கள், முக்குணங்கள், அறுசுவை ஆகியவை சரியான அளவில் இருப்பதே நலமான நிலையாகும்.

உடலின் திசுக்களுக்கு இரத்தமானது உணவையும் உயிர்க் காற்றையும் கொடுக்கின்றது. பின் அங்குள்ள கழிவுப் பொருட்களை நுரையீரலுக்குக் கொண்டு வருகின்றது. நுரையீரல் இரத்தத்தில் உள்ள கழிவைத் தூய்மையாக்குகின்றது. இப்பணியை இதயம் செய்கின்றது.

ஓய்வு நேரத்தின்போது ஒரு நிமிடத்தில் உடலின் அனைத்துப் பாகங்களுக்கும் இரத்தம் (இதயத்தால்) அனுப்பப்படுகின்றது. உடற்பயிற்சி செய்து வந்தால் இதயம் விரிவடைந்து வலிமை பெறுகின்றது. குறிப்பாக வெண்டிரிகள் அதிக வலிமை அடைகின்றது.

*தசைச்சோர்வு*

மனித உடலில் உள்ள 600க்கும் மேற்பட்ட தசைகள் 206க்கும் மேற்பட்ட எலும்புகளுடன் இணைந்து செயல்படுகின்றன. தசைகள் வலிமையுடன் இயங்கினால் நாம் அதிகப்படியான சக்தியுடன் இயங்க முடியும். தசைகளுக்கு உள்ளிருக்கும் உயிர்க்காற்று தீர்ந்து போகும்போது அங்குக் கரியமிலவாயு, லாக்டிக் அமிலம் போன்ற கழிவுப் பொருட்கள் உண்டாகின்றன. இவை வலியையும், சோர்வையும் ஏற்படுத்துகின்றன. எனவே கழிவை அகற்ற அதிகமான உயிர்க் காற்று தேவைப்படுகின்றது. இக்காற்றைப் பெற்றவுடன் தசைகள் மீண்டும் வலிமையுடன் வேலை செய்யும். எனவே தசைச் சோர்வு ஏற்படாமல் இருக்க மூச்சுப்பயிற்சி தேவை.

*மூச்சுக்காற்று*

நுரையீரல்களுக்கு உள்ளே மில்லியன் கணக்காகக் காற்றுப் பைகள் அடங்கி உள்ளன. ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கி வைக்கப்பட்டது போன்ற அமைப்பில் உள்ள இக்காற்றுப் பைகள் 600 மில்லியனுக்குமேல் இருக்கும்.

நோய் இல்லாமல் வாழ மூச்சுக்காற்று எந்த அளவிற்கு வேண்டும் எனத் தெரிந்து கொள்ள வேண்டும். ஓய்வாக இருக்கும் போது மூச்சுக்காற்று குறைவாகவே தேவைப்படுகின்றது. வேலை அல்லது உடற்பயிற்சி செய்யும்போது மூச்சுக்காற்று அதிகமாகத் தேவைப்படுகின்றது. மூளையிலுள்ள முகுளம்தான் மூச்சுக்காற்றைப் பணியாற்ற முடுக்குகின்றது.

நாம் ஏறத்தாழ 500 கன செண்டிமீட்டர் அளவு காற்றை உள்ளே இழுத்து வெளிவிடுகின்றோம். மூச்சுப்பயிற்சி செய்தால் 1500 கன செண்டிமீட்டர் அளவு காற்றை உள்ளே இழுக்க முடியும். அப்படி இழுக்கும்போது இந்தக் காற்று பல சிறப்பு நன்மைகளைச் செய்கின்றது.

**உயிர்ச்சக்தி**

நமக்கு வரக்கூடிய உயிர்சக்தி நாள்தோறும் செலவாகிக் கொண்டும், வந்து கொண்டும் உள்ளது. உயிர்ச்சக்தி நமக்கு நான்கு வகையிலே கிடைக்கின்றது. உணவில் இருந்து ஒரு பகுதியும் காற்றில் இருந்து இன்னொரு பகுதியும் கிடைக்கின்றது. கோள்களில் இருந்து வரும் அலைகள் சேர்ந்து துகள்களாகி வருவது மூன்றாம் பகுதி. பூமியின் நடுமையத்தில் இருந்து அணுக்கள் உடைந்து பூமியின் மேல்பக்கம் தெறிக்கின்ற துகள்கள் ஒரு பகுதி.

**உடலியல் கொள்கை**

**நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்** என்றார் ஔவையார். மனிதன் உடல்நலத்தோடு வாழ்ந்தால்தான் தனது குடும்பம், தொண்டு, பொருள் தேடல், பிறருக்கு உதவி செய்தல் ஆகிய நிலைகளில் உயர்வு பெற முடியும். வாழ்வின் நோக்கமாகிய இறைநிலையை அடைய முடியும்.

உடலானது நன்றாக இருந்தால்தான் வாழ்வில் இன்பம் நிலவும். உடல் நலம் குன்றினால் நோய் உண்டாகும். அது எதிர்கால வாழ்க்கையைப் பாதிக்கும். இதையே திருமூலர்

**உடம்பார் அழியில் உயிரார் அழிவர்**
**திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்** (திரு.724)

என்கின்றார்.

உடம்பு அழிந்தால் உயிரும் அந்த உடலைவிட்டு நீங்கி விடும். எனவே உடம்பை அழியாது காக்கும் வழியை நான் அறிந்து கொண்டேன் என்கின்றார் திருமூலர். இதனைத்தான்

**உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்**
**உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்**
**உடம்புளே உத்தமன் கோயில்கொண்டான் என்று**
**உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே** (திரு.725)

உடலுக்கும் உயிருக்கும் இடையே வரும் பிணக்குதான் நோய். உடல் நோய் வாய்ப்படும்போது அது செயல் திறத்தையும் பாதிக்கின்றது. சமுதாயத்தோடு நாம் கொள்ளும் தொடர்பையும்

கெடுத்து விடுகின்றது. திருமூலர் உடலிலே உத்தமன் கோயில் கொண்டுள்ள உண்மையைத் தெரிவிக்கின்றார். தம்மைப்போல் பிறரும் பயன்பெற்று நீண்ட காலம் வாழ வேண்டும் என விரும்புகின்றார்.

### ஐம்பூதங்கள்

ஏழாம் தந்திரத்தில் விந்துசெயம் என்ற பிரிவில் ஒரு பாடலில் ஐம்பூதங்களும் உடலில் எந்தெந்தப் பகுதியில் மிக்குள்ளன எனக் காட்டுகின்றார் (1937).

| | | |
|---|---|---|
| பாதம் | - | மண் |
| பாதம் முதல் கொப்பூழ் வரை | - | நீர் |
| கொப்பூழ் முதல் மார்பு வரை | - | அனல் |
| மார்பு முதல் தோள் வரை | - | காற்று |
| கழுத்துக்கு மேல் | - | வானம் |

என்பது இவரின் கணிப்பாக உள்ளது.

### ஆறுஆதாரங்கள்

தவறான பழக்கவழக்கம் உடலைக் கெடுக்கின்றது. நிமிர்ந்து நிற்க, நிமிர்ந்து நடக்க, நிமிர்ந்து உட்கார நாம் சிறுவயதில் இருந்தே பழக வேண்டும்.

சக்கரம் என்பது உடலின் உயிர் காந்த சக்தியாகும். நாளமில்லாச் சுரப்பிகள் உடலின் உட்பகுதியில் உள்ள இரசாயனங்களை உற்பத்தி செய்து இரத்தத்தின்வழி உடல் முழுவதும் பரவச் செய்கின்றது. இந்த உயிர் இரசாயனத்தை உற்பத்தி செய்ய உயிர் காந்தத்தை எடுத்துக் கொள்கின்றது.

| சக்கரங்கள் | - | நாளமில்லாச் சுரப்பிகள் | | |
|---|---|---|---|---|
| ஒன்றாம் சக்கரம் | - | மூலாதாரம் | - | பால்வுணர்வுச் சுரப்பி |
| இரண்டாம் சக்கரம் | - | சுவாதிட்டானம் | - | அட்ரினல் சுரப்பி |
| மூன்றாம் சக்கரம் | - | மணிபூரகம் | - | கணையம் |
| நான்காம் சக்கரம் | - | அனாகதம் | - | தைமஸ் |
| ஐந்தாம் சக்கரம் | - | விசுத்தி | - | தைராய்டு சுரப்பி |
| ஆறாம் சக்கரம் | - | ஆக்கினை | - | பிட்யூட்டரி சுரப்பி |
| ஏழாம் சக்கரம் | - | துரியம் | - | பீனியல் சுரப்பி |

உயிர்ச் சக்தியை ஆறு ஆதாரங்களிலும் மற்றும் துரியத்திலும் வைத்துத் தவம் இயற்றும் முறையை அறிதல் வேண்டும். அதற்கு உதவும் வகையில் மூலாதாரம், சுவாதிட்டானம்,

மணிப்பூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை என்ற இந்த ஆறு மையங்கள் மற்றும் துரியம் பற்றியும், அவற்றோடு தொடர்புடைய நாளமில்லாச் சுரப்பிகளின் செயற்பாடு பற்றியும் விரிவாகக் காண்போம்.

உடலுக்குள் உள்ள ஏழு மையங்களும், உடலுக்கு வெளியே மனம் விரிந்து, பிரபஞ்சம், சுத்தவெளி என்ற இரண்டு நிலைகளும் தவம் இயற்றும் இடங்களாக உள்ளன. மனம் மூலாதாரத்தில் தொடங்கி, ஒவ்வொரு மையத்திலும் நின்று, கடைசியில் இறைநிலையான சுத்தவெளியுடன் ஒன்றி விடுகின்றது.

### *சீவவிந்துக் குழம்பு*

பால் சுரப்பியை இருப்பிடமாகக் கொண்டு விளங்கும் சீவ விந்துநாதக் குழம்புதான் உயிர்ச்சக்தியின் (Life Force) இருப்பிடமாகும். உடலிலுள்ள நாளமில்லாச் சுரப்பிகளான மூலாதாரம் (பால் உணர்வுச் சுரப்பி - (Sexual Gland) , சுவாதிட்டானம் (அட்ரினல் சுரப்பி - Adrenal Gland), மணிப்பூரகம் (கணையம் - Pancrea), அநாகதம் (தைமஸ் - Thumus), விசுத்தி (தைராய்டு சுரப்பி - Thyroid Gland), ஆக்கினை (பிட்யூட்டரி சுரப்பி - Pituitary Gland), துரியம் (பீனியல் சுரப்பி - Pineal Gland) ஆகிய ஏழு மையங்களில் உயிர்ச் சக்தி இயங்கும்.

### *நாளமில்லாச் சுரப்பிகள்*

நாளமில்லாச் சுரப்பிகள் நமது சீவகாந்த ஆற்றலை உடல் வினை ஆற்றலுக்கு (Physiological function) ஏற்ற இரசாயனங்களாக மாற்றித் தரும் செயல்களைச் செய்கின்றன. அவை வெளியிடுகின்ற சுரக்கும் திரவங்கள் (Secretions), ஆர்மோன்கள் (Harmones), நொதிகள் (Enzymes) எனப்படுகின்றன; நமது சீவகாந்தத்தைத் திணிவுபடுத்தி இரசாயனமாக மாற்றித் தருகின்றன. உயிராற்றலாகிய சீவகாந்தம் இரசாயனமாக மாற்றப்பட்டதால் இவை உயிர் இரசாயனம் அல்லது உயிர் வேதிப்பொருள் (Bio-chemical) என்று அழைக்கப்படுகின்றன.

### *உயிர் இரசாயனம்*

காந்தத்தின் பஞ்சதன் மாற்றத்தில் அழுத்தம், ஒலி, ஒளி, சுவை, மணம் என்பதில் காந்தம் அடர்த்தி அதிகமாகி மாற்றம் பெறும்போது சுவை, மணம் என்ற நிலையில் இரசாயனமாக மாற்றம் பெறுவதை அறிவோம். அந்த அடிப்படையில்தான் நாளமில்லாச் சுரப்பிகள் சீவகாந்தத்தை உயிர் இரசாயனமாக (Bio-chemical) மாற்றித் தருகின்றன. மிகமிகக் குறைந்த அளவிலேயே (micrograms) இவை உருவாகின்றன.

உணவுப் பொருளைச் சீரணிப்பதும், சத்துப் பொருளைப் பிரிப்பதும் உடல் வளர்சிதை மாற்றங்கள் (Metabolic & Catabolic Functionsl) அனைத்தையும் நடத்துவது இந்த உயிர் இரசாயனங்களே ஆகும்.

*சக்கரங்கள்*

உடல; (Psychosomatic) இயக்கத்திற்கு ஏற்ற இரசாயனங்களை நாளமில்லாச் சுரப்பிகளே உருவாக்குகின்றன. நாளமில்லாச் சுரப்பிகள் அமைந்துள்ள இடங்களே தத்துவ ஞானத்தில் சக்கரங்கள் (Chakras) என அழைக்கப்படுகின்றன.

நாளமில்லாச் சுரப்பிகளில் சுரக்கும் ஆர்மோன்கள் (Hormones) இரத்த ஓட்டத்தில் கலக்கின்றன; உடலில் உள்ள ஒவ்வொரு செல்லையும் சென்றடைகின்றன. இவை பலவிதமான செயல்களைச் செய்ய வல்லமை உடையவை. உடலில் உள்ள சக்கரை மற்றும் உப்பின் அளவைச் சமன் செய்யும். சுற்றுப்புறச் சூழ்நிலைக்கேற்றவாறு உடலைப் பாதுகாக்கும்.

*ஏழு சுரப்பிகளின் பணி*

இத்தகைய ஏழு சுரப்பிகளும் ஒன்றுடன் ஒன்று தொடர்புகொண்டு செயல்படும் தன்மையுடையன. எடுத்துக்காட்டாக, மூலாதாரத்தில் (Sexual Glandl) வந்து சேரும் திரவமானது மற்ற சுரப்பிகளுக்கு நாளங்கள் மூலமாகச் சென்றடையும். அதேபோலக் கணையத்தில் (Pancreas) சேரும் அபிரிமிதமான திரவத்தை வெளியேற்ற மற்ற ஆறு சுரப்பிகளும் அதற்குத் துணையாக நின்று தனது ஆற்றலைத் தந்து சமன்படுத்தும். இவற்றில் ஏதாவது ஒரு சுரப்பி வலுவிழந்து அல்லது செயலிழந்துவிட்டால் அதனால் உண்டாகும் சக்தியின் இழப்பைச் சரிகட்ட வேண்டியுள்ளது. அத்துடன் அல்லாமல் மற்ற சுரப்பிகளும் அதனால் பாதிக்கப்படாமல் பாதுகாக்கப்பட வேண்டிய சமையம் தோன்றி விடுகின்றது.

உடல் முழுவதும் உயிர்ச்சக்தியானது இயங்கிக் கொண்டுள்ளது. இது உடல் முழுவதும் சீரான அழுத்தத்தில் பரவுவதற்கு மேற்சொன்ன ஏழு நாளமில்லாச் சுரப்பிகளும் மின் மாற்றிகள் (Trans formers) போல இயங்கிக் கொண்டிருக்கின்றன.

*உயிர்ச்சக்தியின் இயக்கம்*

பெரும்பாலானவர்களுக்குச் சாதாரணமாக உயிர்ச் சக்தி மூலாதாரத்தில்தான் இயங்கிக் கொண்டிருக்கின்றது. மிகுந்த

ஆராய்ச்சியில் ஈடுபடுபவர்களுக்கு உயிர்ச் சக்தியானது மூலாதாரத்தை விட்டு வெளியேறி இயக்க மையத்தை மாற்றிக் கொள்ளும். மனமானது மிகமிக நுண்ணிய நிலையில் இயங்கும்போது உயிர்ச் சக்தியானது மூலாதாரத்தைவிட்டுத் தானாகவே மேலே எழும்பி, அதில் ஒரு சிறிது மற்ற மையங்களுக்குச் சென்று ஆக்கினைச் சக்கரத்திற்குச் செல்கின்றது. பின்னர்த் துரியத்திற்கும் செல்கின்றது.

ஞானிகள் இவ்வாறு உயிர்ச் சக்தியை மூலாதாரத்தி லிருந்து துரியம்வரை ஏற்றிச் செல்வதற்குத் தவத்தினை மேற்கொண்டனர். இவ்வாறு உயிர்ச்சக்தியை உச்சிக்குக் கொண்டு வரும்போது மனமும் அதனுடைய இயக்கமும் சமநிலையை அடைகின்றது. மேலும் உயிர்ச்சக்தி உடலின் எல்லா பாகங்களுக்கும் மூளையினுடைய செல்களுக்கும் பரவுகின்றது. எனவே, மனிதனுடைய உடல் மற்றும் மனத்தின் திறமை அதிகரிக்கின்றது.

தவமுறையில் மூலாதாரத்தில் இருந்து உயிர்ச் சக்தியைத் துரியத்திற்கு எற்றிக்கொண்டு வரும்வழியில் சுவாதிட்டானம், மணிப்பூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை ஆகிய ஐந்து இயக்க மையங்கள் உள்ளன.

1. மூலாதாரம் (பால் உணர்வுச் சுரப்பி - **(Sexual Gland)**

***உளவியல் தன்மைகள் (Psychological Functions)***

மூலாதாரம் உயிரின் முதல் மையம். இது முதுகுத் தண்டின் (Spinal Column) அடிப்பகுதியில் இருக்கிறது. இது ஆசனவாய்க்கு ஓர் அங்குலம் மேலே அமைந்து உள்ளது. இதை ஒட்டியே பால் உணர்வுச் சுரப்பிகள் அமைந்துள்ளன. இது பஞ்சபூதத் தவத்தில் மண்ணிற்குரிய இடமாகும்.

மூலாதாரத் தவத்தின்மூலம் புவியியல் மற்றும் புதைப்பொருள் ஆராய்ச்சி பற்றிய அறிவு பெருகுகின்றது. தவசக்தி மிகுதியை உடல் சக்தியாக மாற்றுகின்றது. நோய் எதிர்ப்பாற்றல் (Immunity) ஏற்படுகின்றது. உடல்வலி, தலைவலி, காய்ச்சல், அசீரணம், இரத்த அழுத்தம், மலச்சிக்கல் போன்ற நோய்கள் நீங்குகின்றன உடலில் உயிரின் இயக்கம் சீராகின்றது. இது சாந்தி தவத்திற்குரிய இடம் என்று வேதாத்திரி மகரிசியின் மனவளக்கலை குறிப்பிடுகின்றது. தேவைக்கேற்ப உடல் சக்தியை மனோ சக்தியாகவும், மனோசக்தியை உடல் சக்தியாகவும் மாற்றி மாற்றிப் பயன் தருகின்றது. இதனால் உடலுக்கும் உள்ளத்திற்கும் அநேக நற்பயன்கள் விளைகின்றன.

### *உடலியல் தன்மைகள் (Physiological Functions)*

பெண்விந்தகம் (Ovary), ஆண்விந்தகம் (Testis), பிராஸ்டேட் சுரப்பி (Prostate), விந்துப்பைகள் (Seminal Vesicles) ஆகியவை சுரக்கும் ஆர்மோன் உடல்நலம், பாலுணர்வு நாட்டம் முதுமையில் அமைதி, அமைதியின்மை, தூக்கமின்மை போன்றவற்றை நிர்வகிக்கின்றது.

### *பெண்விந்தகம் (சினைப்பை - Ovary)*

வெள்ளை நிறமான ஆல்மாண்ட் பழம் போன்ற வடிவத்தில் இடுப்பு எலும்பின் தசைநார்களில் இரண்டு பெண் விந்தகங்கள் (Ovary) தொங்குகின்றன.

### *ஆண் விந்தகம் (Testis)*

இது இரண்டு எண்ணிக்கை உள்ளது; பிங்க் வெள்ளை - நிறம்; ஓவல் வடிவம் கொண்டது. இது ஆண் உயிரணுக்களை உற்பத்தி செய்கின்றது. டெஸ்டோஸ்டிரான் ஆர்மோனைச் சுரந்து ஆண்மையைக் கொடுக்கின்றது. இது தசை முறுக்கேற உதவுகின்றது. ஒரு நாளைக்கு 50 மில்லியன் உயிரணுக்களை உற்பத்தி செய்கின்றது.

அதாவது இரண்டு நிமிடத்திற்கு ஒரு முறை இந்த உலகம் முழுவதும் மக்கள் தொகையை நிரப்பக்கூடிய அளவிற்கு உயிரணுக்களை உற்பத்தி செய்கின்றது. சுற்றுப்புற வெப்ப தட்ப நிலைக்கு ஏற்றவாறு சுருங்கி விரிந்து உடலோடு ஒட்டியும், பிரிந்தும் இருந்து உயிரணு உற்பத்திக்கு உதவுகின்றது.

உயிரணுவில் ஆண்குழந்தை உற்பத்திக்கான (Y) குரோமோசோம்களும், பெண்குழந்தை உற்பத்திக்கான (X) குரோமோசோம்களும் இருக்கும். உயிரணுக்களை முறையாக வெளியேற்றத் தவறினால் காலத்தால் இவை மில்லியன் அளவில் இறந்துவிடும்.

ஒருமுறை விந்து வெளியேறினால், 600 மில்லியன் உயிரணுக்கள் வெளியேறுகின்றன. ஒருநாளைக்கு இருமுறைவீதம் 10 நாட்களில் தொடர்ச்சியாக உயிரணுக்கள் கழிந்தால் உயிரணு உற்பத்தி இல்லாத சூழ்நிலை ஏற்பட்டு, மீண்டும் சமநிலை ஏற்பட ஒருவாரம் ஆகும்.

செமினல் வெசிகின் மற்றும் புராஸ்டேட் சுரப்பிகள் வாயிலாகத் திரவம் உருவாகின்றது. இந்தத் திரவம் உயிரணுக்கள் நகர்வதற்குத் துணையாக இருக்கின்றது; அவற்றிற்குப் புரோட்டீன், சர்க்கரை போன்ற சக்தியைத் தரக்கூடியதாகவும் உள்ளது.

இதில் சுரக்கும் ஆர்மோன்கள் 25 வயது 35 வயதுவரை அதிகமாகச் சுரக்கும். 47 வயதுக்குப் பின்பு படிப்படியாகக் குறையத் தொடங்கிவிடும். அதில் குழந்தை உற்பத்திக்கான தன்மை குறைந்து விடும்.

## 2. சுவாதிட்டானம் (அட்ரினல் சுரப்பி - Adrenal Gland)

***உளவியல் தன்மைகள்***

சுவாதிட்டானம் இரண்டாவது மையம். இது உடலின் முன்பாகத்தில் தொப்புள் இருக்கும் இடத்திற்கு 4 அங்குலம் கீழ் உள்ள இடம். இது பஞ்சபூதங்களில் நீருக்குரிய இடம்.

புலன்களுக்கு அப்பாலான அறிவு (Extra Sensory Perception) உண்டாகும். இறந்தவர்களின் ஆவிகளுடன் தொடர்பும், தோற்றுதலும், தாக்குதலும் நேரக்கூடும். பால் உணர்வுத் தூண்டுதல், சித்துகள் முதலியன ஏற்படும். மிகமிகச் சிறிய நேரமே (அதாவது ஒரு நிமிடம் அல்லது இரண்டு நிமிடம்) தவமியற்றினால் போதும்.

***உடல் வினையியல் தன்மைகள் (Physiological Functions)***

துளித்துளியாக அற்புதச் சக்தியை உள்ளடக்கிய உறுப்பு இது; சிறுநீரகத்தின் மேல்புறத்தில் அமைந்துள்ளது; விரல் நுனியை விடச் சிறியதாகவும் மூன்று கொம்புகளுடன் கூடிய தொப்பி போலவும் காட்சி அளிக்கும். கணையநீர், பித்தநீர் உற்பத்தியைச் சீரமைக்கும், இரத்த ஓட்டத்தைச் சரிசெய்யும் இரத்த அழுத்தம் (Blood pressure) வராமல் செய்யும். இந்த ஆர்மோன் உற்பத்தி குறைந்தால் சோம்பல் - சோர்வு - மூச்சுக்காற்று குறைதல் போன்றன ஏற்படும். அதிகமாக உற்பத்தியானால் இரத்த அழுத்தம் அதிகமாகிப் பித்தநீர் (bile) மூலம் அமிலத் தன்மை அதிகமாகி வரும். இது இல்லாமல் ஓரிரு நாட்கள் கூட உயிர் வாழ இயலாது. செயற்கை ஆர்மோனை உடனடியாகச் செலுத்தினால் சற்றே தப்பிக்க வாய்ப்புண்டு.

உடலில் உள்ள உறுப்புகளில் அதிக இரத்தக் குழாயை வைத்திருக்கும் உறுப்புகளில் இது முக்கியமான ஒன்று. இதில் அடங்கியுள்ள கார்டெக்ஸ் (Cortex) மெடுல்லா (Medulla) என்ற இரண்டு உறுப்புக்கள் இரண்டு விதமான ஆர்மோனை உற்பத்தி செய்கின்றன. மெடுல்லாவில் இருந்து சுரக்கும் அட்ரலின் மற்றும் நார்அட்ரலின் என்ற இரண்டு ஆர்மோன்கள் இரத்த ஓட்டத்தில் கலந்துவிடும். இது சுரந்ததும் உடலில் ஏற்படும் மாற்றம் அசாதாரணமாக இருக்கும். ஈரல் (Liver) தன்னுள் பாதுகாத்து வைத்துள்ள சர்க்கரை சக்தியை உடனடியாக இரத்தத்தில் கலக்கச்

செய்யும். தோலில் உள்ள இரத்த நாளங்கள் அடைபடும். உடல் வெளுத்துவிடும். இந்த இரத்தம் தசைகளிலும் உள்ளுறுப்புகளிலும் சென்றடையும். இதன் விளைவாக இதயத் துடிப்பு அதிகரிக்கும். குழாய்கள் இறுக்கமடைவதால் இரத்த அழுத்தம் பல மடங்கு உயர்ந்துவிடும். மேற்கண்ட விளைவுகள் நொடிப்பொழுதில் நடந்துவிடும்.

கார்டெக்ஸில் உள்ள செல்கள் பாதிக்கப்பட்டு ஆர்மோன் சுரப்பது தடைபட்டால் தோலின் நிறமாற்றம் இரத்தச் சோகை, தளர்ந்த தசை, குறைந்த இரத்த அழுத்தம், எடை குறைதல், தலைசுற்றல் போன்ற நோய்கள் தோன்றும். இவற்றைச் சரியான முறையில் பாதுகாத்து வந்தால் சுறுசுறுப்பு, வீரம், ஆற்றல், கூர்மையான அறிவு போன்ற பல நன்மைகளைப் பெறலாம். நல்லொழுக்கமான குழந்தைகளை வளர்ப்பதில் இச்சுரப்பி பெரும்பங்கு வகிக்கின்றது.

### 3. மணிப்பூரகம் (கணையம் - **Pancreas Gland**)

***உளவியல் தன்மைகள்***

இது தொப்புள் இருக்கும் இடம். மணிப்பூரகம் மூன்றாவது மையம். பஞ்சபூதங்களில் நெருப்புக்குரிய இடம்.

புலன்களுக்கு அப்பாலான அறிவு கிடைக்கும். பிறர் எண்ணத்தை அப்படியே தெரிந்து கொள்ள (Clairvoyance) முடியும்.. நம் எண்ணத்தைப் பிறர் எண்ணம்போல் பிறர் மனத்தில் உதிக்கச் செய்தல் (Telepathy) கை கூடும். ஆனால், பல துன்பங்களை எதிர்கொள்ள ஏதுவாகும். எனவே, அத்துறையில் அறிவைச் செலுத்துவது நல்லதல்ல. மகான்களின் ஆவிகளோடு மனத்திற்குத் தொடர்பு கிடைக்கும். சூக்குமப் பயணப் பயிற்சிக்கு (Astral Travel) உரிய இடம். போதிய வெப்பத்தைக் கூட்டிக் கொள்ளவும், இரத்த அழுத்தத்தைச் சமநிலைக்குக் கொண்டு வரவும் உதவுகின்றது. பிறர் ஒத்தாசையும் ஆதரவும் கிடைக்கும். தூர தரிசனமும் சித்துக்களும் கைகூடும்.

***உடல் வினையியல் தன்மைகள்***

செரித்தல் என்ற செயல் முழுவதையும் ஒழுங்குபடுத்தும் சுரப்பி இது; உடல் வெப்பத்தைச் சமன் செய்யும்; இரத்தத்தில் உள்ள சர்க்கரையின் அளவைச் சீரமைக்கிறது. இதன் வடிவம் நாயின் நாக்கு மாதிரி இருக்கும். எப்பொழுதும் இயங்கிக் கொண்டே இருக்கும் உறுப்பு. இது உற்பத்தி செய்யும் இரண்டு ஆர்மோன்கள் இரத்த ஓட்டத்தில் கலந்து விடும். இதன் குளுகோஸ் (Glucose)

அல்லது இரத்தச் சக்கரை (Blood Sugar) செல்களுக்கு எரிபொருளாக **இருந்து சக்தியைக் கொடுக்கும்.** இதிலிருந்து சுரக்கும் இன்சுலின் என்ற ஆர்மோன் இரத்தத்தில் உள்ள சர்க்கரை அளவைச் சீரமைத்து எரிபொருள் சக்தியை முறைப்படுத்துகின்றது.

கணையம் பலவீனமடைந்து இன்சுலின் இரத்த ஓட்டத்தில் கலந்து விடுமானால் இரத்தத்தில் உள்ள சர்க்கரை அளவு குறைந்து விடும். இதனால் இனிப்பின்மீது ஆர்வம் அதிகமாக உண்டாகும்; கணையம் மேலும் விரைவாக வேலை செய்ய வேண்டிய நிலை தோன்றும். இதனால் நீரிழிவு நோய் உண்டாகும். இதன் காரணமாகக் கணையம் பழுதடைந்து விடும். இந்நிலையில் நீரிழிவு (Diabets) நோயால் பாதிக்கப்பட்டவர்கள் இன்சுலின் என்ற மருந்தை ஊசிமூலம் போட்டுக் கொண்டே இருக்கவேண்டிய நிலை ஏற்பட்டு விடும். இந்த ஊசி மருந்து இரத்தத்தில் உள்ள சர்க்கரையை மட்டும் ஓரளவுக்குச் சமன் செய்து கொண்டு வருமே தவிரக் கணையத்தைச் சரி செய்யாது. அதனால் சீரண அமைப்பையே பழுதாக்கிவிடும். மேலும் இரத்தத்தின் அடர்த்தி அதிகமாகி இரத்த ஓட்டம் சீர்கெட்டுப் போகும்.

### 4. அநாகதம் (Thymus Gland)

***உளவியல் தன்மைகள்***

அநாகதம் நான்காவது மையம். இது நெஞ்சுக்குழிக்கு மேல் 4 விரற்கடையில் உள்ள இடமாகும். இது பஞ்சபூதங்களில் காற்றுக்குள்ள இடம்.

மனோதிடம், செயல் ஆர்வம், வீரம், நம்பிக்கை, திறமை ஆகியவை பெருகும். புலன்களுக்கு அப்பாலான அறிவு (Extra Sensory Perception) இங்கும் ஏற்படுகின்றது. தொலைவில் உணர்தல், எண்ணத்தை அறிதல், உள்ளுணர்வு (Intuition), உள்ளிருந்து பேசுவது, புதியன கண்டுபிடிக்கும் ஆர்வம், ஊக்கம் ஆகியவை நீங்குகின்றன. அச்சம், கோழைத்தனம், தாழ்வு மனப்பான்மை ஆகியவை நீங்குகின்றன. எண்ணங்களை ஆராய ஊக்கமும், சரியான முடிவைத் தீர்மானிக்கும் நுட்பமும் அம்முடிவைச் செயலுக்குக் கொண்டு வரும் உறுதியும், திறமையும் ஏற்படுகின்றன. உலக விவகாரங்களிலிருந்து விடுபட முடிகின்றது. தைமஸ் சுரப்பி (Thymus Gland) ஊக்கம் பெறுகின்றது. வீரமும் அச்சமின்மையும் உண்டாகின்றன.

***உடல் வினையியல் தன்மைகள்***

தைமஸ் சுரப்பி கருவில் இருந்து குழந்தை வெளிவரும் நாள் தொடங்கிப் பின்பு ஒரு சில மாதங்கள்வரை நன்றாக வளர்ச்சி

அடைந்திருக்கும். மார்பகத்தின் மையப்பகுதிதான் இதன் இருப்பிடம். அதாவது மார்பெலும்பு சேருமிடம் எனலாம். இந்தச் சுரப்பி இதயம் மற்றும் இரத்த ஓட்டத்தைச் சீரடையச் செய்கின்றது. மார்புக் காம்புகளை இணைத்து ஒரு கோடு போட்டு அதன் மையப்பகுதியை அழுத்தும்போது உள்ள அழுந்தக் கூடிய நிலையில் இருந்தால் இந்தச் சுரப்பி சரியாக வேலை செய்யவில்லை என்று கொள்ளலாம்.

ஒரு தீப்பெட்டி அளவில் இருக்கின்றது. பாக்டீரியா, வைரஸ், பூஞ்சக்காளான், புற்றுநோய்ச் செல்கள் போன்றவற்றை எதிர்த்து அரணாக நின்று பாதுகாக்கும் தன்மை கொண்டதால் இதை நோய் எதிர்ப்புக் காவலன் என்று குறிப்பிடலாம். நோய் எதிர்ப்பு ஆற்றல் லிம்போசைட்ஸ் (Lymphocytes) செல்கள் முதிர்ச்சி அடைய இந்தச் சுரப்பிதான் காரணமாக உள்ளது.

மன அழுத்தம், கவலை அதிகமானால் இந்தச் சுரப்பி தனது அளவில் மூன்றில் ஒரு பங்காகச் சுருங்கி விடும் தன்மையுடையது. இதிலிருந்து சுரக்கும் தைமோசின் (Thymocin) என்ற ஆர்மோன் இரத்த ஓட்டத்தில் கலந்து உடலில் உள்ள அத்தனை உறுப்புகளின் நோய் எதிர்ப்புத் தன்மையைத் தூண்டிவிடும். இத்தைமோசின் திரவம் வயது 50 ஆனபின் உற்பத்தி குறைந்து பின் அடியோடு நின்றுவிடும்.

5. விசுத்தி

*உளவியல் தன்மைகள்*

விசுத்தி ஐந்தாவது மையமாகும். இது தொண்டைக்குக்கீழ் அமைந்து உள்ள மிடற்றுப் பகுதியில் (தொண்டை முடிச்சுப்பகுதி) அமைந்துள்ளது. பஞ்சபூதங்களில் இது ஆகாசத்திற்குரிய மையம். விசுத்தியில் தவம் செய்வதால் தைராய்டு, பாராதைராய்டு சுரப்பிகள் ஊக்கம் பெறுகின்றன.

உணவு கொள்ளல் குறையும்; ஆனால் உடலில் சக்தி குறையாது. ஆகாசம் (விண்) பற்றிய தெளிவான அறிவு கிடைக்கும். ஆகாசம் உடலில் பாய்ந்து உயிராற்றலாக மாறிக் கொண்டு இருக்கும். உடல்நலம் சீரடையும். மனம் உற்காசமாகவும் தெளிவாகவும் சக்தி மிக்கதாகவும் இருக்கும். பிரபஞ்ச இயக்க இரகசியங்கள் மனத்திற்கு எளிதாகப் புலப்படும். பேரண்டஅறிவோடு (Universal Consciousness) மனத்திற்குத் தொடர்பு ஏற்படும். அறிவுக்கு நுண்ணியக்கம் (Subtle frequency) கிடைப்பதால் உயிராற்றல் செலவாகின்ற அளவு குறையும். மனநிறைவு, தகைமை (Magnanimity), விரிந்து மனத்தோடு தாராள மனப்பான்மை, எல்லை

கட்டிய மன உணர்வில் இருந்து மனவிரிவு, விடுதலை, நுண்ணறிவு, சகிப்புத்தன்மை ஆகியவை ஏற்படும்.

***உடல் வினையியல் தன்மைகள்***

தைராய்டு சுரப்பி இளஞ்சிவப்பு நிறத்தில் தொண்டையின் கீழுள்ள மிடற்று (தொண்டை முடிச்சு) பகுதியின் இருபுறமும் அமைந்திருக்கும். இதை நமது உடலின் ஆற்றல் நிலையம் (Power house) என்று குறிப்பிடலாம். இந்தச் சுரப்பி குழந்தை பிறக்கும் பொழுது இல்லையென்றால் அந்தக் குழந்தை தடித்த உதடுகளுடனும், சப்பையான மூக்குடனும், குள்ளமாகவும் இருக்கும்.

உடலில் உள்ள செல்களின் வளர்சிதை மாற்றத்தைப் (Metabolism) பாதுகாக்கின்றது; சுவாச இயக்கத்துடன் தொடர்புடையது; உடலுக்குத் தேவையான அயோடின் சக்தியானது2/3 பங்கு இச்சுரப்பில் சுரக்கும் இரண்டு ஆர்மோன்கள் வாயிலாகக் கிடைத்து விடுகின்றது. ஹைப்போதாலமஸ் மற்றும் பிட்யூட்டரி (Hypothalamus and Pituitary) இணைந்து இந்த ஆர்மோன்கள் சுரப்பதை ஒழுங்குபடுத்துகின்றன.

விபத்துக்களைக் காணும்போது இவை அதிக அளவில் சுரக்கும். அயோடின் சத்து குறைவாக உள்ள உணவைச் சாப்பிட்டால் உடலின் எடை கூடுவதுடன், இரத்தநாளம் பெரியதாகிச் சுவாசக் குழாயை அழுத்திவிடக்கூடும். இதிலிருந்து உற்பத்தியாகும் கால்சிடோனின் (Calcitonin) என்ற ஆர்மோன் எலும்பு மற்றும் பற்களுக்குத் தேவையான சுண்ணாம்புச் சத்தையும், இரும்புச் சத்தையும் கிடைக்கச் செய்கின்றது.

இதனுடன் இணைந்து செயல்படும் பாரா தைராய்டு (Para Thyroid) என்ற சுரப்பி எலும்பில் உள்ள சுண்ணாம்புச் சத்தை இரத்தத்திற்கு அனுப்பிவிடும். எலும்பில் உள்ள சுண்ணாம்புச் சத்தை அளவிற்கு அதிகமாகக் குறைந்து விடாமல் இந்தக் கால்சிடோனின் சமன் செய்துகொண்டே இருக்கும். இந்தச் சுரப்பி சரியாக இயங்காவிடில் சதைப்பிடிப்பு, வலிப்பு, எலும்புநோய், பல்வலி போன்ற உபாதைகள் தோன்றும்.

**6. ஆக்கினை (Pityitary Cland)**

***உளவியல் தன்மைகள்***

ஆக்கினை ஆறாவது மையமாகும். இது புருவ மையத்தில் உள்ளது. ஆன்மிக உணர்வுக்கு இதுவே திருப்புமுனை ஆகும். உள்ளொளி பூரித்து உயிருக்கு மேல்நோக்கு வேகத்தை இது தருகின்றது; பொருள் கவர்ச்சியை நீக்குகின்றது; தன்னிலை விளக்கம்

கிடைக்கச் செய்கின்றது; விரும்பிய நல்வழியில் நிற்கும் திறனைத் தருகின்றது; ஆசை அளவோடு நிற்கின்றது; பேராசையாக விரியாமல் தடுக்கப்படுகின்றது; விளைவறிந்து செயல்படும் அயரா விழிப்புநிலை கிடைக்கின்றது; புறமனத்திற்கு நுட்பமும் வேகமும் பெருகுகின்றது. பொருள் அனபோக நாட்டம் தவிர்க்கப்படுகின்றது. புலன்கள் அறிவைக் கட்டுப்படுத்துகின்றது. முரட்டு வைராக்கியம் (Suppression), வெறுப்பை அடிப்படையாகக் கொண்ட கடுஞ்சித்தம் ஆகியவை ஏதுமின்றி இயல்பாகவே புலன்கள் அடங்கிப் போகின்றன. எண்ணங்கள் குறுக்கிடாத அசைவிலாத ஓர்மை நிலை (Concentration) சித்தியாகின்றது. அறிவில் கூர்மை, கருணை, உயிருணர்வு ஆகியவை ஏற்படுகின்றன. ஐம்புலன்களாக விரிந்தே பழகிய மனம் இங்கு நான்கை விட்டுவிட்டுத் தொடுஉணர்ச்சி என்ற ஒரே புலனாகச் சுருங்கி நிற்கின்றது. மனம் அலைவுறா மனமாகின்றது. ஆகாமிய வினையில் இருந்து விடுவிக்கின்றது. மனம் ஆல்பா அலைக்கு (விநாடிக்கு 8-13 சுழல்விரைவு) வருகின்றது. அதாவது அமைதி நிலைக்கு வருகின்றது. தேவை, பழக்கம், சூழ்நிலை ஆகியவற்றில் அறிவு மயங்காது.

***உடல் வினையியல் தன்மைகள்***

பிட்யூட்டரி சுரப்பி இளஞ்சிவப்பு நிறத்தில் மூளையின் கீழ்ப்புறத்தில் அமைந்துள்ளது. மூளைக்கு அடுத்து இதுதான் உடலிலே பல சிக்கலான வேலைகளைச் செய்யும் உறுப்பு. நம்முடைய உடல்நலத்தைக் காக்கவும கெடுக்கவும் வல்லது. இதைத் தலைமைச் சுரப்பி (Master Gland) என்றும் நாளமில்லாச் சுரப்பிகளின் நடத்துநர் என்றும் கூறுவர். இது தனது கட்டளையை ஹைப்போ தாலமஸ்ஸில் இருந்து (Hypothalamus) நேரடியாகப் பெறுகின்றது. மனித உடலில் உள்ள பலதரப்பட்ட நாளமில்லாச் சுரப்பிகளுக்கு இந்தப் பிட்யூட்டரி சுரப்பிதான் ஆணைகளைச் செலுத்துகின்றது. அதே நேரத்தில் சமநிலையை உருவாக்குகின்ற ஒரு சுரப்பியாகும்.

மற்ற நாளாமில்லாச் சுரப்பிகள் சரிவர இயங்காதபோது பிட்யூட்டரி சுரப்பியின் செயல்முறை அதிகமாகி மற்ற சுரப்பிகளின் இயக்கத்தைச் சமன்படுத்தும். இரண்டு இதழ்களினால் பிரிக்கப்பட்டுள்ளது. முன்புறம் அமைந்துள்ள இதழ் பத்துவித நாளமில்லா நீரைச் சுரக்கின்றது. இது சுரக்கும் ஆர்மோன், கழுத்தில் இருக்கும் தைராய்டு சுரப்பியைப் பராமரிக்கின்றது. எலும்பு முழுவளர்ச்சி, இளமையாக இருப்பது மற்றும் அதிக உயரமாக வளராமல் பார்த்துக் கொள்வது போன்றவை இதன் முக்கியமான வேலைகள்.

இதன் மற்றொரு ஆர்மோன் சிறுநீரகத்தைப் பராமரித்து வருகின்றது. குழந்தைகளிடம் இந்தச் சுரப்பி சரியாக இயங்காவிடில் அவர்கள் குறும்புத்தனத்துடன், பொய் பேசுபவர்களாகவும் நன்னடத்தை இல்லாதவர்களாகவும் வளர நேரிடும்.

## துரியம் (Pineal Gland)

### *உளவியல் தன்மைகள்*

துரியம் ஏழாவது மையமாகும். இது உச்சந்தலையைக் குறிக்கும். பிரம்மரந்திரம் என்றால் இறைநிலைக்கான வாயில் என்று பொருள். இங்கு ஒரு புலனாகிய மனமும் மறைய, மனம் என்ற விரிந்த நிலை குன்றி அதன் மூலநிலையான உயிராகவே நிற்கின்றது. உயிர் உயிராகவே நின்று தனது அடக்கத்தில் பிரம்மாகவே அமைதி பெறுவதற்குத் தயாரிப்பு நடைபெறும் இடமிது. நடுமனத்தில் விழிப்போடு இருக்கவும், எண்ணப் பதிவுகள் பழக்கத்தாலும், சூழ்நிலையாலும் எழுச்சி பெற்றும், பழிச்செயல்கள் புரியாது காக்கவும், ஏற்ற தெளிவும் வலுவும் மனத்திற்குக் கிட்டுகின்றது. அறிவு உயிர்நிலையை உணர்ந்து பேரறிவாக மிளிர்கின்றது; உள்ளுணர்வு உண்டாகின்றது. பேரியக்க மண்டல இரகசியங்கள் சிந்தனைக்கு எட்டுகின்றன. அறிவுக்கு நுணுக்கமும், திறமையும் அதிகமாகித் தெளிவும் துணிவும் உண்டாகின்றன. சிந்தனையாளர்களும் அறிவியல் ஆராய்ச்சியாளர்களும் இந்த நிலையில்தான் நிற்கின்றனர்.

நாம் இங்குத் தவம் இயற்ற இயற்ற, பிராப்த வினையில் இருந்து விடுதலை பெற்று மனத்தூய்மை அடைகின்றோம். மூளையின் பெரும்பகுதி இயங்குவதால் புத்துணர்ச்சி பெறுகின்றோம். விழிப்பு நிலையோடு நல்ல நினைவுகளைப் பதிவு செய்து தீய நினைவுகளைக் கழித்துக் கொள்கின்றோம். புதுமையான தூய தெளிந்த முறையில் வாழ்வை அமைத்துக் கொள்கின்றோம். நமது உயரிய எண்ணம் பலபேர் உள்ளத்தில் எதிரொலிக்கின்றது. நாம் கொடுக்கும் சங்கற்பங்கள், வாழ்த்துகள் நன்கு செயல்படுகின்றன. எண்ணத்தை ஆராயவும், அகத்தாய்வு (Introspection) செய்யவும், கவலைகளை ஆராய்ந்து ஒழிக்கவும் துரியதவம் துணையாகின்றது. புறமனத்தை நடுமனம் பூரணமாக வெற்றி கொள்ளுகின்றது. நிலையுறு மனம் பெறமுடிகின்றது. மனம் ஆல்பா அலையில் (வினாடி 8-13 சுழல் விரைவு) நிலைத்து நிற்கின்றது.

### *உடல் வினையியல் தன்மைகள்*

பீனியல் சுரப்பி கூம்பு வடிவத்தில் அமைந்திருக்கும். இந்தப் பீனியல் சுரப்பி மனஇயக்கத்தை உடலியக்கமாக மாற்றுவதில்

முக்கியப்பங்கு வகிக்கின்றது. இது மூளையின் மேற்பகுதியில் உள்ளது. இதன் இயக்கத்தை யோகத்தின்வழி செயல்பட வைப்பதே சித்தர் முறையாகும். 14 வயதுக்குப்பின் இதனுடைய செயற்பாடு குறையத் தொடங்கி விடுகின்றது. எனவே இதன் செயற்பாட்டை அதிகரிக்க யோகம், கற்பம் போன்றவை பயன்படுகின்றது. மேலும் இதை உயிரின் இருக்கை என்று குறிப்பிடலாம். உடலின் உட்புறத்தில் ஒரு கடிகாரம் போலச் செயல்படுவதாக அறிவியல் அறிஞர்கள் குறிப்பிடுவதுண்டு.

இதன் குறுக்குவெட்டுத் தோற்றத்தைப் (Cross Section) பார்க்கும்பொழுது வான்காந்தத்துடன் நேரடியாக ஆற்றலைப் பெறுகின்ற அமைப்பில் உள்ளது. இச்சுரப்பி உடலுக்குள்ளாக 15 முறை சுவாசித்தால் ஆயுள் 100; 2 முறை சுவாசித்தால் 750 ஆண்டுகள், ஒரு முறை சுவாசித்தால் ஆயுள் 1500 ஆண்டுகள். எனவே நீண்டநாள் வாழ மூச்சுப்பயிற்சி செய்ய வேண்டும். இருளான ஆழமான பகுதியில் அமைந்திருந்தாலும் கண்கள் வாயிலாக வெளிஉலகுடன் தொடர்புகொண்டு இருளையும் வெளிச்சத்தையும் பிரித்துணர வல்லது.

வெளிச்சம் மறைந்து இருள் சூழும்போது இந்தச் சுரப்பி மெலடோனின் (Melotonin) என்ற ஆர்மோனைச் சுரக்கின்றது. விடியற்காலை நேரம் நெருங்க நெருங்க மெலடோனின் உற்பத்தி நின்று விடுகின்றது.

குளிர்காலங்களில் நீண்ட இரவு நேரங்களில் மெலடோனின் உற்பத்தி அதிகமாகவும், கோடைக்காலங்களில் இதன் உற்பத்தி குறைவாகவும் இருக்கும். இதைப் பார்க்கும்போது காலநிலைகளின் மாறுபாட்டிற்கு ஏற்றவாறு மனநிலை மாறுபடும் என உணர முடிகின்றது.

இந்த ஏழு மையங்களும் உடலுக்கு உள்ளேயே உள்ளன. இவை மட்டுமின்றித் தவமியற்ற வெளியில் உள்ள சக்திகளம், சிவகளம் என்ற இரண்டும் துணைபுரிகின்றன. இவை பற்றி வேதாத்திரி மகரிசி சிறப்புறக் கூறியுள்ளார். இவ்விரண்டின் செயற்பாடு குறித்துக் காண்போம்.

**சக்தி களம் (பிரபஞ்ச களம்)**

மேற்சொன்ன ஏழு மையங்களும் மனித உடலுக்குள் இருக்கின்றன. சக்திகளமும், சிவகளமும் உடலுக்கு அப்பால் மிகப் பரந்து விரிந்து இருக்கின்றன. மனம் உடலை விட்டு வெளியே வந்து சக்தி களத்தில் விரிவடைகின்றது. பிரபஞ்சம் முழுவதற்கும் மனம் விரிவடைகின்றது.

சக்திகளம் என்ற எட்டாவது பிரபஞ்ச களத்தில் மனம் விரிந்து ஒன்றி நிற்கின்றது. கோடான கோடி நட்சத்திரங்களுக்கிடையே மனம் அகண்டா காரமாய் விரிந்துள்ளது. விநாடிக்கு 4-7 சுழல் விரைவில் மன அலைச்சுழல் இயங்குகின்றது. மனம் தீட்டா அலையில் இயங்குகின்றது.

நாம் வாழும் பூமி சூரிய மண்டலத்தில் உள்ளது. கோடிக்கணக்கான சூரியன்கள் சேர்ந்த தொகுப்பே நாம் வாழ்கின்ற பால்வெளி மண்டலம் (Milkyway Galaxy). கோடிக்கணக்கான மண்டலங்கள் (Galaxies) சேர்ந்த தொகுப்புதான் பிரபஞ்சம். மனித உருவமோ மிகமிகச் சிறியது. பிரபஞ்சமோ மிகமிகப் பெரியது. இப்பிரபஞ்ச களத்திற்கு மனம் விரிவடைகின்றது. பேரியக்கங்கள் ஆற்றலோடு ஆற்றலாகி இருக்கும்நிலை உருவாகின்றது. பிரபஞ்ச இரகசியங்கள் உள்ளத்தில் புலனாகின்றது.

சிவகளம் (சுத்தவெளி)

சிவகளம் என்ற சுத்தவெளி ஒன்பதாவது மையமாகும். இதுவே இறைநிலை. மேலும் மனம் விரிந்து பிரபஞ்சத்தையும் தாண்டி அதற்கப்பால் தோற்றங்களே இல்லாத சுத்தவெளியில் தவம் செய்து இறைநிலையுடன் ஒன்றி இணைகின்றோம். சுத்தவெளி என்பது வற்றாயிருப்பு, பேராற்றல், பேரறிவு, காலம் என்ற வளம் நான்கும் ஒன்றிணைந்த இறைநிலை ஆகும்.

சுத்தவெளி கும்மிருட்டாக உள்ளது. பாய்மப் பொருளாக உள்ளது. எங்கும் நிரம்பி உள்ளது. பேராற்றலாக விளங்குகின்றது. எல்லாவற்றையும் ஒழுங்காக இயக்கக்கூடிய பேரறிவாகவும் உள்ளது. காலம் என்ற நுண்ணதிர்வுடன் உள்ளது. சுத்தவெளி என்ற இறைநிலையில் மனம் ஒன்றிக் கலக்கையில் மனம் தூய்மை அடைகின்றது. மனம் விநாடிக்கு 1-3 சுழல் விரைவு வேகத்தில் உள்ள டெல்டா அலைக்கு வருகின்றது.

எந்தப் பொருளை நினைத்தாலும் அதற்கு ஓர் உருவம் இருக்கின்றது. அதுவும் இயங்கிக் கொண்டிருக்கிறது. அப்போது மனம் அந்த வடிவம் எடுக்கின்றபோது, மனமும் இயங்கிக் கொண்டுதானே இருக்கின்றது. எல்லாப் பொருட்களையும் கடந்து, காலம், தூரம், பருமன், வேகம் என்ற நான்கு பரிமாணங்களையும் கடந்து, சுத்தவெளியாக இருக்கக்கூடிய ஆதிநிலை - பிரம்ம நிலையை (அதைப் பாழ், சூனியம் என்று சொல்கின்றனர்) நினைக்கின்றோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது மனத்தினுடைய நிலைமை என்ன ஆகும்?

சுத்தவெளியை நினைத்தால் மனமும் சுத்தவெளி ஆகின்றது. அங்கேதான் தட்டுப்படக்கூடிய பொருள் ஒன்றும் இல்லையே! ஆகவே, மனம் தானாகவே நிற்கின்றது. இதுதான் துரியாதீத இரகசியம். துரியா தீதத்தில் நின்று பழகப் பழக மனம் நிலைத்து நிற்கின்றது. எல்லை கட்டி விட்டால் (Fraction) தான் அந்த எல்லையைமீறி மனம் அலையும்; எல்லையை நீக்கிவிட்டால் அது எங்கே அலையும்? அதுதான் பூரணமாய் ஆகிவிடுகின்றதே; எனவே மனம் அலைவதில்லை. அதனால்தான் துரியாதீதத்தை நிறைவேற்றும் நிலை என்று வேதாத்திரி மகரிசி சொல்லுகின்றார்.

இங்குத்தான் அறிவு நிறைபேறு பெற்று, இறைநிலையோடு இணைந்து நிற்கின்றது. தெய்வமே அறிவாக, அறிவு தெய்வமாக, பொருள் நிலையில் ஒன்றாய், இயக்க நிலையில் வேறுவேறாய் உயிர் பிரம்மத்தில் அடங்கி நிற்கின்றது. முக்கால ஞானம் மலருகின்றது. ஆணவம், கன்மம், மாயை அடியோடு ஒழிகின்றன. நடப்புக்குத் தக்கவாறு நினைவைச் சரிப்படுத்திக் கொள்ளும் தகைமை தோன்றுகின்றது. தத்துவ விளக்கங்கள் எளிதில் கிடைக்கின்றன. அவிழாத முடிச்சுக்கள் அவிழுகின்றன. துரியாதீதமே சீவப்பிரமம். எந்த அதிர்வியக்கத்தில் மனம் நின்றால் பிரபஞ்ச இரகசியங்கள் எல்லாம் அறியப்படுமோ இந்த இடம்தான் சமாதிநிலை. மனத்தின் ஆழமே துரியாதீதம். அங்கே போகப்போக, நிலைக்க நிலைக்கத்தான் மனத்திற்கு அமைதி உண்டாகின்றது. முன்வினை, தன்வினை, பின்வினை எனும் மூவினைகளும் போகின்றன. நாட்பட்ட நோய்களும் நீங்குகின்றன. அறிவை இங்கு மெய்ப்பொருளோடு இணைத்து இணைத்துத் தவமியற்றும்போது அறிவிற்கு அமைதியும் ஓய்வும் முழுமையும் கிடைக்கின்றன.

இதனால் மனத்தூய்மையும், வினைத்தூய்மையும் பெறுகின்றோம். வெட்டவெளி, பாழ்நிலை, சூனியம், சிவகளம், ஆதி, அநாதி, பிரம்மம், பூரணம், மெய்ப்பொருள், பரம்பொருள், சிவம், பேரறிவு, முக்தி என்பன எல்லாம் இத்தவ நிலையே ஆகும். நிலைபேறு மனம், முழுமைப்பேறு, வீடுபேறு என்பதும் இதுவேயாகும்.

### ஒன்பதுமையத் தவத்தின் பயன்கள்

உடலிலுள்ள ஒவ்வொரு மையமும் நன்கு இயக்கம் பெறுகின்றன. நாளமில்லாச் சுரப்பிகள் நன்கு இயங்குகின்றன. தவசக்தி மிகுதியை உடல்சக்தியாக மாற்றுகின்றது. புலன்களுக்கு அப்பாலான அறிவு கிடைக்கின்றது. பிறர் எண்ணத்தை அப்படியே அறிந்துகொள்ள முடிகின்றது. சூக்குமப் பயணம் செய்ய முடிகின்றது. வீரமும், அச்சமின்மையும் உண்டாகின்றன. ஆகாசம் பற்றிய

தெளிவான அறிவு கிடைக்கின்றது. ஆகாமிய வினை தடுக்கப்படுகின்றது. பிராப்தவினை நீங்குகின்றது. பேரியக்க மண்டலமான பிரபஞ்சம்வரை மனம் விரிவடைகின்றது. சஞ்சிதவினை நீங்குகின்றது. இறைநிலையோடு ஒன்றிக் கலக்கின்றது.

**நித்தியானந்தம்**

**வேதாத்திரி மகரிசியின் மனவளக்கலை** இத்தவம் குறித்த பின்வரும் சிறப்பான செய்திகளை நமக்குத் தெளிவுபடுத்துகின்றது.

நித்தியானந்த தவம் செய்வதால் சீவகாந்தம் உடலிலுள்ள எல்லாச் செல்களிலும் பரவுகின்றது. புத்துணர்ச்சி பெறுகின்றது. உடல் சுறுசுறுப்பாக இருக்கின்றது.

நித்யம் + ஆனந்தம் = நித்யானந்தம். நித்யம் என்றால் நாளும் (தினமும) என்று பொருள். எப்பொழுதும், ஒவ்வொரு நொடிப் பொழுதும் என்று பொருள் கொள்ளலாம். நித்யம் + ஆனந்தம் சேர்ந்து வரும்போது நித்யானந்தம் என்றாயிற்று. ஆனந்தம் என்பது இன்பம், பேரின்பம்.

*சுத்தவெளியின் பேரறிவு*

இதன் விளக்கம் என்ன என்றால், சுத்தவெளியே அனைத்திற்கும் மூலப்பொருள் சுத்தவெளி பேராற்றலுடையது. பேரறிவுடையது. சுத்தவெளியே தன்னியல்பால் எண்ணிலடங்காத் தோற்றங்களாகவும், உயிரினங்களாகவும், உயர்நிலையில் மனிதனாகவும், நானாகவும் இருக்கின்றது. சுத்தவெளியின் பேரறிவானது எல்லாத் தோற்றப் பொருட்களிலும், உயிரினங்களிலும் மனிதனிலும் ஆட்சி செய்கின்றது. சடப்பொருட்களில் அமைப்பு, துல்லியம், இயக்க ஒழுங்கு (Pattern, Precision, Regularity) என்ற முறைகளிலும், உயிரிணங்களில் உணர்தல், துய்த்தல், பிரித்துணர்தல் (Cognition, Experience, Discrimination) என்ற முறைகளிலும் மனிதனில் தன்னை உணர்தல் (Self Realisation) என்ற வகையில் பேரறிவு ஆட்சி செய்வதை மனம் இரசித்து, தன்னை உணர்ந்து பரவசமடைகின்றது. பேரானந்தம் அடைகின்றது. இந்த நிலையை உணர்த்த உதவும் தவமே நித்தியானந்த தவமாகும்.

இந்த உணர்விலே இருந்து கொண்டு, அந்தத் தெய்விக ஆற்றலே என்வயமாகவும் ஆகட்டும் என்ற எண்ணத்தோடு உடலைக் கவனிக்கும்போது வான்காந்த ஆற்றல் நமது சீவகாந்தத்தோடு கலப்புறும். ஆன்மஅறிவு ஓங்கும். இன்பமாக, பேரின்பமாக எப்போது நினைத்தாலும் அதே இன்பம் உள்ளுணர்வாக ஊற்றாக இருப்பதற்கும் வழிவகுக்கின்றது. இந்த நித்தியானந்த தவம்.

நமது உடலுக்குள் உயிர் (விண்) ஓடிக்கொண்டிருக்கிறது. காற்றை விட உயிர் நுண்ணியது. உயிர் விரியவும் சுருங்கவும் கூடிய தன்மை உடையது. இதை நம் விருப்பம்போல் விரித்து, சுருக்கி அதற்கொரு ஊக்கம்தரத் தன் வசப்படுத்துவதற்குரிய இயக்கத்திற்குக் கொண்டு வரவேண்டும்.

இந்த மனத்தால் உடலில் உள்ள சக்தியை நாமாக இயக்குவதையும், தானாக இயங்குவதையும் முன்னோர்கள் கண்டுபிடித்தனர். இரண்டு வகையாக இயங்குகிற இயக்கத்தைக் கணித்தனர். அவற்றை மைய நரம்பு மண்டலம் (Central Nervous System) மற்றும் தானியங்கி நரம்பு மண்டலம் (Autonomic Nervous System) என்று சொல்லுவார்கள். மைய நரம்பு மண்டலம் நமது மனம் இடும் ஆணைகளுக்கேற்ப இயங்கக்கூடியது. மூளையும், தண்டுவடமும் மைய நரம்பு மண்டலத்தில் உள்ளன. தானியங்கி நரம்பு மண்டலம் மனத்திற்குக் கட்டுப்படாதது; தானாக இயங்கக்கூடியது. இதயம், நுரையீரல், இரைப்பை, சிறுநீரகம் போன்ற உறுப்புகள் தானியங்கி மண்டலத்தில் உள்ளன. உடலில் ஒவ்வொரு செயலுக்குத் தகுந்தவாறு அதற்கொரு அதிர்வு இயக்கம் வரும். கையால் எழுதுவது, கையைத் தூக்குவது, காலால் நடப்பது ஆகியவை நமது மனம் விரும்பிச் செய்கின்ற செயல்களாகும்.

இதில் இன்னொரு பெருமை என்னவென்றால் மனம் என்பது அலை. அந்த அலையை உற்பத்தி செய்வது உயிர். உயிரைவிட மனஅலை அதிகமாக விரியும். மனவேகம் அளவிற்கு உயிர் வேகம் இருக்காது. இருந்தாலும் ஒவ்வொரு இயக்கத்திலேயும் உயிர் வேகம் இருக்கும்.

இத்தவத்தில் நமது சூக்கும சரீரத்தை உடலளவு விரித்தும் துரியஅளவு சுருக்கியும் பழகுகின்றோம். பிறகு உடலளவு விரிந்த நிலையில் மனத்தை நிறுத்திக்கொண்டு உச்சியில் இருந்து உள்ளங்கால்வரை உடல் முழுவதும் உணர்வாகக் கவனிக்கின்றபோது போதிய அளவு சீவகாந்த சக்தி திணிவு உடலில் ஏற்படும்.

நம் ஆற்றலை நமக்குள்ளாகச் செலுத்தும்போது உடலில் உள்ள ஒவ்வொரு செல்லும் பூரித்துச் செயல்படுவதை அனுபவமாக உணரலாம்.

**நித்தியானந்தத் தவத்தின் பயன்கள்**

சீவகாந்தம் பெருகி, உடல் முழுவதும் பரவுகின்றது; உடல் புத்துணர்ச்சி பெறுகின்றது; எப்போதும் இன்பமாக இருக்க

முடிகின்றது; பேரானந்தக் களிப்பு ஏற்படுகின்றது; நோய் எதிர்ப்புச் சக்தி கூடுகின்றது. மனோசக்தியும், நுண்மாண் நுழைபுலனும் ஏற்படுகின்றன.

**மருத்துவம்**

யாக்கை நிலையாமை என்பது அனைவரும் உணர்ந்த தத்துவம். உலகில் அவ்யாக்கை உயிரோடு வாழ மருத்துவ முறை அனுபவம் அவசியம். உயிர் சிறப்பு நிலைய்யை அடைய மருத்துவமே ஊன்றுகோல் ஆகின்றது.

பொதுப்பாயிரத்தில் அறஞ்செய்யான் திறம் எனும் பகுதியில் அறம் செய்யாததால் வரும் தீமையைக் கூறுகின்றார். அதுபோது அறம் செய்யாவிட்டால் பலவிதமான நோய்களும் வரும் என்று கூறுகின்றார். அறம் செய்யாதவனுக்கு இருமல், சோகை, கோழை, கபம் முதலியன வரும் என்கின்றார். இடி, நாகம், தொண்டை நோய், பிளவை முதலிய கொடியதுன்பம் அறம் செய்பவரை அணுகாது என்கின்றார். இதை,

இருமலும் சோகையும் ஈளையும் வெப்பும்
தருமஞ்செய் யாதவர் தம்பால தாகும்
உருமிடி நாக முரோணி கழலை
தருமஞ்செய் வார்பக்கல் தாழ்கி லாவே (திரு.120)

என்ற பாடலில் கூறுகின்றார்.

கொடிய நோய்க்கு அஞ்சுவது மனித இயல்பு. எனவே நம் அச்சத்தைப் பயன்படுத்திக் கொண்டு நாம் அஞ்சும் கொடிய நோய்கள் அறம் செய்தால் வராது என்கின்றார். இப்பாடலில் நோயும் அதற்கான மருந்தும் சொல்லப்பட்டு உள்ளது. இன்னமுறையில் இவை பொருந்தி இருந்தால் இன்னநோய் அணுகாது என வரையரை செய்து கூறியுள்ள தொன்மையான நூலாகத் திருமந்திரம் உள்ளதை இதன்வழி உணர்த்துவதாக இவரது பாடல்கள் உள்ளன.

மருந்தே இல்லாமல் நோயைத்தடுத்து இறப்பை வெல்லலாம். குழந்தை கருவாகும்போதே நோயும் உருவாகி விடுகின்றது. தன்நோய்க்குத் தானே காரணம். தன் நோய்க்குத் தானே மருந்து என்கின்றது தத்துவம். மனித உடம்பில் 4448 நோய்கள் உண்டாகின்றன. கழுத்துக்குமேல் உள்ள பகுதியில் 1008 நோய்கள் உண்டாகின்றன. இந்த நோய்களுக்கெல்லாம் உடலுக்குள்ளேயே மருந்து இருக்கின்றது. நல்ல மருந்தானது உடல் நோயையும் மன நோயையும் போக்க வேண்டும். நோயே வராமல் தடுக்க வேண்டும். உடல்பிணியை வராமல் தடுப்பது, மறுப்பது முதல் மருந்தாகும்.

உள்ள நோய்க்கும் மருந்து தடுப்பதேயாகும். இனி இவ்வுடலுக்கும் நோய் வராது, இறப்பைத் தடுத்து நிறுத்துவதற்கும் ஒரு மருந்து தவக்கனலால் உயிராற்றலைப் பெருக்கிக் கொள்வதாகும். மறுப்பது என்பது உடலை மறந்த நிலையான சமாதி நிலையாகும்.

**மறுப்பது உடல்நோய் மருந்தென லாகும்**
**மறுப்பது உளநோய் மருந்தெனல் சாலும்**
**மறுப்பது இனிநோய் வாரா திருக்க**
**மறுப்பது சாவை மருந்தென லாமே**
**(திருமூலர் எண்ணாயிரம்)**

*வீரமருந்து*

மருந்து என்பது வீரியத்தால் உண்டானது. எனவே இதற்கு **வீரமருந்து** என்று பெயர். பெண்ணின் துணையால் கிடைக்கப் பெறுவதால் **நாரிமருந்தென்பர்.** ஆகாய வெளியாகிய தலை உச்சியில் தோன்றுவதால் **தேவமருந்தென்பர்.** இது மருந்துகளுக்கு எல்லாம் முதன்மை மருந்து என்பதால் **ஆதி மருந்து** என்பர். இம்மருந்து நமக்குள்ளேயே உள்ளது என்பதுதான் இதன் சிறப்பு.

**வீர மருந்தென்றும் விண்ணோர் மருந்தென்றும்**
**நாரி மருந்தென்றும் நந்தி அருள்செய்தான்**
**ஆதி மருந்தென் றறிவார் அகலிடஞ்**
**சோதி மருந்திது சொல்ல வொண்ணாதே** (திரு.850)

மேற்சொல்லப்பட்ட வீர, பூர, இரச மருந்துகளை விடவும் நாரி மருந்தென்று ஒன்று இறைவனால் அளிக்கப்பட்டுள்ளது. இவற்றையெல்லாம்விட ஆதி மருந்தாகிய அகலிடம் சோதியாகிய ஞானமருந்து இவ்வுடலாகிய காயத்தைத் திரியாக்கிப் பாவக்கடலாகிய அகல்விளக்கில் எரித்தால் மிஞ்சுவது பாவநாசம்; வினை நீங்கினால் உடலுக்கும் உயிருக்கும் துன்பமில்லை.

*நோய்கள்*

கன்ம வினைகளாலும், மாறுபட்ட உபவாதி செயல்களாலும், சகிப்புத்தன்மை இல்லாததாலும், எப்போதும் கோபப்படுவதாலும், எப்போதும் சூரியனைப் பார்த்துக் கொண்டிருப்பதாலும், தொழிலற்றுச் சோம்பலாய் இருப்பதாலும், நடிப்பதாலும், எப்போதும் சத்தமாகப் பேசுவதாலும், அளவிற்கதிகமான உடலுறவினாலும், போதைப் பொருட்களை மருந்துப் பொருட்களைப் பயன்படுத்துவதாலும், அதிர்ச்சி தரும் செய்திகளைக் கேட்பதாலும், தலையில் அடிபடுவதாலும், இரத்தத்தின் அளவு குறைவதாலும் மனம் பாதிக்கப்படுகின்றது. மனம் இன்ப உணர்ச்சிக்கு மாறான உணர்ச்சியைப் பெறும்போது பாதிப்படைகின்றது.

மேலும் நீரிழிவு, வாதநோய்கள், நாளமில்லாச் சுரப்பிகளின் மாறுபாடு, இதயநோய், நரம்பு மண்டலம் தொடர்பான நோய்கள், புற்றுநோய், வைட்டமின் குறைவு முதலான நோய்களாலும், சில மருந்துப் பொருட்களை நீண்ட நாட்கள் பயன்படுத்துவதாலும் மன நோய்கள் ஏற்படுகின்றன.

*மனவலிமை*

மனம் பாதிக்கப்படாமல் தடுக்க மனத்தின் குறைகளைப் போக்க வேண்டும். நல்வழியில் தீர்மானமாக இயங்கும் சுயபலத்தை மனத்திற்கு ஊட்ட வேண்டும். மனம் தனக்குத்தானே அந்த வலிமையை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். மனம் தனது ஆதியாகிய உயிரில் ஒடுங்கிப் பின்னர்ச் சமாதி நிலையை அடையுமாயின் அந்த மனத்திற்குச் சொந்தமானவர் இறைநிலையை அடைகின்றார். இந்த மனம் ஒடுங்கிப் பேரானந்தம் அடைவதற்கான வழிமுறைகளையே திருமூலர் மிக விரிவாகக் கூறுகின்றார்.

*யோகப்பயிற்சி*

யோகப் பயிற்சியால் நோய்கள் அகலும். வாத, பித்த சிலேத்துமம் மிகுதலும் குறைதலுமே பல நோய்களுக்குக் காரணம் என்பர். எனவே இவற்றை ஒழுங்குபடுத்தி உடலில் நோய்வராமல் யோகப்பயிற்சி கட்டுப்படுத்தும். மூலாதாரத்தில் உள்ள குண்டலினியை எழுப்பி நடுநாடி வழியாக மேலே ஏற்ற வேண்டும். இப்படிச் செய்தால் உடம்பை அழகாகவும் இளமையோடும் வைத்திருக்க முடியும்.

வீங்கும் கழலை சிரங்கொடு குட்டமும்
வீங்கும் வியாதிகள் சோகை பலவதாய்
வீங்கிய வாதமுங் கூறு முடமதாம்
வீங்கும் வியாதிகள் கண்ணில் மருவியே (திரு.635)

கண்ணில் வியாதி யுரோகந் தனஞ்செயன்
கண்ணிலில் வராணிகள் காச மவனல்லன்
கண்ணினிற் கூர்மன் கலந்தில னாதலாற்
கண்ணினிற் சோதி கலந்ததும் இல்லையே (திரு.636)

*பத்து வாயுக்கள்*

பத்து வாயுக்களில் தனஞ்செயன் மிகச்சிறந்தது. ஏனையவை பிராணன், அபானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், உதானன் என்னும் ஒன்பது வாயுக்களாகும். இடகலை, பிங்கலை, சிருவை, புருடன், காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குரு என்னும் ஒன்பது நாடிகளில் சமமாக இருந்து உடலை இயக்குகின்றது.

தசவாயுக்களில் மற்ற வாயுக்கள் உடலில் இருந்து உயிர் புறப்பட்டவுடன் அடங்கிச் சென்றுவிடும். தனஞ்செய வாயு மட்டுமே இறந்தபின்னும் உடலை வீங்கி வெடிக்கச்செய்து மண்ணோடு மண்ணாகக் கலக்கச் செய்யும் செயலையாற்றுகின்றது.

*நாடி சோதனை*

திருமூலர் குதிங்காலின் உட்புறம், மர்மஸ்தானம், உந்தி, மார்பு, காது, மூக்கு, கழுத்து, கரம், புருவம், உச்சி முதலிய பத்து இடங்களில் நாடி சோதனை செய்யலாம் என்கின்றார். சித்தர்கள் கைநாடி சோதனை நோய் கணிப்பிற்குச் சிறந்ததெனக் கூறியுள்ளனர்.

**கருவுற்பத்தி**

முட்டையில் இருந்து தோன்றுதல், விதையில் இருந்து தோன்றுதல், பையிலிருந்து தோன்றுதல், வியர்வையில் இருந்து தோன்றுதல் எனச் சித்த மருத்துவம் பிறப்பை நான்கு பெரும் பிரிவுகளாகக் கூறுகின்றது. பறவை, ஆமை, முதலை என்பன முட்டையில் இருந்தும், தாவரங்கள் விதையில் இருந்தும் பேன் என்பன வியர்வையில் இருந்தும், மனிதர்களும், விலங்குகளும் கருப்பையில் இருந்தும் தோன்றுகின்றன.

இரண்டாம் தந்திரத்தில் திருமூலர் கர்ப்பக்கிரியை என்னும் பகுதியில் கர்ப்பத்தில் நடக்கும் தொழிலை, இறைவன் சீவர்களைக் கருப்பையில் காக்கும் முறையை விளக்குகின்றார். அதனை,

**ஆக்குகின் றான்முன் பிரிந்த இருபத்தஞ்**
**சாக்குகின் றானவ னாதியெம் ஆருயிர்**
**ஆக்குகின் றான்கர்ப்பக் கோளகை புள்ளிருந்**
***தாக்குகின் றான்அவன் ஆவ தறிந்தே!*** (திரு.451)

மனிதன் இறப்பின்போது பிரிந்த (முற்பிறப்பில்) இருபத்தைந்து தத்துவங்களைத் தோற்றுவிக்கின்றான். ஆதியான இறைவன் அருமையான உயிரை அதன் தாயின் கருப்பையில் பொருத்திப் பூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக் கரணம் நான்கு, புருடன் ஒன்றாக இருபத்தைந்து ஆகியவற்றை நிலைநிறுத்திச் செந்தாள் கொளுவி (திருவடியைப் பதித்து) பத்துமாதம் தங்கியிருக்க வேண்டும் என்கின்ற நியதியை வகுத்துள்ளான். இதில் இருபத்து நான்கு தத்துவம் மட்டுமே ஒடுங்கியிருக்கும்.

கருவில் புகுந்த தத்துவங்களுடன் கூடிய புருடனது அறிவின் ஆற்றல் நெற்றி உச்சியில் பொருந்தியிருக்கும். விந்து தனஞ்செயன்

எனும் வேகக்காற்றுடன் கருப்பையில் நுழைகின்றது. போகின்ற எட்டு, புகுகின்ற பத்து, விகாரங்கள் எட்டு, வாயில்கள் ஒன்பதாக ஆண்பெண் கூட்டுறவால் உண்டாகும் கருவில் மேற்சொல்லப்பட்ட கருவி, கரணாதிகள், தத்துவங்கள் அமையாவிடில் இழிபிறப்பாகும். கருவில் தாய்தந்தையின் இயல்பே அமையும். நினைவு உண்டானபின் குணமும், சொல்லும் அமைகின்றது. சுக்கில சுரோணிதக் கருவில் ஒன்பது துவாரங்களோடு குழந்தையைப் படைத்தருளினான்.

திருவாசகம் மானுடப் பிறப்பினுள் மாத உதிரத்து என்று இயம்பும் நிலையே பிறப்பின் உறைவிடமாம். அப்பர் பிறப்பை விளக்கும்போது கருவாகிக் குழம்பியிருந்து கலித்து மூளை என்கின்றார்.

ஓர் உயிர் கருப்பையுள் தோன்றும்போதும் முன்னைத் தூல உடம்போடு ஒழிந்த ஐந்து ஞானந்திரியம் ஐந்து கன்மேந்திரம், ஐந்து பூதம், சந்தாதி ஐந்து விடயம், வசனாதி ஐந்து விடயம் என்னும் இருபத்து ஐந்தும் மீண்டும் அதன் சூக்கும உடம்பில் இருந்து தோன்றும். அங்ஙனம் தோற்றுவித்தல், அக்கருப்பையுள் அத்தோற்றத்திற்குத் தடையாகவரும் இடையூறுகளை அறிந்து அவற்றை நீக்குதல் பொருட்டு அவ்விடத்து இருத்தலேயாகும்.

*பிரணவம்*

இக்கருவானது பிரணவ எழுத்தான ஓம் போன்று வடிவம் கொண்டிருக்கும். கண்ணுதல் நாமம் (திரு.474) என்ற பாடலில் இறைவனது நாமமாகிய பிரணவத்தைக் கலந்து உடம்பில் நாதம் விளங்கச்செய்ய மண் முதலான பூதங்களை வகுத்திட்டான்.

இவ்வளவு வேலையும் மாயையின் பொருட்டே நடந்தேறியது. மாயையின் வலிமையால் சகலர் ஆயினர். இச்சகலரில் மூவகையுண்டு. மூவகைச் சீவ வர்க்கத்தினரும் இறுதியில் அவரவர் தன்மைக்கேற்ப முத்திப் பேறடைவர்.

இங்ஙனம் திருமந்திரம், பிண்டவுற்பத்தியான கருவுற்பத்தி, அவற்றின் பண்பு, பாலினம் ஆகியன பற்றிக் கூறுகின்றது. மாயையின் வலிமையால் விஞ்ஞானகலர், பிரளயகலர், சகலர் முறையான ஞானகர்மம் புரிந்தவர், அஞ்ஞான கர்மம் புரிந்தவர், ஞானம் படிப்படியாகப் பெறுபவர், அனைத்துப் பிறப்புகளிலும் சிவப்பேறு அடைபவர் முதலான அரிய தத்துவங்களை இத்தலைப்பின் வாயிலாக அறியமுடிகின்றது.

**கருவில் அமையும் உடல்**

கருவில் உடல் தோன்றும்போது உள்ள முக்குணங்களின் (முத்தோடங்களின்) தன்மைக்கேற்றவாறு உடல் அமைகின்றது.

**1. வாத உடல்** : உடல் பருத்துக் குளுமையாகக் கருமை நிறத்துடன் இருக்கும், பொய்யை மெய்யெனப் பேசுவர். மந்த புத்தியுடன் அசட்டையாக இருப்பர்.

**2. பித்த உடல்** : உடல் மெலிந்து, சூடாக, வெண்பசுமை நிறத்துடன் இருக்கும். திடத்துடன் கடினமான செயல்களைச் செய்வதுடன் பொய், மெய் பற்றி ஆய்வர்.

**3. கப உடல்** : உடல் தணிந்து, வேர்வையுடன் சிவந்த நிறத்துடன் இருக்கும். அதிகப் பசியுடன் அதிக இனிப்பையும் விரும்புவர். அடக்கமாகவும், அழுத்தமாகவும் முடிவான வாதத்தையே பேசுவர்.

**4. வாதபித்த உடல்** : உடல் மெலிந்து கருமைநிறமாகக் காணும், காரம், துவர்ப்பை விரும்புவர்.

**5. வாதகப உடல்** : உடல் தடித்து யானை போன்ற நடையுடன் சிவப்பு நிறமாயிருக்கும். அதிகப் புளிப்பும் காரமும் உண்ண ஆர்வம் உள்ளவர்.

**6. பித்தவாத உடல்** : உடல் வரண்டு வெண்சிகப்பு நிறமாயிருக்கும். அறிவுடைமை, இனியகுரல் ஓசை, நறுமணங்களில் காரம், புளிப்பில் விருப்பம் உள்ளவர்.

**7. பித்தகப உடல்** : சண்பக மலர்போல் உடல்நிறம் இருக்கும். தர்ம சிந்தனை, இனியகுரல் வளம் இருக்கும்.

**8. கபவாத உடல்** : உடல் தடித்து கருப்பு, சிவப்பு நிறமுடன் இருக்கும். பல கலைகளை அறிவர், யோக சாதனையில் ஈடுபடுவர். காரம், புளிப்பை விரும்புவர்.

இவ்வாறு மனித உடல், அந்தந்த ஆன்மாக்கள் செய்த நல்வினை, தீவினைகளுக்கேற்ற தாயும், தந்தையும், உடலும்,

மனமும், அறிவும் பெற்று உலக வாழ்க்கையின் இன்பதுன்பங்களை நுகர்வதற்குப் பிறவியை எடுக்கின்றது.

### உயிரின் இறுதிநிலை

எந்த நிமிடத்தில் உடம்பில் நெருப்பை உண்டாக்குகின்ற சக்தி நின்று விடுகிறதோ அப்போது உயிர் நீங்கி நெருப்பும் நீங்கி விடுகின்றது. மீதி இருப்பது மண்ணும் தண்ணீரும் ஆகிய உடம்புதான். இதை ஒரு குளத்தின் கரையில் கொண்டு புதைத்துப் பல ஆண்டுகள் சென்றபின் எடுத்துப் பார்த்தால் எல்லாம் மண்ணுடனே சேர்ந்து மண்மயமாகி இருக்கும்.

சாணியிலிருந்து புழுக்கள், கழுதை வெட்டையிலிருந்து தேன், வண்ணத்துப் பூச்சிகள் உருவாகின்றன. தம்பலப் பூச்சிகளை உலர்த்திப் பொடித்து வைக்கோலினால் மூடித் தண்ணீர் தெளித்து வைத்தால் மேற்கண்ட பூச்சிகள் ஏராளமாக உண்டாகி விடுகின்றன. இதைப் போலவே பச்சை தவளை ஒன்றைப் பக்குவப்படுத்தினால் பத்து நாழிகைக்குள்ளாக மஞ்சள் நிறமுள்ள சிட்டுக்குருவி உண்டாகின்றது.

இவற்றைப் போலவே உலகத்திலுள்ள நால்வகை யோனியும், எழுவகைத் தோற்றமும், 84 இலட்சம் சீவராசிகள் என்னும் உயிர்ப் பிராணிகளும், மக்கள் உடலும் இம்மண்ணில் உள்ள ஒவ்வொரு கருவில் இருந்தும் இயற்கை அன்னையின் அருளினாலே உண்டாகி இருக்க வேண்டும்.

இவற்றுக்கு எல்லாம் பிறப்பிடமாகிய பூமியே பிரம்மா என்றும், இவற்றைக் காய்த்துப் பட்டுப்போகாமல் காத்து வருகின்ற தண்ணீரே விஷ்ணு என்றும், இறுதிக்காலத்தில் அனைத்தையும் அழிக்கின்ற நெருப்புதான் உருத்திரன் என்றும் சித்தர் நூல்கள் கூறுகின்றன.

### விந்துவைக் காத்தவனின் தோற்றமும் சிறப்பும்

உணவானது தூல உடம்பையும், மனத்தையும் வளர்க்கின்றது. அடுத்து மலமாய் வெளியேறுகின்றது. முன்தினம் உண்ட அன்னமும் இரசமும்தான் உடலாகவும் மனமாகவும் வளர்கின்றது. இரசம், இரத்தம், மாமிசம், கொழுப்பு, என்பு, மூளை, சுக்கிலம் எனும் ஏஅரிய பொருளை எளிய சொற்களால் அனைவருடைய உள்ளத்திலும் பதியும்படி தாதுப் பொருட்களுள் இரசம், இரத்தம், சுக்கிலம் என்ற மூன்றும் கூடுவதே விந்து ஆகும். இவ்விந்து 21 நாள்வரை உடம்பில் வளரும். மூன்று நாட்கள் உடல் விந்துவாக இருக்கும். பின் மனவிந்துவாக மாறும். இதுவே ஞானவித்து ஆகும். ஞான உணர்வில் நின்றால் இவ்விந்து அழியாது.

உலக மயக்கத்தில் இருந்தால் இவ்விந்து அழியும். இவ்விந்துவை அழியாமல் உடலைப் பாதுகாக்க வேண்டும்.

மீண்டும் ஏழாம் தந்திரத்தில் விந்து செயம் என்ற பகுதியில் 38 பாடல்களில் இக்கருத்தின் தொடர்ச்சியாகச் சிலவற்றைக் கூறுகின்றார்.

***புணர்ச்சிக்கான காலம்***

வளர்பிறையின்பின் ஆறு நாட்களும், தேய்பிறையில் முன்ஆறு நாட்களும் புணர்ச்சிக்குரிய நாட்களாகும். யோகியர், வளர்பிறையின் ஆறு நாட்களும், தேய்பிறையில் (சூரியனுக்கு உரிய 9 நாட்களில் 1, 8, 13 அமாவாசை ஆகிய இந்நாட்கள் நீங்கலாக) 5 நாட்களும் ஆக 11 நாட்கள் புணர்ச்சிக்குரிய நல்ல நாட்கள் என்று கருதுகின்றனர். இல்லற வாழ்க்கையர் பூப்பு எய்திய மூன்று நாட்கள் நீங்கலாக 27 நாட்களும் கலவி செய்யலாம்.

பொழுது புலர்வதற்கு முன்னுள்ள ஒன்றரை மணிநேரம் (பின்னிரவு) மூக்கின் வலப்பக்கம் மூச்சு ஓடும். அதுவே புணர்ச்சிக்குரிய நேரம். முன்னிரவில் புணர்ச்சி கொண்டால் வலிமை இழப்பர். பின்னிரவில் கொண்டால் புணர்ச்சியால் வரும் உணர்ச்சியைப் பெறுவர் (1941).

பெண்களைக் கூடும் காலம் இரவாகும். அதுதான் விந்துவைக் கருப்பையுள் தங்க வைக்கும் காலமாகும். வலது மூக்கில் காற்று ஓடும்போது கலவி செய்தல் வேண்டும். இடப்பக்கம் ஓடினால் வலப்பக்கமாக மாற்றிக் கொள்ள வேண்டும். பகல் புணர்ச்சி என்றும் கூடாது.

புணர்ச்சிக்குமுன் குடலில் இருக்கும் மலத்தைப் போக்க வேண்டும். வாதம்பித்தம் சிலேத்துமம் ஆகிய மூன்றையும் தத்தம் நிலையில் இருக்கச் செய்ய வேண்டும். அதன்பின் கலவி செய்தல் வேண்டும்.

ஆண்பெண் கூட்டுறவின்போது ஏற்படும் சுக்கில சுரோணிதக் கலப்பில் சுக்கிலம் எதிர்த்துச் சென்றால் தாமச குணத்துடன் குழந்தை பிறக்கும். சுரோணிதம் எதிர்த்துச் சென்றால் சத்துவ குணம்; இரண்டும் சமமாக இருந்தால் இரசோ குணத்துடன் குழந்தை பிறக்கும் (458).

கருவுருவாகும்போதும் ஆண், பெண், அலி எனும் மாற்றம் உண்டாகின்றது.

> **ஆண்மிகில் ஆணாகும் பெண்மிகிற் பெண்ணாகும்**
> **பூணிரண் டொத்துப் பொருந்தில் அலியாகும் .....**
> **ஆண்வச மிக்கிடில் பாய்ந்ததும் இல்லையே (திரு.478)**

சுக்கிலம் அதிகமானால் ஆணாகும். சுரோணிதம் அதிகமானால் பெண் ஆகும். இரண்டும் சமமானால் அலியாகும் (482). சுக்கிலம் அளவில் மிக அதிகமாகச் சேர்ந்தால் அரசன்போல் ஆண்மையுடையவன். சுக்கிலம் மிக அதிகமாகிச் சுரோணிதத்துடன் சேர்ந்தால் பயனில்லாமல் சிறுநீருடன் வெளிப்பட்டுக் கழியும்(462).

### இரட்டைக் குழந்தை

புணர்ச்சிக் காலத்தில் மூச்சுக்காற்று வலதுப்பக்கம் இயங்கினால் ஆண்குழந்தை பிறக்கும். இடப்பக்கம் இயங்கினால் பெண்குழந்தை பிறக்கும். மூச்சுக்காற்றை அபானவாயு எதிர்த்தால் இரட்டைக் குழந்தைகள் பிறக்கும். சூரியசந்திர கலைகளில் காற்று சமமாக இயங்கினால் அலியாகும். புணர்ச்சியின்போது இருவருக்கும் காற்று சமமாக ஓடினால் குழந்தை அழகாகும்.

குழவியும் ஆணாம் வலத்தது வாகில்
குழவியும் பெண்ணாம் இடத்தது வாகில்
குழவி இரண்டாம் அபானன் எதிர்க்கில்
குழவி அலியாகும் கொண்டகால் ஒக்கிலே

(திரு.482)

ஆண் பெண் அலியாவதற்குத் தந்தையது கூறே முதல் காரணமாகின்றது; பாய்கின்ற வாயு பெண்களுக்கு இல்லை.

### கருத்தரிக்கும் காலம்

விந்தானது கருப்பையுள் பாய்ந்தபின் பெற்றோருக்கு 5 மாத்திரை அளவு மூச்சுக்காற்று ஓடினால் பிறக்கின்ற குழந்தைக்கு ஆயுள் 100; 4 மாத்திரை அளவு ஓடினால் குழந்தைக்கு 80 ஆண்டு; யோகியால்தான் இப்படி மூச்சுக்காற்றைப் பகுத்து அறிந்து விந்தினைப் பாய்ச்ச இயலும். மூச்சுக்காற்று 4 மாத்திரைக்குக் குறைந்தால் குழந்தை குட்டையாகும்.மூச்சுக்காற்று இளைத்தால் முடமாகும். காற்று ஓடும்போது இடையில் தடைப்பட்டால் கூன் ஆகும்.

கருத்தரிக்கும் காலத்தில் பெண்ணின் வயிற்றில் மலம் அதிகமானால் குழந்தை மந்தமாகும். நீர் அதிகமானால் ஊமையாகும். இவை இரண்டும் சமமானால் குருடனாகும். (திரு.481).

கருவுள் உருவமாவது பத்துமாதம் வளர்ந்து பக்குவம் வந்தபின் பூமியில் பிறந்து வளர்ச்சி அடையும்.

**உருவம் வளர்ந்திடும் ஒண்டிங்கள் பத்தில்**
**பருவம தாகவே பாரினில் வந்திடும்**

மருவி வளர்ந்திடு மாயையி னாலே
அருவம தாவதிங் காரறி வாரே (திரு485)

கரு அன்னையின் கருப்பையுள் பத்துமாதம் வளர்ந்து குழவியாய்ப் பிறந்து வளரும் நிலையை இப்பாடல் உணர்த்துகின்றது. இதுபோன்ற கருத்துகளை 38 பாடல்களில் விரிவாகக் கூறுகின்றார். ஏழாம் தந்திரத்தில் விந்துற்பனம் எனும் பகுதியில் சில கருத்துகளைக் கூறுகின்றார்.

*உடலியங்கியல்*

உடல் இயக்கம் பற்றிய திருமூலரின் நுட்பமான புலமை பெரிதும் வியப்பிற் குரியதாக உள்ளது. திருமந்திரத்தில் உள்ள கருஉற்பத்தி, அமுரிதாரணை, ஆயுள் பரிட்சை, காயசித்தி, உபாயம், தியானம், பரியங்க யோகம், பிராணாயாமம், விந்துற்பனம், விந்துசயம், போகசரவோட்டம் என்ற அதிகாரங்களில் உடலியங்கியல் பற்றிய நுட்பமான செய்திகள் பல காணப்படுகின்றன. கரு உற்பத்தி எனும் பகுதியில் திருமூலர் கூறும் முப்பத்தொன்பது பாடல்கள், கருவிலே அமையும் குழந்தையின் குணம், பால் வேறுபாடு, ஆயுள்நிலை பற்றியெல்லாம் மிகமிக நுட்பமாகக் கூறுகின்றன. இப்பகுதிகள் சோதிடவியலோடு மிக நுணுக்கமாக ஒப்புநோக்கப்பட வேண்டிய பகுதிகளாகும்.

*உடல், மன பாதிப்பு*

நமது வாழ்க்கை முறையும், உணவுப் பழக்க வழக்கங்களும் இயற்கைக்கு மாறாக உள்ளன. இதனால்தான் உடலின் சமநிலை பாதிக்கப்பட்டு நோய்கள் தோன்றுகின்றன. மிகினும் குறையினும் நோய் செய்யும் என்கின்றார் வள்ளுவர் பசித்தபின் உண்ண வேண்டும். உடல்நோய் மனத்தையும், மனநோய் உடலையும் பாதிக்கும். எண்ணம், உயர்வு தாழ்வு மனப்பான்மை, கோபம், வெறுப்பு, கவலை, அச்சம் போன்றவை உடல் மன நலங்களைத் தாக்குகின்றன.

தூய்மையான அன்பு, ஆதரவு, நம்பிக்கை, உற்சாகம், ஆன்ம உணர்வு போன்றவை உடல்மன நலங்களைப் பேணிக் காக்கின்றன. ஒவ்வொரு மனிதனும் தனித்தன்மை வாய்ந்தவன்.

*நோயிற்கான காரணம்*

உணவில் வேண்டியது எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்; வேண்டாதவை வெளியேற்றப்பட வேண்டும், வேண்டாத பொருட்கள்

தேங்கி நச்சுப் பொருட்களாகின்றன. இவை வெளியேறும்போது அது நோயாகக் காட்சி அளிக்கின்றது. நோய், கிருமிகளால் வருவதில்லை; கிருமிகள் நோயால் வளர்கின்றன. உணவிலுள்ள நச்சுப்பொருட்களை உண்டு கிருமிகள் வளருகின்றன. உடலில் கழிவுகள் இல்லை என்றால் கிருமிகள் தானே மறைந்து விடுகின்றன.

பொருந்தா உணவு, அதிக உணவு,அதிக பெண்போகம், தவறான பழக்கவழக்கங்கள், விபரீதமான எண்ணங்கள் முதலியவற்றால் உடலில் நச்சுப்பொருட்கள் உண்டாகின்றன. சரியான மலநீக்கம் இன்றி உடல் கெடுகின்றது.

உடலைக் காக்கவே, தூய்மைப்படுத்தவே நோய்கள் வருகின்றன. உடலில் கழிக்கப்படாத தேங்கி நிற்கின்ற கழிவுகளை வெளியேற்றும் முயற்சியே நோயாகும். எனவே மருந்து அதுபோது நோய் நீக்க உதவுகின்றது. மருந்திற்குப் பதில் உடல் இயக்கங்களைச் சீர் செய்து கழிவுகளை வெளியேற்றினால் உடல் மீண்டும் நலம் அடைந்து விடும்.

மனிதனின் உடலில் ஒரு சக்தி உள்ளது. அதனை அவனது செயல், தன்மை, உணவுப் பழக்கம் முதலியன கொண்டு ஆராய்ந்தனர். அதன்வழி சிலர் சோர்வாக இருப்பதையும், சிலர் அதிக காலம் உயிர் வாழ்வதையும், சிலர் இளவயதிலேயே இறப்பதையும் கண்டனர்.

மேலும் ஒவ்வொரு மனிதனும் காற்றில் இருந்தும், சூரிய ஒளியில் இருந்தும், நீரில் இருந்தும், சுற்றுப்புறச் சூழ்நிலையில் இருந்தும் உயிர் வாழ்வதற்குத் தேவையான சக்திகளை எடுத்துக் கொள்கின்றான் என்ற உண்மையினை அறிந்தனர்.

***உயிர்ச்சக்தி***

அதுபோல் உயிர்ச்சக்தியும் பிறப்பில் இருந்தே இயற்கையாகவே ஒரு மனிதனிடம் உள்ளது. இச்சக்தி சுவாசிப்பதாலும், உணவு உண்பதாலும் உற்பத்தியாகின்றது. இந்தச் சக்தியும், இயற்கையில் இருந்து எடுத்துக் கொள்ளும் சக்தியும் சேர்ந்ததுதான் உயிர்ச்சக்தி என அறிந்தனர்.

***பேணும்சக்தி***

பேணும் சக்தி, பாதுகாக்கும் சக்தி, ஐம்பூத சக்தி, தாய் தந்தை சக்தி, பிரபஞ்ச சக்தி, உயிர்ச்சாரச் சக்தி, மின்காந்த சக்தி ஆகியவை சேர்ந்ததே உயிர்ச்சக்தி ஆகும். உண்ணும் உணவு வகையால் பேணும் சக்தி கிடைக்கின்றது. உடலில்

தோலுக்கும் சதைக்கும் நடுவே உள்ள சவ்வின் வழியாகச் சென்று சக்தியை அளிப்பது பாதுகாக்கும் சக்தியாகும்.

*ஐம்பூத சக்தி*

நிலம், நீர், காற்று, நெருப்பு, வான் ஆகியவற்றின்வழி பெறுவது **ஐம்பூத சக்தியாகும்.** உயிர்ச்சக்தி தோன்றுவதற்கு அடிப்படையானது **தாய் தந்தை** சக்தி ஆகும்.

*மின்காந்த சக்தி*

வெளியிலுள்ள சக்தியே பிரபஞ்ச சக்தியாகும். இது உயிர்ச் சக்தியுடன் தொடர்பு கொண்டு இருக்கும்வரை உடலில் உயிர் இருக்கும். மனிதனையும் பிரபஞ்சத்தையும் இணைப்பது உயிர்ச் **சார சக்தியாகும்.** உடலிலுள்ள உறுப்புகளுக்கு அதன் செயல்களுக்குத் தகுந்தவாறு தன்னை வடிவமைத்துக் கொண்டு மனிதன் நலமுடன் வாழ வழிவகுப்பது மின்காந்த சக்தியாகும். இந்த மனித உடலில் காந்தப்புலமும், மின் சக்தியும் இறைவன் படைப்பிலே உருவானது.

*மூளையின் செயற்பாடு*

ஆண், பெண் வித்தியாச நடத்தைகள் மூளையில்தான் நிகழ்கின்றன. அவர்கள் மூளையின் வலது, இடது பகுதியைப் பயன்படுத்தும் விதத்தில் வித்தியாசம் உள்ளது. இவற்றின் அளவிலும் சில வித்தியாசங்கள் உள்ளன.

ஒருவர் முன்கோபி, ஒருவருக்குக் கோபமே வராது, ஒருவர் மிகுதியான கூச்ச சுபாவம், ஒருவர் மிகவும் தன்னம்பிக்கையுடன் அனைவருடனும் கலகலப்பாகப் பழகுவார். இந்தக் குண வேறுபாடுகள் மூளையின் செயற்படும் தன்மையால் தோன்றுகின்றன.

*உடலைக் காக்கும் வழிமுறை*

நூறு மிளகு தருகின்ற மருத்துவப் பண்பினைச் சிவநீரான அமுதநீர் அளித்துவிடும். அந்த அமுதநீரை மாற்றவும், ஊறவைக்கவும் மருந்தில்லை. அமுதத்தாரணையே சீவஅமிர்தமாகும். இதுவே மறுமையை ஒழிக்கவல்லது.

**நூறு மிளகு நுகரும் சிவத்தின்நீர்**
**மாறும் இதற்கு மருந்தில்லை மாந்தர்காள்**
**தேறி இதனைத் தெளிஉச்சிக் கப்பிடின்**
**மாறும் இதற்கு மறுமயி ராமே** (திரு.847)

சாகாமல் இருப்பதற்குக் கல்வி யுண்டு
சாக்காடு கொள்வதற்கும் விபரம் உண்டு
சாவதும் வாழ்வதும் நம்மால் தானே

எனும் திருமூலரின் பாடலைப் படித்துப் பார்த்தால் இறப்பை வெல்லும் ஆற்றல் நமக்கு உண்டு எனும் நம்பிக்கையைப் பெறலாம். உடலைக் காக்கும் வழி அறிவோம். அறிந்தால் சிவனை வெளியில் தேடிச் செல்ல வேண்டாம். நமக்குள்ளேயே இருப்பார் சீவனாக என முடிகின்றது.

## திருமூலரின் கர்ப்ப வாகடத்திரட்டு

திருமந்திரத்தில் உள்ள மருத்துவச் செய்திகள் பல, திருமூலரின் பிற மருத்துவ நூல்களில் காணப்படுகின்றன. இவரது கர்ப்ப வாகடத்திரட்டு கூறும் செய்தி இதற்கு எடுத்துக்காட்டாக அமைகின்றது.

உணவு உண்டு 3 மணிநேரம் கழிந்தபின் சேர்தலே நன்மையாகும். காற்று இடப்புறம் செல்லும்போது கரு உண்டானால் அது பெண். அப்பெண் அழகான உருவத்தைப் பெற்றிருப்பார். சேர்க்கையின்போது பெண் மலத்தைக் கட்டுப்படுத்தவும், சிறுநீரை நிறுத்தவும் செய்தால் பிறவியிலே குழந்தைக்குப் பார்வை இழப்பு ஏற்படும். இரவும் பகலும் அல்லாத அந்திசந்திப் பொழுதில் பெண்ணைக் கூட மகப்பேறு தீங்காகும்.

அமாவாசையில் இருந்து மூன்றாம் நாளில் ஏற்படும் சேர்க்கையால் உருவாகும் கருவுக்கு ஆயுள் நூறு, மாத விலக்கான ஐந்தாம் நாள் சேர, உண்டாகும் கருவின் ஆயுள் நூறாகும். விந்தணு பலவாகப் பெருகி ஓடிக் கரு ஏற்பட அதன் வாழ்நாள் 80 ஆகும். இடகலை, பிங்கலையில் ஐம்பூதங்களிலும் மூச்சுச் செல்லக் கரு ஏற்பட்டால் அதற்கு ஆயுள் 100.

அமாவாசையை அடுத்த நாள் பாட்டிமையில் கூடின் உருவாகும் குழந்தைக்கு முயலகண்டன் என்ற வலிப்புநோய் வரும். சுக்கிரன் தோன்றும் முகூர்த்தத்தில் மூன்றாம் சாமத்தில் கரு உண்டானால் அது மாறுகண்ணுடன் பிறக்கும். சூரியன் தோன்றும் விடியலில் சேர்ந்தால் குழந்தை குறையுள்ளதாக வளைவுடன் பிறக்கும். அசுபதி நட்சத்திரத்தில் சேர்க்கை ஏற்படும்போது குழந்தை கறுப்பாகவும், ஆறுவிரல்கள் தொங்கியபடியும் இருக்கும். கருப்பையில் ஆண் அணுவுடன் உயிர்வளி (பிராணவாயு) குறைவாகச் சென்றால் கரு வளர்ச்சி பெறாது. இதனால் குழந்தையின் உயரம் குறைவாக இருக்கும். ஆண் அணுக்கள் முதன்மையான

மறைவிடங்கள், மையம் போன்ற இடங்களில் செலுத்தப்பட்டால், உடலில் வளைவு உண்டாகும்.

பெண்ணின் கருப்பையில் இறுக்கம் அதிகமானால் உயிர்வளி என்ற பிராணவாயு கருவுக்கு அதிகம் செல்லாது. இந்நிலையில் குழந்தையானது பிறவி மூளைக் குறைபாடுடன் பிறக்கும். கருப்பையில் சுழற்சி அல்லது நடுக்கம் தோன்ற குழந்தை ஊமையாய் பிறக்கும். பெண்ணின் கருப்பைக் குழியில் குழந்தை இணையாகச் சுற்ற, குற்றமுள்ள வலிப்பு உண்டாகி இறப்பு நிகழும்.

**கற்பம்**

எல்லா இடத்திலும் வளர்கின்ற மூலிகையைக் கண்டறிந்து அவற்றுக்குக் **கற்ப மூலிகை** எனப் பெயரிட்டுள்ளார் திருமூலர். கற்ப என்பதற்கு **மூலம் அடிப்படை** எனப்பொருள். இவ்வாறு 108 கற்ப மருந்துகளைக் கண்டறிந்துள்ளார் அவர்.

இந்த வகையான கற்பங்களை முறைப்படி உண்டு வந்தால் இனிக்கும் இளமையோடு வாழலாம்; என்றைக்கும் இளமையோடு வாழலாம். நரைதிரை நீங்கும். இறப்பை நீட்டிக்கலாம்.

**அஞ்சு யுகத்தின் அழியாமல் காயந்தான்**
**மிஞ்சிய கற்பம் விளம்பினோம் நூற்றெட்டுத்**
**தஞ்ச முறவே தாந்தின்ன வல்லோர்க்கு**
**பஞ்சு நரைபோய்ப் பதிந்தோங்கி வாழ்வரே** (திரு.980)

என்ற திருமந்திரப் பாடல் உடம்பைப் பாதுகாக்க வழி கூறுகின்றது.

**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்**
**உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே** (திரு.724)

என்றதொரு வெற்றி முழக்கமிட்டவர். நம்பிக்கையை நடவு செய்தவர் திருமூலர்.

**திருமூலர் கூறும் காயகற்பங்கள்**

திருமூலர் தம்திருமந்திரத்தில் பாடிய அனைத்துப் பாடல்களும் மனித உடலைப்பேணி, நலம் கெடாவகையில் ஞானத்தை அடைய வேண்டும் என்ற பெருவேட்கையையே குறிக்கோளாகக் கொண்டுள்ளது. ஞானம் அடைவது என்பது உலக அனுபவத்தையும் உயிர் அனுபவத்தையும் பொறுத்தது. ஞானவேட்கை உள்ள சீவாத்மாக்கள் அது தொடர்பான செய்திகளையும், செயல்களையும் பின்பற்றி வாழ்கின்றனர். உலக வாழ்வைப் பற்றியும், சமூக நீதியினைப் பற்றியும் யாதொரு கவலையும், அவர்கட்கு இல்லை; இருந்த போதிலும் உலகத்தாரோடு ஒட்டியும், ஒட்டாமலும் சேர்ந்தும்

சேராமலும் அவர்கள் மனத்தினுள் இருக்கும் அழுத்தமான இலக்கு ஒன்றை நாடியே இருப்பர். அவர்களது வாழ்வும் ஏறக்குறைய உலகப் பற்றிலிருந்து சற்றுவேறுபட்டுக் காணும்.

இந்த உலகப் பள்ளியில் அவரவர்கள் கற்றுக் கொண்ட பாடம் அவரவர்களின் வாழ்வனுபவம். பல கலைகளைக் கற்றோரும், ஒன்றுமே கற்றறியாத பாமரரும் பெறும் இன்ப துன்பம் எனும் பரிசை, அவரவர் செய்த வினைகளைப் பொறுத்தே இறைவன் அளிக்கின்றான். அது ஓர் பிறவியிலும் பல பிறவிகளிலும் கிடைக்கும் இறைப் பேறாகும். அவ்விறைப் பேரின்பத்தைப் பெறுவதற்குரிய ஊகங்களை உத்திகளை நம் ஞானியர்கள், சித்தர்கள், குருமார்கள் அருளிச் சென்றிருக்கின்றனர். அதில் வாழ்வியல் பாடத்தைச் சொல்லித் தரும் வாழ்வியல் நூலாக, ஞானக் கலங்கரை விளக்காகத் திருமூலர் திருமந்திரம் விளங்குகின்றது. அதில் நாம் அறிந்துகொள்ளுவது என்பது கடலில் முத்தெடுப்பது போன்றதாகும்.

நாம் கற்ற கல்வியும், பெற்ற அனுபவமும், செல்வமும் நமக்குப் பயன் அளிப்பதாக இருக்க வேண்டும். இதனை அண்மைக் காலத்தில் நம்மோடு வாழ்ந்த ஞானி வேதாத்திரி மகரிசி,

எக்கல்வியால் வாழ்வை
இனிதாக்கி உள்ளத்திலெழும்
அக்கேள்வி கட்கெல்லாம்
அறிவுவிடை கண்டிடுமோ
இக்கல்விதான் இயற்கை
இயல்பறியும் தத்துவமாம்
சிக்கல்கள் வாழ்வில்எழா
சிந்தனையும் சிறப்படையும்

என்கின்றார்.

Hence education should be mainly concerned with man and his welfare as an end in Itself; and it is Scientific to the extent that its humanistic Content remain defined and thereby enriched by the contiming new contributions of Science to the field of knowledge about man and the world. Its core is a supreme fewth in Human reason. Its ability to confront and solve the many problems that human face, its ability to rearrange both the world of Nature and the affairs of man and women so their human life will Prosper. Education will acquire a new Social Dynamic; from being mereby a preparation for Life, it become an Int part of Life, an Instument of man's evolution. It should emphasise man's

**capasity to Improve this emotition in his earthby life through his own efforts. - Dr.T. Kamali.**

என்று டாக்டர் கமலி வாழ்வியல் சிக்கல்களும் அதனை மேற்கொள்ளும் மனிதனைப் பற்றியும் மிக அழகாக ஆங்கிலத்தில் கூறியுள்ளார். நம் வாழ்வியலுக்கும் அதனால் வருகின்ற உடல் மன இழப்புகளுக்கும் எவ்வாறு தீர்வு காணுவது, என்பதைப் பற்றிய திருமந்திரம் கூறும் ஆய்வியல் நோக்கமே இவரது கூற்றில் வெளிப்படுகின்றது..

திருமூலர் சொன்ன அனைத்துச் செய்திகளும் பல்வேறு துறைகளான மனிதவாழ்வு, ஒழுக்கமுறை, நீதிமுறை உடலைப்பேணும் முறைகள், யோகமுறைகள், தியான முறைகள், ஆண்பெண் இணைந்த போகவாழ்வு, இவ்வுலகத்தில் நிலவும் பஞ்சபூதத் தத்துவங்களின் இயக்கம், அண்ட பிண்டத் தத்துவங்கள், கருவுற்பத்தியான பிண்டவுற்பத்தியின் நுணுக்கங்கள், இரகசியங்கள், தொண்ணூற்றாறு தத்துவங்கள், தத்துவங்கள் கடந்தநிலையில் மனம், சமாதி, சமாதிக்குப் பின் கிடைக்கும் அறுபத்து நான்கு பேறுகள் தானே இறைவனான துவைதநிலை போன்றன பற்றியெல்லாம் இதுவரை எடுத்துரைக்கப்பட்டது.. இதுவே திருமூலரின் ஏக்கமன்று. மூவாயிரம் பாடல்களுக்கு மேலும் திருமூலர் எண்ணாயிரம், திருமூலர் தீட்சாவிதி 200, திருமூலர் கன்மகாண்டம் 1000, திருமூலர் 600, திருமந்திரத் திரட்டு போன்ற திருமந்திரத் தொடர்பு நூல்கள் பரந்து கிடக்கின்றன. அவற்றில் திருமூலர் கூறும் மருந்தியல், கற்பவியல், இரசவாதம் ஆகியவற்றில் சில்வற்றை இங்கே காணலாம்.

திருமூலர் கூறும் மருந்தியல்

சித்தர்களின் மருந்தியல் தத்துவப்படி, **வேர்பாரு தழை பாரு மிஞ்சினக்கால் மெல்ல மெல்ல பற்ப செந்தூரம் பாரு,** என்னும் மூலிகை மருத்துவம் ஒரு கட்டத்தில் செயலிழக்கும்போது, அதற்கடுத்து, பாடாண மருத்துவமான பற்ப, செந்தூர வகைகளை மக்களுக்கு அளித்துக் கொடிய நோய்க் கூட்டத்தை விரட்ட முடியும். இது உடல் நோயைப் போக்கும் மருந்துகளாக மட்டுமின்றி இறப்பைத் தரும் நோய்களைப் போக்குவதற்கும், இம்மனித உடலை நோய்களும், இயற்கைச் சீற்றங்களும் தாக்காதவாறு முப்பு, வழலை, கற்பம், அமுதம் போன்ற பெயர்களில் கல்ப மருந்துகளைக் கூறியுள்ளனர். திருமூலர் நமக்குக் காட்டும் சில மருந்துகளையும், சில பாடாண மருந்துகளையும் பற்றிக் காணலாம். முதலில் மூலிகைக் கற்பமான காயசித்தி மருந்தினைக் கீழ்க்கண்டவாறு காணலாம்.

நந்தி வல்லாரை நாலாறு மாதமும்
பிந்தி கடுக்காய் பரிசோர் வருஷமும்
சிந்தித்துக் கொள்ளையில் சோகரி சாலைநெய்
வந்தித்திர சயலால் வாங்கு வழலையே...

(திருமூலர் தீட்சாவீதி 17)

வாங்கு மண்டலம் வாதி விரிசிகொள்
தாங்கு கரந்தையைத் தாக்கிடு மண்டலம்
பாங்காம் நற்சீந்தில் பரிசிலோர் மண்டலம்
நீங்காத வேம்பு மண்டலம் நேரிடே ... (மேலது. 18)

மேற்காணும் பாடலில் ஆறு கற்ப மருந்துகளை ஏகமூலிகை தத்துவத்தில் பக்குவமாக்கி மண்டலம் (நாற்பத்தெட்டு நாள்) உட்கொள்ளச் சொல்கின்றார். வள்ளலார் இராமலிங்க அடிகள் கபமே எமன் என்று கூறுவார். அதற்கேற்ப மேற்சொன்ன அத்தனை மூலிகையும் உடம்பில் தீயினை மேலேற்றக் கூடியதும், கபத்தினை அறவே அழிக்கக் கூடியதுமான மூலிகைகள், ஞானத்திற்குரிய மூலிகைகள் போன்றனவாகும்.

1. வல்லாரை - அறிவைப் பெருக்கும், மூளைக்குத் துணை நிற்கும்
2. கடுக்காய் - வாதபித்தகப நோய்களை நீக்கித் தாயாகத் துணை நிற்கும்
3. கரிசாலை - இது கல்லீரலிலையும், சீரண மண்டலத்தையும், சரிசெய்து உடம்புக்கு உரமூட்டிக் கபத்தை நீக்கும் ஞானமருந்து
4. கரந்தை - கொட்டைக் கரந்தை (சிவ-விட்ணு கரந்தைகள்) கப நீக்கியாகவும் கற்ப மருந்தாகவும் செயல்படுகின்றது.
5. சீந்தில் - பொற்சீந்தில் எனப்படும் இது சாயகற்ப மருந்தாகவும் மேகப் பிணி நீக்கும் மருந்தாகவும் செயல்படுகின்றது.
6. வேம்பு;.சர்க்கரை

வேம்பு இந்தியப் பண்பாட்டில் வேம்பு முக்கிய இடத்தைப் பிடித்திருக்கின்றது. வேப்பமரம் வைசூரி, அம்மை போன்ற கொடிய நோய் நுண்கிருமிகளை அழிக்கக்கூடியது. இதன்

டு மரத்தின் வேரும்பட்டையும் கற்ப மருந்தாகச் செயல்புரிகின்றது.

இவற்றைப் பக்குவமாக மருந்துப்பொருளாக்கி முறையாக ஒவ்வொன்றைக் காலச் சூழ்நிலை, உடல் நிதானம், வயது நிதானம், மண்ணின் வளம் போன்றவற்றுக்கேற்ப உண்டுவந்தால் உடல் நோயினின்று நீங்கி, கல்பஉடலாக மாறும் திருமூலரின் காயகற்பம் கரிசாலை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

**சித்தர்களும் அவர்கள் உண்ட காயகற்ப மூலிகைகளும்**

1. **திருமூலர்** - கரிசாலை/கரிசலாங்கண்ணி (திருமூலர் ஐந்து வகையான குளிகைகளையும் கௌரிசத்து செந்தூரம் போன்றவற்றையும் உண்டதாகக் கொங்கணர் வாதகாவியம் 3000 கூறுகின்றது. மேலும் சோழ மன்னனுக்கான நடராசரின் பொன் வடிவ சிலையை வடிக்கத் திருமூலர் உதவியதாக இந்நூலும், போகர் ஏழாயிரம், போகர் சரக்கு வைப்பு 800 ஆகிய நூல்களும் கூறுகின்றன.
2. **போகர்** - குமரி (வான்குமரி எனும் கற்றாழை)
3. **காலாங்கிநாதர்** - கரந்தை (சிவ, விட்ணு கரந்தை) (திருமூலரின் மாணவர்)
4. **கோரக்கர்** - கஞ்சா (இதற்குக் கோரக்கர்மூலி எனவும் பெயர்)
5. **இராமதேவர்** - கருநெல்லி
6. **சிவயோகிகள்** - கரிசாலை, சீந்தில், தூதுவளை, வல்லாரை
7. **ஔவை** - கருநெல்லி, நெல்லிக்கனி

மேலும், திருமூலர் கரிசலாங்கண்ணியை உண்டு காயம் சித்தியடைந்ததை,

> தின்ற கரிசாலை தேகந்திரை போக்கும்
> தின்ற கரிசாலை சிறந்த நரை போக்கும்

என்கின்றார். வல்லாரையின் பெருமை சொல்லி,

> முத்தி பெற வல்லாரை வருடமொன்று
> நித்தியந்த னொருபருவங் கொண்ட பின்பு

என்றுரைக்கின்றார்.

கற்பம் உண்ணும் காலங்களில் பசும்பாலுடன் நற்சோறு என்னும் பச்சரிசி உணவை ஒரு வேளை உண்ணுதல் உத்தமம் என்கின்றார்.

இஞ்சி, சுக்கு, கடுக்காய் போன்றவற்றைக் காயகற்ப மருந்தாகத் தேரையர் கூறுகின்றார்.

காலையில் இஞ்சி கடும்பகல் சுக்கு
மாலையில் கடுக்காய் மூவேளையும் உண்போர்
கோலையும் வீசிநடக்கலாம் விருத்தரும்
பாலராக லாமே!

என்று கூறுவதன்மூலம் மேற்காணும் மருந்துகளும் உணவாகவும், கற்பமாகவும் ஆவதையும் காண்கின்றோம்.

*சீ* என்னும் எழுத்தும் (நாயோட்டு மந்திரம்) இவ்வெழுத்து உருவான பிரணவம் ஆகிய ஓங்காரமும் உடலில் நிலைத்து நிற்கவும் அதன் சிறப்பையும் விளக்கவும்

சீயெழுத் தாலே செனனம் படைத்தது
சீயெழுத் தாலே திருவுரு வானது
சீயெழுத் தாலே திருவடி பெற்றது
சீயெழுத் தாலே சின்மையுற் றோமே

(தீட்சாவிதி 200,பா.20)

என்று கூறுகின்றார்.

*சீ* யெழுத்தான நமசிவாய மந்திரத்தால் உடல் உயிர் பெருமையடைவதையும், சிறுமையடைவதையும் இங்குக் காண்கின்றோம். *சீ* எழுத்து சீராகவும், பிராணன் ஆகிய மூச்சுக்காற்று நேர்படவும் நுரையீரலும், இதயமும், இரத்த ஓட்டமும் குற்றமில்லாத செய்கைகளை உள்ளடக்கி இருக்க வேண்டும். இந்த இராச உறுப்புகளையும் மூச்சு பிரம்மரந்திரத்தை எட்டவும் கபம் தடையாக இருக்கக்கூடாது. ஆகவே கப நீக்கியாகச் செயல்படும் கரிசாலை, சுக்கு, கரந்தை, தூதுவேளை, முசுமுசுக்கை போன்றவை அரிய மூலிகைக் கற்பங்களாகும்.

*குருமருந்து*

திருமூலர் கடுங்காரச் சுண்ணம் என்னும் வழலை முப்புவை இப்பாடலில் கூறுகின்றார்.

வகையாய் கடுங்காரம் வாய்த்திடும் சுண்ணம்
பகையாகி யகாரம் பாய்நவச் சாரம்

துவையா மிவைரெண்டுஞ் சுட்டிடல் வாதமாந்
திகையா யதைவிட்டால் சேரவிழ லாமே
(தீட்சாவிதி 200,பா.37)

என்ற முப்புக்குக் குருமருந்தாக வாய்த்திடும் கடுங்காரச்சுண்ணம் எனும் ஆதிமருந்தை விளக்குகின்றார். வாதம் என்கின்ற வேதை வித்தைக்கும் போக்குக் காட்டுவது இப்பாடலில் விளங்குகின்றது. சித்தர்கள் தாம்ஞானம் அடைந்ததோடன்றி, தன்னுடைலையே வேதிக்கப் பல ஆய்வுகளை மேற்கொண்டனர். அதற்கு இரசம், கந்தகம், தாளகம் (அரிதாரம்) லிங்கம், வீரம், பூரம், வங்கம், இரும்பு, துத்தநாகம் இதுவன்றி வழலையாகிய சித்திரை மாதங்களில் உவர் மண்ணில் பூக்கின்ற பூநீர் என்னும் கடுங்கார நீரையும் பயன்படுத்தி வெற்றி கண்டுள்ளனர்.

வீரமுட னெல்லாம் விரவியே போட்டிடு
சார முன்னீரில் சார்த்தி முன்றுநாள்
பாரின்முன் பார்க்க பதமாஞ் செயநீராம்
காரமுன் வைத்த வெண்கண் டதைப்போட்டிடே
உரையடங்காத உயர்கண்டர் வீரமும்
புரையடங்காத புனுகுடன் சார்த்து
தரையடங் காத்தரி தாரத்திற் பூசியே
உரையடங் காதுமி யோட்டி லூதிடே
(தீட்சாவிதி 200,பா.55)

என்று வேதியல் பாடலைச் சொன்ன திருமூலர் கீழ்வரும் பாடலில் நம்மைச் சிந்திக்க வைக்கின்றார்.

உண்மையளஞ் சாரணை உரைத்தே னுன்னூத்தில்
வன்மை மூவாயிரம் மந்திரம் தன்னையே
பண்ணுமச் சாரணை பாய்ந்த குளிகைக்கு
வண்ண மொருக்கு மறைத்து வைத்தேனே

மறைத்தார் ரிஷிகள் மகத்தான சித்தரும்
கறை.... டையிங் காட்டி மறைத்தார்கள்
உரைத்தார்கள் இம்முறை ஓட்டமில் லாவிடில்
நிரைத்தான சித்தியும் நேராது கண்டிடே.

நேராது ஞானமும் நிலையாது யோகமும்
வராது சித்தியும் வான்தேகம் நில்லாது
தாராது முத்தியும் தான்வாதமும் பொய்யாய்
வாரமலிம் முறை வைப்புரைப் பேனே (கன்மகாண்டம்)

இதிலிருந்து நாம் அறியும் நுட்பம் யாதெனில், திருமூலர் மூவாயிரம் பாடல் (மூவாயிரம் மந்திரம்) நமக்குப் புறத்தில் நூலாகவும் உரைத்தேன் உன்னூத்தில் வன்மை மூவாயிரம் என்கின்றார் ஊத்தையான சரீரத்தில், குற்றம் நீங்குவதற்காகவும் (சாரணைகளை) மெருகேற்றவும் குளிகையான இவ்வுடம்பில் மேலும் சில கற்பமுறைகளையும் மறைத்து வைத்ததாகக் கூறுகின்றார். முனிவர்களும் சித்தர்களும் மறைத்து வைத்தார்கள் என்பதில் இருந்து மூவாயிரம் பாடல்கள் என்பது உடலைக் காயகற்பமாக்கச் செய்யும் மூவாயிரம் உருவேற்றம் (சாரணை) என்பது உட்பொருளாகிறது. மற்றுமொரு பாடலில் வாதமுறையில் உடலை வேதித்தாலன்றி உடலும், ஞானசித்தியும் நிலைக்காது என்றும் கூறுகின்றார். அவ்வாறெனில் முந்தைய மூவாயிரம் பாடலில் உரைத்தபடி நில்லாமல் உடம்பை (கல்பதேகம்) ஒளியுடம்பாகவும் மாற்ற வேண்டும் என்பது இலை மறைக்காய்போல் தெரியவருகின்றது.

சித்தர்கள் எல்லோரும் மருந்துகளைக் கையாளும் முன்பு வாலை என்கின்ற பராபரையாகிய சத்தியைப் பூசித்திருக்கின்றனர் என்பதை முன்பகுதியில் அறிந்தோம். அதன் அடிப்படையில் திருமூலரும் தம்பாடலில்,

பூசையாம் வாலை புவனையுள் ளரன்பின்
ஆசைத் திரிபுரை யாள்வாலை யாய்விட
மாசற்ற குண்டலி மணியாஞ் சுழுமுனை
நேசித் தமுர்தம் பருகவும் நேரிடே (தீட்சாவிதி 200,பா.9)

என்கின்றார். இதன் தீட்சைப் பாடலாக,

அறைவேன் பராபரை ஆதியாஞ் சக்தியை
..... இறையாஞ் சிவசத்தி ஈரைந்து தீட்சையே
(தீட்சாவிதி 200,பா.2)

என்று தசதீட்சை (பத்துவித தீக்கையை மாணாக்கருக்கு அருளியது) குருபிரான் அருளுவது தெளிவாகின்றது. சத்தி வழிபாடும் தெரிகின்றது.

திருமூலர் பல மருந்துகளின் (பாடாணத்தின்) தூய்மை செய்முறைகளையும் பற்ப செந்தூர வகைகளையும், புடமிடும் முறைகளையும், இரவிபுடம், பனிபுடம் போன்ற புடவகைகளையும் அவிழ்தமாக்கும் வழிகளையும் பல்வேறு பாடல்களில் எடுத்துரைத்திருக்கின்றார்.

ஓர் உலோகத்தில் இருந்து மற்றொரு உலோகத்தைக் கண்டெடுக்கும் முறையாகத் திருமூலர் கன்மகாண்டப் பாடலில்,

கரும்பொனி லான நாகத்தின் திசயம்
பெரும்புவி மீதிற் பிரசங்கிப் பாரிலை

என்கின்றார். இதில் கரும்பொனி என்பது இரும்பு. இதிலிருந்து நாகமான துத்துநாகம் கிடைக்கின்றது என்கின்ற நுட்பத்தினைக் கூறுகின்றார். பிரசங்கிப்பாரிலை என்னும் வடசொல் இதில் வந்துள்ளமையும் எண்ணத்தக்கதாயுள்ளது.

திருமூலர் நமக்கு ஞானத்தை மட்டுமே போதிக்கவில்லை. உடலை வன்மையாக்கி காலத்தால், சூழ்நிலையால் அழியாதவாறு காக்கவும், நீண்டநாளைக்கு வாழவும் வழிகூறுகின்றார். அதற்குக் கற்பமூலிகைகளையும், இரச பாடாண வகைக் கற்பங்களையும் கூறுகின்றார். தீட்சாவிதி 200, திருமூலர் கன்மகாண்டம், திருமூலர் 600, திருமந்திரத்திரட்டு ஆகிய நூல்களின்வழி மருத்துவம் சார்ந்த, வேதியியல் சார்ந்த நுட்பங்களை அளித்துள்ளார். இந்நூல்களைப் படிப்பதோடு நில்லாமல் அவற்றைப் பின்பற்றி நம் மனத்தையும் உடலையும் ஆய்தல் வேண்டும்.

**திருமூலரின் வேறு நூல்கள்**

இவர் திருமந்திரம் மட்டும் அல்லாமல் வேறு சில நூல்களையும் செய்துள்ளார் என்றும், அந்நூல் கூறும் செய்திகள் சிலவற்றைப் பற்றியும் பார்த்தோம். திருமந்திரத்தின் சிறப்புப் பாயிரப் பாடல் ஒன்று திருமூலர் வேறு நூல்களும் தந்துள்ளார் என்ற கருத்திற்குத் துணைசெய்கின்றது.

மூலன் உரைசெய்த முப்பது உபதேசம்
மூலன் உரைசெய்த முந்நூறு மந்திரம்
மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
மூலன் உரைசெய்த மூன்றுமொன் றாமே (திரு.சிறப்பு.3)

இதன்வழி உபதேசம் முப்பது, மந்திரம் 300, தமிழ் 3000 என்ற நூல்களையும் இவர் பாடியுள்ளார் என்று தெரிகின்றது. திருமந்திரத்திலேயே இம்மூன்று நூல்களும் அடங்கியுள்ளன. அதைத்தான் சிறப்புப்பாயிரம் உணர்த்துகின்றது என்றும் கூறுகின்றனர்.

***திருமந்திரம் 8000***

இராமலிங்க அடிகள் திருமந்திரம் 8000 என்கின்றார் என்று முன்னர் சுட்டப்பட்டது. எனவே 8000 பாடல்களைக் கொண்டதாகவும் திருமந்திரம் இருந்து இருக்கலாம். மேலும் அகத்தியர் 12000 எனும் நூலிலும் திருமந்திரம் 8000 என்பதற்கான பல குறிப்புகள்

காணப்படுகின்றன. திருமந்திரம் 3000 என்ற நூல் இல்லாமல் 8000 என்ற பெயரிலும் திருமந்திரம் பெயரால் நூல் இருக்கின்றது என்பதற்கான குறிப்புகளும் கிடைக்கின்றன. திருமூலரின் வர்க்கவழி வந்தவர் 8000 பேர் இருந்தனர் என்ற குறிப்பும் நமக்குக் கிடைக்கின்றது. எனவே அவர்கள் பாடிய பாடல்களை எல்லாம் தொகுத்து, திருமந்திரம் 8000 என்றும் பெயர் கொடுத்து இருக்கலாம். எப்படி இருப்பினும் இந்நூல் மட்டுமல்லாமல் திருமூலர் பெயரால் இன்னும் பல நூல்கள் கிடைக்கின்றன. திருமூலர் தத்துவக் கட்டளை, திருமூலர் தியானக் குறிப்பு, திருமூல தேவர் வாலை பஞ்சாட்சர விளக்கம், திருமூலர் வைத்தியம், திருமூலர் வைத்திய முறை வசனம், திருமூலர் தண்டகம், திருமூலர் சூத்திரம் 200, திருமூலர் நாடி சூத்திரம், திருமூலர் வாகடம், திருமூலர் வைத்தியம் 600, திருமூலர் வாலை தீட்சை, திருமூலர் எட்டு, திருமூலர் கவனநூல், திருமூலர் குளிகை முறை 50, திருமூலர் பூரணமாலை, திருமூலர் சூத்திரத்திரட்டு, திருமூலர் கற்பமுறை 500 (அச்சாகவில்லை) திருமூல நாயனார் வாத சூத்திரம் 300, திருமூல நாயனார் நிகண்டு 300, திருமூலர் குருமுறை, திருமூலர் ஞானம், திருமூலர் கருக்கிடை தொள்ளாயிரம், திருமூலர் ஆயிரம், திருமூலர் கருமானச் சுருக்கம் 84 போன்ற நூல்கள் இவரது பெயரால் கிடைக்கின்றன.

*திருமூலர் வழிவந்தோர்*

இந்நூல்கள் அனைத்தும் திருமூலர் எழுதியதா அல்லது அவர்கள் வழிவந்தவர்கள் எழுதியதா, வழிவந்தவர்களின் பாடல்களைத் தொகுத்ததன் காரணமாய் இந்நூல்கள் உருவாகினவா என்று எல்லாம் சிந்திக்க இந்நூல்கள் நமக்கு இடம்தருகின்றன. திருமந்திரம் 3000 என்ற இந்நூலிலேயே பல இடைச்செருகல்கள் உள்ளன என்று கூறுகின்றனர். எனவே திருமூலர் பெயரில் கிடைப்பவை திருமூலர்தான் எழுதினார் எனக் கருதமுடியாது. திருமூலரின் கருத்துகள் அவரது சீடர்கள்வழி. காலம் காலமாய்த் தொடர்ந்து வந்து இருக்கும். எனவே இக்கருத்துகளைப் பின்வந்தோர் அவரவர்கள் தத்தம் நடையில் காலத்திற்கேற்ப எழுதி இருப்பர். ஏனென்றால் இச்சிந்தனை அகத்தியர், ஔவை முதலான சித்தர்களின் பெயர்களில் கிடைக்கும் அனைத்து நூல்களுக்கும் பொருந்துவதாய் உள்ளது. நாற்பத்து மூன்றுக்கும் மேற்பட்ட அகத்தியர் இருந்தனர் என்ற குறிப்பும் கிடைக்கின்றது. அகத்தியர் வழிவந்த சீடர்கள் அகத்தியரின் கருத்துகளை அவரவர் அனுபவத்தில் புரிந்து கொண்டதற்கேற்ப நூல்களாகத் தந்துள்ளனர் என்ற குறிப்பும் கிடைக்கின்றது. எப்படி இருப்பினும் கருத்துகள் சீடர்கள்வழி தொடர்ந்துவந்து கொண்டிருக்க வாய்ப்புகள் உள்ளது என்பது தெளிவாகின்றது. எனவே திருமூலர் திருமந்திரத்தை எழுதி

இருக்கலாம். ஒருவேளை அவர் எழுதாமல் இருந்தாலும் அவரின் கருத்துகள் பின்வந்தவர்களால் நூலாக ஆக்கப்பட்டு இருக்கலாம்.

**வானவியல்**

மூன்றாம் தந்திரம் வாரசரம் (770-776), வாரசூலம் (777-778) என்னும் பகுதிகள் இவரது வானவியல் அறிவை உணர்த்தும் போக்கில் அமைந்துள்ளன. திருமூலர், அகத்தியர், வள்ளலார் முதலிய மகான்களுக்கு வானியல் அடிப்படை ஆதாரமாக விளங்கி இருக்கின்றது.

***சரசாத்திரம்***

மூச்சுக்காற்றைத் தன்விருப்பப்படி செலுத்தும் சரப் பயிற்சியை உடையவனே யோகி எனப்படுவான். இடகலை, பிங்கலை ஆகிய மூச்சுக் காற்றுகள் ஏழு தாதுக்களில் இயங்குகின்றன. அவை இரண்டும் வடஇடமாக இயங்குகின்றன. அவை தனித்தனியே இயங்கினால் மூலாதாரத்தில் உள்ள உயிர் ஆற்றல் வெளியில் பாய்ந்து வீணாகின்றது. அவை இரண்டும் இணைந்து இயங்கினால் உயிராற்றல் மேல்நோக்கிச் சென்று அமுதத்தை விளைவிக்கின்றது. அப்போது உடல் பயன்பெறுகின்றது.

***சரம்***

பிராணவாயுவின் ஓட்டத்தைச் சரம் என்பர். யோகப் பயிற்சியின்வழி மூச்சினால் பலன்கூறுவது சரசாத்திரம் எனப்படுகின்றது. சரம் என்பது காற்று, மனம், சீவன், சுவாசம், மூச்சு, பிராணன், ஆவி, உயிர், உயிர்ப்பு என்று பல சொற்களில் அழைக்கப்படுகின்றது. சரம் என்பதற்குச் சுவாசம் என்ற பொருளினை லெக்சிகன் தருகின்றது (1314). **சரமியங்குதோ விலையோவென** (தனிப்பா.1.332,37) என்ற வரி சுவாசம் என்ற பொருளைச் சரத்திற்குத் தருகின்றது. சித்தர் இலக்கியங்களிலே மிக முக்கியமான பகுதி சரம் என்ற மூச்சுநிலை பற்றிய ஆய்வே. உட்சென்ற மூச்சு ஆத்மாவோடு கலந்து வெளிவருவதால் அது சரம் எனப்படுகின்றது. **சரம் பார்ப்பார் பரம் பார்ப்பார்** என்ற முதுமொழியுமுண்டு.

சரசாத்திரம் ஆரூடவகைகளில் ஒன்றாகவே கருதப்படுகின்றது. இன்று சரம்பார்த்தல் என்று கூறினால் பலருக்குப் பொருள்புரியாத நிலையே உள்ளது. **சரம் பார்த்தவனைச் சருகாதே** என்ற பழமொழி பழங்காலந் தொட்டுச் சரம்பார்த்தல் வழக்கில் இருந்ததைக் காட்டுகின்றது. சரசாத்திரப்படி பலன் கூறுகின்றவர்கள் இன்று மிகவும் குறைவு என்றுதான் கருத வேண்டி உள்ளது.

இடப்பக்க மூக்கிலே வரும் மூச்சுக்கு இடகலை என்று பெயர். அதுவே சந்திரன் எனப்படுவதால் அதற்குச் சந்திரகலை என்று பெயர். வலப்பக்கத்தில் வரும் மூச்சுக்குப் பிங்கலை என்று பெயர். இது சூரியன் எனப்படுவதால் சூரியகலை என்று பெயர். நடுமூச்சாகிய நெருப்பு அல்லது அக்கினி என்பது இரண்டு மூக்கிலும் ஒரே நேரத்தில் வருவதும் போவதுமாக உள்ள மூச்சு ஆகும். இதற்குச் சுழுமுனை என்று பெயர்.

மேற்கூறிய திருமந்திரத்தில் உள்ள வாரசரம் என்னும் அதிகாரம் எந்தெந்த நாட்களில் எவ்வெவ்வாறு சரவோட்டம் நடைபெறும் என்பதை உணர்த்துகின்றது.

வெள்ளி, திங்கள், புதன் ஆகிய கிழமைகளில் இடதுமூக்கின் வழியாகவும், சனி, ஞாயிறு, செவ்வாய் ஆகிய கிழமைகளில் வலது மூக்கின் வழியாகவும், மூச்சு ஓடுதல் வேண்டும். வளர்பிறை வியாழக்கிழமை ஆனால் இடதுமூக்கு வழியாகவும், தேய்பிறை வியாழக்கிழமை ஆனால் வலதுமூக்கு வழியாகவும் மூச்சு இயங்க வேண்டும். இங்ஙனம் மூச்சு நடப்பின் செயல்கள் அனைத்தும் சித்தியாகும். இவற்றுள் வெள்ளி, திங்கள், புதன் ஆகிய நாட்களில் இடகலை வழியாக மூச்சு ஓடினால் உடலுக்கு அழிவில்லை. திங்கள், ஞாயிறு மூச்சு இயல்புக்கு மாறாக இயங்கினால் உயிருக்கு இடர்வரலாம். பிராணவாயுவானது வலம்இடம் மாறுதல் அடையும்போது உடலில் நடுக்கமும் அச்சமும் தோன்றும்.

மேற்கண்ட கருத்துகளையே ஏழுபாடல்களைக் கொண்ட வாரசரம் எனும் பிரிவில் கூறுகின்றார்.

*ஆயுளை நீட்டித்தல்*

உணவு இல்லாமல் கூட வாழ்ந்து விடலாம். காற்று இல்லாமல் ஒன்றும் செய்ய முடியாது. உயிருக்குத் தேவையே மூச்சுதான். மூச்சு போனாலோ எல்லாமே போச்சுதான்.

மூக்கின் வழியாகக் காற்று உள்ளே செல்கின்றது. உச்சந்தலைக்குச் சென்று மீண்டும் நெஞ்சின்வழி மூலாதாரத்தை அடைகின்றது. பின் நுழைந்த மூக்கின் வழியாகவே வெளியேறுகின்றது. இந்த மூச்சுக்காற்று முறையாக இயங்கினால், உடல் ஒளிபெறும். நரை, திரை, மூப்பு உண்டாகாது. விருத்தரும் பாலராய் மாறுவர்.

நாம் உள்ளிழுக்கும் காற்று 12 அங்குலம் அளவு இருக்கும். வெளிவிடும்போது 4 அங்குலமாகக் குறைந்து விடும். மீதமுள்ள இரண்டு பங்கு உடம்பில் தங்கிவிடும். வீணாகும் காற்றின் அளவு

நாள் ஒன்றுக்கு 7,200 அங்குலமாகும். எனவே வீணாகும் காற்றும் உடம்பில் தங்குவதற்குரிய பயிற்சியை மேற்கொண்டால் இறப்பு அச்சம் ஏற்படாது.

காற்றை இடப்புற மூக்கின்வழி உள்ளுக்குள் இழுத்து உள்ளே அடக்கி, பின் வலப்புற மூக்கின்வழி வெளிவிட வேண்டும். இப்படிச் செய்தால் உடல் தளர்ந்து போகாமல் கம்பீரத்தோடு காட்சியளிக்கும். உள்ளுறுப்புகள் தூய்மையாகும். இரத்த ஓட்டம் மிகுதியாகும்.

ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை உதைக்கும் குறியது வாமே (திரு.571)

ஏற்றியிறக்கி இருகாலும் இரண்டு நாசியிலும் சுவாசித்து மூச்சுக்காற்றின் (பிராணவாயுவின்) வெளியேற்றத்தைக் குறைத்து (அங்குல அங்குலமாக) காற்றைப் பிடிக்கும் கணக்கை அறிந்துகொண்டால் எமனையே எட்டி உதைக்கலாம் என்கின்றார் திருமூலர். ஆமை ஒரு நிமிடத்திற்கு 3 முறை மட்டுமே சுவாசிக்கின்றது. எனவே உலகிலேயே அதிக நாள் உயிர்வாழும் விலங்காக ஆமைதான் உள்ளது. ஒரு நிமிடத்திற்கு 18 முறை சுவாசித்தால் 83 ஆண்டுகள் உயிர் வாழலாம்; ஐக்கிய முக்தி, வீடுபேறு, சமாதி என்பவையாகும்.

*சோதிடம்*

மூன்றாம் தந்திரத்தில் இரண்டு பாடல்களில் வாரசூலம் என்னும் பிரிவில் திங்கள், சனி ஆகிய நாட்களில் கிழக்கே சூலம் என்றும், செவ்வாய், புதன் வடக்கே சூலம் என்றும், ஞாயிறு, வெள்ளி மேற்கே சூலம் என்றும், வியாழன் தெற்கே சூலம் என்றும் திருமூலர் குறிக்கின்றார். மேலும் இடப்பக்கமாகவும், பின்பக்கமாகவும் சூலம் இருப்பின் பயணம் செய்வது மிக நலம். வலப்பக்கமாகவும், முன்பக்கமாகவும் சூலம் நின்றால் துன்பமாகும் எனக் குறிக்கின்றார்.

வாரசூலம் போன்று வேறுசில சோதிட விதிகளையும் திருமூலர் கூறுகின்றார். இவர் 28, 33, 62, 100 ஆக இவ்வயதுகளில் மனித உடலிற்குக் கண்டங்கள் வருமென்கின்றார் (722). இப்பாடலுக்கு 25-28; 30-33; 60-62; 100 என்ற ஆண்டுகளில் கண்டங்கள் வருமென்ற பொருளும் கூறப்படுகின்றது.

யோகாப்பியாசத்திற்கு ஆகும், ஆகாத நாட்கள் (743), வேதம் ஓதுவதற்குரிய காலம், ஓதுவதற்குதவாத காலம், குருவிடம்

அறிவுரை பெறுவதற்கு உகந்த நாட்கள், உகந்ததல்லாத நாட்கள், தியானம் மேற்கொள்ளும் முறை, எந்தத் திதியில் எப்படி, எப்பக்கம் தியானிக்க வேண்டும் (1291) என்பன போன்ற செயற்பாடுகளுக்குச் சோதிடம் துணைநிற்கின்றது.

யோகாப்பியாசத்திற்கு ஆகாத நாட்களாக, பிறந்த நட்சத்திரம், பிறந்த நட்சத்திரத்தில் இருந்து ஒன்று, இரண்டு, மூன்று, எட்டு ஆகிய நாட்கள் ஆகாது என்கின்றார் (723).

*காலம்*

உயிர்க்காற்று அடிப்படையில் ஏற்படுத்தப் பெற்றது கால நியதி. தோன்றி அழியும் பொருட்கள் கால நியதிக்குக் கட்டுப்பட்டவை. காலம் தொடர்பான பின்வரும் செய்திகளைத் திருமந்திரத்தில் காணமுடிகின்றது.

கதிரவன் தோன்றும் நாட்கள் 360. 15 திதிகள் கொண்டது பக்கம். ருது ஆறாகவும் மாதம் 12 ஆகவும் வரும். இவையெல்லாம் சிவசூரியன் தோற்றத்தால் வந்தன; இதன் வழிதான் நாள், ஆண்டு முதலியன தோன்றியுள்ளன. இதனை,

ஆவின மானவை முந்நூற் றறுபது
மாவின மப்பதி னைந்தினை மாயுறு
மாவின மப்பதி னெட்டுட னாயுறு
மாவின மக்கதி ரோன்வல வந்தே (திரு.1267)

என்ற பாடல் காட்டுகின்றது. மேலும் கதிரவனது சுழற்சியால் அழிவின்றி மாறி வருகின்ற முப்பது நாழிகையும், 12 இராசிகளும், ஆண்டுகளும் முறைப்படி வந்திடும் என்றும் கூறுகின்றது.

மேலும் திருமந்திரம் விசுத்தி, ஆக்ஞை சக்கரங்கள் 18 எழுத்துகளைப் பெற்றுள்ளது. அதனால் இச்சக்கரங்களைக் கடந்து மேலும் துவாதச சாந்தத்தை அடைந்தபின் சந்திர மண்டலத்தைக் கடந்த நிலை தோன்றும். இப்படிக் கடந்து நின்ற சிவமே கால தேவதையாகின்றது. ஆனபின் 360 நாட்களும், பட்சங்களும், ருதுகளும், மாதங்களும், ஆயுளும், நாட்களும் ஆகிய காலமாயிற்று (1268) என்றும் கூறுகின்றது.

காலம் என்பது விநாடியைக் குறிக்கின்றது. விநாடி 60 கொண்டது ஒரு நாழிகை. பகலுக்கு 30 நாழிகை; இரவுக்கு 30 நாழிகை. 360 காலம் என்பது பகல் 30 நாழிகை. பகலில் படைப்புக் கோளாகிய ஆகாயம், அக்கினி, அப்பு, பூமி இவற்றை ஐம்பூதங்களுக்குக் பகுக்க ஒவ்வொன்றும் ஆறு நாழிகையாகும். அந்த ஆறு நாழிகைகளுக்கும் விநாடி 360 (இது படைப்புத்

தோற்றமுறை). இரவுக்கும் ஒடுக்க முறையாகச் சூரிய அத்தமனம் தொடங்கும் பிரிதிவிக் காலம் முதலாக அமைத்துக் கொள்ளலாம். இவ்விதப் பஞ்சபூதங்களுக்கும் உரிய காலத்தை அறிகின்றவர்கள் சோதி தரிசனம் செய்தவர்களாவர். இதனை,

முந்திய முந்நூற் றறுபது காலமும்
வந்தது நாழிகை வான்முத லாயிடச்
சிந்தைசெய் மண்முதல் தேர்ந்தறி வார்வல
ருந்தியுள் நின்று வுதித்தெழு மாறே (திரு.65)

என்ற திருமந்திரப் பாடலால் அறியமுடிகின்றது.

*அணுவின் ஆற்றல்*

இதே தந்திரத்தில் பசு இலக்கணம் எனும் பகுதியில் இறைவன் இயல்பினை விளக்கும் பாடல் ஒன்று வருகின்றது. கண்ணுக்குப் புலனாகும் இயல்புடைய பருப்பொருள், கண்ணுக்குப் புலனாக இயல்புடைய நுண்பொருளாக ஆகஆக அதிக ஆற்றலைப் பெறுகின்றது. மண் ஆற்றலுடையது. அதை விட நீர் ஆற்றலுடையது. அதைவிடத் தீ ஆற்றலுடையது. தீயைவிடக் காற்று ஆற்றலுடையது. காற்றைவிட வானம் ஆற்றலுடையது.

இதுபோல் உடல் ஆற்றல் உடையது. உடலைவிட மனம் ஆற்றலுடையது; மனத்தைவிட ஆன்மா ஆற்றலுடையது. இங்ஙனம் பருப்பொருள் நுண்பொருளான நிலையில் நிற்கும்போது பார்வைக்குப் புலனாகும் தன்மை இழந்து உணர்வுக்குப் புலனாகும் தன்மையைப் பெறும். அணுவிற்கு அதிக ஆற்றல் உண்டு என்பது அனைவருக்கும் தெரியும். இறைவன் அணுவிற்கு அணுவானவன். அவனது ஆற்றலை யாரும் அளக்க முடியாது.

அணுவில் அணுவினை ஆதிப் பிரானை
அணுவில் அணுவினை ஆயிரங் கூறிட்டு
அணுவில் அணுவை அணுகவல் லார்கட்
கணுவில் அணுவை அணுகலு மாமே (திரு.1971)

என அணுவின் அணுவான இறைவனைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். எனவே அணுவைப் பற்றிய அறிவு அவர் காலத்திலேயே இருந்துள்ளது என்பதை அறியமுடிகின்றது.

*காஸ்மோ பயாலஜி*

நமது உடம்புக்குள் உயிரும் உள்ளமும் இயங்குகின்றது. அதுபோலவே புற உலகிலும் பேருயிரும் பேருள்ளமும் இயங்குகின்றன. இவற்றின் அதிர்வு முறைகளிலே, நமது தனிப்பட்ட

உடல் அதிர்வுகளும், வெளி அதிர்வுகளும் இசைந்து இயங்குமானால் நன்மை; இவற்றில் முரண்பாடு கண்டால் கேடு இதைத்தான் திருமூலரும் கூறுகின்றார். இக்காலத்தில் அறிவியலில் காஸ்மோ பயலாஜி என்ற முறையில் நடந்துள்ள ஆய்வுகள் புற உலக இயக்கங்கள் நம்முடைய தனி இயக்கங்களை எவ்வாறு பாதிக்கின்றன என்பதைச் சோதித்துக் கண்டு சொல்ல, அவற்றின் இயைபுக்கு முக்கியத்துவம் தந்து பேசியுள்ளன.

நமது சமுதாயத்தில் பழக்கத்தில் உள்ள சூலம்பார்த்தல் திருமந்திரத்தில் வாரசூலம் என்ற அதிகாரத்தில் (797, 798) கூறப்பெறுகின்றது. சோதிடத்தில் உள்ள இவ்விதி சித்தர் இலக்கியங்களிலும் இதேபெயரில் இடம்பெற்றுள்ளன.

மூன்றாம் தந்திரத்தில் சந்திரயோகம் என்ற பிரிவில் ஒரு பாடலில் தேய்பிறையில் நட்சத்திரங்கள் பிரகாசிக்கும். வளர்பிறையில் அந்நட்சத்திரங்கள் பிரகாசிக்காது என்று குறிக்கின்றார் (841). அடுத்த நான்காம் தந்திரத்தில் ஏரொளிச் சக்கரம் என்ற பிரிவில் ஐந்து பாடல்கள் வானஇயல் பற்றிக் கூறுவனவாக உள்ளன (1243-1247).

*அண்டத்து இராசிகள்*

கதிரவன் தோன்றும் நாட்கள் முந்நூற்றறுபது. மாதத்தில் இருகூறு பதினைந்து நாள். இதைப் பிறை என்று கூறுவர். மாதங்கள் பன்னிரண்டு கார் முதலாகக் கூறப்படும் பருவம் ஆறும் சேரப் பதினெட்டாகும். மேலும் கதிரவனது சுழற்சியால் அழிவின்றி மாறி வருகின்ற முப்பது நாழிகையும் பன்னிரண்டு இராசியும் ஆண்டுகளும் முறைப்படி வந்திடும். இராசிகள் பன்னிரண்டும் மூன்று வீதிகளாகும். அவை மேடவீதி, இடபவீதி, மிதுனவீதி என்பன. இவற்றுள் இடபம், சிம்மம், மிதுனம், கடகம் முதலியன நான்கும் மேடவீதி. மீனம், மேடம், கன்னி, துலாம் முதலியன இடபவீதி. தனுசு, மகரம், கும்பம், விருச்சிகம் முதலியன மிதுன வீதியாகும். இங்ஙனம் இராசிகள் பன்னிரண்டும் மூன்று வீதிகளாகப் பகுக்கப்பட்டு உள்ளன. மேற்கண்ட மூன்று வீதிகளும் அவ்வின மூன்று செவ்வின மூன்று, எவ்வின மூன்று எனக் குறிக்கப்பட்டு உள்ளன.

*ஒளி - ஒலி*

அண்டத்து இராசிகள் பிண்டத்து ஆதாரங்களில் பொருந்தத் தியானிக்க ஒளியும் ஒலியும் தோன்றும். ஆதாரம் ஒன்றுக்கு இரண்டு இராசிகளுக்கு நாலரை நட்சத்திரமுமாகப் பிரித்தமைக்க வேண்டும். மேலும் இந்நூல் அகமுகத் தியானத்தில் இராசிச் சக்கரம்

நிலைபெறும் வழியைக் கூறுகின்றது. ஆறு ஆதாரங்களிலும், 12 இராசிகளிலும் பொருந்தத் தியானித்தால் ஒளியும், ஒலியும் நிறைந்து தோன்றும். இதனை,

> இராசியுட் சக்கரம் எங்கும் நிறைந்தபின்
> இராசியுட் சக்கரம் மென்றறி விந்துவாம்
> இராசியுட் சக்கர நாதமும் ஒத்தபின்
> இராசியுட் சக்கரம் நின்றிடு மாறே (1270)

என்கின்றது திருமந்திரம். இவை போன்று பல வானியல் செய்திகளைப் பேசுகின்றார். அவை 1267, 1666, 1704, 1943, 1955 ஆம் எண்ணுள்ள பாடல்களில் இடம்பெற்று உள்ளன.

### *ஆயுள் பரிட்சை*

மூன்றாம் தந்திரத்தில் ஆயுள் பரீட்சை எனும் பிரிவில் சில பொதுவான குறிப்புகளைத் தருகின்றார். கையைத் தலைமீது முகத்திற்கு நேராக வைத்தால் அந்தக்கை சிறிது பெரிதாகத் தோன்றாமல் அளவாகத் தெரிய வேண்டும். அப்படி இல்லாமல் பெரிதாகத் தோன்றினால் ஆறு மாதங்களிலும், இரண்டு மடங்காகத் தோன்றினால் ஒரு மாதத்திலும் இறந்து விடுவர் (750).

காற்று ஆறுவிரல் அளவு பூரகமாக இருப்பின் 80 ஆண்டும், ஏழுவிரல் அளவு பூரகமாக இருப்பின் 60 ஆண்டும், 8 விரல் அளவு இடகலையில் இயங்குமானால் 50 ஆண்டும், ஒன்பது விரலளவு இயங்குமானால் 30 ஆண்டும், 10 விரல் அளவு இயங்குமானால் 25 ஆண்டும் வாழ்வர் (754 - 756). மூன்றாம் தந்திரத்தில் அட்டமாசித்தி எனும் பிரிவில் ஒன்பது வாயுக்களும், நடு நாடி நீங்கலாக ஒன்பது நாடிகளில் ஒன்றி இருக்குமானால் உடலும் உயிரும் ஒன்றினை ஒன்று பிரியாது என்கின்றார் (633).

மூச்சை இடது வலது மூக்குகளின்வழி கிரமப்படி செலுத்திப் பயிற்சி செய்தால் கண்டிப்பாக நூறு ஆண்டுகள் வாழலாம் என்கின்றார் திருமூலர் (753).

### முடிவுரை

திருமந்திரம் பல்வேறு தத்துவங்களைக் கூறுகின்ற மானுட வாழ்வியல் தத்துவ நூலாகும். இருப்பினும் சமுதாயத்தில் பல்வேறு நிலைகளில் வாழும் மக்களுக்குப் பயன்படும் முறையில் வேறு பல பொதுச்செய்திகளையும் கூறுகின்றது. அவை அவரவர் ஆன்ம பக்குவத்திற்கும், சாதனா பயிற்சிக்கும் தக்கவாறு விளங்கும்.

பத்துவகை நாடிகள், வாயுக்கள், அவற்றின் அடிப்படையில் வரும் நோய் முதலான மருத்துவம் தொடர்பான பல்வேறு செய்திகளை இந்நூல் கூறுகின்றது.

வாரசரம், வாரசூலம் இவற்றின் அடிப்படையில் வானவியல் கருத்துகளைக் கூறுகின்றது. நாள், மாதம், ஆண்டு இவற்றின் பாகுபாட்டிற்கான காரணத்தைச் சொல்லுகின்றது. பன்னிரு இராசிகள் பற்றியும், இந்த இராசிகள் ஆதாரங்களில் பொருந்தித் தியானிக்க ஒளியும் ஒலியும் தோன்றும் என்பவை பற்றியும் வானவியல் செய்திகளாகக் கூறியுள்ளார். ஆகாயம் என்பது இங்கே சிரசாகும். தவ ஆற்றலின் மேலோங்கிய நிலைகளில் நாதமும், காட்சிகளும் உண்டாகும்.

இறப்பை அறியும்வழி, அதனை வெல்லும் முறை, உடம்பில் பஞ்சபூதங்கள் பெறும் இடங்கள், யோகப்பயிற்சிக்கு உரிய நாட்கள் முதலியவை பற்றியும் கூறியுள்ளார்.

இவர் பெயரில் வழங்கும் நூல்கள் அனைத்தையும் திருமூலர் பாடினார் என்று சொல்வதற்கில்லை. அவரது கருத்துகளைப் பின்வந்தோர் அவரவர்கள் தத்தம் நடையில் காலத்திற்கேற்ப எழுதியிருப்பர் எனக் கருத முடிகின்றது. இது ஆன்மிக அறிஞர்கள், ஞானியர்களின் ஆய்வின் பாற்பட்டதாகும்.

# 7. திருமூலரின் மெய்யியல்

## முன்னுரை

தத்துவம் என்பது சமயத்தோடு தொடர்புடைய ஆன்ம அனுபவத்தைப் பெறும் வழியாகும். தமிழில் இருக்கும் தத்துவ நூல்களில் திருமந்திரம் மிகச் சிறந்த இடத்தைப் பெறுகின்றது. **அறிஞர் நல்லசாமிப்பிள்ளை, உலகத் தத்துவங்களிலேயே சிறந்த இடத்தைத் திருமந்திரம் பெறுகின்றது என்கின்றார்.** சிறந்த ஞானாசிரியராக இருப்பதால் இவரது நூல் முழுவதும் யோக தத்துவமும், ஆன்ம தத்துவமும் பரந்து காணப்படுகின்றது. சித்தாந்த தத்துவம், வேதாந்த தத்துவம், சமரசத் தத்துவம் முதலியவற்றுக்குத் தம்நூலில் இடம் தந்துள்ளார். இவரது நூலில் உள்ள தத்துவக் (மெய்யியல்) கருத்துகளைப் பற்றி இப்பகுதியில் காண்போம்

## தத்துவம் - பொருள் விளக்கம்

தத்துவம் என்பது வடசொல். இதற்குத் தமிழில் மெய்யியல் என்று பொருள். மெய்யியல் என்பதற்கு உண்மைநிலை என்பது பொருள். இங்கு மெய்யியல் என்பது திருமந்திரத்தின் உண்மை நிலையை அறிதல் என்னும் ஆழ்ந்து அகன்ற பொருளில் பயன்படுத்தப் பெறுகின்றது. அறிவை விரும்பு என்பதே இதன் உட்பொருளாகும்.

தத்துவம் என்பதும் தர்க்கம் என்பதும் கருத்தளவில் உருவாகும் சிந்தனைகள் சமுதாயத்திற்குப் பயன்படுவனவாய் இருத்தல் வேண்டும் என்பதாகும். மதம், ஆன்மிகம் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு எழுந்த அனைத்து ஒழுக்க நெறிகளும், நீதிநெறிக் கோட்பாடுகளும் மனிதத் தத்துவம் முழுவதையும் தனது எல்லையாகக் கொண்டுள்ளன. உலக மக்களை வாழ்விக்க எழுந்த சிந்தனையே தத்துவமாகும். மனிதனிடமுள்ள இறைத்தன்மையை வெளிக்கொணர்வது தத்துவத்தின் பணியாகும். இதைத் தம்இறைசிந்தனை, மத நல்லிணக்கம் போன்றவற்றின்வழி உணர்த்தியவர்களுள் வேதாத்திரி மகரிசியும் ஒருவர் ஆவார்.

## *தத்துவஞானம்*

நம் முன்னோர்கள் **அமைதியுடன் இரு இல்லையெனில் சமஉணர்வைக் கடைப்பிடி** என்ற தத்துவக் கருத்தை

வழங்கியுள்ளனர். முதலில் இறைநிலையை உணர்ந்து அத்தோடு இன்புற்று வாழ வேண்டும் என்பதே மனிதப் பிறவியின் நோக்கமாகும்.

அறிவியல் என்பது நிறுவப்பட்ட மறுக்க முடியாத அனுபவ முறையில் நிருபிக்கப்பட் உண்மைகள் என்ற நிலையில் தொடங்குகின்றது. ஆனால் தத்துவஞானம் என்பது இறுதி நிலையில், முடிவான உண்மைகளை எட்டியவுடன் முடிவடைகின்றது. இந்தத் தத்துவ ஞானப்பயிற்சியானது மிக உயர்ந்த பொதுமைப்படுத்தல்களைச் செய்யும் சிந்தனைத் திறனை வழங்கக்கூடியது. இது கருதுகோள்களை இயக்கவியல் நெகிழ்வுடன் புரிந்து கொள்ளும் திறமையை வழங்குகின்றது. இது ஒரு பொருளைத் தனித்துப் பார்ப்பதில்லை. அதாவது தொடர்ச்சியாக மாற்றம் அடைந்து கொண்டிருக்கும் பன்முகப்பட்ட உறவுகளின் உலகத்தின் ஒரு பகுதியாகப் பார்க்கும்படி கற்பிக்கின்றது.

அறிவியல் என்பது பகுத்து ஆராயும் நிலையைக் கொண்டது. தத்துவம் என்பது தொகுத்து வழங்கும் விரிவுரையாகும். இத்தத்துவார்த்தக் கருத்துகளை வரையறை செய்வது, கூர்ந்த அறிவுநிலைசார் பணியாகும்.

## திருமூலர் தத்துவம்

தத்துவஞானம் என்னும் அரிய கருவூலத்தைத் தன்னகத்தே கொண்டுள்ள சமயத்துறையானது அறிவியல் தொடமுடியாத அறிவுப் பரப்பினை விளக்குவது என்பதை நினைவில் கொள்ளவேண்டும். அறிவியல் கருத்துகள் சோதனை மூலமாக நிலைநாட்டப்படுபவை. சமயத் தத்துவக் கொள்கைகள் பொறிகளுக்குப் புலனாகாத உயிர், ஆன்மா, கடவுள் குறித்து விளக்குபவை. எனவே அறிவியல் அணுகுமுறையை சமயத் தத்துவத் துறையில் கையாள முடியாது. தருக்க அணுகுமுறையில் (Logical Apporach) இது அமையப் பெற்றுள்ளது. திருமூலரின் தத்துவமும் ஏறக்குறைய சமயத்தத்துவ அடிப்படையில் அமைந்த தோத்திர சாத்திர நூலாகும்.

## சமயத் தத்துவம்

சமயம் என்பது ஒரு குறிப்பிட்ட வழிபடு தெய்வத்தைப் பற்றியது. அதைத் தொழ வேண்டிய முறை பற்றிக் கூறுவது. வழிபடுவோர் செய்யத்தக்கன, செய்யத்தகாதன, வழிபாட்டால் பெறுவன முதலியன பற்றியும் கூறுவது. தத்துவம் என்பது சமயத்தின் ஓர் உட்பிரிவு. குறிப்பிட்ட சமயத்தில் குறிக்கப்பெறும் இறைவனுக்கும், அவனால் படைக்கப்பட்ட உயிரினத்திற்கும் இடைத்தொடர்பு, ஒற்றுமை வேற்றுமை, இரண்டையும் இணைக்க

முயலும் கருத்துகள், இரண்டின் இயல்புகள் பற்றிய விரிவான ஆனால் நுட்பமான ஆராய்ச்சியே ஆகும்.

எனவே தத்துவம் இன்றிச் சமயம் இல்லை. சமயம் இன்றித் தத்துவம் இல்லை. சமயம் என்பது இறைவன், ஆன்மா பற்றிய உறவுகளைப் பற்றிய அறிவு. தத்துவம் என்பது ஆழ்ந்த நுண்ணிய அறிவு. சமயம் என்பது பாதை. தத்துவம் என்பது அப்பாதையில் செல்லும் பயணத்தில் கிடைக்கும் அனுபவங்கள். ஒவ்வொரு பாதையிலும் ஒவ்வொருவித அனுபவம் கிடைக்கும்.

அதுபோல் ஒவ்வொரு சமயத்திற்கும் ஒவ்வொரு தத்துவம் உண்டு. சமயங்கள் வேறாதல் போலத் தத்துவங்களும் வேறாகின்றன. த்வைதம் - அத்வைதம் இறை ஒன்றா ஒன்றிலிருந்து இரண்டா, பலவா இதனை உட்படுத்தி ஆய்வதே இறைத்தத்துவம். இதில் சைவத் தத்துவமும், வைணவத் தத்துவமும் வேறுபடுகின்றன. ஆனால் இரண்டும் இறைவனை அடைய வழிகாட்டுகின்றன. அவ்வகையில் திருமந்திரம் உணர்த்தும் தத்துவக் கருத்துகளை இனங்காட்டுவதாக இப்பகுதி அமைகின்றது.

**சாங்கிய மரபு:** இந்தியத் தத்துவ மரபிலுள்ள ஆறு தரிசனங்களுள் ஒன்று சாங்கியமரபு. இதனை ஆதி இயற்கைவாதம் என்றும் கூறுவர். மனித சமூக வளர்ச்சி நிலையில் சடங்குகள், நம்பிக்கைகள் தோன்றும். பின்னரே அவை சமயமாகும். அதன்பின் அவை ஒரு தத்துவ வடிவத்தை அடையும். இப்பண்பினைச் சமண, பௌத்தத்திற்குமுன் தோன்றிய சாங்கிய மரபிலும் காணமுடிகின்றது.

***உலகாய்தம்***

சாங்கிய மரபிற்கும் முந்தைய ஒன்று உலகாய்தம் எனும் தத்துவச் சிந்தனையாகும். பருப்பொருள்களால் ஆகிய இவ்வுலகத்தின் காரணம் யாது எனக் கேட்டு ஒரு காரியத்தைக் கண்டடைவர். இப்படிக் காரண காரியம் தேடித் தொடர்ந்து போகும்போது அது ஒரு கடவுளிடம் சென்று முடியுமானால் அதனை **வைதீக சமயம்** என்பர். காரணகாரிய வினையின் தொடக்கம் பொருள்களின் சமநிலைக்குலைவே எனப் புரிந்து கொண்டால் அதனை **உலகாய்தம்** என்பர். இது புலனறிவை மீறிய ஒன்று இல்லை என வாதிடக்கூடியது. இத்தகைய தருக்க நிலைப்பாடுகளைத் திருமந்திரத்திலும் காணமுடிகின்றது.

**இறைவன்**

**அன்று நின்றான் கிடந்தான் அவன்என்று**
**சென்றுநின்று எண்திசை ஏத்துவர் தேவர்கள்**

**என்றுநின்று ஏத்துவன் எம்பெருமான் தன்னை**
**ஒன்றிஎன் உள்ளத்தின் உள்இருந் தானே** (திரு.1762)

என்ற திருமந்திரப் பாடல், உள்ளத்தில் உயிராகச் சுடர் விடுபவன் இறைவன், உள்ளமே சிவன் வாழும் கோயில், அதன் உள்ளே இறைவனைக் காணாதவர், வெளியே தேடி அலைகின்றனர் என்கின்றது.

*அன்பு*

மேலும் இந்நூல் அன்பையே சிவனாகக் காண்கின்றது.

**அன்பு சிவம் இரண்டென்பார் அறிவிலார்**
**அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்** (திரு.270)

என்ற அடிகள் இதனை உணர்த்துகின்றது. அன்பை ஆதாரமாகக் கொண்டவர்களால்தான் இன்பநிலையை அடையமுடியும். இதனை,

**என்பே விறகாக இறைச்சி அறுத்திட்டுப்**
**பொன்போல் கனலில் பொரிய வறுப்பினும்**
**அன்போடு உருகி அகங்குழை வார்க்கின்றி**
**என்போல் மணியினை யெய்ய ஒண்ணாதே** (திரு.272)

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றது. எனவே தூய்மையான அன்பு இருத்தல் வேண்டும். அன்பில் சுயநலம் கலத்தல் கூடாது. அனைத்து உயிர்களையும் தம் உயிர்போல் கருதுதல் வேண்டும். உலக உயிர்களின் துன்பத்தை நீக்க முயல வேண்டும்.

*சிவலிங்கம்*

இவ்வுலகமும், ஆகாயமும், 64 கலைகளும் லிங்க உருவமே. சீவனாகிய உயிர் இருக்குமிடமே சிவலிங்கம் என்கின்றது திருமந்திரம்.

**மானுடர் ஆக்கை வடிவு சிவலிங்கம்**
**மானுடர் ஆக்கை வடிவு சிதம்பரம்**
**மானுடர் ஆக்கை வடிவு சதாசிவம்**
**மானுடர் ஆக்கை வடிவு திருக்கூத்தே** (திரு.1726)

மனித உடலை, சிதம்பரமாகவும், சதாசிவமாகவும் குறிப்பிடுகின்றது. சிவன் உள்ளத்தில் இருப்பதால், உடலே சிவலிங்கமாகின்றது.

உலகப் பொருள்களில் உள்ள உயிர் அகரமாகும். உயிர் சிவனாக இருப்பதால் அவனே அகரமாகத் திகழ்கின்றான். அனைத்துப் பொருளிலும் உள்ள ஆற்றல் சக்தியாகும். இதுவே உகரமாகும். அகரமும் உகரமும் கலந்தது உலகம். எனவே அகரம் - உயிர்; உகரம் - உடல்; உடலும் உயிரும் கலந்தது உலகம்

என்பதை, அகர உகர வடிவமே சிவலிங்கம் என்ற திருந்திர வரியின்வழி அறியலாம். தலைஉச்சியில் ஒளிவடிவாக ஆத்மலிங்கம் தோன்றும். விந்துவும் நாதமும் கலந்ததே ஆத்மலிங்கம். இதை ஆதாரமாகக் கொண்டே, பஞ்சபூத நாயகர்களும் படைத்தல் தொழிலைச் செய்கின்றனர்.

***தன்னை அறிதல்***

தன்னை அறிதல் என்பது இன்பத்தைத் தரக்கூடியது. தன்னை அறியாமல் இருப்பது துன்பத்தைத் தரக்கூடியது. சிவனோடு கலந்து விட்டவர்கள் ஐம்பூதங்களால் ஏற்படும் அழிவுகள் பற்றிப் பெரிதாகக் கவலைப்படத் தேவையில்லை. ஏனென்றால் அவர்களே தங்களைப் பஞ்சபூத நிலைக்கு மாற்றிக் கொள்ள வேண்டும். இதனை அறிந்து கொண்டால் துன்பம் என்ற சொல்லுக்கே இடமில்லாமல் போய்விடும்.

**தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்**
**முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பார்கள்**
**பின்னை வினையைப் படித்துப் பிசைவார்கள்**
**சென்னியில் வைத்த சிவனரு ளாலே** (திரு.2611)

பிரபஞ்சத்தை அறிந்து கொள்ளத் தன்னைப் பற்றி அறியக்கூடிய அறிவு வேண்டும். ஏனென்றால் உள்ளத்தில்தான் பிரபஞ்சம் உள்ளது. அதில்தான் ஆதிபகவனும் உள்ளது.

**தன்னை அறிந்தால் தனக்கொரு கேடில்லை**
**தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்**
**தன்னை அறியும் அறிவை அறிந்தபின்**
**தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தானே** (திரு.255)

ஞானிகள், இறைவனைத் தேட அறிவையே பயன்படுத்துகின்றனர். உடல் உறுப்புகளில் மாற்றங்களை உண்டாக்கலாம். மரபு நோய்களை முற்றிலும் அகற்றலாம் என்கின்றது இன்றைய அறிவியல் கண்டுபிடிப்பு. மருத்துவ அறிவியல் கண்டுபிடிப்பில் ஜீனோம் என்னும் அணு ஆய்வு முடிவுகள் செல்களுக்குள் பதிந்து இருக்கும் பதிவுகளை மாற்றும் முயற்சியை மேற்கொண்டால் உடல் உறுப்புகளில் மாற்றங்களை உண்டாக்கலாம் என்கின்றது.

**திருமூலரின் இறைக்கொள்கை**

இறைவன் எல்லா உயிர்கள் இடத்தும் இருப்பான், பிறப்பு இறப்பு இல்லாதவன், எண்ணங்கடந்து நிற்பவன். அனைத்து உலகுக்கும் அப்பாற்பட்டு நிற்பவன், பரந்தும் சுருங்கியும் புனல்,

தீ, வளி, ஞாயிறு, திங்கள், விசும்பு முதலியனவாய் உள்ளவன்; ஆண், பெண், அலி இத்தன்மையன் என்று கூறமுடியாதவன், உலகே அவனது தோற்றம், அனைத்துச் சமயங்களுக்கும் அடிப்படை இறைவனொன்றே, இதுவே முத்தி தரும் அறிவு, அண்டத்து இறைத் தத்துவம் பிண்டத்திலும் உள்ளது. அதாவது உலகிலுள்ள இறையே உடலுள் உள்ளது. சிதம்பரம் என்பதும், சிவலிங்கம் என்பதும், திருக்கூத்து என்பதும் பிண்டத்தில் இருப்பனவே என்ற கூற்றுகள் திருமூலரின் இறைக்கொள்கையைத் தெளிவுபடுத்துகின்றன.

சுமார் 59 பாடல்களில் உடலை அல்லது உள்ளத்தைக் கோயிலாகக் குறித்துப் பாடியுள்ளார். உடம்புள்ளே உத்தமன் கோயில் கொண்டான் என்கின்றார்; இந்த உடம்பினை நடமாடும் கோயில் எனக் குறிப்பிடுகின்றார்.

சமயங்கள் வேறாதல் இயல்பு. எனினும் அவை நோக்கும் இறுதி இலக்கு அனைத்துக்கும் இறைவனாகிய ஒருவனை அடைவதற்கே வழிகாட்டுகின்றது. அனைத்துச் சமயங்களும் அன்பு எனும் ஒன்றன் அடிப்படையில்தான் எழுந்துள்ளன. எனவே அவை அனைத்தும் ஒன்றே. அவற்றில் உயர்வு தாழ்வு இல்லை. அன்பே திருமூலரின் இறைக்கொள்கை. அனைத்து உயிரிலும் இறைமையுண்டு. எனவே அனைத்து உயிரையும் போற்றுவதே உண்மை வழிபாடு, அன்பும் சிவமும் ஒன்றே. அன்பு உள்ளத்தால் அன்புவழி சென்று அன்பான இறைவனை அடைதலே திருமூலரின் சமயமாகும். அன்பு கொள்ளும்போது அனைத்து வேற்றுமைகளும் மறந்து ஒருமை உணர்வும் சமரசமும் ஏற்பட்டு ஆண்டவனை அடைவிக்கின்றது.

*காமிக ஆகமம்*

முழு முதல்நிலை என்பது இரண்டாம் தந்திரம். இதைக் காமிக ஆகமம் என்றும் கூறுவர். வடபுலம், தென்புலம் என இரண்டு பாகுபாடுடையது வாழ்வின் நுட்பம். இதில் வடபுலம் என்பது பொறிபுலன் நிறைந்த உடலாகும். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கின் துணையோடு புலன்வழி சென்று, பொறிகளின்வழி உலகப் பொருட்களைத் துய்ப்போர் வடபுலத்தார். இவர்கள் நிறைவு இன்றி வாட்டமே வாழ்வாக வாழ்வர். சிறுநெறியை விரும்புவர். பன்முக வழிபாடு உடையவர். இறப்பு, பிறப்பு என்ற இரண்டிற்கும் ஆட்படுவர்.

தென்புலம் என்பது பொறிபுலன்கள் அற்ற உணர்வு நிலையாகும். அறிவு, அன்பு, அருள், ஆற்றல் இவற்றின் துணையோடு ஒளிவழி நின்று உணர்வைத் துய்ப்பர். இவர்களே தென்புலத்தார்.

வடபுலத்தார் தவநிலையினர். மனவெளியில் நின்றோர். தென்புலத்தார் ஒளிவெளியில் நின்றோர். மனவெளி நின்றவர் ஒளிவெளியை அடையும்போது நிலைவெளியில் ஒன்றுவர்.

**ஒன்றானவர்:**

வாலறிவன் நின்ற இடம் தென்புலம். நூலறிவும் பிறவும் வடபுலம். இந்த இரண்டு புலங்களிலும், அவன் அருளே நிறைந்து நிற்பின் முழு முதல்நிலை நன்றாகத் திகழும். முழு முதல் நிலையை ஒருவர் அடைய 25 சார்புநிலை உணர்தல் வேண்டும். இது அகத்தியம் முதலாகப் பெரியோரைத் துணைகோடல் ஈறாக உள்ளது. அகத்தியம் வால்அறிவின் இயக்கம். அகத்தியன் வாலறிவின் நிலையினன். இது ஒரு அகநிலை அனுபவத்தின் புறநிலை உருவகம். ஒருவர் முழு முதல் நிலையை அடைய அகத்தியம் முதலாக உள்ள அனைத்தையும் அறிந்தாலும், பெரியார் துணையே அந்நிறைவினைத் தரவல்லது. இதை,

> **அரியவற் றுள்எல்லாம் அரிதே பெரியாரைப்**
> **பேணித் தமராக் கொளல்** (443)

என்கின்றது குறள்.

***அருள் பழக்க நிலை:***

இதை வீராகமம் என்பர். அருள் நிலையில் பழக, தீமைகளை அகற்றும் பழக்கமும், நன்னெறியில் நின்று ஒழுகும் பழக்கமும் அமைதல் வேண்டும். அதற்குரிய அமைதியும், இருக்கையும், உயிர்க்காற்றின் இயக்கமுறையும் தெரிந்து ஒழுக வேண்டும். அதனால் அருள் கிட்டும். பொறுமை, இனிய நினைவு, அவனோடு சமநிலை எய்தல், எண்வகை சித்தி நிலையில் வீறுற்று நிற்றல், அன்பில் உயரல், உடம்பை வளர்க்கும்வழி அறிதல், உயிரை வளர்க்கும் ஞானம் பயிலுதல் முதலிய 21 நிலைகளில் பழகியும் ஒழுகியும் அருள்திறம் அடைதல் வேண்டும்.

**ஒளி முழுக்கநிலை:**

அசபை என்பது பேசாத எழுத்து. இது ஒரு பேரொளி வட்டம். இதை உணர்வால் வரைந்து, அதன் குறி அறிதல் ஆகும். உணர்வில் ஓர் எழுத்தால் ஊன்றி நின்று, இரண்டு எழுத்தை இசைத்து, மூன்று எழுத்தால் சோதியை வெளிப்படச் செய்தல்.

இப்படி மந்திர எழுத்துகளை உரிய உணர்வு நிலைகளில் ஊன்றி நிறுத்துதலும், நன்கு முடுக்குதலும் செய்வதாகும். இதனால் பரம்பொருள் மந்திர தந்திர நிலையில் மாட்சியுடன் விளங்குவதை

உணர முடியும். இது அசபை முதலாக, நவாக்கிரி ஈறாகப் பதிமூன்று பகுப்புகளை உடையது; 230 மந்திரங்களை உடையது.

**குருநெறிநிலை:**

இது சுத்த சைவம் முதல் உட்சமயம் ஈறாக 20 கூறுகளை உடையது. இவை அண்டம் பிண்டம் அனைத்திலும் ஈறாக வீறுற்று விளங்குவன. இவை மூவகை மண் தலத்திலும் இயல்பாக வெளிப்படுவன. பருப்பொருள் நுண்வெளி இரண்டையும் இயக்குவது அவனது அருள்திறனாகும். அத்திறத்தை நோன் பாலும், சீவத்தாலும், செறிவாலும், அறிவாலும் பெற முயலுதல் வேண்டும். இதை நால்வகைச் சைவம் என்றனர்.

***சுத்த சைவம்***

பரத்தை நேயத்தால் உணர்வதே சுத்த சைவம். அன்பு நெறியே சிவநெறி அல்லது இயற்கைச் செந்நெறி. பரத்தின் அருளையும், மாயையின் இருளையும் அறிந்து பரத்தில் பதிவதே சுத்த சைவம்.

விதியறிந்து தெளிவது, தெளிவு அறிந்து ஒழுகுவது, ஒலி அறிந்து முழக்கி மூழ்குவது, முதலிய ஒழுகுநிலை உணர்ந்து தெளிவோரே நடுகற்ற நல்லறிவினர். அவர்கள் இயற்கையின் முடிவை அறிவர். ஞான இயக்க நிலைகளை உணர்வர். ஐம்புலனைப் பண்படுத்துவர், நிறை ஞானநிலையுடையவர், அன்பு வடிவமானவர். இவற்றின் படிமுறைகளால் சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சுத்த சைவம் ஆகியன தோன்றின.

***மார்க்கம்***

தானே தானாகி நின்ற இயக்கமே சுத்தம்தான். தனக்கு இணை இல்லாதவர்களோடு இணைந்து இயங்குவது அசுத்தம். தானே தானாய், தன்ஒத்த நிலையில் கலந்து இயங்குவது மார்க்கம். கோலம் குறி குணம் கடந்த, பற்றினைக் கடந்த தற்பர இயக்கமே கடும்சுத்தம் ஆகும். இவை சுத்த சைவம் முதல் உட்சமயம் ஈராக 20 பகுப்புகளை உடையன.

***சன்மார்க்கம்***

திருநெறிகளில் ஒன்று சன்மார்க்கம். இது தன்னலம் அற்ற பண்புடையது. இவர்கள், தலைவன் பெயரை எண்ணுதல், எழுதுதல், உரைத்தல், உள்ளம் கசிந்து உருகல், கண்ணில் நீர் மல்கல் போன்ற மெய்ப்பாட்டின்வழி நன்னெறிக்கும் செல்வோர் ஆவர்.

ஞானியர் போற்றும் நன்மார்க்கமே சன்மார்க்கமாகும். இது ஐந்து கூறுகளை உடையது. வேத ஆகமங்களால் அறியத்தக்கன. அறிந்தார் உள்ளம் சீற்றம் ஒழிவன. சிவயோகம் கூடிச் சித்தெல்லாம் மலர்வன. இவர்களே இறப்பைத் தடுக்கும் மாட்சிமை நிறைந்தோர். இந்நிலை எய்தியவரே சன்மார்க்க நெறியின் குறிப்பறிந்தவர் ஆவர்.

மேலும், சன்மார்க்கம் என்பது ஆன்மா, தன்மனத்தை எதிலும் செலுத்தி அலையாமல் இருப்பது. அதாவது தன்னைத் தானே அறிவது, உலக அசைவில் மனம் சென்று அலையாமல் இருப்பது; நிலைபெறச் செய்வது.

பசு:

பசு என்பது ஆன்மா. அது ஆணவப் பிணிப்புடையது; தன் முனைப்பு மிக்கது; சிற்றுணர்வே தலைப்படுவது. ஆன்மாவில் இந்நிலை மலரப் பாசமே முன்நிற்கின்றது.

பாசமாகிய பின்னிப் பிணைந்துள்ள வலையை அறுத்துப் பதியுடன் கூடுவதே சன்மார்க்க நெறியாகும். அந்நிலையில் கசியாத நெஞ்சமும் கசியும்; கண்ணீர் பெருக்கெடுக்கும். இது சகமார்க்கம் என்னும் தோழமை நெறியாகும். சன்மார்க்கம் பல மலர்ச்சிக்குப்பின் மலரும் சிறப்புடையது. அவை அரும்பு, மலர், காய், கனி போல அமைவன.

திருநெறி:

திருநெறி திருமந்திரத்தில் கடைசிப் பகுதியாக உள்ளது. உட்சமயம் ஆறாகும். இந்த ஆறும் படிமுறையாகும். அதை வகுத்தவன் பரனாகும். அவன் தேவர்களுக்கும், மக்களுக்கும் அவரவர் வினைகளுக்கு ஏற்ப உடலைக் கொடுத்தான் வினையின் வலிமைக்கேற்ற உடல், உலகம், சூழல், மொழி, இனம், வாழ்வின் அமைப்பு, ஒழுகும் நெறி அனைத்தும் கொடுத்தான்.

உயிர்கள் செல்லுவதற்குரிய பேரூர் ஒன்றே ஆகும். அவ்வூரை அடைவதற்குச் சமயங்கள் ஒவ்வொன்றும் ஒரு வழியைக் கூறுகின்றன. இதில் நல்லவழி கெட்டவழி என்பது இல்லை. அனைத்தும் சமமே. எனவே சமய பேதங்கள் என்பது தேவையற்ற ஒன்றாகும். இதை விடுத்து, அவரவர் நெறி நின்று ஒழுக வேண்டும். இதுவே உய்தலைத் தரும். இதனையே திருமூலர்,

ஒன்றது பேரூர் வழியாறு அதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்று உரையாளர்கள்
குன்று குறைத்தெழு நாயை ஒத்தார்களே (1558)

என்கின்றார். அவரவர் மனப்பக்குவத்திற்கேற்ப சமயங்கள் தோன்றியுள்ளன. இதன்வழி அடைய வேண்டிய இறைநிலை என்பது ஒன்றே. அதை அடையப் பலவகை தவங்கள் உதவுகின்றன. எனவே இத்தவம் பெரிது, அத்தவம் பெரிது என்ற கருத்து வேறுபாடும் தேவையற்ற ஒன்றே ஆகும்.

எத்தவமும் செய்யலாம். எங்கும் பிறந்து இருக்கலாம். ஒத்து உணர்தல் வேண்டும். அவர்களே விரைவில் இறைநிலை பெறுவர். எனவே அறுவகைச் சமயங்களும் ஆன்மாவின் மலம் அறும் வகையைக் கூறுகின்றன என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். அவற்றின் இயல்பறிந்து ஒழுகுவதே இறைநெறியாகும்.

### தத்துவ எண்ணிக்கை

திருமூலர் அனுபவ வாயிலாகக் கண்ட தத்துவங்கள் நான்கு கோடியே நாற்பத்தெட்டாயிரத்து ஐநூறாகும். மேலும் அதைச் சுருக்கி 96 என வகைப்படுத்தி, அதையும் 36 ஆகவும் மேலும் சுருக்கி 25 எனவும் ஆக்கியுள்ளார்.

நாலொரு கோடியே நாற்பத்து எண்ணாயிர
மேலு மோரைந்து நூறுவேறா யடங்கிடும்
பாலவை தொண்ணூறோ டாறாட் படுமவை
கோலிய ஐயைந்து ளாகும் குறிக்கிலே (திரு.2138)

### தொண்ணூற்றாறு தத்துவங்கள்

உடலமைப்பிலும், இயக்கத்திலும் உள்ளவை 96 தத்துவமாகும். அவை வருமாறு:

1. பூதம் ஐந்து
   1. விண் - (வெளி, ஆகாயம்)
   2. மண் - (நிலம், பிரதிவி)
   3. வளி - (வாயு, காற்று)
   4. தீ - (நெருப்பு, அக்கினி, தேயு)
   5. நீர் - (தண்ணீர், அப்பு)
2. பொறிகள் ஐந்து
   1. செவி - (காது, சுரோத்ரம்)
   2. உடம்பு - (உடல், மெய், தொக்கு)
   3. கண்கள் - (சச்சு)
   4. நாக்கு - (சிங்குவை)
   5. மூக்கு - (ஆகிராணம்)

3. புலன்கள் ஐந்து
   1. வாய் - (வாக்கு)
   2. கை - (பாணி)
   3. கால் - (பாதம்)
   4. குதம் - (ஆசனம்)
   5. குறி - (கருவிழி, மர்மஸ்தானம், பிறப்புறுப்பு, உபஸ்தம்)
4. பொறிச்செயல் ஐந்து (ஞானேந்திரிய கிரியை)
   1. ஒலி உணர்வு (சத்தம், ஓசை)
   2. தொடு உணர்வு (ஸ்பரிசம்)
   3. உருவத்தை அறிதல் (தர்சனம்)
   4. சுவை உணர்வு (ருசி)
   5. நாற்ற உணர்வு (வாசனை, கந்தம்)
5. புலன் (தொழிற்செயல் ஐந்து) கன்மேந்திரியக் கிரியை
   1. பேசுதல் (வசனம்)
   2. எடுத்தல், பிடித்தல (தானம்)
   3. நடத்தல் (கமனம்)
   4. மலத்தை வெளியேற்றல் (விசர்க்கம்)
   5. சிறுநீர், விந்துவிடுதல் (ஆனந்தம்)
6. கரணம் நான்கு
   1. அகம் (மனம்)
   2. அறிவு (புத்தி)
   3. நினைவு (சித்தம்)
   4. முனைப்பு (அகங்காரம்)
7. உள்ளம் ஒன்று
   1. அறிவு
8. குடல் ஐந்து (ஆசயம்)
   1. இரைக்குடல்( ஆமாசயம்)
   2. செரிக்குடல் (பகிர்வாசயம்)
   3. நீர்க்குடல் (ஜலவாசயம்)
   4. மலக்குடல் (மலவாசயம்)
   5. வெந்நீர்க்குடல் (சுக்லாசயம்)
9. உடம்பு ஐந்து கோசம்
   1. உணவுடம்பு (பருஉடம்பு, அன்னமயகோசம்)
   2. வளியுடம்பு (பிராணமய கோசம்)
   3. உள உடம்பு (மனோமய கோசம்)
   4. அறிவுடம்பு (விஞ்ஞானமய கோசம்)
   5. இன்ப உடம்பு (ஆனந்தமய கோசம்)

10. வினை இரண்டு
   1. நல்வினை
   2. தீவினை

11. பண்பு மூன்று (குணம்)
   1. அடக்கம் (சத்துவம், சாத்வீகம், (அருள்)
   2. ஆண்மை (ராஜசம், (மருள்)
   3. மழுங்கல் (தாமசம் (தெருள்)

12. பற்று மூன்று (ஈடனை, ஈஷனை)
   1. பொருட்பற்று (அர்த்த ஈடனை)
   2. பிள்ளைப்பற்று (புத்திர ஈடனை)
   3. உலகப்பற்று (தார ஈடனை)

13. இயல்பு மூன்று (மலம்)
   1. செருக்கு (ஆணவம்)
   2. மருட்சி (மாயை)
   3. இச்சை (காமியம்)

14. மண்டலம் மூன்று
   1. தீ (அக்கினி மண்டலம்)
   2. ஞாயிறு (சூர்ய மண்டலம்)
   3. திங்கள் (சந்திர மண்டலம்)

15. தூண்டல் எட்டு (விகாரம், இராகம்)
   1. அவா (ஆசை, காமம்)
   2. சினம் (குரோதம், கோபம்)
   3. ஈயாமை (கருமித்தனம், உலோபம்)
   4. மதியாமை (கர்வம், மதம்)
   5. இச்சை (விருப்பம், மோகம்)
   6. உட்பகை (மாச்சரியம்)
   7. ஏளனம் (இடும்பை)
   8. அருவெறுப்பு (அசூயை)

16. நிலை ஐந்து (அவத்தை)
   1. நனவு (சாக்கிரம்)
   2. கனவு (சொப்பனம்)
   3. உறக்கம் (சுழுத்தி)
   4. பேருறக்கம் (துரியம்)
   5. உயிர்ப்படக்கம் (துரியாதீதம்)

17. ஆதாரம் ஆறு
   1. மூலாதாரம் (முதலாதாரம்)
   2. சுவாதிட்டானம் (இரண்டாமாதாரம்)
   3. மணிபூரகம் (மூன்றாமாதாரம்)

4. அனாகதம் (நான்காமாதாரம்)
5. விசுத்தி (ஐந்தாமாதாரம்)
6. ஆக்கினை (ஆறாமாதாரம்)

**18. நாடி பத்து**

1. இடகலை (சந்திரன்) - இடக்கண்
2. பிங்கலை (சூரியன்) - வலக்கண்
3. சுழுமுனை (புருவமத்தி) - நெற்றிக்கண்
4. காந்தாரி
5. அத்தி
6. சிங்குவை
7. அலம்புடை
8. புருடன்
9. சங்கிணி
10. குரு

**19. காற்று பத்து (வாயு)**

1. உயிர்க்காற்று (பிராணன்)
2. மலக்காற்று (அபானன்)
3. தொழிற்காற்று (வியாபனன்)
4. ஒலிக்காற்று (உதானன்)
5. நிரவுக்காற்று (சமானன்)
6. தும்மற்காற்று (நாகன்)
7. விழிக்காற்று (கூர்மன்)
8. கொட்டாவிக்காற்று (திருகரன்)
9. இமைக்காற்று (தேவதத்தன்)
10. வீங்கற்காற்று (தனஞ்செயன்)

**20. குற்றம் மூன்று (தோஷம்)**

1. வாதம் (வாயு, காற்று)
2. பித்தம் (தீ, அக்கினி)
3. சிலேட்டுமம் (கபம், ஐயம், சிலேஷ்மம், நீர்)

மேற்கண்ட தொண்ணூற்றாறு தத்துவங்களும் மனித உடல் இயக்கத்திற்குப் பிறப்பில் இருந்து, வாழ்வு முடிந்து உடல் மண்ணோடு மண்ணாகின்ற வரையில் பெரும்பங்கு வகுக்கின்றது.

**மூன்றுவித நிலைகள் (அவஸ்தைகள்)**

1. ஜாக்கிரம் (விழிப்புநிலை)
2. ஸ்வப்னம் (கனவுநிலை)
3. சுழுப்தி (உறக்கநிலை)

இம்மூன்று அவஸ்தைகளும் ஸ்தூல, சூட்சும, காரண உடல்களில் அடங்கியுள்ளன.

**பஞ்ச கோசங்கள்**

1. அன்னமயம்
2. பிராணமயம்
3. மனோமயம்
4. விஞ்ஞானமயம்
5. ஆனந்தமயம்

எனுமிவை சீவன் தன்உண்மை வடிவத்தை (ஸ்வருபத்தை) அறிய முடியாதபடி உறைபோல மூடியிருப்பதால் கோசங்கள் எனப்படுகின்றது.

**அபவாத உத்தி**

நாம் காணும் பிரபஞ்சமெல்லாம் கற்பிதமேயென அறிந்து தெளிவுபெறுவது அபவாதஉத்தி எனப்படுகின்றது. இதுவே மோட்சமடைய உதவும் உத்தி (மார்க்கத்தை அடைய உதவும் உபாயம் ஆகும்).

அனைத்திற்கும் ஆதாரமான பிரம்மமே (பரம்பொருள்) உண்மைப் பொருள் (வஸ்து) என அனுபவப் பூர்வமாகத் தெளிவு பெறுவதே அபவாத உத்தி எனப்படுகின்றது.

ஆவரணலம் என்பது மாயா சக்தியாகும். இது ஈசனையும் ஞானிகளையும் தவிர மற்ற எல்லா சீவராசிகளையும் அவர்களின் இதயத்தில் உரையும் கூடஸ்தனை அறிய முடியாதபடி மூடி மறைத்துள்ளது. இவ்வாவரணல சக்தியே மனிதர்களுக்கு நீங்காத பிறவித் துன்பத்தைக் கொடுக்கின்றது.

**96 தத்துவப்பாடல்**

பூதங்க ளைந்தாம் ஞானவிந் திரியமாம்
பொறி யைந்து புலனைந்ததாம்
பொல்லாத தொழில் கருமவிந்திரிய மைந்தாம்
புகழ்பெறும் கரணம் நாலாம்
தாதுவேழ் குணமூன்று மலமுமோரைந்
தாம் சாற்றிடு விகார மாறார்
தழைத்திடும் வாயுபொரு பானென்பர்
மண்டலந் தானுமொரு மூன்றாகு
பாதார மாறாகும் வாசல்களும் ஒன்பதா
மலத்தையைந் தாகுமிக்க
வருமைசேர்ந் துயர்நாடி பத்தாங் கோசமைந்
தாம்பிணியு மூன்ற தாகும் காதல்செய்
கருவி யிதுதொண் ணூற்றா றென்பர்
கற்பகவி ராசமேவுங்

கங்கைபுனை மீசனே மங்கைமகிழ் நேசனே
கயிலையங் கிரிவாசனே. (சித்தர் பாடல்)

**சீவ உற்பத்தியின் நான்கு வகைகள்**

1. **ஜராயுஜம்** - மனிதர்கள், விலங்குகள் (FOETUS)
2. **அண்டஜம்** - முட்டையிலிருந்து உதிக்கும் பறவைகள், மீன் வகைகள் முதலியன (EGG-BORN)
3. **ஸவேதஜம்** - வியர்வையிலிருந்து உற்பத்தியாகும் பேன், கொசு முதலியன (LARVA-BORN)
4. **உத்பிஜ்ஜயம்** - விதையிலிருந்து உற்பத்தியாகும் மரம், செடி, கொடிகள் முதலியன (SEED-BORN)

**ஏழுவகை பிறவிகள்**

தேவர், மனிதர், விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரங்கள்.

மனிதனுக்கு மூன்று வகையான உடல்களும் மூன்று வகையான (அவஸ்தைகள்) நிலைகளும் உள்ளன.

**யோகதத்துவம் (yoga Philosophy or Mystic Philosophy)**

சித்தர் தத்துவத்தை யோகதத்துவம் எனலாம். திருமந்திரத்தில் யோகக் கருத்துகள் மிகுதியாக உள்ளன. மெய்ஞ்ஞான வழியை அடையப் பலவழிகள் உள்ளன. இத்தகைய ஞானநெறிக்கு யோகம் என்று பெயர். யோகம் என்பது உயரிய உண்மைப் பொருளோடு சேர்த்தலே ஆகும். உடம்பை வலுப்படுத்தி உள்ளத்தை ஓட்டமில்லா நாட்டம் உறச் செய்து, உயிரறிவை உயர் அறிவாக்குவதே யோகநெறியின் நோக்கம் ஆகும். எனவே யோகம் உடம்பை ஒழுங்குபடுத்துகின்றது; உள்ளத்தை உறுதிப்படுத்துகின்றது. ஐந்தாம் தந்திரத்தில் சைவ சித்தாந்தம் பற்றிய பகுதியில் சைவத்தின் நான்கு படிநிலைகள் கூறப்படுகின்றது. அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவையாகும்.

***யோகத்தின் வகைகள்:***

இராசயோகம், அடயோகம், கர்ம யோகம், ஞான யோகம், பக்தி யோகம், மந்திர யோகம், கீத யோகம், வேள்வி யோகம் என யோகம் பல வகைப்படுகின்றது.

***யோகத்தின் சிறப்பு:***

மனிதன் அறிவு, அழகு, ஆரோக்கியம் இம்மூன்றையும் பெற அனைத்து விதமான அறிவியல் முயற்சிகளையும் செய்து

வருகின்றான். ஆனாலும் திட்டவட்டமான முடிவுகள் கிடைத்துவிட்டன என்று கூறமுடியாது. இந்நிலையில் இந்திய ரிசிகள், முனிவர்கள், யோகிகள், போன்றவர்களை நோக்கி மக்கள் கவனம் செலுத்தி வருகின்றனர். இவர்களது வாழ்க்கை முன்னுதாரணமாய்த் திகழ்வதுடன் இவை பற்றிய எண்ணிறந்த நூல்களையும் எழுதி வைத்துள்ளனர். அவை யோகசூடாமணி, யோககுண்டலினி, உபநிஷத், தியானபந்து, பதஞ்சலி யோகசூத்திரம், யோகோபநிஷத், ஹடயோக தீபிகை, சிவசங்கீதை, சித்தாந்தசாராவளி, யோக பீஜம், ஞானவாஸிஷ்டம், மண்டுகஉபநிஷத், சேகரண்ட சம்ஹிதை, சிவயோகசாரம், தத்துவ பிரகாசம், யோகசாரம், யோகவசிஸ்டம், திருமந்திரம் போன்றனவாகும். பகவத்கீதை, இராமாயணம் போன்ற இலக்கியங்களில் யோகம் பற்றிச் செய்திகள் ஓரளவு வருகின்றது.

அட்டாங்க யோகம் (ஹடயோகம்)

ஹடயோகம் என்பதில் ஹ என்ற எழுத்து உடம்பு என்றும், ட என்ற எழுத்து மூச்சு என்றும் பொருள்படும். சித்தத்தின் அசைவே சீவர்களின் அசைவு. சித்தத்தை நிலைப்படுத்தியவர்கள் சித்தர்கள்; நிலைப்படுத்துவதே யோகம், இவ்யோகம் எட்டு அங்கங்களை உடையது. ஆகவே இதற்கு அட்டாங்கம் என்று பெயர் கூறுவர். இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பவை அவை எட்டாகும்.

மூன்றாம் தந்திரத்தில் 77 பாடல்களில் இவ்யோகத்தைப் பற்றித் திருமூலர் கூறுகின்றார். அடுத்த பகுதியான அட்டாங்க யோகப்பேறு எனும் பகுதியில் 8 பாடல்களில் தனியாகவும் குறிக்கின்றார். எனவே 85 பாடல்களில் இவ்யோக நிலைபற்றி வருகின்றது. இவ்வெட்டு அங்கங்களையும் முறையே பின்பற்றிச் செய்யும் சாதனையே யோகம் எனப்படும்.

| | | |
|---|---|---|
| இயமம் | : | தீதறக்கற்றல் என்பது இதன் பொருள் |
| நியமம் | : | நல்லது செய்தல் என்பது இதன் பொருள் |
| ஆசனம் | : | இருக்கை என்பது இதன் பொருள். பதுமாசனம், பத்திராசனம், குக்குடாசனம், சிம்மாசனம் என்பன ஆசனத்தின் பெயர்கள் ஆகும் |
| பிராணாயாமம் | : | ஆசனம் பயிற்சியானபின் அவ் ஆசனத்தில் அமர்ந்துகொண்டு பயிலும் மூச்சுப் பயிற்சி |
| பிரத்தியாகாரம் | : | மனத்தை வலிந்து இழுத்து ஓர் இடத்தில் பொருந்த வைப்பது |

| | | |
|---|---|---|
| **தாரணை** | : | பிரத்தியாகாரத்தால் இந்திரியங்கள் அடங்கியபின், மனத்தை ஒரு வழியே நிறுத்தி உள்முகமாக ஆராய்தல் |
| **தியானம்** | : | மனம் ஒரு பொருளில் நிலைத்தபின் செய்வது தியானம் |
| **சமாதி** | : | இதுவே அட்டாங்க யோகத்தின் இறுதி நிலை. இந்நிலையில் யோகத்தின் பயனும் எட்டு சித்திகளும் கைகூடும். |

**எண்வகைச் சித்திகள்**

சித்தி என்றால் வெற்றி என்று பொருள். இயற்கை கடந்த செயலே சித்தி எனப்படுகின்றது. இச்சித்திகள் கைவரப் பெற்றவர்களே சித்தர்கள் ஆவர். வள்ளலார் சித்திகளைக் கருமசித்தி, யோகசித்தி, ஞானசித்தி என மூவகையாகப் பிரிக்கின்றார். திருமூலர் எண்வகைச் சித்திகளைக் கூறுகின்றார். யோகத்தினால் அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்ற எட்டு சித்திகளைப் பெறமுடியும்.

| | | | |
|---|---|---|---|
| 1. | **அணிமா** | : | பஞ்சினும்மெல்லியதாதல்; தவசீலர்களுக்கு ஓர் ஆண்டில் கைகூடும். |
| 2. | **மகிமா** | : | பருமையானபொருளாதல்; தவசீலர்களுக்கு ஓர் ஆண்டில் கைகூடும். |
| 3. | **கரிமா** | : | கூடுவிட்டுக் கூடுபாய்தல்; தவசீலர்களுக்கு ஓர் ஆண்டில் கைகூடும். |
| 4. | **லகிமா** | : | இலகுவாகும் தன்மை; தவசீலர்களுக்கு 5 ஆண்டில் கைகூடும். |
| 5. | **பிராப்தி** | : | விரும்பின எய்துதல்; தவசீலர்களுக்கு ஓர் ஆண்டில் கைகூடும். |
| 6. | **பிரகாமியம்** | : | ஆக்கினையின் ஒளியைக் காணவல்லார்; ஓர் ஆண்டில் கைகூடும். |
| 7. | **ஈசத்துவம்** | : | தானே படைக்கவும் காக்கவும் அழிக்கவும் வல்லான்; யோகிகளுக்கு ஓர் ஆண்டில் கைகூடும். |
| 8. | **வசித்துவம்** | : | உடல் பொன்மயமதாகிப் புலன்கள் அழிந்திடும்; இறைநிலை எய்தி பஞ்சபூதங்களிலும் நிறைந்திருப்பர். |

இங்ஙனம் 12 ஆண்டுகளில் இவ் எட்டு சித்தியும் பெறுவர். குண்டலினியை வெளிக்கொணரும் தொடர்பயிற்சியே யோகமாகும். இதை மூச்சுக்காற்றினால் புருவத்தின் நடுப்பகுதிக்கு ஏற்ற வேண்டும். அப்படி ஏறும்போது ஆறு ஆதாரங்களில் குண்டலினி தங்கிச் செல்கின்றது. அவ்வாறு தங்கும்போது எண்ணுதற்கரிய ஆற்றல் பயிற்சி செய்பவர்களுக்குக் கிடைக்கும். அது பயிற்சியினால் பெறுகின்ற பயன் என்பதால் சித்தி (அடைதல்) என்று கூறுகின்றனர். இச்சித்திகளை அடையும் கால அளவு மூன்றே முக்கால் நாழிகை முதல் மூன்றே முக்கால் ஆண்டுகள்வரை என்று கூறப்படுகின்றது.

காயசித்தி உபாயம் எனும் பகுதியில் உடம்புநிலை பெறும் தன்மையை விரிவாகக் கூறுகின்றார். அட்டாங்க யோகம் என்ற பெயரில் கேசரியோகம், பரியங்க யோகம், சந்திர யோகம் என்பன பற்றிக் கூறுகின்றார்.

**யோகசித்தி**

இது அனைத்துச் சித்திகளையும் உள்ளடக்கியது. இது பிற சித்திகளைக் காட்டிலும் உயர்ந்தது. இதன் பயிற்சிக்காலம் 12 ஆண்டு முதல் 108 ஆண்டுகள் என்று கூறப்படுகின்றது.

**ஞானசித்தி**

688 கோடி பேதங்களை உள்ளடக்கிய மகாசித்தியே ஞானசித்தியாகும். இவற்றை, ஞானம் தன் விருப்பம்போல் நடத்துகின்றது. இது, காலம் கடந்தது. இம்மூன்று சக்திகளில் இதுவே தலைசிறந்தது. இது ஆறு வகைப்படும். அவை:

1. கருமஞான சித்தி
2. யோகஞான சித்தி
3. தத்துவஞான சித்தி
4. ஆன்மஞான சித்தி
5. சுத்தஞான சித்தி
6. சமரசஞான சித்தி

64 சித்துகளும், எண்வகையான சித்துகளும் ஒன்றாகவே சித்தியில் அடக்கிக் கூறப்பட்டு வருகின்றது.

**1. அணிமா**

இது விந்து விரையமாகாமல் சேமித்து வைக்கும் பயிற்சியாகும். இச்சித்தி ஓராண்டில் கைவசமாகும். உடலை நுட்பமாக மெலிய வைக்கும் இப்பயிற்சி எந்தச் சக்தியாலும் வெல்ல முடியாத ஆற்றலைத் தரும்.

**முடிந்திட்டு வைத்து முயங்கி ஓர்ஆண்டில்**
**அணிந்த அணிமா கைதானாம் இவனும்**
**துணிந்த அப்பஞ்சினும் தான்நொய்ய தாகி**
**மெலிந்து அங்கு இருந்திடும் வெல்ல ஒண்ணாதே**
(திரு.673)

அணிமா என்பது மிகப்பெரிய தோற்றத்தையும் மிகச் சிறியதாக ஆக்கிவிடும்.

**2. மகிமா**

மேலும் ஓராண்டு பயிற்சியால் இச்சத்தி கைவரப்பெறும்.

**ஆகின்ற கால்ஒளி யாவது கண்டபின்**
**போகின்ற காலங்கள் போவதும் இல்லையாம்**
**மேல்நின்ற காலம் வெளியுற நின்றபின்**
**தான்நின்ற காலங்கள் தன்வழி ஆகுமே** (திரு.680)

இடகலை பிங்கலையைச் சிரசுக்குச் செலுத்தும்போது சிரசில் ஒளி உண்டாகும். அதனைக் கண்டவர் உடல் அழியாது. அவர் காலத்துக்கும் நிலை நிற்பார்; காலம் கடந்து நிற்பார்; உலகம் அவர் வயப்படும். விந்தும் நாதமும் (சக்தியும் சிவனும்) ஒன்றாவதே நாதாந்தமாகும். இதுவே மகிமா நிலையாகும். இந்த நாதாந்த நிலையைப் பெற்றவர் தம்விருப்பம்போல உருவத்தைப் பெருக்கச் செய்யலாம்.

**3. கரிமா**

இச்சித்தி பெற்றவர் கால, இட வேறுபாடுகளை அறியமாட்டார்.

**போவது ஒன்றில்லை வருவது தானில்லை**
**சாவது ஒன்றில்லை தழைப்பது தானில்லை**
**தாமத மில்லை தமரகத்து இன்னொளி**
**ஆவதும் இல்லை அறிந்து கொள்வார்க்கே** (திரு.681)

இவர்கள் பிற இடங்களுக்குப் போவதும் இல்லை. வருவதும் இல்லை. பிறப்பும் இறப்பும் இவர்களுக்கு இல்லை.

**4. லகிமா**

ஐந்தாண்டுப் பயிற்சியால் இது சித்தியாகும். இச்சித்தி பெற்றவரின் ஆன்மா ஒளி வடிவாகிப் பரஞ்சோதியாக இருக்கும். இந்த ஒளிப்பொருள் அண்டம் முழுவதும் பரவி நிற்கும். இது சிவபரம்பொருள் எனும் ஒளிப்பொருளைத் தரிசிக்கும். இதுவே பரஞ்சோதி நிலையாகும்.

5. பிராப்தி

உலகப் பொருட்கள் அனைத்தும் சூக்குமமாகத் தத்துவ நாயகியாகிய பராசக்தியுடன் ஒடுங்கி நிற்கும். மேலும் ஓராண்டு தாரணை பயிற்சி செய்யும்போது அத்தகைய ஒளிப்பொருளைக் காணமுடியும். இதன்வழி வேண்டிய அனைத்தையும் பெறமுடியும்; எந்த உலகத்திற்கும் சென்று வரமுடியும்.

6. பிரகாமியம்

காமம் என்பது விருப்பம். காமியம் என்பது விரும்பிய பொருள். பிரகாமியம் என்பது விரும்பிய பொருளைப் பெறுவது. தான்விரும்பிய எத்தொழிலையும், இடையூறின்றி முடித்தலே பிரகாமியமாகும். மூலாதாரக் கனலை மேலேற்றிச் சிரசின்மேல் உள்ளமது பொருந்தியவர்களுக்கு முக்தியும் எளிதாகக் கிட்டும்.

7. ஈசத்துவம்

சூக்குமத்தில் ஒளி அணுக்கள் புலப்படும். இவ் அணுக்களை எல்லாம் தலைமேல் கொண்டு வந்து ஓராண்டு காலம் அவற்றுடன் கூடி இருந்தால், சதாசிவதத்துவம் வந்து அமையும். ஈசத்துவம் உடையவர் வளர்கின்ற சந்திரனது ஒளியை நெற்றிக்கு நடுவில் பெற்று இருப்பர். சந்திரன் வானத்தில் காணப்படும் ஒளியுடன் எட்டாம் நாள் எப்படி உள்ளதோ அப்படி நெற்றிக்கு நடுவில் இது அமையும். இப்படி ஈசத்துவம் பெற்றவரின் உடல் குளிர்ந்து, உள்ளம் குளிர்ந்து, ஆழ்கடல்போல் அமைதி கொண்டு இருப்பர். ஈசத்துவம் பெற்றவர் படைத்தல், காத்தல், அழித்தலைச் செய்ய வல்லவர். ஈசனுக்குரிய முத்தொழிலையும் ஆற்ற வல்லவர்கள்.

தன்மைய தாகத் தழைத்த கலையினுள்
பன்மைய தாகப் பரந்தஐம் பூதத்தை
வன்மைய தாக மறித்திடில் ஓராண்டின்
மென்மைய தாகிய மெய்ப்பொருள் காணுமே

(திரு.687)

சந்திரகலையில் உள்ள ஒளியில் பஞ்சபூத அணுக்கள் பலவாறாகக் காணப்படும். இதை ஓராண்டு நீல நிறத்தில் கண்டு வந்தால் நெற்றியினுள் இறைக்காட்சி தோன்றும்.

8. வசித்துவம்

தேவர், மானிடர், நரகர், விலங்கு, பறப்பன, ஊர்வன, மரம், செடி போன்றவற்றைத் தன்வசப்படுத்துதல் வசித்துவம் ஆகும்.

மேற்கூறிய எட்டுவகையான சித்துகளில் சித்தர்கள் வல்லவர்கள். தாம் விரும்பியபடி அணுவின் செயல்களை மாற்றிக் காணும் ஆற்றல் பெற்றவர்கள். ஒளிபுகாத தன்மை, ஒளி கசியும் தன்மை என்ற நிலைகளில் நமது உடல் ஒளிபுகாத தன்மையை உடையது. யோகப் பயிற்சியின் வழியாக இவ்வுடம்பை ஒளிபுகும் பொருளாகவும் மாற்ற முடியும் என்பதைத் திருமூலர் கண்டு கூறியுள்ளார். அதாவது ஒளிபுகும் வடிவமாக உடல் மாறும்போது அது கண்ணுக்குத் தெரியாத காற்று வடிவத்தில் இருக்கும். இதனை அருவமாதல் என்பர் (Trasparant Body) இது ஒளியுடம்பாகும்.

இன்று பரிசோதனைக் குழாயில் செயற்கை முறையில் குழந்தை உண்டாவதை நாம் கண்கூடாகப் பார்க்கின்றோம். இந்த அறிவியல் உண்மையைச் சித்தர்கள் முதலே கண்டு கூறியுள்ளனர். கருப்பையில் இருந்து குழந்தை பிறப்பது யோனிமுறை. அதுபோல் கும்பம் வழியாகக் குழந்தையை உருவாக்குவது கும்பமுறையாகும். இம்முறையில் உருவானவர்கள்தான் அகத்தியரும் முருகரும் என்று சித்தர்நூல்களில் கூறப்பட்டுள்ளது.

### சாக்தர் தத்துவம்

சக்தி வழிபாடு உடையவர் சாக்தர் ஆவர். அவர்தம் ஆன்மானுபவம் - தத்துவம் - சாக்த தத்துவம் எனப்படும். சக்தி என்ற சொல்லுக்கு ஆற்றல் என்பது பொருள். திருமந்திரத்தின் நான்காம் தந்திரம் சாக்தர் தத்துவத்தைக் கூறுகின்றது. சுமார் 13 தலைப்புகள்; 520 பாடல்கள். இவற்றில் திருவம்பலச் சக்கரம், திரிபுரை சக்கரம், ஏரொளிச் சக்கரம், வயிரவச் சக்கரம், சாம்பவி மண்டலச் சக்கரம், புவனாபதி சக்கரம், நவாக்கரி சக்கரம் என ஏழு சக்கரங்களைக் குறித்துள்ளார். சிதம்பரச் சக்கரத்தைத் திருமூலர் திருவம்பலச் சக்கரம் என்று கூறுகின்றார். இச்சக்கரங்களின் அறைகளில் சில எழுத்துகளை அடைத்தல் வேண்டும். அவ்வெழுத்துகள் அனைத்தும் பீஜ எழுத்துகள் எனப்படும்.

### சித்தாந்த தத்துவம்

திருமூலர் 5, 6, 7, 8, 9 ஆம் தந்திரங்களில் மிக விரிவாக ஆராய்வது சித்தாந்தம் பற்றியே ஆகும். சித்தாந்தம் என்ற சொல்லை இந்நூலே முதலில் அறிமுகப்படுத்துகின்றது. எனவே இந்நூலே சைவசித்தாந்தம் பற்றிக் குறிக்கும் முதல் நூலாகும். சித்தர் கண்ட நெறி அல்லது முடிவு அல்லது ஆன்மானுபவம் என்பதே சித்தாந்தம் என்பதற்குப் பொருளாகின்றது. திருமந்திரத்தின்வழி தெரியவரும் சித்தாந்த தத்துவத்தைப் பற்றிக் காண்போம்.

திருமூலர் சைவத்தைச் சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சைவம் எனப்பிரிக்கின்றார். சுத்த சைவம் என்பது துரிசுகள் நீங்க இறைவனைக் காண்பது. அசுத்த சைவம் என்பதற்கு மேலான சைவம் என்று பொருள். சாதனங்களையும் விபூதியையும் தரித்துக்கொண்டு, சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கையும் ஒழுகுபவர் மார்க்க சைவர் ஆவர். கோலம் எதுவும் இல்லாமல் கருத்தால் அன்றிக் கருவியால் செய்விக்காது, ஆசாபாசமற்று, பாசத்தை நீக்கிப் பசுத்தன்மை கெட நிற்கும் மெய்யுணர்வாளர் கடுஞ்சைவர் ஆவர். இவர்களே சித்தர்களாகும். இவர்களுக்குச் சமயமும், சின்னமும் வரைமுறையும் இல்லை.

அனைத்து உயிர்களிடமும் அன்பு காட்டுவது சரியை பூசை. அனைத்து உயிரையும் தன்னுயிர் என எண்ணல் கிரியை பூசை. அவ்வுயிரில் ஒளிகாணல் யோக பூசை; உயிருக்கு உயிராய் நிற்றல் ஞானபூசை. ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என நான்கு வகையுண்டு.

ஞானத்தில் சரியை மேலோர் சொல்வதைக் கேட்டு ஒழுகுவது. ஞானத்தில் கிரியை, திருவடிப் பேற்றினை நாடுவது, ஞானத்தில் யோகம் 36 தத்துவங்களையும் கடந்து அருள் வெளியில் நிற்றல், ஞானத்தில் ஞானம் அருள்வெளியில் கலத்தல். ஞானத்தில் ஞானம் பெற்றவரே சீவமுக்தர் அல்லது சித்தர் ஆவர்.

இவைதவிர இறைவனை அடைவதற்குச் சீவர்களுக்குப் பல மார்க்கங்களைக் கூறியுள்ளார். அவை, சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திர மார்க்கம், தாச மார்க்கம், சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்பனவாகும்.

மேற்கூறிய சரியை முதலிய நான்கும், தாசமார்க்கம் முதலிய நான்கும், சாலோகம் முதலிய நான்கும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையது. தாசமார்க்கம் முதலிய நான்கும் இறைவனை அடையும் நான்கு மார்க்கங்கள் ஆகும். அவை மார்க்க சைவம் எனப்படும். இந்நான்கு மார்க்கங்களுக்கும் அடிப்படையாய் அமைவனவே சரியை முதலிய நான்கும் ஆகும். சரியை என்பது அங்க சுத்தி, ஆலயம் தொழுவது போன்ற நிகழ்ச்சிகள்; கிரியை என்பது மனப்பக்குவம் செய்தலாகிய நிகழ்ச்சி. இது இளமை நிலை. யோகம் என்பது வாயுவைக் கட்டி, மனத்தைக் கட்டிய முதுமைநிலை. ஞானம் என்பது சிவமாய் நிற்றல். இவை நான்கும் முறையே தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், யோகமார்க்கம், ஞானமார்க்கம் முதலியவற்றோடு பொருந்தி வரும்.

| | | | |
|---|---|---|---|
| **சரியை** | - | தாசமார்க்கம் (அறிமுகமில்லா அடிமையாய்த் தொண்டு செய்வது) | - அப்பர் |
| **கிரியை** | - | சற்புத்திரமார்க்கம் (மகனாய் உறவுடன் தொண்டு செய்வது) | - திருஞானசம்பந்தர் |
| **யோகம்** | - | சகமார்க்கம் (நட்பு உரிமையுடன் பழகிப் பெறுவது) | - சுந்தரர் |
| **ஞானம்** | - | சன்மார்க்கம் (வேற்றுமை இன்றிக் கலத்தல்) | - மாணிக்கவாசகர் |

மேற்கண்ட நிலைகளில் மேற்காணும் அணுகுமுறைகளின் இறைவனை அடைந்தவர்கள்.

சரியை முதலிய நான்கும் தாசமார்க்கம் முதலிய நான்கிற்கும் அடிப்படையாகின்றது. அதுபோலச் சாலோகம் முதலிய நான்கும் அவற்றின் விளைவு அல்லது பயன் ஆகும்.

**சாலோகம்** : இறையுலகில் இருக்கும் பேறு

**சாமீபம்** : இறைவன் இருக்கும் பேறு

**சாருபம்** : இறைவனை ஒத்தநிலையைப் பெரும்பேறு

**சாயுச்சியம்** : இறைவனில் கலக்கும் பேறு (திரு.1481)

இவ்வாறு திருமூலர் சைவத்தின் இயல்பை விளக்குகின்றார். அடுத்த நிலையாகச் சித்தாந்தத்தின் முக்கிய நிலையாகிய சத்திநிபாதம் என்பதைக் குறிக்கின்றார். அஃதாவது, இறைவனின் அருள் மிகுதி பெறுதல், அல்லது இறைவனின் அருள் வீழ்ச்சி என்பது. இதனை நான்கு நிலைகள் உடையனவாகக் கூறுகின்றார். அவை மந்ததரம், மந்தம், தீவிரம், அதிதீவிரம் என்பவையாகும்

மந்ததரம் என்பது அருளின் உறக்க நிலையாகும். மந்தம் என்பது அருளின் விழிப்பு நிலை; தீவிரம் என்பது அருளின் செயல்படு நிலையின் முதல்நிலை; அதிதீவிரம் என்பது திருவருள் வீழ்ச்சியின் இறுதிநிலை அல்லது அதன் பயன். உள்ளிருக்கும் அருள் உணர்வை உணருதல் முதல்நிலை; அதனைத் தூண்டி எழுப்புதல் இரண்டாம் நிலை; எழுப்பியதைச் செயல்படுத்துதல் மூன்றாம் நிலை; செயலின் இனிய பயனை நுகர்தல் நான்காவது இறுதிநிலை.

அடுத்துக் குறிப்பது சிவகுரு தரிசனம். ஆன்மா அறிவுடையது. ஆனாலும் தானாக அறியும் அறிவு உடையதன்று. அறிவிக்க அறியும் அறிவுடையது. எனவே இவ்வறிவை உணர்த்தும் குரு நிலையைச் சிவகுருதரிசனம் எனும் பகுதியில் தருகின்றார்.

இல்லறம், துறவறம் என்பன மண்ணுலக வாழ்க்கை; பேரின்பப் பேறு என்பது விண்ணுலக வாழ்க்கை. மண்ணுலகில் இருந்து விண்ணுலகுக்கு நம்மை வழிநடத்திச் செல்பவர் குரு ஆவார். குருவின் இன்றியமையாமையை உண்மைக் குருவின் மேன்மையை,

குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடுங் குருடுங் குருட்டாட்டம் ஆடிக்
குருடுங் குருடுங் குழி விழுமாறே (திரு.1680)

என்ற அழகிய பாடலில் எடுத்தாண்டுள்ளார்.

குரு தாயும் தந்தையுமானவர்; இறைநிலையை உணர்ந்தவர். நம்முள் உறங்கிக் கிடக்கும் தெய்வநிலையை நமக்கு உணர வைத்தவர். ஒரு மனிதனுக்கு அவனைப் பற்றி அவனே அறியச் செய்யும் உறவே குரு என்பவர். இறைநிலை மனிதகுலம் சிறப்பாக வாழ 18 சித்தர்களையும், மகான்களையும், ரிசிகளையும் கொடுத்துள்ளது. இவர்கள் உயிர்கள் துன்பம் இன்றி வாழ வழிவகுத்தனர்; தாமும் வாழ்ந்து காட்டினார்.

இறைவனே குருவாக வந்து பசு பாசத்தை நீக்கி அருள்புரிந்தான். குருவருளினால் பதி, பசு, பாசம் ஆகியவற்றின் இயல்பை அறிய முடியும். எனவே சிவனே குருவாக வருகின்றார் என்கிறார் திருமூலர்.

குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார் (திரு.1581)

அடுத்துவரும் திருவடிப்பேறும் இதனையே குறிக்கின்றது.

சிவந்த குருவந்து சென்னிக்கை வைக்க
உவந்த குருபதம் உள்ளத்து வந்ததே (திரு.1590)

தாடந்த போதே தலைதந்த எம்மிறை
வாடந்த ஞான வலியையுந் தந்திட்டு (திரு.1591)

***பசு இலக்கணம்***

பசு இலக்கணம் என்னும் தலைப்பில் ஆன்மாவைப் பற்றி விளக்குகின்றார். அஞ்ஞானத்தில் மூழ்கிய நிலை, அஞ்ஞானத்தை உணர்ந்த நிலை, குருவருள் பெற்ற ஆன்மாவின் நிலை, அஞ்ஞானத்தை அகற்றி இருப்பினும் பாசம் முற்றும் நீங்கா ஆன்மாவின் நிலை, தானும் இறையும் ஒன்றே என்ற சாயுச்சிய நிலை போன்ற நிலைகளில் பசுவின் இலக்கணத்தைத் திருமூலர் விளக்குகின்றார்.

***அனுபவ நிலைகள்***

ஆன்மா பலவித அனுபவங்களை அல்லது கட்டங்களைக் கடப்பதற்காக அது எடுத்துக் கொள்ளும் முயற்சியே அவத்தைபேதம் எனும் தலைப்பில் குறிக்கப்படுகின்றது. அவத்தை என்றால் அனுபவ நிலைகள் என்று பொருள். இந்த அவத்தைபேதமானது கேவலம், சகலம், சுத்தம் என மூன்று வகைப்படும். கேவலமானது தத்துவங்கள் ஒன்றும் கூடாமல் இருப்பது, சகலமாவது தத்துவங்களுடன் கூடிக் காரியப்படுவது, சுத்தமாவது பரசுகத்தைப் பெற்றிருப்பது.

புருவநடுவின்கண் நிலம் முதல் புருடன் இறுதியாக உள்ள 25 தத்துவங்களும் தொழிற்படும். இது நனவுநிலை ஆகும். சாக்கிரம் எனவும் கூறப்படும்.

தசவாயுக்களும், அந்தக் கரணங்களும் ஆகப் 14ம் புருடனுடன் கண்டத்தில் தொழிற்படும். இது கனவுநிலை எனப்படும்.

அந்தக் கரணங்களும், புருடனும் ஆகிய ஐந்து கருவிகளும் நெஞ்சில் நின்று தொழில்படும். இது சுழுத்தி, உறக்க நிலை எனக் குறிக்கப்படும்.

கொப்பூழ் இடமாகப் புருடன் மாத்திரம் நின்று தொழில்படும். இது பேருறக்க நிலை துரியம் எனப்படும்.

திருமூலர் சைவர்கள் குறிக்கும் 36 தத்துவங்களையும் கீழ்க்கண்டவாறு விளக்குகின்றார். இவை மூன்றும் உயிர்களுக்குக் கருவியாய்ப் பொருந்தும்.

| | | |
|---|---|---|
| **ஆன்ம தத்துவம்** | - | **24** |
| **வித்தியா தத்துவம்** | - | **07** |
| **சிவ தத்துவம்** | - | **05** |
| **தத்துவங்கள்** | - | **36** |

36 தத்துவங்களும் அகக்கருவிகள் எனப்படும். இவற்றின் வேறாகப் புறக்கருவிகள் 60 உண்டு. இவற்றையும் சேர்த்துத் தத்துவங்கள் 96 என்பர். இதைத் திருமந்திரமும் தெளிவுபடுத்துகின்றது.

**ஏதம் படஞ்செய் திருந்த புறஞ்சிலை**
**ஓதும் மலங்குண மாகுமா தாரமோ**
**டாதிய வத்தை தொண்ணூற் றாரே** (திரு.2107)

புறக்கருவிகளின் கூறுகள் அறுபது

| | | |
|---|---|---|
| நிலம் | : | 05 |
| நீர் | : | 05 |
| தீ | : | 05 |
| வளி | : | 05 |
| வெளி | : | 05 |
| செய்தற்கருவி | : | 05 |
| அறிவுவளி | : | 05 |
| தொழில்வளி | : | 05 |
| நாடி | : | 10 |
| ஓசை | : | 4 |
| முப்பற்று | : | 3 |
| முக்கணம் | : | 3 |
| | | 60 |

அமல சாக்கிரம், அமல சொப்பனம், அமல சுழுத்தி, அமலதுரியம், அமலதுரியாதீதம் என்று ஆன்மா பெறும் அவத்தைகளை மிக விரிவாக விளக்குகின்றார்.

ஐம்பூதங்கள், மனம், புத்தி, அகங்காரம் என்னும் எட்டும் கூடியதே சூட்சம உடலாகும். இவை சேர்ந்து தொழிற்படுவதே சாக்கிர நிலையாகும்.

ஆறுஅந்தம்

இப்பகுதியில் வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தம் எனும் ஆறு அந்தங்களைப் பற்றிக் கூறுகின்றார்.

நான் அது ஆனேன் என்பது வேதாந்தம். இது தத்துவமசி எனும் நிலையாகும். தானான வேதாந்தம் எனத் திருமூலர் கூறுகின்றார்.

சித்தாந்தம் - உயிர் இறையுடன் ஒன்றுபடுதல், நாதாந்தம்-மெய்ஞானம் பெறுதல், யோகாந்தம் - சிவத்தன்மை பெற்ற பற்றற்ற நிலை, கலாந்தம் - மாயையில் ஒடுங்கும் முறையை ஆராய்ந்து தெளிதல்.

பதிபசுபாசம் எனும் மூன்றும் சித்தாந்தத்தின் முப்பொருள் எனக் கூறப்படும். இவற்றின் உண்மை பற்றி விளக்குகின்றார்.

முப்பதம், முத்துரியம், மும்முத்தி, முச்சொருபங்கள், முக்கரணம், முப்பாழ், ஒன்பான் அவத்தை ஒன்பான் அபிமானி, பிரணவ சமாதி, சிவானந்தக் கூத்து, அற்புதக் கூத்து, சொருப

உதயம் என்ற தலைப்புகளில் மிகவிரிவாகச் சித்தாந்தக் கருத்துகளைத் திருமூலர் விளக்குகின்றார். பிற்காலத்து எழுந்த சாத்திர நூல்கள் அனைத்திற்கும் திருமந்திரமே மூலம் என்பதை இப்பகுதிகள் தெளிவுபடுத்துகின்றன.

**ஆறாதாரம் - உறுப்புகளும் பஞ்சபூதக்கூறுகளும்**

உடலுறுப்பு இயக்கத்துக்கு உள்ளிடைச் சுரப்பிகள் முக்கியமாகின்றன. ஒருவன் கிரகிக்கும் ஐம்பூதங்களின் அளவைப் பொறுத்துத்தான் இச்சுரப்பிகளின் இயக்கம் உள்ளது. இவை ஆறு ஆதாரங்களின் செயற்பாடுகளால் நல்ல முறையில் இயங்குகின்றன.

**1. மூலாதாரம்**

இதில் குண்டலினி சக்தி உறைந்துள்ளது. இது குய்யத்திற்கும் குதத்திற்கும் நடுவே, குண்டலி வட்டமாய் உள்ளது. இதில் மாணிக்க நிறத்தில் ஓங்காரம் இருக்கும்; நாலிதழித் தாமரை வடிவம்.

**2. சுவாதிட்டானம்**

இது மண்ணின் கூறு; பொன்நிறம் உடையது. மூலாதாரத்திற்கும் இரண்டு விறட்கடைக்கும்மேல் இருப்பது. இது அட்ரினல் சுரப்பிக்கு நிகரானது. சிறுநீரகம், சிறுநீர்த்தாரை தொடர்பானது; ஆறிழதழ்த் தாமரை வடிவம்.

**3. மணிபூரகம்**

நீரின் கூறு; பச்சை நிறம் உடையது. இடம் உந்திக்கமலம். சுவாதிட்டானத்துக்குமேல் எட்டு விரல் அளவில் இருக்கின்றது. கணையம், இரைப்பை, ஈரல். இதன் ஆட்சிக்கு உட்பட்டது; பத்திதழ்த் தாமரை வடிவம்.

**4. அனாகதம்**

இருதயக் கமலம். தீயின் கூறு. அக்கினிநிறம். மணிபூரகத்துக்கு 10 விரற்கடைக்குமேல் இருப்பது. முக்கோணம். இதன் நடுவில் 12 இதழ் தாமரைவடிவம். அதன் நடுவில் சிகர எழுத்து. அதில், உருத்திரன் பார்வதி உள்ளனர். இதயம், நுரையீரல்களைக் கட்டுப்படுத்துகின்றது.

**5. விசுத்தி**

கழுத்து; வளியின் கூறு. கருநிறம். ஆனாகதத்துக்கு 10 விரற்கடைக்குமேல் இருப்பது. அறுகோணம். கண்ட தானத்தில்

உள்ளது. 16 இதழ் தாமரை வடிவம். அதில் வகார எழுத்து. இப்பகுதியில் தைராய்டு, பாரா தைராய்டு சுரப்பிகள் உள்ளன.

6. ஆக்கினை (ஆக்ஞை)

புருவநடு. ஆகாயத்தின் கூறு. படிகநிறம். லாடத்தானம். விசுத்திக்கு 12 விரற்கடைக்குமேல் இருப்பது. நெற்றிப் புருவத்தின் வழியாக ஆகாயத்தில் 2 இதழ் உடைய தாமரை வடிவம். அதில் யகரத்தோடு இணைந்து நிற்கும். சதாசிவமும் மனோன்மணியும் இருப்பர். ஐந்து ஆதாரங்களையும் தரிசித்து மேற்செல்லும்போது ஆறாவது ஆதாரமாகிய ஆக்கினையில் (புருவமத்தி) பரசிவத்தின் திருவடியைக் காணலாம்.

மூலாதாரத்தில் உள்ள மூலக்கனலை வாசிப்பயிற்சி செய்து எழுப்ப முடியும். எழுப்பி ஆறு ஆதாரங்களின் வழியே மேல்நிலை கடந்திடில் அமுதத்தாரணையில் மதியமுதம் பெருகும்; ஆனந்தம் மேலிடும்.

ஒளிதரும் இந்தச் சிவநீர் பருகில்
ஒளிதரும் ஓராண்டில் ஊனமொன்று இல்லை
வலியுறும் எட்டின் மனமும் ஒடுங்கும்
களிதருங் காயங் கனகம் அதாமே (திரு.1399)

என்கின்றார் திருமூலர். எனவே இச்சுரப்பிகளின் பணியானது சரிவர நடத்தப்பட வேண்டும். இவையே உடலுக்கும் உயிருக்கும் முக்கிய ஆதாரங்களாகும்.

பஞ்சபூதச் சேர்க்கையால் உயிர் உண்டாயிற்று. இச்சேர்க்கையால் அமிலம் என்ற நீர்மையும் சலனமும் கொண்ட ஓர் உயிர்ப்பொருள் தோன்றுகின்றது என்பது நவீன அறிவியல் அறிஞர்களின் கருத்து. இத்துடன் தகுந்த சூழ்நிலையும், வெப்பம், உணவு, நீர் போன்றவையும் உயிர் தோன்றத் தேவையாகின்றது.

ஓசை மெய்யாகிய நாத தத்துவத்தின்கண் பன்னிரண்டு கலைகளோடு கூடியது சூரியமண்டலம். பதினாறு கலைகள் உடையது சந்திரமண்டலம். இவற்றின் முடிவில் 36 தத்துவங்கடந்து விளங்குகின்றவள் பராசக்தி. இவற்றுக்குமேல் ஆதாரங் கடந்த நிலையில் தனிமுதல் சிவன் காணப்படுகின்றான்.

அகரம், உகரம், மகாரம், விந்து, அர்த்த சந்திரன், நிரோதினி, நாதம், நாதாந்தம் என ஆதாரக் கலைகள் எட்டு.

சக்தி, வியாபினி, வியோமரூபினி, அநந்தை, அநாதை, அநாசிருதை, சமனை, உன்மலை ஆகிய நிராதார கலைகள் எட்டு.

பதினாறு கலைகளில் ஓமெனும் பிரணவ யோகத்தில் நின்று தூண்டினால், குண்டலினி மூலாதாரம் முதலான இடங்களில் இருந்து மேலேறும். அதனால் வினையற்ற தன்மை (அத்துவாசத்தி) உண்டாகும். கலையை மடைமாற்றி மேல்ஏறச் செய்தால் ஒளிபெருகி இன்பம் உண்டு.

இறைவன் ஆறு ஆதாரங்களில் குண்டலினியாகவும் விளங்குகின்றவன். உடலைக் கோயிலாகக் கொண்ட இறைவன் மூலாதாரச் சக்கரத்தை இடமாய்க் கொண்டவன். அவனது திருவடி சேர்வார் நாடிகள் பத்தினையும் தூய்மை செய்தல் வேண்டும். அவ்வாறு வழிபடும்போது சிவன் நாடிகளையும் இடமாய்க் கொண்டு அருள்புரிவான்.

மானிடப் பிறவி பஞ்சபூதங்களால் ஆனது என்பதை,

தலம்காட்டி இந்தச் சடமான ஐம்பூதம்
நிலம்காட்டி நீர்காட்டி நின்றிடுந் தீகாட்டி
வலம்காட்டி வாயுவால் வளர்ந்தே மனித
குலம்காட்டி வானிற் குடியா யிருந்ததே

என்கின்றது திருமந்திரம். இதில் வாயுவால் வளர்ந்து என்பது வாசியைக் குறிக்கின்றது. நின்றிடுந் தீ என்பது உயிர் வெப்பத்தையும் (மூலக்கனல் எனும் ஆற்றல்), வலம்காட்டி என்பது உயிருடல் இயக்கத்தையும் குறிக்கின்றது.

வான் தூய்மையானது; நுட்மானது; ஐம்பூதங்களுக்கும் பொதுவானது; பூதங்கள் தோறும் நின்று நிலவுவது; எதனாலும் கட்டுப்படாதது; அதன் நுட்ப ஆற்றலே அனைத்தையும் இயக்கும் ஆற்றல் உடையது.

**உபதேசம்**

உபதேசம் என்பது ஆன்மாவை நுட்பமாக்குவது; ஆணவம் முதலாய களிம்பை அறுப்பது; பொன்மயமாக்குவது, புதுமை நலமாகிய ஞானத்தைத் துய்க்கச் செய்வது. அதற்கு உதவுவதுதான் இந்த உடல்.

சிவன் தனிப்பட்டு நிற்கும்போது ஒன்று. சக்தியோடு சேர்ந்தால் இரண்டு. அவனே படைத்தலாகிய தொழில்களைச் செய்யும்போது மும்மூர்த்தியாகின்றான். நான்கு வேதங்களாகி நிற்பதும் அவனே. ஐந்து இந்திரியங்களை அடக்கிக் கொள்ளும் ஆற்றலையும் அவனே அளிக்கின்றான். ஆறு ஆதாரங்களிலும் விரிவுபெற்றுச் சகஸ்ரதளமாகிய ஏழாவது இடத்தில் பொருந்துகின்றான். தன்எண் குணங்களையும் அறிந்து அவற்றுடன் உலகோர் பொருட்டுச் சேர்ந்திருந்தான். இதனை,

**ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்**
**நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து**
**வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்**
**சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே (திரு.1)**

என்கின்றது திருமந்திரம்.

*ஒன்பது*

பிரமன், விஷ்ணு, உருத்திரர் மூவர். இவர்களுடன் மகேசுரன், சதாசிவன் ஆகியோரைக் கூட்ட ஐவர். இறைவன் மூவராகவும், ஐவராகவும் உள்ளவன். ஆறு ஆதாரங்களுடன் மகேசுவரமும், சதாசிவமும், மூவரும் பொருந்த ஒன்பதாகும். ஆயினும் இவ்வொன்பதும் தோற்றத்தில் ஒன்றே ஆகும். எனவே ஒன்றே பலவாகின்றது; பலவே ஒன்றாகின்றது.

*பீனியல் சுரப்பி*

பீனியல் சுரப்பி என்பது மனித மூளையின் மேற்பகுதியில் உள்ளது. இதன் இயக்கத்தை யோகத்தின்வழி செயல்பட வைப்பதே யோகமுறை. பீனியல் சுரப்பி 14 வயது வரை வளர்ச்சி அடைந்து, பின்னர் வளர்ச்சி குன்றிவிடும். இது சுரக்கும். ஹார்மோன் மெலடோனின் எனப்படும். இது ஆயுளை நீட்டிக்க வல்லது. சுக்கில சுரோணிதத்தை அடக்கினாலும், மெலோடனின்மீது ஒளிவிழச் செய்தாலும் அச்சுரப்பியின் ஊற்று அதிகரிக்கும். அதற்குக் குண்டலினி சக்தியைத் தலைஉச்சிக்குக் கொண்டு செல்ல வேண்டும். இதற்குத் திபேத்திய லாமாக்கள் புருவ மத்தியில் ஓட்டைபோட்டுக் கொள்வர். இதன்வழி ஒளி ஊடுருவிச் சென்று மெலடோனின் சுரப்பியைச் சுரக்கச் செய்வதாக நம்புகின்றனர்.

*சதாசிவம்*

குண்டலினி சக்தி நாற்கோணமாகிய மூலாதாரத்தில் உள்ளபோது நீர்த்தாரைபோல் இடையறாது இயங்கிக் கொண்டிருக்கும். குண்டலினி கண்டத்தை அடைந்தபோது உறக்கநிலை எய்தும். அச்சத்தியே புருவமத்தியில் வட்டமாய் நின்று ஆணை செலுத்திக் கொண்டிருக்கும். இங்ஙனம் உடல் நெடுகிலும் ஒளியாய் விளங்குவது சதாசிவமாகும்.

*சுந்தரக்கூத்து*

மூலாதாரம் தொட்டுத் துரியம் (சகஸ்ரதளம்) முடிய ஏழு அண்டங்களுக்கும் அப்பாலாய், உச்சியில் உமையவள் கண்டு மகிழும்படி கூத்தை விரும்பி ஆடினான் சிவன். இக்கூத்தே சுந்தரக் கூத்து ஆகும். மூலநாடியில் தங்கி இவ்வூடல் புரிய மனம் அடங்கும்.

***சிவநடனம்***

இதயத்திலும் சகஸ்ரதளத்திலுய ஜுஸைறுவஸைஸ ஸைவதது வழிபட்டால் சிரசின்மேல் நட்சத்திரங்கள் போன்ற ஒளி தோன்றும். சீவர்கள் எந்த வடிவத்திலும் சத்தியை அடைய முடிகின்றது. அவள் விளக்கம் பெறுகின்ற ஆன்மா சிவத்துடன் பொருந்த விளையும் ஆனந்தமே அற்புத நடனம்.

புருவமத்தியில் சாதனம் செய்ய மந்திரம் ஒளிபெறும். சீவஒளி நாளுக்குநாள் பெருகி அதுவே சிற்றம்பலமாகும். சகஸ்ரதளமே சிவ நடனத்துக்கு உகந்த இடம்.

ஏழு ஆதாரங்களில் தேவர், மனிதர், விலங்கு, நீர் வாழ்வன, ஊர்வன, பறப்பன, தாவரம் என ஏழுவகைப் பிறப்புகளில், பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன், விந்து, நாதம் ஆகிய ஏழில் சிவன் நடனம் புரிவான்.

நாதாந்தம், போதாந்தம், வேதாந்தம், சிந்தாந்தம் இவற்றின் முடிவாய் விளையும் நாதமே சிவநடனமாகும்.

**வேதாந்த தத்துவம்**

வேதத்தின் அந்தமே வேதாந்தமாகும். திருமூலர் வேதம், வேதாந்தம் எனும் சொற்களை ஏறக்குறைய 42 இடங்களில் குறிக்கின்றார்.

> **பண்டையுள வேதம் பரந்த பரப்பெல்லாம்**
> **இன்றுசொல் நூலாய் எடுத்துரைத் தேனே** (திரு.994)

என்று திருமூலர் கூறுகின்றார். எனவே வேதாந்தம் தழுவிய தத்துவம் சொன்னார் எனவும் கருத முடிகின்றது.

திருமூலர் வடக்கிருந்து வந்தவர். வடக்கிருந்த வேதக் கருத்துகளைப் பயின்றவராக இருக்கலாம். தென்னகம் வந்து இங்கு நிலவி வந்த சித்தாந்தம் முதலிய தத்துவங்களைத் தழுவி இதனை எழுதியிருக்கலாம்.

> **வினைவிட வீடென்னும் வேதமும் ஓரார்** (திரு.2516)

என்பது அவர் வேதாந்தம் பற்றிக் குறிப்பதன் மற்றோர் முக்கிய வரியாகும். வினையைவிட வீடுபேறு கிட்டும் என்னும் வேதத்தை உணராதவர் என்பது இதன் பொருள். இப்படி வேதாந்தம், சித்தாந்தம் பற்றி விரிவாகத் திருமூலர் கூறுகின்றார். ஆனால் இவர் சமயநெறிகளில் சென்றவர் அல்லர். அவர் தம்காலத்து இருந்த பல்வேறு தத்துவங்களை இணைத்துத் திருமந்திரத்தைச்

செய்துள்ளார். சித்தாந்தம் என்பது சமயம் சாரா ஆன்மிக நெறியே ஆகும். பின்னர் வந்தவர்கள் தொடர்புபடுத்திக் கொண்டனர்.

**வேதாந்த சித்தாந்தத் தத்துவம்**

திருமூலர் கருத்துப்படி ஆன்மிகத் துறையில் வேதாந்தம் பொதுவும் சித்தாந்தம் சிறப்பும் ஆகும். எனினும் இவற்றில் உயர்வு தாழ்வில்லை. இதனை,

**வேதமோ டாகமம் மெய்யாம் இறைவனூல்**
**ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக**
**நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்**
**பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே** (திரு.2397)

என்று குறிக்கின்றார். இதில் வேதம்-மந்திரம்; ஆகமம் தந்திரமாகும். திருமூலர் தம்நூலுக்கு மந்திரம் எனவும், உட்பிரிவுக்குத் தந்திரம் எனவும் பெயர் சூட்டியுள்ளார். ஆறந்தம் என்னும் பிரிவில் இவ்விரண்டிற்கும் தக்க விளக்கம் தருகின்றார்.

**தானான வேதாந்தம் தானென்னும் சித்தாந்தம்**
(திரு.2331)

என்பது இரண்டிற்கும் அவர் தரும் விளக்கம் ஆகும். தத்துவம் அசி என்பதே இதன் பொருள். **நான் அது ஆனேன்** என்பது வேதாந்தம். **அது நான் ஆனேன்** என்பது சித்தாந்தம். முன்னதில் நான் என்ற ஆன்மா முன்நிற்கின்றது; பிரமம் பிற்பட்டு நிற்கின்றது. அனைத்துமான முதல்வன் முன்னே தன்னை ஒரு பொருளாக எண்ணிய குற்றம் இதில் ஏற்படுகின்றது. இதனால் அறியாமை மேலிட்டுப் பெருவாழ்வை அடையத் தடை ஏற்படுகின்றது.

**அது நான் ஆனேன்** என்பதில் பிரமம் முன்நிற்கின்றது. ஆன்மா பின்நிற்கின்றது. ஆத்மா தன்ஆணவத்தைக் கைவிட்டு அருள் நிறைவில் சிவமாகின்றது. எனவே இதுவே சிவவாக்கியமானது.

வேதாந்தம் 28 தத்துவங்களைக் கொண்டது; சித்தாந்தம் 36 தத்துவங்களைக் கொண்டது; 28 இல் ஒழுவினால் நான் எனும் முனைப்பு ஒழிவதில்லை. 36 இல் ஒழுவினால் நானும் ஒழிகின்றது. 36 தத்துவங்களையும் தனித்தனியே கடந்து தத்துவாதீத நிலையில் தனித்த சிவனும் சீவனும் கலந்து நிற்க இருக்கும் நிலையே தனித்து இருக்கும் நிலை. இதைப் பல பாடல்களில் திருமந்திரம் விளக்குகின்றது.

**ஆறாறின் தன்மை அறியாதிருந் தேனுக்கு**
**ஆறாறின் தன்மை அறிவித்தோன் பேர்நந்தி**

**ஆறாறின் தன்மை அருளால் அறிந்தபின்**
**ஆறாறுக் கப்புற மாகிநின் றானே** (திரு.1982)

என்பது திருமந்திரம். 36 தத்துவங்களின் தன்மை அறியாது இருந்த எனக்கு அவற்றை அறிவித்தான். அவன் அருளால் அறிந்தபின் அவற்றிற்கு அப்பாற்பட்டவன் என்பதை அந்நிலையில் அறிந்தேன் என்பது இதன் பொருள். எனவே தத்துவாதீத நிலையை அடைந்தவரே அணுகுதல் இயலும் என அறியமுடிகின்றது(2306).

சாயுச்சிய நிலை என்பது இரண்டறக் கலக்கும் தானாகும் நிலையின் முதற்படி வேதாந்தம், இறுதிப்படி சித்தாந்தம். பசு பதியுடன் சேருவது வேதாந்தம்: சேர்ந்த நிலையே சித்தாந்தம். எனவே பசுநிலை வேதாந்தம். பதிநிலை சித்தாந்தம். இதனை,

**தான்அவ னாகுஞ் சமாதிகை கூடினால்**
**ஆன மலமறும் அப்பசுத் தன்மைபோம்** (திரு.2320)

என்கின்றார் திருமூலர். எனவே இரண்டிலும் உயர்வு தாழ்வில்லை. இரண்டும் இன்றியமையாதன.

**சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்** (திரு.2393)

**சிவனைப் பரனுட் சீவனுட் காட்டும்**
**அவமற்ற வேதாந்த சித்தாந்த மாயினான்** (திரு.2395)

**வேதாந்தஞ் சித்தாந்த வேறிலா முத்திரை** (திரு.2386)

**ஒன்றான வேதாந்த சித்தாந்த முன்னிட்டு** (திரு.2400)

இப்பாடல்கள் அனைத்தும் வேதாந்த சித்தாந்தச் சமரசத்தை வளர்த்துபவை. எனவே இரண்டும் வேறன்று. ஓரே முடிவைத் தரும் நிலைகள் என்னும் உண்மை விளங்குகின்றது.

எத்தவமும் செய்யலாம். எங்கும் பிறந்து இருக்கலாம். ஒத்து உணர்தல் வேண்டும். அவர்களே விரைந்து இறைவன் திருவடியாகிய ஊர் புகுவர். ஆன்மாவின் மலம் அறும் வகையைச் சமயங்கள் கூறுகின்றன. அவற்றின் இயல்பறிந்து ஒழுகுவதே இறைநெறியாகும்.

***வாழ்க்கைத் தத்துவம்***

தோத்திரம் அன்பை அடிப்படையாகக் கொண்டது. சாத்திரம் அறிவை அடிப்படையாகக் கொண்டது. திருமந்திரமோ இவை இரண்டையுமே அடித்தளமாகக் கொண்டது. தத்துவங்களை மட்டும் கூறாமல் திருமந்திரம் நடைமுறை வாழ்க்கைக்கு வழிகளையும் சொல்கின்றது. சிவனை வெளியில் தேடிச் செல்ல வேண்டாம். உடலைக் காக்கும் உபாயம் அறிவோம். சீவனை நமக்குள்

காண்போம் எனும் வாழ்க்கைக்குரிய தத்துவத்தையும் கூறுகின்றார். இத்தத்துவங்கள் உணர்த்தும் செய்திகளின் சாரத்தைச் சற்று விரிவாகக் காண்போம்.

## வாழ்வியல் நெறி

திருமந்திரம் மனித சமுதாயத்தை வாழ்விக்க வந்த ஓர் உயரிய நூல். மனிதனிடம் உள்ள குறைகளை நீக்கி உயர்வடைவதற்கான வழிமுறைகளை விளக்கிச் சொல்கின்றது. திருமூலர் தாம்சொல்லவந்த கருத்துகளை மக்கள் மனம் ஏற்றுக் கொள்ளும் வகையில் தக்க எடுத்துக் காட்டுகள்வழி தெளிவுபடுத்துகின்றார். மனிதன் பிறவி நீங்கி வீடுபேறடைய வழி கூறுகின்றார். ஆன்மா அழிவற்றது. அதனை அழிவற்ற இறைவனோடு ஒன்றச் செய்யும் வழிமுறைகளைக் காட்டுகின்றார்.

## ஆன்மா

ஆன்ம தத்துவம் 24, வித்தியா தத்துவம் 7, சிவ தத்துவம் 5. ஆக 36 ஆகும். ஆன்ம தத்துவம் 24கும் மேய்ப்பாரின்றித் திரியும் பசுக்களைப்போல் அலைகின்றன. சிவதத்துவம் ஏழும் ஆன்மாவாகிய பார்ப்பானுக்கு உரியது. இவை பேரின்பத்தைத் தருவதில்லை. ஆன்மா பேரின்ப நாட்டமின்றி உள்ளது. சிற்றின்பத்தை நாடிக் கெடுகின்றது (2874).

இடகலை பிங்கலையைச் சிக்கெனக் கட்டி மேல்முகமாகப் பிராணனைச் செலுத்தினால் உச்சியில் ஒளி தோன்றும். புலனடக்கமின்றித் திரியும் ஆன்மா சிவனருள் பெற்றால் (2877) பேரின்பப் பாலினைச் சொரியும் (2883).

அலையும் மனத்தை உடைய ஆன்மாவைச் சிவன் குருவாக வந்து முறைப்படுத்தினால் ஆன்மா வீடுபேறடையும் என்பது கருத்தாகின்றது.

சிவன் சீவனின் பசிநீக்க உச்சந்தலையில் உள்ள சகஸ்ரதளத்தில் இருந்து வடியும் அமுதைக் கொடுப்பான் (948). இறைவனை அடைய வேண்டும் என்ற பக்குவத்திற்குச் சீவன் வந்தால் சிவனும் குருவாகத் தேடிவந்து ஆட்கொள்ளுவான்.

மனிதன் நாள் ஒன்றுக்கு 21,600 முறை சுவாசிக்கின்றான். இத்தனை பிராண இயக்கம் நிகழாது கட்டுப்படுத்த வல்லவர்கள் சுவாசத்தை ஓரங்குலமாகக் குறைப்பர். ஓரங்குலமாகக் குறையும்போது அது தலையினுள்ளேயே சுழலும் (1643).

சிவன் பாசத்தைப் பசுவிடம் இருந்து நீக்குவான். இருப்பினும் அது சிவனைச் சென்றடையாது. தான்தோன்றிய மாயையில் சென்று பொருந்தும் (1435).

பாசம் நீங்கிய பசு பதியைச் சென்றடையும் வரை பிறந்து பிறந்து இறக்கும். ஓரறிவுயிரிலிருந்து பிரம்மன்வரை அனைத்தும் இத்தன்மையின. ஆன்மா பாசத்தை விட்டுவிட்டால் அது தன்னில் இலயிக்கும். அப்போது அது தலைவனைப் பற்றிக் கொண்டு வீடுபேறடையும். சீவனின் உடலிலும் உள்ளத்திலும் இறைவன் மறைந்துள்ளான்; ஆன்மாக்களின் படிநிலைகளுக்கு ஏற்ப அவன் பலவகையிலும் வெளிப்படுவான். இதனை,

**புரையற்ற பாலினுள் நெய்கலந் தாற்போல்** (திரு.134)
**நெய்த்தலைப் பால்போல் நிமலனும் அங்குளன்** (திரு.2115)

என்று கூறுகின்றார்.

### வணங்கும் தன்மை

வினை நீங்க வேண்டும் என்றால் ஏறுடையாய், இறைவா எம்பிரான் என்று கூறி, நீறணிந்து இறைவன் திருவடி புனைவார் ஆதல் வேண்டும் (2111).

### விந்துவை வெல்தல்

விந்து மண்டலத்தை வென்றவர் ஒளியில் திளைத்து ஒளியுடல் பெற்று விளங்குவர். இடகலை பிங்கலை என்ற இரண்டையும் ஒன்றுபடுத்தினால் சுழுமுனை அமையும். இது திறந்தால் சகஸ்ரதளம் திறக்கும். யோகத்தினால் இறைவனை அடைய சுழுமுனை திறப்பதே முதற்படியாகும் (2889).

### சித்தம்

ஆன்மாவாகிய மந்திரி, புத்தியாகிய சித்தத்திற்கு அறிவுரை கூற, அதனை ஏற்ற சித்தம் இறையுணர்வில் தன்னைப் பிணைத்துக் கொள்ளும்; உடலைக் கடந்து விளங்கும் (2925).

### சிவானந்தம்

பிரணவமாய் உள்ள இறைவனை உணர்தல் வேண்டும். அதற்கு ஏட்டில் எழுதப்பட்ட சரியை கிரியை முதலியனவும் மந்திரங்களும் தேவையில்லை; அவற்றால் பயனில்லை. சீவனின் பக்குவத்திற்கு ஏற்ப சிவகுரு மானிடராய் வருவார். வந்து குருவாக இருந்து உணர்த்துவார். அதை உணர்பவரே சிவானந்தத்தை முழுமையாக உணர்ந்தவராவர் (2937).

**மனம்**

மனம் இது விரிந்து பரந்து செல்லும் ஆற்றலையும் கற்பனை சக்தியையும் உள்ளடக்கியது. எளிதில் மாயை வசம் அகப்பட்டுக் கொள்ளும் தன்மையுடையது. இதனை அறிவு தன் வசப்படுத்த படாதபாடுபடுகின்றது. மனம் சிற்றின்ப வேட்கை தணிந்து தன்தலைவனைத் தேடும்போதுதான் அறிவுடன் இணைந்து யோகநிலைக்குச் சென்று ஞானமடைகின்றது.

**பிராணாயாமம்**

இப்பிராணனை முறைப்படுத்தும் பாகன் சிவகுருநாதன் ஆவான். பிராணாயாமத்தால் முறைப்படுத்தப்பட்ட உயிர்க்காற்று சீவனது தலையில் சென்று பாய்கின்றது. இப்பிராணன் ஐவகைக் கோசங்களைக் கடந்து (2128), சூக்கும உடலின் அருகிலும் வெகுதூரத்திலும் சென்று மீண்டும் இத்தூல உடம்பை வந்தடையும் (2131).

இறைவன் அருளால் மட்டுமே மேல்நோக்கிய சீவனது பயணம் நிகழும். பொய்யான ஒன்பது துவாரங்களையும் அடைத்துப் பிராணனை மேல்நோக்கிச் செலுத்தினால் சீவயாத்திரை செய்து சிவனை அடையலாம் (2603).

இடகலை பிங்கலை நாடிகளின்வழி பிராணனை மேலேற்றி அமுதத்தை அருந்திய ஞானியர் நீரிலும் நிலத்திலும் ஆயிரம் ஆண்டுகள் சமாதியிலும் இருந்தாலும் உடல் அழியாது (722).

***ஞானசாதனை***

பிரணவமான விந்து நாதங்களில் யானை போன்ற இந்திரியங்கள் வசப்படும். புலன்கள் நுகர்ச்சியில் ஈடுபட்டு உடலை அழித்து விடுகின்றன. இவ்வழிவை விரும்பாத சீவன் இறைவனை மனத்தில் இருத்தித் தியானித்தால் புலன்கள் கட்டுப்படும் (1985). தியானமோ உறக்கம் வரும்வரை மேற்கொள்ளப்படுதல் வேண்டும். இல்லையெனில் புலன்கள் விடுபட்டுத் தம்விருப்பம்போல் செயல்படும் (2094). புலன்களை அடக்கி, ஞானத்தைத் தூண்டி, உடலைச் சோதி வடிவமாகக் கண்டவர்கள் சிவனைச் சென்றடைவர் (2361). ஐம்புலன்களும் சகஸ்ரதளத்தை அடையும்போது அழிந்துபடும் (2567).

சிவசிந்தனையில் ஈடுபட்டு ஞானசாதனை புரிவோர் யானை, புலி முதலியன துரத்தினாலும் தம்செயலினின்று நழுவமாட்டார் (285).

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே (திரு.2290)

என்பது திருமந்திரம். மர யானையைப் பார்க்கும்போது மரத்தைப் பற்றிய எண்ணமில்லை. யானையே முன்நிற்கின்றது. ஆனால் மரத்தின் தன்மையைப் பார்ப்பவனுக்கு யானை முன்நிற்காது மரமே முன்நிற்கும். அதுபோல் ஐம்பூதங்களைப் பார்க்கும்போது பரமானது கண்ணுக்குத் தெரியாது. குருவருளால் பார்க்கும்போது பரமே காட்சியளிக்கும். ஐம்பூதங்கள் பரத்தில் ஒடுங்கி மறையும். சீவன் குருவின் அருளால் ஆன்மஒளியை உணரும்போது பஞ்சபூதங்களும் பரத்தில் ஒடுங்கிவிடும் என்பதே இதன் கருத்தாகும். மேற்சொன்ன பாடலுக்கான விளக்கத்தைப் பின்வருவதுபோன்றும் சிந்தித்தல் இயலும்.

**தத்துவத்தின் மறைபொருள்**

காண்பதில் மறைந்திருக்கும் உண்மைப் பொருளைக் காட்டுவது ஞானஒளியாகும். இதற்கு முன்பு எது இருந்ததோ, எது எப்போது இருக்கின்றதோ, எது எப்போதும் இருக்குமோ, எது எங்கும் நிறைந்துள்ளதோ, எது மாறுதல் அற்றதோ, எதில் இருந்து அனைத்தும் ஆனதோ, எதனிடத்தில் அனைத்தும் ஒடுங்குமோ, அது அழிவற்றது; என்றும் உள்ளது; அது மட்டுமே உண்மைப் பொருள். எங்கும் நிறைந்த பரம்பொருளை அனைத்திலும் காணுதல் வேண்டும். ஆனாய நாயனார் புராணத்தில் (21) ஆனாயர் கொன்றை மரத்தினை இறைவனாகவே காண்கின்றார். இதே கருத்தைத்தான்,

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம் (திரு.2290)

என்ற பாடலில் திருமந்திரம் கூறுகின்றது. தன்னை மறைப்பதை வெளிக்காட்டுவது பௌதிக ஒளி. காண்பதில் மறைந்து இருக்கும் உண்மைப் பொருளை உணர்த்துவது ஞான ஒளியாகும்

***ஞானம் பெறுதல்***

இவ்வுலக வாழ்வு பொய்யானது. தூல உடலில் உயிர் நிற்கவும் ஞானம் பெறவும் சக்தி அருள்புரிகின்றாள். பிறப்பு, இறப்பு, சொர்க்கம், நரகம் முதலியவற்றை அளிக்கின்றாள். இறுதியில் ஞானத்தைக் கொடுத்துச் சிவனருள் கூடச் செய்கின்றாள். எனவே சீவர்களுக்கு

ஞானம் ஏற்பட வேண்டுமென்றுதான் அருட்சக்தி அவர்களிடம் படிகின்றது. சீவர்களின் உடன் இருந்து இயக்குகின்றது (2344).

மாறிக்கொண்டே இருக்கும் உலகமாகிய கயல்மீனைக் கண்டவர் உலகில் பிறந்து இறந்து கொண்டே இருப்பர். ஆனால் சிவமாகிய முயலை அடைய யோகநெறி நிற்பவர் சிறிது சிறிதாக ஞானத்தை அடைந்து உய்தி பெறுவர்.

அறியாமையுடையவர் விருப்புவெறுப்பற்ற நிலையை அடையாமலே, அடைந்து சிவனைக் கண்டதாகக் கூறுவர். இவர்கள் வீண் ஆரவாரம் செய்து புறவுலகில் திரிவர். ஆனால் உள்ளத்தில் இறைவனை அறிய முடியாது (2512).

*மனம் ஒன்றுபடல்*

நன்மை தீமைகளைப் பிரித்தறியாத மனத்தில் காமம், வெகுளி, மயக்கம் என்பவை உள்ளன. ஆனால் மனம் நன்மையாகிய அகநோக்கினைக் கொள்ளும்போது இவை அடங்கும் (2026). மன அடக்கத்தால் கோள்களின் இயக்கம் மனிதனைப் பாதிக்காதவாறு செய்யலாம் (2893). யோகத்தில் இருக்கும்போது மனம் உலக சிந்தனைகளில் ஈடுபடக்கூடாது. அப்படி இருந்தால் தியானம் கிட்டாது. இறைப்பேறும் கைகூடாது. எனவே மனம் ஒன்றுபடாத நிலையில் சாதகன் செய்யும் சரியை, கிரியை முதலியவற்றால் எவ்விதப் பயனும் இல்லை (2993).

*இறை உள்ள இடம்*

சிவன், தன்னை நினைத்துப் போற்றுபவர் நெஞ்சில் அன்புடன் வந்து தங்குவான். அதனால் இறையின்பம் அமுதமாக ஊற்று எடுக்கும். அதனைச் சுவைத்த சீவனது உடல் முதுமை பெறாது. என்றும் இளமையுடன் இருக்கும் (738).

கருணையின் காரணமாய் மூலாதாரத்தில் இருந்து மேலெழும் பராசக்தி அறிவை ஒளிவீசச் செய்வாள்; ஆகாய மண்டலத்தைத் தெரியச் செய்வாள். அவள் நடனமிடும் சிற்றம்பலம் உண்மையான அன்புடையவர் உள்ளமாகும் (1132).

*மன அடக்கம்*

மனத்தைத் துன்புறுத்தும் காமம், குரோதம் முதலான ஆறும் மனத்தை மறைக்காமல் இருக்க வேண்டும். இருந்தால் சீவன் ஆனது சிவதுரியம், பரதுரியம், சீவதுரியம் ஆகிய மூன்றையும் கடந்து விளங்கும் (2899).

சிவன் பெருமை அறிந்தவர் சிவசிந்தனையில் ஈடுபட்டு இருப்பர். அவர்கள் நன்மை, தீமை ஆகியவற்றை உணர்ந்து தம்புலன்களை அலையவிடமாட்டார்கள்; மன அடக்கத்துடன் இருப்பர் (133).

*மலநீக்கம்*

பிரணவ நாதத்தில் திளைப்பவர்; புலனடக்கம் பெற்றவராய் ஒளியுடல் பெறுவர் (2158). அகார உகார மகாரங்கள் தூலப் பிரணவம் ஆகும். மகர ஒற்றை ஊமை எழுத்து அல்லது அர்த்த மாத்திரைப் பிரணவம் ஆகும். இங்ஙனம் ஒளியில் திளைப்பவர் மலநீக்கம் பெறுவர். இவர்கள் நின்மலா அவத்தையில் நின்று, பிரணவ உடல் பெற்று ஆயிரம் ஆண்டுகள் மரணமிலாப் பெருவாழ்வு வாழ்வர் (2304).

*துன்பத்தை நீக்குதல்*

திருமறை, திருமுறை முதலான நூல்களை அறியாதவர் நோற்றத் தவஞ் செய்யாதவர் ஆவர். அவர்கள் தவத்தைக் கண்டு அஞ்சுவர். ஆயினும் பிச்சை ஏற்றுத் துன்புற்று வாழ்வு நடத்துவர். அதாவது துன்பம் நீங்க எளிய நூல்களை அறிய வேண்டும்; நற்றவம் செய்ய வேண்டும் என்கின்றார் திருமூலர் (1642).

*வாசியோகம்*

வாசியைக் கட்டுப்படுத்தும் வகையறியாது மக்கள் மயங்குவர். நன்னெறி ஒழுகுவாருக்குச் சிவகுரு எழுந்தருளி வந்து ஆட்கொள்வார். அவருடைய திருவருளைப் பெற்றால் பிராணனை வயப்படுத்துதல் எளிதாகும். பிராணாயாமப் பயிற்சியால் சோம்பல் நீங்கிச் சுறுசுறுப்பு உண்டாகும். பிராணனாகிய உயிர்ப்பு மனத்துடன் பொருந்தி அடங்கி இருக்குமானால் பிறப்பு இறப்பு இல்லை.

16 மாத்திரை கால அளவு இடப்பக்க மூக்கின்வழி காற்றை இழுப்பது பூரகம். 64 மாத்திரை அளவு இழுத்த காற்றை உள்ளே நிறுத்துதல் கும்பகம். 32 மாத்திரை அளவு வலப்பக்க மூக்கின்வழி காற்றை மெல்ல விடுதல் ரேசகம். இப்படித் திருமூலர் பிராணாயாமத்தைச் செய்யும் முறைபற்றிக் கூறுகின்றார். இதைத் தொடர்ந்து செய்தால் வெளியில் முதுமைத் தோற்றம் ஏற்பட்டாலும் உள்ளே அகத்தில் என்றும் இளமைப் பண்பு இருக்கும்; முதுமைப் பண்பு ஒரு சிறிதும் தோன்றாது. மூக்கால் காற்றை இழுத்தால் உடம்புக்கு அழிவில்லை. காற்றை உள்ளே நிறுத்தத் தெரிந்தால் ஆயுள் நீட்டிக்கும்.

தலை, கண், காது, கால் பெருவிரல், நெஞ்சு, கொப்பூழ் முதலியவை நிறையுமாறு காற்றை உள்இழுப்பது பூரகம் எனப்படும்.

அவ்வாறு உள்வாங்கிய காற்றை உள்ளே பதியச் செய்து பின்அளவோடு வெளிவிட வேண்டும். பிராணனை வெளியிட்டுப் பின் கும்பகம் செய்ய அருள் உண்டாகும். காற்றை அளவாக வெளியே விட்டால் உடலில் செழுமையும் கொழுமையும் உண்டாகும்; உடம்பு பொன்மேனியாகும். பிராணசக்தியைத் தலைக்குப் பாய்ச்சினால் பஞ்சாக்கர சொருபம் அடைவர். பிராணனின் இயல்பை அறிந்து கொண்டால் இராப் பகலற்ற இடத்தே இருக்கும் வாய்ப்பு உண்டாகும்.

**குண்டலினி**

சீவனின் மனத்தில் வைராக்கியம் தோன்றும். வைராக்கியத்தோடு குண்டலினி முதுகுத் தண்டின் சித்ரணி நாடி வழியாக மேலேற அமுதம் கிடைக்கும். அதனை உணர்ந்து உண்டவர்களின் மனம் சிதறாது சிவனைச் சென்றடையும் (2887).

பற்றிக் கொள்ளும் ஆற்றலுடைய சீவன், உலகியலைப் பற்றாத விடத்து, பிரணவத்தைப் பற்றிக் கொண்டு குண்டலினி யோகம் செய்தால் பொன்போன்ற பிரணவ உடல் பெற்று வாழலாம் (293). இறைவனைப் பற்றி, நாவினை அண்ணாக்குப் பகுதியில் செலுத்தி இறைவனை நினைத்து அமுதம் உண்ண வேண்டும் (539).

சிற்றின்பத்தில் ஈடுபட்டு விந்துநீக்கம் செய்யும் சீவன் சிவனாகாது. விந்துவைச் செயம் செய்யும் சீவன் பக்குவப்பட்ட சிவனாகும் (2923).

***மூலாதாரம்***

ஐம்புலன்கள் மாயையில் சிக்கவில்லை என்றால் இறையுணர்வாகிய நெய் மூலாதாரத்தில் சொரியப்படும். அப்போது மூலாதாரமாகிய நெருப்பு நன்கு எரிந்து சீவனின் அண்டகோசத்தில் உள்ள இருளைப் போக்கும். ஓளிமயம் ஆக்கிச் சிவனுடன் ஒன்றிணையும் நிலையைக் கொடுக்கும் (2897).

***சகஸ்ரதளம்***

தலையில் இருந்து கீழிறங்கும் நூறு நாடிகளும் காமம் முதலிய ஆறு பகைகளால் இயங்கி ஆன்மாவை உலகியல் இன்பங்களைப் பெறச் செய்கின்றது. ஆனால் இந்த நாடிகளின் மேல்நோக்கிய பிராணாயாமத்தால் ஏழு ஆதாரங்களையும் கடக்கலாம்; சகஸ்ரதளம் விரிந்து சீவன் சிவனாகும் (2905).

***வீடுபேறு***

ஐங்கோசங்களால் ஆன உடல் நிலையானதன்று. இதைச் சீவன் உணர்ந்து கொண்ட பின், சரியையில் சரியை முதலான

பதினாறு நிலைகளையும், பத்து ஆக்கங்களையும் கடைப்பிடித்து வீடுபேறு அடையும் (1074).

ஞானேந்திரியங்கள் தம்உடலில் ஒளியாக இறைவனைக் காணவில்லையே என வருந்துகின்றன. அகண்டத்தில் உள்ள சிவசூரியன் இவ்வுடலுக்கும் ஒளி தருவான். இதை உணர்ந்து பிராணனைத் தலை உச்சியில் இயங்கச் செய்தல் வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் இவர்களது அறியாமை நீங்காது (2220).

சீவனின் சிற்றன்பத்துக்காக அதன் விந்தும், அது தாங்கியுள்ள உயிரணுவும் அழிகின்றன. இன்பத்தைக் கண்டு மகிழ்ச்சியும், துன்பத்தைக் கண்டு துக்கமும் கொள்ளாது இயல்பாக இருப்பவரே வீடுபேறு அடைவர். இல்லற வாழ்க்கைக்கு உரிய கடமைகளைச் செய்யும்போது உலகியல் நினைவுடன் இருப்பர். அது முடிந்தபின் சிவசிந்தனையில் ஈடுபடுவர். இவர்களைப் பாசம் வந்து சேராது. பாசம் நீங்கிய சீவன் சிவத்துடன் கலந்து பேரின்பம் துய்க்கும்.

### *விடுதலை*

விருப்புவெறுப்பற்ற உபசாந்த நிலையை ஆன்மா அடைய வேண்டும். மும்மலத்தில் சிக்கியுள்ள சீவன் சிவனது உருவத்தை நினைத்தபோது மலங்கள் நீங்கிச் சிவனாகும் தகுதிபெறும். சிவமே அனைத்துத் தளைகளிலிருந்து விடுதலை அளிக்கும்.

வலக்கண்ணில் உள்ள ஆன்மா சந்திரயோக முறையில் இடக்கண்ணில் மாறும்போதும் சீவன் சிவனாகும். உடலில் ஒளி ஏற்பட்டுச் சிவனாந்தம் பெருகும்.

### *பல்லாண்டு வாழ்தல்*

இறையுணர்வில் தோய்பவர்களின் உடலில் இறைவன் தங்குவான்; ஒலிவடிவில் பத்து வகையான ஒலி பேதங்கள் ஏற்படும். அவற்றுள் ஒன்று வண்டினது ரீங்காரம் போன்றது. மற்றொன்று தும்பி பறப்பதை ஒத்தது. சிவன் துணை கிட்டியதும் விசயப்பற்றுகள் நீங்கிவிடும். ஊர்த்துவ திருஷ்டியோடு பொறுமையாக இருந்தால் ஒளி பெற்றுப் பல்லாண்டு வாழலாம்.

### *ஓங்காரப் பிரணவ நாதம்*

சீவன் சிவனாகும் நோக்குடன் இருக்கும்பொழுது சிவனின் கூறுகள் படிப்படியாகச் சிவன்மீது படிகின்றன. இந்நிலை சீவனுக்கு ஏற்படுமுன், சீவன் யோகநிலையில் உள்ளபோது ஓர் ஒலி சீவனது உடலில் தோன்றுகின்றது. இதுவே ஓங்காரப் பிரணவ நாதமாகும்.

*சிவானந்தம்*

சிவானந்தத்தில் திளைப்பவருக்கு இரவுபகல் என்பது ஏற்படாது; அறியாமை நீங்கும். பராபரத்தின் உயிர்ப்பும், சீவனின் உயிர்ப்பும் இணையும்போது மூலாதாரத்தில் உள்ள நாதம் எழும்பிச் சீவனின் உள்ளத்தில் ஒளியாகப் பொருந்திச் சூக்கும உடலைத் தனித்து வெளியாகச் செய்யும்.

*பிராணலயம்*

பிராண இயக்கத்தைச் சீராக்கக் குருவின் துணையோடு கீழ்முகமாகச் செல்லும் சந்திர சூரியனாகிய இரு கண்பார்வையும் ஒன்று சேருமாறு செய்து, பிராணனும் குண்டலினியும் பிரமரந்திரத்தில் சென்று மோதும்படி செய்தால் பிராணலயம் கிட்டும்.

*சிவாயநம*

உடல் அழிந்தபின் உயிர் தனித்து இறையனுபவம் பெற இயலாது. எனவே உயிர் இருக்கும்போது சிவனை நினைத்து மனத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். சிற்றின்பத்தை ஒதுக்கிப் பேரின்பத்தில் நாட்டம் கொள்ள வேண்டும். சுக்கில சுரோணிதம் அழியாது இருப்பின் சுழுமுனை திறக்கும். விந்து செயம் பெற்றவர் சிவநீரால் உடல் பொன்னிறம் பெறுவர். சிவாயநம என்று செபித்தால் உடல் பொன்போல ஒளி வீசும்.

உருவத்தால் மனிதனாக இருப்பதால் மட்டும் மனிதனாகப் பிறந்ததற்குரிய பயன் கிட்டாது. மனிதன் மனத்தினைக் கட்டுப்படுத்திப் புலனடக்கம் செய்து உலகப் பற்றை நீக்கி, இறைப்பற்றைப் பற்றுக்கோடாகக் கொண்டு உய்வடைய வேண்டும் என்பது திருமூலர் கொள்கை. இதைப் பின்வருவன போன்று பல்வேறு நிலைகளில் உணர்த்துகின்றார்.

1. சீவன் இறையுணர்வு பெறுதல் வேண்டும்.
2. சீவன் கதறிச் சிவனை அடைய வேண்டும்.
3. பசுவாக உள்ள சீவன் பாசம் நீங்கிச் சிவனாக முயலுதல் வேண்டும். பாலில் நெய் கலந்து இருப்பதைப் போலவும், நீரில் பால் கலந்து இருப்பதைப் போலவும் சீவனில் கலந்துள்ள சிவனை உணர்ந்து கொள்ள வேண்டும்.
4. வெண்மையான ஒளியைச் சீவன் தன்னுள் காண வேண்டும்.
5. யோகத்தினால் இடகலை, பிங்கலைகளை ஒன்றுபடுத்தச் சுழுமுனை திறக்கும். பின் சகஸ்ரதளமும் திறக்கும். இதுவே இறைவனை அடையும் முதற்படியாகும்.
6. ஆன்மா சித்தத்திற்கு அறிவுரை கூற, அச்சித்தம் இறையுணர்வு பெறும்.

7. சிவகுருவின் அருளால் மட்டுமே சீவன் சிவானந்தம் அடைய முடியும்.
8. அலையும் மனத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். தத்தம் சமயமே சிறந்தது என வாதம் செய்பவரால் இறைவனை அடைய முடியாது.
9. உயிருள்ளபோதே பிராணசெயம் பெற வேண்டும் (காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்).
10. கலைகளை அதன் தன்மை அறிந்து இயக்குபவன் இறையடி சேருவான். மெய்யை விட்டு அகண்டத்தைப் பற்றி இருப்பவர்களுக்குப் பிராணன் வசப்பட்டு நிற்கும். நவத்துவாரங்களை அடக்கி வாசியை மேலநோக்கிச் செலுத்தினால் சீவயாத்திரை செய்து சிவனை அடையலாம்.
11. பூதங்களை, தன்மாத்திரைகளை, புலன்களை அடக்கி வென்றவனே இறையின்பம் பெறவியலும். பிரணவமாகிய விந்து நாதங்களில் இந்திரியங்கள் வசப்படும். புலன்கள் உடலை அழிக்குமுன் இறைவனைத் தியானிக்க ஞானம் உண்டாகும். சீவன் குருவருளால் ஆன்மஒளியை உணரும்போது பஞ்சபூதங்கள் முதலானவை பரத்தில் ஒடுங்கிவிடும்.
12. சிவன் ஞானசாதனையில் தர்க்கம் செய்பவர்களுக்கு அப்பாற்பட்டவன். சரியை, கிரியை, யோகம் ஆகிய நெறி நிற்பவர் ஞானம் பெற்று அவனை அடைவர்.
13. புலன்களைப் புறம் செல்லாது அடக்கினால் இறைவனை அடையலாம். புலனை வென்றால் மன அடக்கம் வரும். இதனால் கோள்களின் இயக்கம் மனிதனைப் பாதிக்காது.
14. சீவன் பிரணவத்தைப் பற்றிக்கொண்டு குண்டலினி யோகம் செய்தால் உய்தி பெறும். சீவன் விந்துவைச் செயம் செய்து சிவனாகும்.
15. இல்லறக் கடமையின்போது உலக நினைவுடனும் முடிந்தபின் சிவசிந்தனையுடனும் இருக்கும் சீவனைப் பாசம் அணுகாது.
16. பிராணாயாமம் செய்யும் சீவன் இறையொளி முழுமையாகக் கிடைக்கும்வரை பொறுத்து இருக்கும்.
17. சீவன் யோகநிலையில் உள்ளபோது தோன்றும் ஒலி புட்கள் சிலம்புதலுக்கு ஒப்பாகும் (பறவை ஒலி).
18. மூலாதாரத்தில் தோன்றும் ஒலி குயிலின் குரலை ஒத்தது (ஓங்காரம்).
19. சிவன் சீவனிடமுள்ள வினைகளைப் பிரிக்கும்.
20. கிரியையாளர் இறைவழிபாடு செய்தல் வேண்டும்.

21. உயிர் உடம்பை, சூரிய சந்திரர்களான கண்களின் உதவியால் அழியாமல் காக்க வேண்டும்.
22. சிவம் செழிக்க மனம் பண்பட்டு இருத்தல் வேண்டும்.
23. சீவன் குண்டலினி யோகத்தால் சிரசில் உள்ள சகஸ்ரதளத்தில் சிவனோடு ஒன்ற வேண்டும்.
24. பொன்னிறமான சுரோணிதமும், வெண்ணிறமான சுக்கிலமும் அழியாது இருப்பின் சுழுமுனை திறக்கும்.
25. விந்துசெயம் பெற்றவர் சிவநீரால் தம்உடல் பொன்னிறம் ஆக்கப் பெறுவர். பொன்தகட்டில் நாவக்கரி, சாம்பவி சக்கரங்களை வரைந்து வழிபட்டால் வளம்பெருகும். செம்புபோன்ற மலம் நிறைந்த உடலில் சிவாயநம என்று செபித்தால் உடல் பொன்னொளி பெறும்.
26. சிவத்துடன் இணைந்த சீவனுக்கு மீண்டும் பிறவியில்லை.
27. உடலில் உள்ள புலன்களைக் கட்டுப்படுத்திச் சிவானந்தம் பெறுவதற்குச் சீவனின்றேல் ஒரு பயனுமில்லை.
28. சீவன் குருவின் அருளால் பாசத்தைச் சுட்டு எரிக்கும்.

இதுபோன்ற பல அரிய சிந்தனைகளைத் திருமந்திரம் தத்துவமாக வழங்கி உள்ளது. இச்செய்திகளைத் தொகுத்துக் காண்போம்.

தத்துவம் என்பது சமயத்தோடு தொடர்புடையது. ஆன்ம அனுபவத்தை இதன்வழி பெறமுடிகின்றது. திருமூலர் தம் காலத்தில் வழக்கில் இருந்த யோகதத்துவம், சாக்ததத்துவம், சித்தாந்ததத்துவம், வேதாந்ததத்துவம், வேதாந்தசித்தாந்த சமரசதத்துவம் ஆகியவற்றை விரிவாகத் தம்நூலுள் குறித்துள்ளார்.

இயமம் முதலான எட்டு அங்கங்களையும், அவற்றின் வாயிலாகப் பெறும் பல்வகைச் சித்திகளையும் கூறுகின்றார். கேசரியோகம், சந்திர யோகம், பரியங்க யோகம் முதலிய பலவகையான யோகங்கள்வழி காயசித்தி பெறுவதே சித்தர்க்குரிய யோகதத்துவம் என்பதை எடுத்துரைக்கின்றார்.

இவ்யோக தத்துவத்தோடு தொடர்புடையது சாக்தர் தத்துவம். ஆற்றலைப் போற்றத் தொடங்கியதே சக்தி வழிபாட்டின் தொடக்கநிலையாகும். காலப்போக்கில் புராண இதிகாசக் கதைகள் தோன்றிச் சிவனுக்கும் சக்திக்கும் பல பல கற்பனைகள் கற்பித்தன. இன்றுள்ள சாக்தம் சக்தியை வழிபடு பொருளாகக் கொண்டதாகும்.

சக்கரம் என்பது யந்திரத்திலும் வேறுபட்டது. திருவம்பலச் சக்கரம், ஏரொளிச் சக்கரம், திரிபுரைச் சக்கரம், வயிரவச் சக்கரம், சாம்பவி மண்டலச் சக்கரம், புவனாபதி சக்கரம் முதலிய பல சக்கரங்கள் மிக விரிவாக விளக்கப்பட்டு உள்ளன. அவற்றின் அடிப்படையில் அமையும் மந்திர எழுத்துகள் அவற்றின் சக்திகள் முதலிய அனைத்தையும் உள்ளடக்கியதே சாக்த தத்துவம் ஆகும்.

திருமந்திரத்தில் மிகப் பரவலாகக் குறிக்கப்படுவது சித்தாந்த தத்துவமே. சித்தர்கள் கண்ட முடிவே சித்தாந்தம் ஆயிற்று. சித்தாந்தம் பற்றிய முதல் நூல் திருமந்திரமே. சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சைவம் என்ற சைவத்தின் நான்கு வகைப் பிரிவு கூறப்பட்டது. இவை அனைத்திற்கும் அடிப்படையாய் சரியை முதலிய நான்கும் அவற்றோடு தொடர்புடைய தாசமார்க்கம் முதலியனவும், அவற்றின் பலனாகிய சாலோகம் முதலியனவும் திருமூலரால் கூறப்பெற்றுள்ளன.

பதி, பசு, பாசம் ஆகிய மூன்றும் சைவ சித்தாந்த முப்பொருளாகப் போற்றப்படுகின்றது. இம்மூன்றின் இயல்பும், பசு பதியை அணுக மேற்கொள்ளும் முயற்சியில் பெறும் அவத்தைகளும் குறிக்கப்பெறுகின்றன. முப்பதம், முச்சொருபம், மும்முக்தி, முக்கரணம், முப்பாழ் முதலியனவும் தெளிவாக்கப்படுகின்றன.

ஐந்தெழுத்து, திருக்கூத்து முதலியவற்றின் தத்துவமும் விளக்கப்படுகின்றன. குறிப்பாக மிக விரிவான அளவிற்குச் சித்தாந்தம் குறிக்கப்பட்டுள்ளது. திருமந்திரத்தை ஒட்டியே சைவசாத்திரங்கள் எழுதப்பெற்றுள்ளன. இவையே சித்தாந்த தத்துவங்களாகும்.

**வேதம் பொது, ஆகமம் சிறப்பு என்பதே திருமூலர் கொள்கை.** இவை இரண்டும் தனித்தனியானவை அல்ல. ஒன்றை ஒன்று தழுவி உள்ளன. வேதம் என்பது மந்திரமாகும்; ஆகமம் என்பது தந்திரமாகும். இரண்டையும் ஏற்கும் திருமூலர் தம் நூலுக்கு மந்திரம் எனப் பெயர் தருகின்றார்; பிரிவுக்குத் தந்திரம் எனப் பெயர் தருகின்றார்.

சாயுச்சியம் என்பது தானாகும் நிலையின் தொடக்கமாகும். இத்தொடக்கமே வேதாந்தமாகும். இதன் முடிவு சித்தாந்தம். இவை இரண்டையும் ஒன்றாகக் கருதுதல் வேண்டும். இவற்றில் உயர்வு தாழ்வில்லை. இதை உணர்த்தவே திருமூலர் வேதாந்த சித்தாந்த சமரசத்தை விளக்குகின்றார். வேதாந்தம் ஆகம அறிவு, சித்தாந்தம் சிந்தைத் தெளிவு, செயல்பாடு ஆகும். அன்பை அடிப்படையாகக் கொண்ட திருமூலர் தத்துவ வேதாந்த சித்தாந்தச் சமரசத்தை வேராகக் கொண்டவர் என்பது தெரிகின்றது.

**முடிவுரை**

திருமந்திரம் சமயம் சார்ந்தநூல். இது சாதாரண வழிபாடுகளைக் கூறவில்லை. தத்துவங்களின் அடிப்படையில் வழிபாடுகளை நுட்பமாகக் கூறுகின்றது. அவ்வகையில், பதிமுதுநிலை, உயிரவை நிலை, இருள்மல நிலை, அருளது நிலை, அருளுரு நிலை, உண்மைப் பொருளை அறியும் நெறியாகிய சாதனங்கள், திருவருள் வயப்பட்ட உயிர்களின் நிலை, பேரின்பம் பெற்று இன்புறும் உயிர்களின் நிலை, திருவருளில் அழுந்தி நிற்கும் அணைந்தோர் தன்மை, முக்தி நிலைகள் முதலியவற்றை மிக நுட்பமாகக் கூறுகின்றது.

வாழ்க்கையைப் பண்படுத்தும் இன்றியமையா அறங்கள், இறைவனது இயல்பு, சிறப்பு, கருணை, கருணையை நுட்பமாக விளக்கும் புராணங்களின் உட்பொருள், முப்பொருள் இயல்பு, பதியை அடையும் யோகநெறிகள், கிரியைமுறையில் சக்கரங்களை வைத்து வழிபடும் முறைகள், வேத ஆகமங்களில் கூறப்பட்ட பதி பசு பாசந்தொடர்பான செய்திகள், ஆறு ஆதாரங்களில் இறைவனை ஒருமுகப்படுத்திச் சிந்தித்து மேல் சென்று ஒன்றல், உலகமே அண்டலிங்கம், மனித உடல் பிண்ட லிங்கம், ஆத்மா ஆத்மலிங்கம் என்ற விளக்கம், நிராதாரத்தில் விளங்கும் சோதியை உணர்ந்து கலத்தல், தீக்கை முறைகள், ஒளிவடிவில் இறைவனை வழிபடும் குருபூசை, பிட்சா விதி, முத்திரைகளால் மனவோட்டத்தையும் பிராண ஓட்டத்தையும் நெறிப்படுத்தல் ஆகியவை தத்துவ நிலையில் திருமந்திரத்தில் விளக்கப்படுகின்றது.

திருமந்திரத்தில் கூறப்பட்டுள்ள இத்தகைய மெய்யியல் உண்மைகளைப் பற்றிய விளக்கமாக இப்பகுதி அமைந்தது.

# 8. புராணக்கதைகள் உணர்த்தும் நீதி

## முன்னுரை

புராணங்கள் குறிப்பிடும் தெய்வங்களும், முனிவர்களும், பிற மனிதர்களும், அவர்களின் செயல்களும், அவற்றால் அடைந்த விளைவுகளும் தொன்றுதொட்டு வழங்கி வருகின்றன. எனவே இதன்வழி மக்களுக்குப் பயன்படும் பல கருத்துகளைத் தெரிவிக்க வேண்டுமெனத் திருமூலர் நினைத்துள்ளார். அதனால்தான் புராணக்கதைகளைத் திருமந்திரத்தில் இடம்பெறச் செய்துள்ளார். திருமந்திரம் குறிப்பிடும் சிவன், தேவர், அசுரர், மக்கள் பற்றிய கருத்துகள் வெளிப்படுத்தும் வாழ்வியல்நெறி பற்றிப் பார்ப்போம்.

## புராணங்கள்

திருமந்திரம், பல அரிய உண்மைகளை மக்களுக்கு உணர்த்த வேண்டிப் புராணக்கதைகளை ஆங்காங்கே கையாண்டுள்ளது. புராணநூல்கள் அனைத்தும் இறைத்தொடர்பு உடையவை. தெய்வங்கள், முனிவர்கள், அசுரர்கள் ஆகியோரைப் பற்றிய பழமையான செய்திகளை இவை தெரிவிக்கின்றன. புராணங்கள் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டவை.

புராணம் என்பதற்குப் பழைய வரலாறு என்பது பொருள். வேதம், உபநிடதம், இதிகாசம், காப்பியம் உட்பட அனைத்து வகை இலக்கியங்களுள்ளும் இவை இடம்பெற்றுள்ளன. புராணங்கள் பதினெட்டாகும். இவற்றை வேதவியாசர் இயற்றினார் என்பர்.

தேவர்கள், முனிவர்கள், அசாதாரணத் தன்மை வாய்ந்த மனிதர்கள் ஆகியோரைப் பற்றிய வரலாற்று விளக்கங்களாகத் திருமந்திரம்தரும் புராணச்செய்திகள் அமைகின்றன. இவை இல்லற வாழ்க்கை நெறிகளை உணர்த்திச் சமுதாயத்திற்கு உதவி செய்வனவாய் உள்ளன. புராணங்கள் இம்மைக்கு மட்டுமின்றி மறுமைக்கும் பெரும்பயன் தருவனவாகும்.

உலகத்தின் தோற்றம், இறைவனது பண்புகள், தெய்வ அருளாற்றல், தேவர்களின் செயல்கள், சாபம், வீடுபேறு, அசுரர்களின் இயல்புகள், இறைவழிபாடு ஆகியவற்றைத் திருமந்திரம் விளக்குகின்றது. குறிப்பாகச் சமுதாயச் சிந்தனைகள் பலவற்றை

விளக்கப் புராணக் கதைகளைத் திருமூலர் நன்கு பயன்படுத்தி உள்ளார்.

**சிவன் குறித்தவை: உலகத் தோற்றம்**

உலகம் இறைவனால் தோற்றுவிக்கப்பட்டது. இறைவன் சிவன் ஆவான். அவன் ஆதியும் அந்தமும் இல்லாதவன். பராபரன், சிவன்சக்தி எனப் பிரிக்க முடியாதவன். பராபரன் இடமிருந்து பரம் தோன்றும். பின்பரையும், பரையிடம் விளங்கும் நாதமும் தோன்றும்.

சுத்த மாயையில் தோன்றுவன நாதம், விந்து, சிவன், சக்தி, ஞானம், செயல், இச்சை என்பன. இச்சையான அசுத்த மாயையில் இருந்து வானம், காற்று, நெருப்பு, நீர் ஆகியன தோன்றும். இவை கலந்ததே கடினத்தன்மை உடைய நிலமாகும். இவ்வைந்தில் உள்ள ஒவ்வொன்றிலும் ஐம்பூதங்களின் கூறுபாடு கலந்துள்ளது. இதனை,

> **தேனின்கண் ஐந்தஞ் செறிந்தைந்து பூதமாய்**
> **பூவின்கண் நின்று பொருந்தும் புவனம்**

எனவரும் பாடல் விளக்குகின்றது. ஐம்பூதத்தில் நிலத்தின் தன்மை அரைப்பங்கும், பிற நான்கு பூதங்களின் தன்மைகள் அரைக்காலே பங்கும் உள்ளன.

**ஐந்தொழில்கள்**

படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில் களையும் முறையே அயன், அரி, அரன் ஆகியோர் நிகழ்த்துவர். அதுபோது சிவன் உடன் இருந்து அறிவான். மறைத்தல் என்பது மகேசுவரன் ஆணைப்படி சீவர்களுக்கு வினையை ஊட்டுவதாகும். பிரபஞ்ச அழிவுக்குப்பின் அதனையும், சீவர்களையும் இறைவன் தன்னுள் மறைத்துக் கொள்வான். அருளல் என்பது சதாசிவன் சீவர்களுக்குப் பிறவியை அளிப்பதோடு மலநீக்கம் பெறவும் அருள்புரிவதாகும். சீவர்களைப் படைத்து, காத்து, அழித்து, மறைத்து அருளும் ஐந்து தொழில்களையும் செய்பவன் இறைவனே ஆகும்.

**சிவன் வடிவம்**

இறைவன் அணுவினும் நுண்ணியன்; பஞ்ச பூதங்களாகப் பரந்தவன்; இயற்கையோடு இயற்கையாகக் கலந்தவன். ஒளிவடிவானவன்; இவனே அனைத்துமாக இயங்குபவன். படைப்புக்குப்பின் பெண்தன்மையை விரும்பிப் பெற்றுப் பெண்ணாக மாறுபவன். வானமே உடலாக உடையவன். இவன் ஆடும் சிவசக்தி நடனம் தத்துவங்களை உள்ளடக்கியது.

சனகர், சனற்குமாரர், சனந்தனர், சனாதனர் ஆகிய நால்வருக்கும் சிவன் வேதம் அருளினான். அதனால் குருதட்சிணாமூர்த்தி எனப்பட்டான். வேதத்தின் உண்மைப் பொருளை அவர்களுக்குச் சின்முத்திரையால் உணர்த்தினான். இறைவனின் வடிவ அமைப்பு சிவலிங்கம் அல்லது கந்த வடிவம், தட்சிணாமூர்த்தி வடிவம், சிவசக்தி அல்லது அர்த்தநாரி வடிவம், நடராசன் என்பனவாகும்.

**சிவனின் அணிகலன்**

சிவன் பாம்பை அணிந்தவன் என்பதை, **அராபரன் மன்னி மனத்துறைந் தானே** எனும் வாக்கால் திருமூலர் கூறுகின்றார். அரவு குண்டலினி யோகத்தை உணர்த்தும் ஒரு குறியீடு ஆகும். இவன் தலையில் பனிமதி சூடியவன்; எலும்பு மாலை அணிந்தவன்; பேருழிக் காலத்தில் எலும்பையும் மண்டையோட்டையும் ஏந்திக்கொண்டு எழுபவன். இடையில் ஆடையாகப் புலித்தோல் அணிந்தவன். இதனை, **பொன்னைக் கடந்திலங்கும்புலித் தோலினன்** (271) என்று திருமந்திரம் கூறுகின்றது.

பாற்கடலைக் கடைந்தபோது அதில் தோன்றிய நஞ்சை உண்டவன் சிவன்; அது கழுத்தில் நின்றதால் சிவன் கண்டம் கருத்தவன் ஆனான். ஆதலால் இறைவனுக்குத் திருநீலகண்டன் எனும் பெயரும் உண்டு. இறைப்பேறடைய எண்ணமின்றி இருப்பவரைப் பார்த்து, **கண்டம் கறுத்த கருத்தறி வாரில்லை** (521) என்கின்றார் திருமூலர். சிவனைக் குறிக்கும்போது, **விடங்கொண்ட கண்டன்** (2002) என்றும், **மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே** (2068) என்றும் பலவாறாகக் குறிப்பிடுகின்றது திருமந்திரம்.

சிவபெருமான் பகீரதன் தவத்தினை ஏற்றார். அதனால் ஆகாய கங்கையைப் பூமிக்குக் கொடுத்தார். கொடுக்கும்போது பூமி கங்கையின் வேகத்தைத் தாங்காது என உணர்ந்தான். எனவே தன்சடையில் தாங்கிப் பூமியில் விட்டான். இப்புராணச் செய்தியை உள்ளடக்கித் திருமந்திரம்,

> **தேய்ந்தற் றொழிந்த இளமை கடைமுறை**
> **ஆய்ந்தற்ற பின்னை அரிய கருமங்கள்**
> **பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தியை**
> **ஓர்ந்துற்றுக் கொள்ளும் உயிருள்ள போதே** (திரு.179)

ான்கின்றது. இளமை அழியக்கூடாது. இளம்வயதிலேயே ஐறையுணர்வும் விந்துசெயமும் பெறவேண்டும். இது பேரின்ப

வாழ்விற்கு வித்திடும். எனவே இறைப்பாதங்களைப் பற்றுதல் வேண்டும் என்கின்றது இப்பாடல். இதனையே வள்ளுவர்,

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு (குறள் 350)

என்று வலியுறுத்துகின்றார். இதனால் மக்கள் பற்றுக் கோடாக இறைப் பாதங்களைப் பற்ற வேண்டும் எனத் தெரிகின்றது. எனவே திருமந்திரம் சிவனுக்குரிய அணிகலன்களையும், அதனை அவன் அணிவதற்கான காரணங்களையும், அவற்றின் உட்பொருள்களையும் உலகுக்கு உணர்த்தி வழிகாட்டுகின்றது.

### சிவன் செயல்கள்

சிவன் தேவ, அசுரர்க்கு இடையே ஏற்படும் அழிவுகளையும், தேவ-அசுர மனிதர்களிடையே ஏற்படும் அகந்தைகளையும் நீங்குமாறு செய்பவன். மும்மலங்களை நீக்குவதற்காக இறைவன் செய்த செயல்கள் புராணச் செய்திகளாக நின்று இன்றளவும் மக்கள் மனமாசுகளை நீக்கும் கருவிகளாக விளங்குகின்றன.

### அடிமுடி தேடல்

சிவபெருமான் உடம்பாய், உயிராய், அதனுள் உணர்வாய், நெருப்பாய், திருமால், பிரம்மா ஆகியோரால் அறிய முடியாதவனாய், ஒளியால் ஓங்கித் தம்பவடிவாய் நிற்பவன். இத்தம்பமே அண்டங்களுக்கு ஆதாரமாய் விளங்குவது (திரு.374). அடிமுடி தேடிய கதையினால் அகந்தை ஒழிய வேண்டும் என்ற அரிய உண்மை மக்களுக்கு உணர்த்தப்படுகின்றது.

### கூற்றுவனை உதைத்தல்

சிவன் கூற்றுவனை உதைத்த வரலாற்றைத் திருமந்திரம் சுட்டுகின்றது. மனிதன் மூப்படையாமல் இளமையுடன் பல ஆண்டுகள் வாழ்வதற்கான முறையினை விளக்கும் பாடலில் (345) ஞாலக் கடவூர் என்ற சொல் இடம்பெறுகின்றது. இச்சொல்லில் சிவன் மார்க்கண்டேயன், என்றும் பதினாறாக இருக்க வரம் கொடுத்த வரலாறு தெரியவருகின்றது. சாதகன் சுழுமுனையில் பொருந்தி நின்று குண்டலினி யோகத்தால் மூலாதாரத்தில் உள்ள மூலத்தீயை மேலெழுப்பி, உடலைக் கடந்து சகஸ்ரதளத்தில் அழியாது இருக்கலாம் என்பதே ஞாலக் கடவூர் என்பதன் தத்துவ விளக்கமாகும். பூமியில் இத்தத்துவம் திருக்கடவூர் என்னும் பதியில் விளங்குகின்றது.

**காமன் செயலொழித்தல்**

மன்மதனைச் சிவன் அழித்த புராணச் செய்தியை உள்ளடக்கித் திருமூலர், திருந்திய காமன் செயலழித் தங்கண் (346) என்று பாடுகின்றார். காமன் செயலை அழிப்பதற்கு முக்கியக் காரணம் விந்துசெயம் பெறுதல் ஆகும். இதனை இப்பாடலின் இறுதி அடியில், **அருந்தவ யோகங் கொறுக்கை அமர்ந்ததே** என்று குறிக்கின்றார். இது இல்லறத்தில் பெண்ணொடு பொருந்தி இருந்தே விந்துசெயம் பெறுவதைக் குறிக்கின்றது.

**பிரம்மன் தலைகொய்தல்**

**கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்**
**தலையைத் தடிந்திட்டு தானங்கி யிட்டு**
**நிலையுல குக்கிவன வேண்டுமென் றெண்ணித்**
**தலையை யரிந்திட்டுச் சந்திசெய் தானே** (திரு.340)

என்கின்றது திருமந்திரம். சுவாதிட்டான சக்கரத்தில் உள்ள பிரம்மன் விந்துநீக்கம் செய்து கொண்டு இருக்கிறான். கோபம் கொண்ட சிவன் பிரம்மன் தலையைக் கிள்ளினான் என்பது புராணம். சீவனின் பக்குவத்திற்கு ஏற்ப ஞானம் அருள்பவன் சிவன். அதுபோதுதான் விந்துசெயம் பெறுகின்றனர். பிரம்மனின் இச்செயலைச் சிவன் நீக்கி, ஐந்து தலைகளில் ஒன்றை நீக்குகின்றான்; பிரம்மனின் அகந்தையை அழிக்கின்றான். உலக இயக்கத்திற்காக அவனை உயிருடன் விடுகின்றான். அடிமுடிதேடல் என்ற புராணச் செய்தியும் பிரம்மன் தலை கொய்யப்பட்டதையே குறிக்கின்றது. ஆதி அந்தம் இல்லாத இறைவனைத் தேடுதல் என்பது மூலாதாரந் தொடங்கி சகஸ்ரதளம் எனும் ஆகாயம்வரை தேடிக் கண்டுகொள்வது என்பது அனைவருக்கும் சாத்தியமில்லை. தவமுடையார்க்கே தவம் சித்திக்கும் மாயையான விஷ்ணுவும் அகம்பாவமான பிரம்மாவும் அன்பு எனும் சிவத்தை அடைய இயலாது. அன்பினாலேயே அவனை அடைய வேண்டும் எனும் அரிய தத்துவமே அடிமுடி தேடுதல் ஆகும்.

**மாலுக்குச் சக்கரமும் பிரம்மனுக்கு வாளும்**

திருமாலுக்குச் சக்கரத்தையும், பிரம்மனுக்கு வாளையும் தந்தான் சிவன். இப்புராணச் செய்தி,

**ஆழி கொடுத்தனன் அச்சுதற் கவ்வழி**
**வாழி பிரமற்கும் வாள்கொடுத் தானே** (349)

என்னும் திருமந்திரப் பாடலில் இடம்பெறுகின்றது. சீவன் உலக இயக்கத்தில் நிலைபெற்றபோது மணிபூரகத்தை இடமாக்கக் கொண்ட

திருமால் பேரின்பத்தை விரும்பினான். எனவே சகஸ்ரதளத்தில் இருக்குமாறு இடம்தந்தான் உருத்திரன். இதனையே புராணம் திருமால் சுதர்சன சக்கரத்தை உருத்திரன் இடமிருந்து பெற்றதாகக் கூறுகின்றது. திருமாலால் சக்கரத்தைத் தாங்க முடியவில்லை. அதனால் சிவனை வேண்டுகின்றான். சிவன் தன்உடலில் பாதியைத் திருமாலுக்குத் தருகின்றான். இது திருமந்திரத்தில் (367, 369) இடம்பெறும் புராணச் செய்தியாகும். இதன்பொருளே அரி அரன், மாலும் சிவமும் வேறு வேறு அல்லர்; சிவத்தில் இருந்து விஷ்ணு வந்ததை இப்பாடல் உணர்த்துகின்றது.

### சக்தி சிவனை வழிபடல்

ஐம்பூதத் தலங்களில் ஒன்று காஞ்சிபுரம். அது மண்ணின் கூறு. இத்தலத்தில் மண்ணில் வடித்துத் தவஞ்செய்து சிவனோடு சேர்ந்தாள் சக்தி. மூலாதாரத்தில் உள்ள குண்டலினி சக்தி, உச்சந்தலையில் உள்ள சிற்சக்தியாகிய இலிங்கசிவனை அடைந்தாள் என்ற உண்மையை இது வெளிப்படுத்துகின்றது. சீவன் சிவனாகும் என்ற தத்துவமும் இதன்வழி உலக மக்களுக்கு எடுத்துரைக்கப்படுகின்றது (திரு.347). ஆண்பெண் பேதமின்றி யாவரும் இறைவனை அடைய முடியும்; மனத்திடமே தவம் செய்ய ஏதுவாகின்றது. கிரியா சத்தியாகிய குண்டலினி சத்தியே சிற்சத்தியாய் மாறிச் சிவனொடு பொருந்த வழிபடுகின்றாள் என்பது சிவதத்துவமாகும்.

இப்படித் தேவர்களுடன் சிவன் புரிந்த புராணச் செயல்களைத் திருமந்திரம் வாழ்வியல் நோக்கில் எடுத்துக் கூறியுள்ளது. இதுபோல் அசுரர், முனிவர், மனிதர் ஆகியோருக்கு இறைவன் அருள்புரிந்த புராணச் செய்திகள் பலவற்றையும் திருமந்திரம் கூறுகின்றது.

### அந்தகாசுரன் அழிவு

குருந்துயர் சூலங்கைக் கொண்டுகொன் றானே (339) எனும் திருமந்திரப் பாடலில் சீவர்களது உள்ளத்தில் உள்ள அறியாமை அசுரன், சிவன் சூலத்தால் அழிந்தமை சொல்லப்படுகின்றது. அறியாமை உலகில் வெளியில் இல்லை; உள்ளத்தில் உள்ளது; இறையருளால் அது நீக்கப்பட வேண்டும். இதுவே பாடலின் உட்பொருளாகும்.

சீவன் யோகத்தின்வழி சூரிய, சந்திர, அக்கினிக் கலைகளை ஒன்றுபடுத்திப் புருவநடுவில் ஒளியைக் காண்கின்றது; உலகம் பொய்யானது என உணர்ந்து கொள்கின்றது. அறியாமையால் ஏற்படும் அழிவு ஒளியாம் சூலத்தின்வழி நீங்கிப் பேரின்பம் விளையும் என்பதே அந்தகாசுரன் கதை உணர்த்தும் தத்துவமாகும். சூலம்

என்பது ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலத்தை உடைய அழிவுசக்தி. இவ்அழிவுசக்தியை அழிக்கவும் இறைவன் சூலாயுதனாக விளங்குகின்றான்.

**சலந்தராசுரன் அழிவு**

சலந்தரன் தேவர்களுடன் போர் செய்தான். தேவர்களுக்காகச் சிவன் சலந்திரனை எதிர்த்துப் போர்புரிந்தான். சிவன் தலையில் கால்கட்டை விரலால் ஒரு சக்கரத்தை எழுதிச் சலந்திரனை எடுக்கச் சொல்கின்றார். அவனால் முடியவில்லை. சிவன் அச்சக்கரத்தை எடுத்து அவனை அழிக்கின்றார். திருமந்திரத்தில் இடம்பெறும் இப்புராணத்தின் தத்துவ விளக்கம் என்ன என்று பார்ப்போம். ஒன்பது துவாரங்களும் அடைபடக் கீழ்முகமாகச் செல்லும் அபானன் மேல்நோக்கிச் சென்று பிராணனுடன் கலக்கும். பிராணனும் அபானனும் ஒன்றுபடச் சுழுமுனை திறக்கும். இறையனுபவம் கிட்டும். இதுவே சலந்தராசுரன் சங்காரத்தின் தத்துவம் ஆகும் (342).

**திரிபுர சங்காரம்**

முப்புரம் அழிந்த புராணச் செய்தியைக் கொண்டு திருமூலர், தனக்கு அழிவையும், மக்களுக்குத் துன்பத்தையும் தரும் மும்மலங்களையும் மூலாக்கினியை எழுப்பிச் சுட்டெரிப்பதைக் குறிப்பிடுகின்றார் (343,348).

**இராவணன் கயிலையைப் பெயர்த்தெடுத்தல்**

இராவணன் தன்அகந்தையால் கயிலை மலையைப் பெயர்த்து எடுக்க முற்பட்டு இயலவில்லை. எனவே இறைவனை அமரா என்று அழைத்து இறையருள் பெற்றான். இவ்வாறே சீவர்களிடம் நான் என்பதும், மாயை என்பதும் துன்பத்தைத் தருகின்றது. இதில் இருந்து விடுதலை பெற, சிவாயநம என்று சிந்திக்க முற்பட்டுச் செயல் அற்றுப்போகும்போது பேரின்பம் அடைவர் (திரு.350).

**கயமுகாசுரன் அழிவு**

இவன் முத்தீயினை யாகமாக வளர்த்தான். அதுபோது ஒளியாக இறைவன் வெளிப்பட்டான். தேவர்களுக்குத் துன்பம் செய்த யானை வடிவு கொண்ட கயமுகாசுரனைச் சிவன் அழித்தான். அதன் தோலைப் போர்வையாக அணிந்தான். இப்புராணக்கதையைத் திருமந்திரம் பின்வருமாறு வெளிப்படுத்துகின்றது.

புறத்து உள்ள முத்தீயினைப்போல் நம் உடலில் சூரிய, சந்திர, மூலாதார நெருப்புகளை இணைக்க வேண்டும். யானையின்

அறியாமை நீங்க, அப்போது சீவன் தன்னுள் ஒளிகண்டு சிவனாகும். உடலின் ஆறு ஆதாரங்களில் இருந்து அறியாமையை ஏற்படுத்தி வந்த தேவர்களும் உடன் அழிவர். யானை அறியாமையின் உருவகம் (344). யானையைப் போன்ற காரிருள் கொண்ட இருள் மனத்தில் ஞானஒளி தோன்ற வேண்டுமாயின் அறிவுத்தெளிவு, ஆன்மத்தெளிவு வேண்டும். அத்தெளிவு அகத்தே உள்ள அக்கினியைச் சிரசின்மேல் வளர்த்துச் செய்வதே முத்தி வளர்த்தல். இதுவே காருதபத்தியம் ஆகவணீயம், தட்சிணாக்கினி ஆகிய அகவேள்வியாகும்.

**தக்கன் வேள்வி**

தக்கன் வேள்வி என்னும் தலைப்பில் தக்கன் அழிவைத் திருமந்திரம் விளக்குகின்றது (353-361). சிவனது அருள் இல்லையெனில் விந்துசெயம் கிட்டாது. இதை உணராதவரைக் கண்டும், அவர்தம் காமத்தைக் கண்டும் சிவன் சினப்பான் என்பதைத் திருமந்திரம் உணர்த்துகின்றது. மேலுமிது, திருமால், பிரமன், தக்கன், சூரியன், சந்திரன், நாமகள், அக்கினி, இந்திரன் ஆகியோர் முறையே தங்களுடைய அகந்தைக்குத் தலை, முகம், மூக்கு, கை, தோள் ஆகியவற்றை இழந்தனர்; உண்மையை உணர்ந்தனர்; வீடுபேறடையும் தகுதி பெற்றனர் என்றும் தெரிவிக்கின்றது (358).

**சண்டீசர் வரலாறு**

சிவத்தொண்டு புரிந்துவந்த சண்டீசன் அதற்கு இடையூறாக விளங்கிய தன்தந்தையின் காலையே மழுப்படையால் வெட்டினான் என்பது புராணச் செய்தி. இப்புராணக் கதையின்வழி பின்வரும் தத்துவக் கருத்தைப் புலப்படுத்துகின்றது திருமந்திரம் (347).

குண்டலினி யோகத்தின்போது, கீழ்நோக்கி உள்ள மழு என்ற உறுப்பு நிமிரும்; சித்ரணி என்ற நடுநாடி வழியாக மேலேறிச் சுழுமுனையை அடையும். அப்போது சூரியசந்திர கணங்கள் தொழிற்படாது; அப்போது வெண்ணிற ஒளி தோன்றும். இதனைச் சீவன் உணருவான். இங்குப் பிராணாயாமத்தின் தேவை உணர்த்தப்படுகின்றது. இப்பயிற்சியால் கோடாயுதமாகிய மழு நிமிர்ந்து சீவனின் உடலில் ஒளி ஏற்படும் என்பது புலப்படுகின்றது; மழுவால் காலைவெட்டுவது என்பது 12 அங்குலம் வீணாகும் பிராணக் காற்றை, எட்டு அங்குலமாக, நான்கு அங்குலமாகக் குறைத்து வெட்டி மூச்சை உட்கதியாய் ஓட்டப் பழகியவர்களுக்கு உலகில் தீய சக்திகளினால் அழிவு ஏற்படாது, என்றும் நிர்விகற்ப சமாதியில் ஆழ்ந்திருப்பர். உலக பந்தங்களில் இவர்கள் ஈடுபடமாட்டார்கள்.

**வடகோடு உயரத் தென்கோடு தாழ்தல்**

உலகம் நிலை குலைந்தபோது சிவன் ஆணையிட, அகத்தியன் தென்பொதியமலை சென்று சமப்படுத்தினான் என்ற புராணச்செய்தியைக் கூறும் திருமந்திரத்தில் (337) பின்வரும் தத்துவக் கருத்து பொதிந்துள்ளது. சுவாசத்தை இடகலை, பிங்கலை வழி செலுத்தி அழியாமல் சுழுமுனை வழியாக மூலாதாரத்தில் உள்ள குண்டலினி மேலேசென்று புருவநடுவில் சேர்ந்தால் சீவன் விருப்புவெறுப்பற்றுச் சமன்பட்டு இறைவனை அடையும். சீவர்கள் சுழுமுனை மார்க்கமாய் மேல்நோக்கிப் புருவநடுவில் பொருந்தி இருக்க வேண்டும்.

இதனோடு தொடர்புடைய மற்றொரு பாடலில் (338) வரும் தத்துவக் கருத்து இப்படி அமைகின்றது. அகத்தியர் உருவத்தால் சிறியவர். அதுபோல் சிறிய அளவுள்ள சுழுமுனை வழியாகக் குண்டலினி மேலேற மாயையில் உள்ள ஆன்மா உயர் நிலையில் உள்ள பதியை அடைகின்றது. மாயை குண்டலினி யோகத்தால் பசுவை விட்டு விலகப் பதி, பசு ஆகியவற்றிடையே இருந்த உயர்வும் தாழ்வும் விலகுகின்றது. இரண்டும் சமமாகின்றது. அது தானாகின்றது. சீவனும் சிவமும் ஒன்றாகி நிற்கும் சம-ஆதி - சமாதி.

**முருகன் தோற்றம்**

சீவன் அல்லது ஆன்மா நின்மலாவத்தையில் சிவனாவதே சிவகுமாரத் தத்துவம். சீவன் நின்மலாவத்தையில் பொருந்திப் புருவநடுவில் தோன்றும் ஒளியும் பெருகிப் பேரொளியாகும். அதுபோது சீவன் சிவக்குமாரன் ஆகின்றது. இந்தத் தத்துவத்தை உள்ளடக்கியே திருமந்திரம் முருகன் தோற்றத்தைக் குறிக்கின்றது (1026, 2306).

**சிவநடனம்**

சீவனுக்கு, சிவசந்நிதானமாகிய கருவறை சகஸ்ர தளமாகும். இங்கு ஆறு ஆதாரங்களைக் கடந்தநிலையில் அல்லது ஒன்றுபட்ட நிலையில் ஆறுமுகமாகத் தோன்றும். அதனால் சீவனை ஆறுமுகம் என்று கொள்ளப்பட்டது.

> **காளியோ டாடிக் கனகா சலத்தாடிக்**
> **கூளியோ டாடிக் குவலயத் தேயாடி**
> **நீடிய நீர்தீகால் நீள்வா னிடையாடி**
> **நாளுற அம்பலத் தேயாடும் நாதனே** (திரு.2733)

என்று பாடுகின்றது. இதில் காளி என்பது வாயுவைச் செலுத்தும் சக்தி. சீவர்களின் காமம் நீங்க, காளியுடன் ஆடுவன் சிவன்.

கனகாசலம் என்பது பொன்மலையைக் குறிக்கின்றது. துவாதசாந்தம் எனும் பெரும்வெளியில் பொன்னிற ஒளியில் இறைவன் வெளிப்படுவதையே இது குறிக்கின்றது. கூளியோடு என்பது பேய்களுடன் ஆடும் நடனத்தைக் குறிக்கின்றது. அஞ்ஞானமே கூளி அல்லது பேய். இது நீங்கச் சிவன் ஆடும் நடனமாகும். குவலயத்தே ஆடி என்பது உலக இயக்கத்துக்காக ஐம்பூதங்களிலும் சிவன் ஆடுவதையும், இறுதியில் அம்பலம் எனும் ஆகாயத்திலும் அதன் உருவகமாக உள்ள சிதம்பரத்திலும் சிவன் ஆடுவதையும் குறிக்கின்றது.

**முயலகன் அழிவு**

**ஆகாச மாமுட லங்கார் முயலகன்** (திரு.2774)

என்னும் திருமந்திரம் முயலகன் அழிவைக் குறிக்கின்றது. ஆகாயத்தின் கருமையே முயலகன் எனும் உருவகம். இதுவே சீவர்களிடம் இருளைப் பெருக்கும் மும்மலம். இறைவன் ஆகாயமாகிய ஞானவெளியில் முயலகன் அழியுமாறு ஆடுபவன் என்பது உட்கருத்து. கார் முயலகன் - சீவர்களிடம் இருளைப் பெருக்கும் மும்மலமான கார் இருள் தூலதேசத்தில் வலது காலை ஊன்றி இடதுகாலைத் தூக்கியபடி நின்று வலதுகாலின்கீழ் மும்மல அழிவான முயலகன் அழுந்தியிருப்பது தத்துவமாகும். அம்பலம் என்பது அகிலசராசரம் ஆகும்.

**திருப்பாற்கடைதல்**

தேவர்கள் கடல் கடைந்தபோது சிவன் நஞ்சை உண்டான். குரு உரைத்த தவவழி நின்றால் அவன் ஞானத்தைத் தருவான். எனவே அவன் வழிநின்று அவனை அடைதல் வேண்டும் என்கின்றது திருமந்திரம் (2815). இப்பாடல் உணர்த்தும் தத்துவக் கருத்தானது பின்வருமாறு அமைகின்றது.

அமுதுண்ணும் செயல், ஒளியில் நிலைபெற்று நிற்பது. சாதகனுக்கு உரிய தவநெறி விந்தினை இழக்காமல் இருப்பது. விந்து அமுதாக மாறிச் சகஸ்ரதளத்தில் இருந்து வடிய யோகியர் கேசரியோகத்தால் நாவை மடித்து உண்டு ஒளியுடல் பெறுவர். இறையோடு ஒன்றுவர். இதையே லம்பிகா யோகம் என்பர் ஞானியர்கள். தவளையும், தேரையும் இவ்யோகத்தைச் செய்துகொண்டு நீண்டகாலம் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கின்றன.

**தேவர் குறித்தவை**

விண்ணுலகில் உள்ள தேவர்களுக்குத் தூலஉடல் இல்லை. அவர்கள் ஒளிமயமான சூக்கும உடல் உடையவர்கள். திருமந்திரம்

தேவர்களைப் பல பெயர்களில் சுட்டிச் செல்கின்றது. தெய்வம், தேவர், வானவர், அமரர், உம்பர், அண்டர், வித்யாதரர், இமயவர், விண்ணவர் என்று இந்நூல் தேவர்களை வகைப்படுத்துகின்றது.

## தெய்வம்

**ஒன்றே குலம் ஒருவனே தேவன்** என்னும் கோட்பாடு உடையவர் திருமூலர். இவர் பெருந்தெய்வமாகச் சிவனை ஏற்றுக் கொள்கின்றார். உடலில் உயிர் பொருந்தி உடலை இயக்குதல்போல உலகை இயக்குபவன் எனச் சிவனின் பெருமையைக் கூறுகின்றார். உலகங்கள் பலவற்றை உடலாக உடையவன் சிவன். அவனே உலகிற்கு உயிர். அனைத்து உலகிற்கும் ஒரே தெய்வம். இதனை,

**ஒன்று கண்டீர் உலகுக்கொரு தெய்வமும்** (திரு.1822)

என்று திருமூலர் கூறுகின்றார். மேலும் சிவன் பிறப்பு, இறப்பு அற்றவன். சுயம்பு மகாதேவன், அமலன். அவன் தேவர்களின் தெய்வமாகவும் இருப்பவன் என்றும் கூறுகின்றார் (பா.5).

## தேவர்களது தோற்றமும் எண்ணிக்கையும்

பராபரனால் படைக்கப்பட்டவர்கள் தேவர்கள். சத்தியின் மக்கள். தக்கன் வேள்வியை அழிக்கத் தோன்றிய வீரபத்திரனும் ஒரு தேவனே! ஆகையால் திருமூலர், படைத்துடை யான்பல **தேவரை முன்னே** (446) என்கின்றார். இவர்கள் அளவற்ற எண்ணிக்கையினர் என்பதைத் திருமூலர், ஆதி படைத்தான் **எண்ணிலி தேவரை** (110) என்று குறிப்பிடுகின்றார்.

## தேவர் வகைகள்

தானவர் - நிருதி முதலிய அட்டதிக்குப் பாலகர்கள்; சட்டர் - பைரவர்கள் எண்மர்; சதிரர் இருவர்கள், நந்தி முதலிய சிவகணங்கள் எண்மர் (988) என்னும் தேவர்கள் வகை பற்றிய குறிப்பும் திருமந்திரத்தில் காணப்படுகின்றது.

தேவருள், இந்திரன், தீ, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், வடதிசையில் உள்ள ஈசன் ஆகிய எண்மர் (2527) சிறப்பானவர்கள். இவர்களையும், தேவதைகள் எண்மரையும் (2531) திருமந்திரம் கூறுகின்றது.

## தேவர்களின் இருப்பிடம்

அண்டத்திலும், அதற்கு மேலும், இப்புவிக்குள்ளும் உள்ள தேவர்கள் இறைவனை வணங்கி அருள்கதி பெறுவர் (2777) என்கின்றது திருமந்திரம்.

**மனிதர் தேவராதல்**

திருமந்திரம் மனிதர்களாகப் பிறந்தவர்களும் தேவர்களாக மாறமுடியும் என்கின்றது; யோகசாதனையும், தவமும் இன்றிச் சிவன் எம்பெருமான் என்று பேசுபவர்கள் கூடத் தேவராவார் என்கின்றது.

**பெருமான் இவனென்று பேசி இருக்கும்**
**திருமான் இடர்பின்னைத் தேவரும் ஆவர்** (திரு.303)

**தேவர் வழிபாடு**

தேவர் இறைவனை யாகம் வளர்த்து வழிபடுவர்; மந்திரம் சொல்லியும் வழிபடுவர்; அவனை உணர்ந்தும் இருப்பர். இறைவன் வீற்றிருந்தான். அப்போது தேவர்களும் உமையும் சிவனை வழிபட்டனர். மனிதர்களின் சிவவழிபாட்டிலும் தேவர்கள் கலந்து கொண்டனர்; அர்ச்சனையோடு அஞ்சலி செய்தனர். இவை தேவர் வழிபாடு குறித்த திருமந்திரச் செய்திகளாக உள்ளன.

**தேவர் செயல்கள்**

மனிதன்தன் செயல்களால் சிறந்து, வானுலகத் தேவராக வாழும் தகுதியை அவனது ஆன்மா பெற்றால் அவன் சிவனால் ஆட்கொள்ளப் பெறுவான். திருமந்திரத்தில் தேவரோடு கூடி அவர்களால் போற்றப்படும் சிவன், சூரியசந்திர அக்கினிக் கலைகளாக நிற்பான் என்பதும், தேவனாக உள்ள ஆன்மாவை ஆட்கொள்வான் என்பதும், பின்னர் வீடளிப்பான் என்பதும் தெரியவருகின்றது (2794).

வானவரின் ஊனப் பிறவியைச் சிவன் ஒழிப்பான். அதனால் அவர்கள் பேரின்பம் பெறுவர். வானவர் வாசியோகம் பயின்றனர். இவர்கள் ஒளியுடல் பெற்றவர்கள்; நினைத்தால் தூலவடிவம் பெறுவர். இவர்கள் சிவனின் ஆணைக்குக் கட்டுப்பட்டவர்கள் என்று திருமந்திரம் தேவர்கள் பற்றிப் பலபடக் கூறுகின்றது.

**புலனடக்கம்**

தேவர்களுக்குப் புலனடக்கம் இன்றியமையாதது. உடலில் கிளர்ச்சியூட்டும் புலன்களை அடக்கியவர்களே அமரர் என்பது திருமந்திரம் உணர்த்தும் கருத்து. அமரர் சிந்தையை அடக்கும் ஆற்றல் உடையவர். சிவனையும் உமையம்மையும் வணங்குவர். ஊழி தோறூழி அமரர்க்குத் தலைவனாகச் சிவன் விளங்குவான். இறைவன் அருளிய திவ்யாகமத்தை உணர்ந்து கொள்ளுதல் அமரர்க்கும் அரிதாகும். சிவதருமம் சொல்லும்போது அமரர்கள் இறைவனை வணங்குவர். சிவாகமங்களை உணராத தேவர்க்கு

வீடுபேறு கிட்டாது; ஆன்மா கருவி கரணங்களை விட்டு நீங்கி அதீதத்தில் பொருந்தியிருந்த சுகானுபவம், சுத்தநிலையாகும். தேவர்களுக்குச் சிற்சில வேளைகளில் மனச்சலனம் ஏற்பட்டுப் பூமியில் பிறப்பெய்தும்நிலை வந்துவிடுகின்றது. அவர்களே நாம் வணங்கும் சுந்தரர்பெருமான், இராமன், கிருஷ்ணன் போன்றவர் ஆவர். உணர்ந்துகொண்ட மனிதருக்குக் கிட்டும். இறைவன் திருமூலருக்கு அமரரும் அறியா உலகம் அளித்தான்.

இறைவனைச் சிவசிவ என்று சொல்லி வழிபடுபவர்களுக்குத் தேவர் கூட்டம் ஏவல் செய்யும். ஆன்மாக்களிடம் படிந்துள்ள தத்துவங்களை நீக்கவும் தேவர்கள் உதவுவர்.

இவ்வாறு புலனடக்குதல், சிந்தையை ஒருமைப்படுத்தல், ஆகமநூல்களைப் படித்து உணர்தல், சிவநாமம் சொல்லி வழிபடுதல், ஆன்ம தத்துவங்களை நீக்கல் என்னுமிவற்றில் தேர்ந்தவர்கள் அமரர் ஆவர் என்கின்றது திருமந்திரம்.

**வீடுபேறு**

சிவன் தன்மையை ஆய்ந்து, அவன் பாதம் தொழ, இவ்வுலக வாழ்வைத் தெளியக் கண்டார்; அவ்வுலக வாழ்வை இனிது கண்டார் திருமூலர். தேவரையும் மனிதனையும் படைப்பவன் சிவன். யோகசாதனையால் தேவலோகம் போன்றவர்களுக்கு அது பூலோகம் போலவே இருக்கும். மனித உடலில் பல நூறு ஆண்டுகள் வாழ்ந்து பின்சிவபேறு பெற்றபோது தேவர்களாலும் வாழ்த்தப் பெற்றார் திருமூலர். இதனை,

இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே (திரு.80)

எனும் பாடல் தெளிவுபடுத்துகின்றது.

திருமூலரின் திருமந்திரம் தேவர்கள் பற்றிக் கூறும்போது பின்வரும் செய்திகளைத் தெளிவுபடுத்துகின்றது.

1. தேவர்களுக்குத் தெய்வம் சிவனே
2. பராபரத்தால் படைக்கப் பெற்றவர்கள் தேவர்கள்
3. எண்ணிக்கையில் அளவிட முடியாதவர்கள்
4. வானுலகில் என்றும் வாழ்பவர்கள்
5. ஒளியுடல் பெற்றவர்கள், நினைத்தால் தூல உடல் எடுக்கும் ஆற்றல் உடையவர்கள்

6. இறைவனை வழிபட்டு உய்வடைவர்; சிலர் கயவராய்ப் புலனடக்கமின்றி இருத்தலும் உண்டு
7. இறைச்சிந்தையோடு இருப்பவர் வீடுபேறடைவர்
8. சிவனை வாழ்த்தும்போது வீடுபேறடைந்த ஞானிகளையும் தேவர்கள் வாழ்த்துவர்
9. சிவன் படைத்த ஆகமங்களை உணராத தேவர்களும் உண்டு. ஆதிசங்கரருக்கு இறைவனே புலையனாக வந்து பரஞானத்தை விளக்கினார். தீண்டாமை, தீட்டு, உணர்த்தப்பட்டது. ஞானிகளுக்கும் சில நேரங்களில் பேதமை ஏற்படுவதை இது எடுத்துக் காட்டுகின்றது.
10. மனிதர் செய்யும் யாகங்களை நடத்திக் கொடுக்கத் தேவர்கள் மண்ணுலகிற்கு வருவர் (சான்று. தக்கயாகம்)
11. மனிதர்கள் சிவனை வழிபடும்போது அதில் தேவர்களும் விரும்பி வந்து சூட்சுமமாக கலந்து கொள்வர்.
12. மனிதர்களுக்கு நன்மை செய்பவர்கள் தேவர்கள்; அவர்களால் வழிபாடு செய்யப்படுபவர்களாகவும் தேவர்கள் விளங்குகின்றனர். இவர்களே சீவன் முத்தர்கள் முனிவர்கள் ஆவார்.

### அசுரர் குறித்தவை

அசுரர்கள் பராபரத்தின் கட்டளையின் பொருட்டே படைக்கப் பெற்றனர்; தூலஉடல் உடையவர்கள்; மனிதர்களை விடப் பன்மடங்கு வலிமை மிக்கவர்கள் என்று கூறும் திருமந்திரத்தில், மக்களின் அறியாமையை நீக்க, அசுரர் செயல்களைச் சான்றாகக் காட்டி விளக்கும் புராணச் செய்திகள் பல உள்ளன.

### அசுரர் செயல்கள்

தேவர், அசுரர், மனிதர் ஆகிய மூவரும் சிவனை வழிபடுவர்; தவம் செய்வர். அமரரும் அசுரரும் உய்வடையும் பொருட்டு இறைவன் உலகினைப் படைத்தான். அசுரர் தவம் செய்யும்போது எலும்பும் இறைச்சியும் ஆகுதிப் பொருட்களாகும். அசுரர் என்போர் இவ்வுலகில் வாழ்பவர்கள். பிறருக்கு இன்னல் செய்பவர்கள்; அகந்தை மிக்கவர்கள்; புலை, கொலைகளில் ஈடுபடுவோர் தவம் செய்யும் தேவர்களோடு போர் செய்பவர்கள்; வீடுபேற்றினை அறிய முடியாதவர்கள் என்பன போன்ற இயல்புடையவர்கள் என்பதைத் திருமந்திரத்தின்வழி அறியமுடிகின்றது.

### புராணக் கருத்துகளின்வழி தெரியவருவன

1. மனிதர், அசுரர், தேவர் ஆகியோர் மும்மலங்களில் சிக்கி இருவினைகளுக்கு உட்படுவர், மூன்றும் மனிதனுக்குள்ளேயே

ஒடுங்கிக் கிடக்கின்றது. இவை சமயத்திற்கு ஏற்ப செயல்படுகின்றன.

2. மூவரும் இறைவனை வணங்கி, தவம்செய்து, வரமும் வீடுபேறும் பெறக்கூடியவர்கள்.

3. இவர்கள் அகந்தையினால் தம்முள்ளே போரிட்டுக் கொள்வர்.

4. ஆணவத்தால் தேவருடன் போரிடும் அசுரர் சிலபோது வெற்றியும் பெறுவர்.

5. அசுரர் தம்ஆற்றலில் பெருமிதம் கொள்வர்; இறுமாப்புடன் முனிவர் முதலான மனிதர்களை எதிர்த்துப் போர் செய்வார்கள்; சபிப்பார்கள். அதற்காக மீண்டும் தவத்தில் ஆழ்வார்கள்.

6. அச்சம், போற்றுதல் காரணமாய் மனிதர் தேவர்களுடன் போரிடுவது இல்லை. இவர்கள் தேவர்களை அருளுக்காகவும், சிவனிலை அடையவும் வேண்டி நிற்கின்றனர்.

7. மூவருடைய மும்மலங்களையும் இறைவனே நீக்கி அருளுவான்.

8. இறைவன் தன்பிரதிநிதியாகவே தேவரைப் படைப்பான்; அவர்களே இப்பிரபஞ்ச முழுமைக்கும் ஞானாசிரியராக விளங்கி வருகின்றனர்.

9. அசுரர், மனிதர் வழிபாடுகளில் தேவர்களும் கலந்து கொள்வர்.

## முடிவுரை

மனிதர்களுக்கு இடையே நடக்கும் நன்மை தீமைகளை இயக்குவது தேவஅசுர சக்திகளே ஆகும். திருமூலர் ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்றுதான் கூறியுள்ளார். எனவே மனிதமனத்தில் ஏற்படும் சலனங்களை நீக்கவும், மனத்தை ஒருநிலைப்படுத்தவுமே புராணங்கள் மேற்கூறியவை போன்ற செய்திகளைத் தருகின்றன. இதை உணர்ந்து கொள்ள வேண்டிய கடப்பாடு நமக்குள்ளது. திருமந்திரத்தின் வாயிலாக அறியக்கூடிய செய்திகளைப் புரிந்து கொள்ளுதல் மேற்கூறிய நிலையை அடையப் பெரிதும் உதவும்.

திருமந்திரம், இத்தகைய உண்மைகளைப் புராணச் செய்திகளின் சாரமாக அறிவிக்கின்றது. இங்ஙனம் புராணக் கதைகளின் வழியாக மக்கள் வாழ்வுக்குப் பயன்தரும் பல தொன்மச்செய்திகள் வெளிப்படுத்தும் அரிய உண்மைகள் இப்பகுதியில் எடுத்துரைக்கப்பட்டது. அதோடன்றிச் சிவசக்தி உருவ வழிபாடே தத்துவ நிலையில் செயல்படுகின்றது. புராணங்கள் அதற்கு யுகயுகமாய் துணைநின்று செயல் படுத்துகின்றது. இதையே திருமூலர் நமக்குத் தெரிவிக்கின்றார்.

# 9. ஆன்மிகவாழ்வு

## முன்னுரை

விவேகானந்தர் இந்தியாவிற்கு ஆன்மிகக் கல்வி வேண்டும் என்றார். அவர் விரும்பிய ஆன்மிகக் கல்வியை வழங்குகின்ற நூலாகத் திருமந்திரம் இருக்கின்றது. திருமந்திரம் கூறும் இல்லறவாழ்வு, துறவுவாழ்வு இரண்டுமே ஆன்மிகநெறியின்பாற்பட்டது. இதனை எடுத்துரைப்பதாக இப்பகுதி அமைகின்றது.

## சமயம்

சமயங்கள் தமிழை வளர்த்திருக்கின்றன. ஆனால் தமிழ், தமிழர் சமயத்தை மட்டுமல்லாமல் வடவர் சமயத்தையும் சேர்த்தே வளர்த்துள்ளது. தொல்காப்பியத்தில் மதம், சமயம் எனும் சொற்கள் இல்லை. இதன்வழி பழந்தமிழகம் மதங்களுக்கு அப்பாற்பட்டதாக, சமயச் சார்பற்றதாக விளங்கியமை தெரிகின்றது. எனவே தமிழர்கள் எல்லாம் வல்ல ஒரு முழுமுதற் கடவுளை வணங்கிக் கொண்டு வாழ்ந்து வந்திருக்கின்றனர். வடநாட்டுப் பார்ப்பனரைத் தொடர்ந்து சமணர், பௌத்தர் தமிழகம் வந்தபோதுதான் மதங்கள் தோன்றியுள்ளன.

### *சமணம்*

24 தீர்தங்கர்கள் சமணம் தோன்றுவதற்குக் காரணமானவர்கள் என்று கூறப்படுகின்றது. சமணத்தைப் புத்தாக்கம் செய்ததில் மகாவீரரின் பங்கு பெரிதானதாகும். இம்மதம் பிறவிப் பெருங்கடலை நீந்தும் ஒளிவழியைக் காட்டுகின்றது. நேரிய நம்பிக்கை, நேரிய அறிவு, நேரிய நடத்தை போன்றவற்றின்வழி மோட்சம் (ஆன்மவிடுதலை) அடைய முடியும், அதன்பிறகு எத்தகைய வாழ்வும் தொடர்வதில்லை என்று கூறுகின்றது.

வடநாட்டில் தோன்றிய சமண, பௌத்த சமயங்கள் கி.பி.இரண்டில் தமிழகத்தில் பரவத் தொடங்கியது. சமணரும் பௌத்தரும் காவிரிப்பூம்பட்டினம், மதுரை ஆகிய இடங்களில் தங்கிப் பரப்பினர். கி.பி.3இல் பாண்டிய நாட்டை ஆண்ட களப்பிரர் ஆதரவால் சமணர் பலர் பாண்டிய நாட்டில் புகுந்தனர்.

கி.பி. 7இல் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட மகேந்திரவர்மன் சார்பினால் தொண்டைநாட்டிலும், சோழநாட்டிலும்

சமணசமயம் மேலோங்கியது. இவர்களுக்கு வணிகர்களும் மன்னர்களும் மதிப்பு கொடுத்தனர்; பொருளுதவி செய்தனர். கி.பி.5-7 வரை பொருளாதார அடிப்படையில் சமணம் வலிமை பெற்றிருந்தது.

*பௌத்தம்*

சமணம், பௌத்தம் ஆகியவை கி.மு. 6 முதல் கி.பி.7வரை செல்வாக்குடன் இருந்தன. வணிகர் ஆதரவு பெறாதது போன்ற காரணங்களால் பல்லவர் கால முற்பகுதியிலேயே பௌத்தம் செல்வாக்கை இழக்கத் தொடங்கியது; கி.பி. 5 இல் இழந்தது என்றும் கூறுவர். புத்தமதத்தைத் தோற்றுவித்த கௌதம புத்தர் (கி.மு. 563 - கி.மு. 483). கடவுள் நிறைவானவர், தானே தன் உரிமையில் இருப்பது என்பதே இதன் பொருள், இப்பண்புடையவர் கடவுள் ஒருவரே என்கின்றார்.

இந்த உலகமும் அனைத்துப் பொருட்களும் காலந்தோறும் தோன்றி அழியக் கூடியவை என்று சூனியவாதம் பேசக்கூடிய இவர்களைக் கணபங்க வாதிகள் எனக் கூறுவர். திருஞானசம்பந்தர் இவர்களைக் கணிகை நோன்பர் எனக் குறிப்பிடுகின்றார். கடுமையான கட்டுப்பாடுகள், துறவிகள் மட்டுமே முக்தி அடைய முடியும் என்ற நிலை, மறுபிறப்பு நம்பிக்கை, கலைகளில் வெறுப்பு, பெண்கள் துறவறம் பூண்டாலும் அவர்கள் வீடுபேறு அடையமுடியாது என்ற நிலை, கடுமையான நோன்பு போன்றவை சமண பௌத்த செல்வாக்கு குறையக் காரணமாகின. வடக்கிலிருந்து வந்த பௌத்த சமண சமயத்தவராலும், அவர்களுக்குப் பின்வந்த குழுவினராலும்தான் பல்வேறு மதங்களும், மதப்போர்களும் இந்நாட்டில் உருவாகியுள்ளன.

மதம் என்பது கடவுள், உயிர், உலகம், ஒழுக்கம், அகிம்சை, நிலையான வாழ்வு, சமத்துவம் அறவாழ்வில் பயிற்சி மன உறுதி, வீடுபேறு என்பன பற்றி அறியச் செய்வதாகும். ஓர் இறைவனை மதித்து வழிபடுவது மதம். இறைவனை இம்மையிலேனும், மறுமையிலேனும் அடைவதற்கு அமைவது சமயம். தெய்வீக ஒழுக்க நிலையங்களே மதங்களைப் போதிக்கும் மடங்கள் எனப்படுகின்றன. மடாதிபதியாக விளங்கும் ஒவ்வொருவரும் இறைநிலை உணர்ந்தவராகவும் அறநெறி வாழ்க்கை உடையவராகவும் இருத்தல் வேண்டும்.

**மதக்கோட்பாடு**

நீண்ட காலமாக உலக மதங்கள் அனைத்திற்கும் இறைவழிபாடு, அறநெறி என்ற இரண்டு கோட்பாடுகளே

பொதுவானதாக இருந்துள்ளன. எனவே இவ்விரண்டையும் கடைப்பிடிப்பதே மதம் ஆகும். இந்து சமயம், கிறித்துவம், சீக்கியம், இசுலாம் போன்றவை இறைவனை மையமாகக் கொண்டுள்ளன. இவற்றில் பல இறைக்கோட்பாடு, ஓரிறைக் கோட்பாடு, இறைவன் உருவம் உள்ளவர், இல்லாதவர், கடந்தவர். உள்ளீடானவர், மனித வடிவானவர் போன்ற கருத்துகள் காணப்படுகின்றன. பௌத்த, சமண சமயங்களில் கடவுள் இல்லை என்ற கோட்பாடு காணப்படுகின்றது. மதத்தின் அடிப்படையான இறைநிலை என்பது உருவமற்றது. உருவமற்ற இவ்வாற்றல் அனைத்துப் பொருட்களிலும் இடங்களிலும் இருக்கின்றது. ஒரே ஆற்றலே பல பரிணாமங்களாகச் செயல்படுகின்றது. பொருட்களின் ஊடேநிரம்பி அதற்கு ஏற்றவாறு இயக்கச் சிறப்புகளையும் விளைவுகளையும் அளித்துக்கொண்டே இருக்கின்றது. இதனைக் காலம், வேகம், தூரம், பருமன் என்னும் நான்கு கணக்குகளுக்கு உட்படுத்தி வரையறை காணவேண்டியது அவசியம் என்கின்றார் வேதாத்திரி மகரிசி.

அனைத்து மதங்களுக்கும் உட்கருத்து மேற்குறிப்பிட்ட நான்கு விளக்கங்களும் ஒன்றுபட்ட பெருவலி என்பதாகும். இம்மத போதனைகள் பக்திவழி, ஞானவழி என்ற இரண்டின்வழி செயல்படுத்தப் பெறுகின்றன. மதம் என்பது மனிதனை நெறிப்படுத்தவேண்டும். மனிதனே தெய்வம் என்ற உண்மையை அறியச் சான்றோர்கள் கண்ட வழிமுறையே மதம் எனப்படுகின்றது. இது மனிதனுக்கான வாழ்க்கைச் சிக்கல்களைத் தீர்த்து வைப்பதாக அமையவேண்டும்.தருமத்தையும், நீதிநேர்மையையும், ஒழுக்கத்தையும் கற்பிக்கவேண்டும்.

### மதங்களின் தோற்றம்

வாழ்க்கை ஒழுக்கங்களைத் தொகுத்தவர்களின் பெயர்களைக் கொண்டுதான் மதங்களின் பெயர்கள் வழங்கப் பெறுகின்றன. எனவே அனைத்து மதங்களும் கூறுவது ஒன்றுதான். அந்தந்தக் காலத்திலும் இடத்திலும் தோன்றி வளர்ந்த பெரியோர்கள் மனிதனுக்கேற்ற வாழ்க்கைநெறிகளை அருளினர். உலகில் தோன்றிய மதங்களில் இறைவழிபாடு என்ற முறையில் இயற்கையை மதித்து வாழும் பண்பாடு தோன்றி வளர்ந்துள்ளது. அத்துடன் தன்னோடு உலகில் பிறந்து வாழும் அனைவரோடும் ஒத்தும் உதவியும் வாழும் அறநெறிகள் முக்கியமான போதனைகளாக உள்ளன.

காலத்தாலும், இடத்தாலும், மொழியாலும் மதபோதனை களிலோ, சாதனைகளிலோ சிலசில மாற்றங்கள், வேறுபாடுகள் இருந்துகொண்டுதான் இருக்கின்றன. இருப்பினும், மதங்கள்

அனைத்திலும் இறைவழிபாடு, அறநெறி என்ற ஒற்றுமையைக் காணமுடிகின்றது. இறையுணர்வின் முற்பகுதி பக்திவழியாகவும் பிற்பகுதி ஞானவழியாகவும் உள்ளது. அறவழிபாடு என்ற உயிர் வழிபாட்டில் **ஒழுக்கம்,கடமை, ஈகை** என்ற மூன்றும் உள்ளது. இறைவழிபாட்டில் **பக்தி, விளக்கம், முழுமைப்பேறு** என்ற மூன்றும் உள்ளது.

துன்பம், சிக்கல், தடுமாற்றம் போன்றவற்றில் இருந்து காத்துக்கொள்ள ஆதிமனிதன் வழி தேடினான். இவ்வழி முறையே பின்னர் சில பெரியோர்களால் மதமாக உருப்பெற்றது. மக்களின் நீண்டகால அனுபவங்களைத் திரட்டி உருவாக்கிய கருத்துத் தொகுப்பும் செயல்விளக்கமும்தான் நாளடைவில் மதமாகத் தோற்றம் பெற்றுள்ளது. மேலும் பேரண்டத்தை அறிந்த மாமனிதன் அதனை விளக்குவதற்காக மேற்கொண்ட முயற்சியே மதம் ஆனது. மனிதன் கேட்ட கேள்விகள் பலவற்றிற்கும் ஞானியர் கொடுத்த விளக்கங்களால் மதமும் பெருகலாயிற்று. சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம், காணாபத்யம் என்று மதங்கள் பிரிவதற்கு மனிதனின் கேள்விகளும், ஞானியரின் விளக்கங்களும் காரணமாயின. பிறருக்கு அடிமையாகாமலும், பிறரை அடிமை கொள்ளாமலும் சுதந்திரவாழ்வின் இன்பத்தைத் துய்க்கவேண்டுமானால் மதங்களின் கருத்தை மதித்து வாழ வேண்டியது மனிதனுக்கு அவசியமாகின்றது.

மனித வாழ்வு இனிமையானது, மென்மையானது, வாழ்வில் இன்பத்தைக் காத்து மகிழ்ச்சியை அனுபவிக்கவேண்டும். இயற்கை நியதிகட்கும், சமுதாயக் கருத்துச் சூழ்நிலைக்கும் மதிப்பளிக்க வேண்டும். அதன்வழி பிறப்புரிமையையும், சுதந்திரத்தையும் ஒவ்வொருவரும் அனுபவிக்கவேண்டும். இந்தப் பெருநோக்கத்தோடு வாழ்வை நடத்த முற்காலத்தில் மதங்களின்வழி கட்டுப்பாடுகள் புகுத்தப்பட்டன. கல்வி அறிவு இல்லாத காரணத்தாலும், பக்தியினாலும் கட்டுப்பாடுகளை அப்படியே ஏற்றுக்கொண்டு வாழ்வில் கடைப்பிடித்தனர். ஆனால் இன்று அறிவு பரவி விட்டதால் கட்டுப்பாடுகள் மிகவும் குறைந்து விருப்பம்போல் செயல்புரியும் நிலையும் ஏற்பட்டுள்ளது.

வினைத் தூய்மையும், மனத்தூய்மையும் மனிதனுக்கு வேண்டும். இவை அவனுள் இருந்தால்தான் உயர்அன்பு, தொண்டு, ஈகை என்பவை அவனுள் உருவாகும். இதற்காகத்தான் வேதத்தையும், மதத்தையும் போதிக்கவல்ல பல உயர் நூல்கள் தோன்றின. **எனவே சமயம் என்பது வெறும் குறிகளும் அடையாளமும் அன்று.** மதம் என்பது அனைத்தையும் கடந்து நிற்பது. மனமாசை நீக்கிப் பண்புடன் ஒழுக்கமுடன் பிறருக்குப்

பயன்படுமாறு வாழ்வதே சமய வாழ்க்கையாகும். இது கடவுள், மனிதவாழ்வு என்ற இரண்டுடனும் தொடர்புபட்டுக் கடவுளை அடையும் நெறியை உணர்த்துவதாக உள்ளது.

### மதநல்லிணக்கம்

சுத்த சன்மார்க்கம் பற்றிப் பேசும் வள்ளலார் மனிதனுக்கு மதம் தேவையில்லை என்கின்றார். இருப்பினும் அனைத்துச் சமூக இயக்கங்களும் இயங்கக் காரணமாக இருப்பது மதம் என்ற தனிப்பட்ட சக்தியே ஆகும். மனிதர்களை ஒன்றாக இணைந்து வாழச் செய்யும் உணர்வைத் தோற்றுவிக்கின்ற சக்திகளுள் மகத்தான அரிய சக்தி மதம் ஆகும். இம்மதங்கள் அனைத்தும் ஒன்றாக உருக்கொள்ளும்போது அது மிகச்சக்திவாய்ந்த ஒன்றாக இருக்கும். மதம் என்பது மனிதர்களைப் பிரிப்பதற்காக ஏற்படுத்தப்படவில்லை. அவை மனிதரை வாழ வைக்கவும், ஒற்றுமைப்படுத்தவும்தான் ஏற்படுத்தப்பட்டுள்ளன. எனவே மதத்தாலும், சாதியாலும், இனத்தாலும் மக்களை ஒன்றுபடுத்துவதே மத நல்லிணக்கமாகும்.

### மதம்குறித்த வேதாத்திரிமகரிசியின் கருத்து

அறம், ஒழுக்கம், இணக்கநெறி இம்மூன்றும் இணைந்ததுதான் உலகப்பொது மதமாக விளங்க முடியும். சீர்பட்ட உழைப்பு, விழிப்புநிலை, உயிர்கொல்லாமை, பிறருக்கு உதவுதல், பிறருடைய உரிமையை, பொருட்களைப் பறிக்காதிருத்தல் என்பன போன்ற நெறிகளை மனிதன் பின்பற்றினால் மதங்களில் உள்ள குறைகள் நீங்கும். செயல் - விளைவு ஞானத்தைப் பண்பாட்டு முறையில் மதங்கள் அளித்தால் பண்பட்ட மக்கள் நன்கு வாழ்வார்கள், மனிதனுக்கு இனி ஒரு மதம் போதும், மதத்திற்கு அடிப்படையாகத் தெய்வநிலை ஒன்றுபோதும்; நமக்குள் சகோதர ஒற்றுமை வேண்டும். மொழி, சாதி, இனப்பாகுபாடுகளால் தோன்றியுள்ள வேறுபாடுகள் மறைய வேண்டும். அதனால் மதநல்லிணக்கம் அனைத்து மதங்களிலும் ஏற்படுத்தப்பட வேண்டும். அனைத்து மதங்களிலும் உண்மை இருக்கின்றது. இருப்பினும் இவை ஓர் உண்மையைத்தான் கூறுகின்றன என்ற தெளிவு ஏற்பட மதநல்லிணக்கம் தேவை.

வாழ்க்கையின் பல்வேறு நிலைக்கும், ஆன்மிக வளர்ச்சியின் பல்வேறு நிலைக்கும் ஏற்ப மனித நடத்தையை அமைத்துக் கொள்வதற்கு உதவியாய் அமைந்ததுதான் மதமாகும். மதத்தை ஒன்றாக இணைத்துவிட்டால் மத நல்லிணக்கம் பிறந்து விடும். பிறமதங்களைச் சகித்துக் கொள்வதும், அவற்றின் கருத்துகளை

ஏற்றுக் கொள்வதும், கருணை காட்டுவதும், அம்மதத்தினரோடு அன்பு பாராட்டி ஒன்றுபடுவதும் என்பதே மத நல்லிணக்கம் என்பதன் பொருளாகும். அடுத்தவர் மதத்தை மதிப்பதும் தன்னுடைய மதத்தைப் பற்றி நன்கு தெரிந்திருப்பதும் மனிதனுக்குத் தேவையான ஒன்றாகும். அப்படித் தெரிந்து இருந்தால்தான் அவன் ஒன்றுபட முடியும். இப்பிரபஞ்சம் ஒரே இறைவனின் தோற்றம் என உணர்ந்தால் மனிதருக்குள் சாதி மத வேறுபாடு தோன்றாது.

அனைத்து மதங்களும் அறிவு என்ற கடவுளைப் பின்பற்ற வேண்டும். உலகம் முழுவதும் ஒரே மொழிவழக்கு பின்பற்றப்பட வேண்டும். மக்களிடையே நிலவும் உறவுநிலை உண்மையாக இருக்க வேண்டும். வேற்றுமையில் ஒற்றுமை என்பது அனைவருக்கும் உரிய கோட்பாடு ஆக வேண்டும். தண்ணீரை வெவ்வேறு சொற்களால் குறிப்பிடுவது போலக் கடவுள் வெவ்வேறு சொற்களால் பெயரிட்டு அழைக்கப் படுகின்றார். பெயர் எதுவானாலும் சக்தி ஒன்றுதான்.

சொன்னால் மட்டும் நம்பாதே. சுயமாய் சிந்தித்தே தெளிவாய் இரு. சிந்தை மூலத்தையும், செயல் ஞாலத்தையும் நினைக்க வேண்டும். மூலத்தைப் பற்றிய முழுமையான அறிவு சிந்தையில் இல்லையேல் ஞாலத்தைப் பற்றிய ஞானம் கிடைத்தல் அரிது. எந்த ஒன்று அனைத்து இடத்திலும் இருக்கின்றதோ அதுதான் தெய்வம். தனிமனித மேம்பாடும் சமூக உறவும் மனவள அடிப்படையில் அமைந்தவை. ஒரே முகம், ஒரே மனம் கொண்ட மனிதன் மதத்தையும் ஒன்றே என்று எண்ண வேண்டும். அப்பொழுதுதான் சமூகம் சிறக்கும் நாட்டில் ஒற்றுமை தழைக்கும்.

சாதிமத வேறுபாட்டைக் களையக் குழந்தைகளை இளம்வயதுமுதல் சகோதரர்களாக மாற்ற முயல வேண்டும். எல்லா வேறுபாடுகளையும் ஒழித்துச் சமரச வாழ்விற்கு வழிகாட்டும் ஒரு சமுதாயத்தை ஏற்படுத்த வேண்டும். மனிதகுலம் முழுமைக்கும் ஆட்சி ஒன்று; மதம் ஒன்று; பொருளாதாரச் சமத்துவ நீதி ஒன்று. மனித உரிமைச் சாசனம் ஒன்று. இவையே போதுமானது. பொறாமை, போர், பகை, வஞ்சினம் போன்றவை நாளும் வளர்ந்து வருவதால் மதநல்லிணக்கம் ஏற்படுவதில் தடை உண்டாகின்றது. இப்படி மனிதன் வேறுபடுவதாலும் மதம் தலைதூக்குகின்றது; எப்போது உழைக்க விரும்பாமல் இருக்கின்றானோ அப்போது சாதி தலைதூக்குகின்றது.

எனவே மனிதன் சாதி, மத வேறுபாடு இல்லாமல் வாழ அன்பு, கருணை கொண்டு விளங்க வேண்டும். அதற்குப் போரில்லாச் சமுதாயத்தை வேதாத்திரி மகரிசி விரும்புகின்றார்; வாழ்க

**வளமுடன்** என்று வாழ்த்திட நாம் பழகிக்கொண்டால் உலகில் சமாதானம்தானே வந்துவிடும், மதங்கள் ஒன்றாகிவிட்டால் மக்களிடையே மத நல்லிணக்கம் தோன்றிவிடும் என்கின்றார். எண்ணம் ஆராய்தல், ஆசை சீரமைத்தல், சினம் தவிர்த்தல், கவலையொழித்தல் என்ற சிந்தனைகளை நமதாக்கிக் கொண்டால் உலக மக்கள் அனைவருமே நண்பர்களாகிவிடுவர். தெய்வம், உயிர், அறிவு, சீவகாந்தம் என்ற நான்கு மறைபொருட்களை மனிதன் உணரும்போது மதநல்லிணக்கம் ஏற்பட்டுவிடும். உலக அமைதியும் நீதியும் தழைப்பதற்கு அனைத்து மதங்களின் ஒத்துழைப்பும் வேண்டும்.

இறைநிலை, தெய்வநிலை, மதக்கோட்பாடு, ஆலய வழிபாடு, சடங்குகள் எனப் பல நிலைகளில் மனித வாழ்வை ஊடுருவி இருந்த உணர்வுகளைக் கண்டறிந்து கோட்பாட்டை நல்லிணக்கத்தைக் கண்டுபிடித்துக் கூறியுள்ளார். மனம் ஓரே நிலையில் இயங்கினால்தான் மதநல்லிணக்கத்தில் ஈடுபடமுடியும்; தொடர்ந்து தியானம் செய்தால் மனம் ஓரே நிலையில் இருக்கும்; மனமும் செயலும் ஒருங்கே அமையப்பெறும்.

மனத்தூய்மை தவத்தினால் வரும். தவத்தினால் மனம் ஒருமுகப்படும். சதோதரத்துவ மனப்பான்மை வளரும்; நட்புறவு உண்டாகும். போரில்லா நல்லுலகம், பொருளாதாரத் துறையில் சமநீதி, நேர்மையான ஓர் உலக ஆட்சி, சீர்செய்த பண்பாடு, அனைவருக்கும் பொதுவான ஒரு மதம், உள்ளத்தின் அமைதியே உலக அமைதி, இலட்சிய வாழ்க்கை, கடமை, அன்பு, கருணை, அறம், கடமை அடக்கம், பிறருக்குக் கொடுத்து வாழ்தல், சமத்துவம் என்பன போன்ற பல நெறிகளை வேதாத்திரி கூறுகின்றார்.

மேலும் மதங்களில் கட்டுப்பாடுகள் கூடாது. அவரவர் விருப்பம்போலச் செயல்புரியும் தன்மை வேண்டும். மனித சமுதாயத்தை மதத்தால் பார்க்காது மனத்தால் பார்க்க வேண்டும். மதம் மனிதனுக்கு ஏற்படும் வாழ்க்கைச் சிக்கல்களைத் தீர்த்து வைப்பதாக அமைய வேண்டும் என்கின்றார். இருப்பினும் அவரது பொதுக்கருத்து ஒரேமதம் என்ற மதநல்லிணக்கக் கொள்கையாகும். இத்தகைய உயர் சமயநெறி வகுத்து உலகப் பொதுவாம் அருள்நெறி சமயத்தை இனங்காட்டியுள்ளார்.

**ஆதிசைவத் தோற்றம்**

மனிதன் தன் எண்ணத்தை நிறைவு செய்து கொள்ளப் பல்வேறு முயற்சிகளைச் செய்து வருகின்றான். அதில் ஒன்றுதான்

வழிபாடு. நாம் எண்ணிய இலக்கை அனுபவமிகச் செய்தலின் பொருட்டு நம்மை அழைத்துச் செல்லும் நெறியே வழிபாடாகும்.

மனிதன் தன்செயலால், அறிவால், ஒழுக்கத்தால், கட்டுப்பாட்டினால் தீர்க்கமுடியாத சில தொல்லைகளுக்கு ஆளானான். இதிலிருந்து மீள தேவதைகளைத் துணைகொண்டு சாதிக்க முயன்றதன் வெளிப்பாடே வழிபாடு. மனத்தைத் தன்வயமாக்கி உடல் நலமாக்கி, அறிவைத் தெளிவாக்கி, வாழ்க்கையைச் சிக்கலின்றி நடத்திச் செல்ல கூட்டுவழிபாடு உதவும் எனக் கண்டறிந்தனர். அது நடந்த இடம்தான் அம்பலம். அது ஆலயமாக வளர்ச்சி அடைந்தது. அதுவே ஆதிசைவத் தோற்றமாயிற்று.

ஆரியர்கள் வருகையால் தமிழர்கள் பலர் ஆரியர்களாகத் தீட்சை எடுத்துக்கொண்டனர். அவர்கள் ஆரிய முறையைப் பின்பற்றி வடமொழியில் நூல்களை எழுதினர். அவை ஆகமங்கள் உபாகமங்கள், சைவ சித்தாந்த சாத்திரங்கள் என்பவை ஆகும். இவை ஆதிசைவர்களின் ஆதார நூல்கள் ஆகும். இருப்பினும் அவை ஆகமங்கள் எனப்படவில்லை. ஆரிய திராவிட ஆதிசைவம் என்றே குறிப்பிடப்பட்டன. எனவே ஆரிய திராவிட ஆதிசைவம் என்பது ஆரியராக மாறிய தமிழர்களையும், அவர்கள் எழுதிய ஆகமங்களையும் குறித்தன. தமிழர்களுக்குப் பெண் கொடுத்த ஆரியர்களைப் பிற ஆரியர்கள் ஒதுக்கிவிட்டனர். விளக்கப்பட்ட ஆரியர்களும், தமிழர்களால் விளக்கப்பட்ட தொல்குடிப் பூசாரிகளும் தங்களுக்குள் மணம்செய்து கொள்ளும் முறையை ஏற்படுத்தினர் அவ்வாறு தோன்றிய கலப்பினமே பின்னர் ஆதிசைவம் என வழங்கப்பட்டது. இவர்கள் படைத்த நூல்கள் ஆகமங்கள் எனப்பட்டன. பெரிய புராணத்தில் வரும் சுந்தரர் ஆதி சைவத்தைச் சார்ந்தவர்.

**ஆலயத்தோற்றம்**

முதல்நிலையில் உருவம் இல்லாதபோது ஒருவர்மேல் பேய் பிடிப்பதுபோல ஆவியேரி அவர் வழியாக ஆவிபேசி அதன்வழி நன்மை, தீமை அறிந்து நலம் பெற்றனர். இரண்டாம் நிலையில் இறந்தோர்க்கு அஞ்சிப் பலியிட்டு வணங்கினர். மூன்றாம் நிலையில் வளம்பெறவும், மழை முதலியன பெறவும் வேண்டி வணங்கினர். நான்காம் நிலையில் கோயில்கள் தீர்ப்பு வழங்கும் நீதிமன்றங்களாகவும் செயல்பட்டன. ஐந்தாம் நிலையில் ஊருக்குப் பொதுவான செய்தி நிலையமாகவும், ஒருங்கிணைந்தப் படிப்படியான வளர்ச்சிக்குக் காரணமாகக் கோயில் அமைந்தன. ஆறாம் நிலையில்

திருவிழாக்கள் என்ற பெயரில் கலைநிகழ்ச்சிகள் மக்களை மகிழ்விக்க கோவில்களில் நடத்தப்பெற்றன; அத்துடன் அறம் வளர்க்கும் இடங்களாகவும் செயல்பட்டன. ஏழாம் நிலையில் ஒருங்கிணைந்த நிருவாக அமைப்பும் ஆலயத்தில் செயல்படத் தொடங்கியது. பின்னர் ஆன்மிகக் கோட்பாடுகள் முறையாகப் பதிவு செய்யப்பட்டு ஆகமங்கள் எனப் பெயர் சூட்டப்பட்டது. ஆகமங்கள் என்றால் சிவனிடம் இருந்து வந்தது என்பதே பொருளாகும்.

**இறைவன்**

அனைத்து மனிதர்களும் இயற்கையின் பரிணாமச் சிறப்பின் ஒரு கூறாகவே உள்ளன. ஆதியில் இயற்கையின் இறைவெளி நிலைதான் அறிவும் விரைவுமாக அனைத்துமாக இருந்தது. எந்தத் தோற்றத்தைத் தெய்வம் துதித்தாலும் அது அவன் அறிவின் வெளிப்பாடே ஆகும். எனவே யார் எந்த உருவில் எந்தக் கருத்தில் தெய்வமென்று வழிப்பட்டாலும் அவர் அறிவையே வழிபடுகின்றார். ஒன்றிலிருந்த பலவும் வெளிப்பட்டுள்ளன. பிரபஞ்சம் முழுமையும் பிரமத்தில் இருந்தே பரிணமித்துள்ளது. யார் கடவுளை வணங்கினாலும் தன்னுடைய எண்ணத்தையும் மனத்தையும் தான் வணங்குகின்றனர் என்கின்றார் வேதாத்திரி மகரிசி. அதாவது யார் எந்த வகையில் கடவுளை வணங்கினாலும், சிறிது நேரம் பொறுத்து என்ன நிற்கின்றது என்று பார்த்தால் அவருடைய மனம்தான் அந்த வடிவம் எடுக்கின்றது.

மனத்தைப் பக்குவப்படுத்திக் கொள்ளவும் நல்ல பழக்க வழக்கங்களைப் பின்பற்றவும் மனோதிடம், மனவலிவு கொள்ளவும் ஏதோ ஒருவழியில் இறைவனை உருவகப்படுத்திக்கொண்டு வணங்குகின்றோம். ஆனால் வணங்குவது மனத்தைத்தான். எனவே மனத்தின் சக்தியை உணரும்போது இறைசக்தி ஊடுருவி மனிதனிடத்திலே மனமாக ஆகின்றது. இந்த மனம் அமைதி அடைந்தால் உலக அமைதி என்பது உண்டாகிவிடும்.

**பன்னிரு திருமுறைகள்**

சம்பந்தர் முதலாகச் சேக்கிழார் உள்ளிட்ட இருபத்தெழுவர் (27) பாடிய பாடல்களே பன்னிரு திருமுறைகள் ஆகும். இவை சிவத்தை விளக்குகின்றன. அடியார்கள் இறைவனை வழிபட்டவிதம், சிவத்தொண்டின் மேன்மை, இறைவனின் அருட்செயல்கள், மானுடப்பிறவியின் நிலையாமை, ஐம்புலன் களால் வரும் இடர்ப்பாடுகள் போன்றன திருமுறைகள் வாயிலாக அறியப்படுகின்றன. திருப்பதிகம் என்பது தேவாரப் பாடல்களைக் குறித்தது.

திருநாவுக்கரசர் முதலில் சைவ சமயத்தில் இருந்து பின் சமணராகி இறையருளால் மீண்டும் சைவ சமயத்திற்கு வந்தார். பல்லவர் காலத்தில் தமிழ்மொழிக்கும் சிவநெறிக்கும் பெருந்தொண்டாற்றியவர்கள் சம்பந்தரும் அப்பரும் ஆவர். சிவ ஆகமங்கள் ஞானமார்க்கத்தை வற்புறுத்துகின்றன. அதுபோல், திருமுறைகளும் உலகு, உயிர், இறை, தடை நீக்கும் வழி, நீங்கினால் கிட்டும் பயன் போன்றவற்றை விளக்குகின்றது. பன்னிரண்டு திருமுறையும் ஓம் என்ற பிரணவத்துள் அடங்குகின்றது.

## பக்தி இலக்கியத்தின் வளர்ச்சி

அப்பரும் சம்பந்தரும் பக்தி நெறி நின்று வீடுபேற்றை அனைவரும் அடையலாம் என வலியுறுத்தினர். இசையுடன் பாடி இறைவனை அடையலாம் எனக் கருதினர். திருத்தலங்களுக்குச் சென்று இறைவன் புகழ்பாடி மக்களை ஈர்த்தனர். இறைவன்முன் அனைவரும் சமம் என்ற எண்ணத்தை ஏற்படுத்தினர். இந்து சமயக் கோட்பாடுகளை எளிய இனிய தமிழ்மொழியால் பாமரரும் புரிந்துகொள்ளும் வண்ணம் இசையோடு பாடி உணர்த்தினர். சமண பௌத்த சமயப் பெரியோர்களுடன் சொற்போர் நிகழ்த்தி அச்சமயங்களை வெளியேற்றப் பாடுபட்டனர். இறைவன் ஒருவனே என்ற எண்ணத்தை மக்களிடம் எடுத்துக் கூறினர். இதன்வழி பக்தி இலக்கியம் தொடர்ந்து வளர்ச்சியுற்றது.

## ஆறுவகை சமயம்

கௌமாரம், சாக்தம், பாசுபதம், மாவிரதம், காபாலிகம், வைரவம் என்பன அறுவகைச் சமயங்களாகும். பாசுபதமும் மாவிரதமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. காபாலிகமும் வைரவமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. அறுவகைச் சமயங்களைப் பற்றித் திருவாய்மொழியும் தேவாரமும் கூறுகின்றன. இத்தெய்வங்களான சிவன், சக்தி, திருமால், விநாயகர், முருகன், கதிரவன் ஆகியோரின் வழிபாட்டைக் குறிக்கின்றன.

இவை ஒரு காலத்தில் ஆறு சமயங்களுக்கும் பொதுவான கடவுளின் அருவுருவமாகிய சிவலிங்க வழிபாடாக விளங்கியது. ஒரு பெருஞ்சமயத்துள் ஆறு பகுதிகளாகவே ஆறு சமயங்களும் விளங்கின. வடநாட்டில் இருந்து பல சமயங்கள் தமிழகத்திற்கு வந்து கலந்தபின் அறுசமயங்கள் என்ற சொற்றொடர் பலமதத் தொகுப்புகளையும் குறிப்பதாயிற்று. சைவத்தின் செந்நெறிக்குக் கீழ்ப்பட்ட வாமம், வைரவம் முதலிய 12 சமயங்களுள் அகச்சமயம் - 6, அகப்புறச்சமயம் - 6 என இருவகையாகப் பகுக்கப்பெற்றன.

## ஆன்மிகம்

அனைத்து மதத்திற்கும் பொதுவானதே ஆன்மிகமாகும். வெவ்வேறு உருவங்களாக வேறுபட்டுத் தோன்றுகின்ற உயிரினங்களையும் அவற்றை அடக்கியுள்ள பிரபஞ்சத்தையும் ஒரே இறைவனின் தோற்றங்கள் என்று உணர்வதே ஆன்மிக அறிவு ஆகும். இத்தகைய இறைநிலையைத் தெளிவாக ஐயமறத் தெரிந்து உணர்தலே மெய்ஞ்ஞானம் ஆகும்.

### *வீடுபேறு*

கடவுள் என்பதன் உட்கருத்தை - சூட்சுமத்தைப் புரிந்து கொண்டவர் திருமூலர். அதனால்தான் அரியும் சிவனும் ஒன்றுதான். புலையனும் புரோகிதனும் ஒன்றுதான் என்கின்றார். நல்லதையே நினைப்பவர்கள் இறந்தும் இறவாப் புகழுடன் நிலைத்து வாழ்வர்; பிறப்பு அறுத்த நிலையை அடைவர். ஒளி உடலாக, சக்தி உடலாக அவர்கள் என்றென்றும் வாழ்ந்து கொண்டிருப்பர். இந்நிலையை அடைய வாழுங்காலத்து நல்லதை மட்டும் நினைத்து வாழவேண்டும் என்கின்றார். மனத்தில் இறைவனது திருவடிகளை நினைத்து, மனம் ஒன்றிப் பற்றிக் கொண்டால் வீடுபேற்றினை அடைய முடியும்.

இந்த இறைவன் அகத்தில்தான் இருக்கின்றான். ஒவ்வொரு மனிதனின் உள்ளத்திலும் இறைவன் நிறைந்து இருக்கின்றான். உங்கள் மனத்தை உற்றுநோக்கி, அங்குள்ள இறைவனை உறுதியாகப் பற்றிக் கொள்வதே உய்யும் வழியாகும். மனம் பக்குவப்பட்டு, பண்பட்டு சித்தம் என்ற நிலையை அடையும் போதுதான் உள் இருக்கும் ஒளியைக் கண்டு உணரமுடியும். ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பதை உணர்ந்த மனமே பக்குவப்பட்ட மனமாகும். நல்லதை நினைத்துக் கொண்டிருக்கும் மனமே பண்பட்ட மனமாகும். அனைவரும் இன்புற்று இருப்பதைக் கண்டு மகிழும் மனநிலையே பக்குவப்பட்ட மனமாகும். மனம் செம்மையாகிச் சித்தம் என்ற தெளிந்த நிலையை அடைந்தவர்களே சித்தர் ஆவர். இன்று உலகில் நிலவிவரும் சாதி, மதம், போட்டி, பொறாமை போன்ற பல சிக்கல்களுக்கான எளிய தீர்வை இந்த ஒரு பாடலில் கூறுகின்றார்.

வள்ளல் என்பவர் பிறரது துன்பம் கண்டு தாமாகவே உதவி செய்பவர்கள் ஆவர். எவ்விதப் பலனையும் எதிர்பாராது கொடுத்து உதவுபவர்கள். இதுபோன்ற நற்செயல்களால் உள்ளம் விரிவடைந்தால் மட்டுமே அவனைக் காண முடியும்.

### *புறவழிபாடு*

பைரவம், காளாமுகம், பாசுபதம், சௌரம், கௌமாரம், காணாபத்யம் என்ற இந்த ஆறு சமயங்களுமே புறவழிபாட்டை வற்புறுத்துகின்றன.

ஆயத்துள் நின்ற அறுசம யங்களும்
காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலா
மாயக் குழியில் விழுவர்மனை மக்கள்
பாசத்தில் உற்றுப் பதைக்கின்ற வாறே (திரு.1515)

எனும் இப்பாடல் புறவழிபாடுகளாலும் பந்தபாசங்கள் என்ற மாயவலைகளில் சிக்கிக் கிடப்பதாலும் இறைவனைக் காணமுடியாது என்கின்றது.

ஆறு சமயமும் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் அவன்அலன்
தேறுமின் தேறித் தெளிமின் தெளிந்தபின்
மாறுதல் இன்றி மனைபுக லாமே (திரு.1518)

என்ற இப்பாடல் இறையோடு இணைய, வீடுபேறு பெறத் தடையாக இருப்பது புறவழிபாட்டை முன்னிறுத்தும் சமயங்களே என்கின்றது.

*இறையை உணர்தல்*

ஆறு சமயங்களின் கோட்பாடுகளில் ஊறித் திளைத்தவர்கள்கூடக் கடவுளைக் கண்டிலர். இந்த ஆறு சமயங்களும் காட்டும் கடவுள் உண்மையான கடவுள் அல்ல. அவன் உருவம் இல்லாதவன்; உணரப்பட வேண்டியவன். இத்தெளிவு வந்துவிட்டால் வீடுபேற்றை அடைய முடியும். இந்த அறுசமயக் கோட்பாடுகளைத் தெளிவாகக் கற்க வேண்டும். பின் மனத்தில் அசை போட வேண்டும். எழும் வினாக்களுக்கு விடை தேட வேண்டும். ஞான மார்க்கத்தின் துணையுடன் ஆராய வேண்டும். அப்போது இந்தச் சமயங்கள் கூறும் கடவுள் உருவமாக இல்லை என்ற தெளிவு கிட்டும். தெளிவு வந்துவிட்டால் அகக்கண்கள் திறந்து கொள்ளும்; மனம் விரிவடையும். உள் இருக்கும் இறைவனை அதன் அகப்புறச் செயற்பாடுகளை, விந்தைகளை, பிரம்மாண்டத்தை உணர்ந்து கொள்ளும் திறன் தானே உருவாகும்.

இறைவன் அகத்து மட்டும்தான் இருக்கின்றானா இல்லை புறத்தும் இருக்கின்றானா என்ற ஐயத்தை,

உள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன் என்பவர்க்கு
உள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன் எம்இறை
உள்ளத்தும் இல்லை புறத்தில்லை என்பவர்க்கு
உள்ளத்தும் இல்லை புறத்தில்லை தானே (திரு.1517)

என்ற பாடல் போக்குகின்றது. இறைவன் உள்ளத்து உள்ளேயும், புறத்தேயும் உள்ளான் என்று நம்புகின்றவர்களுக்கு உள்ளும் புறமும்

உள்ளான். உள்ளும் புறமும் இல்லை என்பவர்களுக்கு உள்ளும் புறமும் இறைவன் இல்லை என்கின்றார் திருமூலர். அதனால் உண்டு, இல்லை என்பதில் அவர் வேறுபாடு காணவில்லை. ஏனென்றால் அன்பே சிவம் என்பதே அவர் உரைக்கும் கடவுள் தன்மையாகும். அன்பு எனும் பண்பும், பண்பட்ட உள்ளமும் இருப்பவர்கள் தம்உள்ளத்து உள்ள இறையை உணர்வார்கள்.

திருமூலர் ஆறு சமயங்கள் முக்தி நிலையை அடைய வழி காட்டுகின்றன என்கின்றார் (1543); முக்தி எனும் இலக்கை நோக்கியே வழிநடத்துகின்றன. வழிமுறைகள் வெவ்வேறாக இருந்தாலும் இலக்கு ஒன்றுதான்; இதைப் புரிந்துகொள்ளுங்கள்; இது நல்ல சமயம், இது தீய சமயம் என வாதிடாதீர்கள் என்கின்றார்.

சமயங்கள் கூறும் வழிமுறைகளையும், நெறிமுறை களையும் தவம் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார் திருமூலர். அனைத்துச் சமயங்களும் நல்வழிகளையும், நன்னெறிகளையுமே போதிக்கின்றன. எந்தச் சமயமும் தீயவழிகளைப் போதிப்பதில்லை என்கின்றார். குறிப்பாக எத்தவம் ஆகில்என் எங்கு பிறக்கில்என் (1153) எனக் கூறுவது சமுதாய மறுமலர்ச்சியின் உச்சகட்ட நிலையைக் காட்டுகின்றது. சமயக் காழ்ப்புணர்வு இருந்த காலத்தில் எந்தச் சமயத்தைச் சார்ந்து இருந்தால் என்ன? எங்குப் பிறந்திருந்தால் என்ன? என்று கூறுவது அவரது சமரச மனப்போக்கை வெளிப்படுத்து கின்றது. எம்மதமும் சம்மதே என்று கூறிய பெரியவர்களில் மிகமிக முக்கியமானவர் திருமூலர். அவர் அனைத்துச் சமயங்களும் ஒன்று! பிறப்பால் மனிதர் களிடையே ஏற்றத்தாழ்வுகள் இல்லை. இதை உணர்பவர்களுக்கு முக்தி கைகூடும் என்கின்றார் (1153). பண்பட்ட மனத்தால்தான் ஞானக் கண்களைத் திறக்க முடியும்; அகத்து உள்ள சோதியைக் காணமுடியும்.

### பரமாத்வையும் சீவாத்மாவையும் இணைக்கும் மந்திரம்

பரமனோடு இணையும் இறையனுபவம் கிடைக்கும்போது முதலில் பேச்சு, நின்று போகும். சீவாத்மாவின் அகந்தை அழிந்து போகும். பரமனோடு இணையும்போது மனமும் உடலும் அமைதியாகும். மனம் சிவமயமாகும். செவி ஓசை, மிடற்றோசை, நினைவோசை, நுண்ஓசை அனைத்தும் அடங்கி ஓம் என்ற பிரணவ மந்திரத்தின் ரீங்காரம் ஒலித்துக் கொண்டே இருக்கும். அந்த ஆனந்த நிலையில் பேச்சும் இறந்துபோகும். பரமன் அருள் இருந்தால் மட்டுமே அந்த இறையனுபவ நிலையை அடைய முடியும் (1593).

இந்தப் பேரானந்த நிலையில் திளைத்து மூழ்கும்போது சீவாத்மா பரமாத்மாவோடு இணைகின்றது. மனிதனும் கடவுளாகும்

நிலை இதுவேயாகும். இந்த நிலையை அடைந்த மனிதன் சிவமயமாகிச் சிவனோடு ஒன்றிவிடுகின்றான். தான்என்ற ஆணவமலம் இல்லாத ஒரு புதிய பிறவியாக உருவாகின்றான். நமது பிறவிக் கடன்களை முழுமையாகத் தீர்த்து முடிக்கப் பல பிறவிகள் எடுக்க வேண்டியது இருக்கும். ஆனால் இறையருள் இருக்கும்போது இந்தப் பிறவிக் கடன்கள் அனைத்தையும் இறைவன் ஒரு நொடியில் தனதாக்கிக் கொள்வான். தான்எனும் அகங்காரமலம் இறந்த நிலையில் இது நடைபெறும். இந்த நிலையை அடைந்தவர்களின் உடலில் இருந்து வெளிவரும் சக்தி அதிர்வுகளே அதை உலகுக்கு உணர்த்தி விடும். உலகம் அவரது காலடியில் வந்து வீழ்ந்து வணங்கும். அவரது புகழ் எட்டுத் திக்கும் பரவத் தொடங்கும். இந்த நிலையில் இறைவனது திருவடிகளை இறுகப் பற்றிக் கொண்டால் மட்டுமே முக்தி நிலையை அடைய முடியும். எனவே இறைவன் திருவடியை உள்ளத்துள் பதித்துக் கரையேற வேண்டும். (1579)

திருவடி ஞானம் சிவம்ஆக்கு விக்கும்
திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்
திருவடி ஞானம் சிறைமலம் மீட்கும்
திருவடி ஞானம் திண்சித்தி முத்தியே (திரு.1582)

இறைவனின் திருவடி சரணம் என்று பற்றிக்கொண்டு அதே சிந்தனையோடு தியானிப்பதே திருவடி ஞானமாகும். இது சிவமயமாக்கும்; வீடுபேறு அளிக்கும். இச்சைகளில் இருந்து மீட்கும். ஞானம் சித்தியாகும். இதுவே பாடலின் கருத்தாகும்.

நமது உடலில் இருவகையான சக்திகள் உள்ளன. நேர் சக்தி, எதிர் சக்தி. இதில் நேர்சக்தி சிவன். எதிர்சக்தி சக்தி இரண்டும் ஒன்றாக இணைவதே தந்திரயோகத்தின் உச்சக்கட்டம். இதனைத் திருமூலர்,

ஆதிப்பிரானும் .....
குழல்சேரும் என்உயிர்க் கூடும் குலைந்ததே
(திரு.1584)

என்ற அடிகளில் கூறுகின்றார்.

மூலாதாரச் சக்கரத்தின் அருகில் உறங்கிக் கிடப்பது குண்டலினி சக்தி. இது எதிர்சக்தி. நேர்சக்தி கபாலத்தின் உள்ளே உள்ளது. குண்டலினியை யோகப்பயிற்சியால் தட்டி எழுப்பி சுழுமுனை நாடிவழி மேலே கொண்டுவந்து நேர்சக்தியோடு இணைக்கும்போது எல்லையற்ற பேரானந்த நிலை ஏற்படும். இந்த நிலையை அடைந்த பின்னர் அந்த ஆன்மாவுக்கு உடல் எனும் கூடு அவசியமில்லை.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு அன்பின் ஐந்திணையாகிய அகவாழ்வு மேற்கொண்ட மக்கள் வழிபட்ட தெய்வங்கள் திருமால், முருகன், இந்திரன், வருணன், கொற்றவை, சூரியன், சந்திரர் ஆகியோராவார். இல்லறத்தான் உலக போகங்களைப் பெறுவதற்கு வழிபடும் முறைகளையும், அவ்வழிபாட்டுக்கு உரிய பொருள்களையும், வழிபாட்டால் ஏற்படும் பயன்களையும் திருமூலர் தெளிவாகக் கூறுகின்றார்.

ஆதியும் அந்தமுமில்லாத ஒப்பற்ற ஒரு பொருள் சிவன். சிவனுக்கு மேலானவள் பராசக்தி. இச்சக்தியே தாயாகவும், தாரமாகவும் இருந்து உலக இயக்கத்துக்காகச் சிவனோடு செயல்படுவாள். உலகம் சிவசக்தியின் விளையாட்டால் உருவானது. இதனைப் படைத்து மகிழும் சக்தி ஒருபோது சிவமாகவும், சிவம் ஒருபோது சக்தியாகவும் விளங்கும்.

திருமந்திரத்தில் சிவவழிபாடு முதலில் இடம்பெறுகின்றது. அடுத்து, சக்திவழிபாடு கூறப்படுகின்றது. இல்லறத்தானுக்குரிய சிவசக்தி வழிபாடும், அதன் பயனும் நான்காம் தந்திரத்தில் விளக்கப்படுகின்றது. இப்பகுதியில் இடம்பெறும் வழிபாட்டு முறைகளும் சக்கர அமைப்புகளும் முற்றிலும் இல்லறத்தாருக்கே உரியவை.

பொருள் இல்லார்க்கு இவ்வுலகில்லை என்கின்றார் வள்ளுவர். தன்னைக் காத்துக் கொள்வதற்கும், தன்னைச் சார்ந்தோரை விடாது காப்பதற்கும் இல்லறத்தானுக்குப் பொருள் பெரிதும் தேவைப்படுகின்றது. எனவே அச்செல்வத்தை அருளும்படி அவன் இறைவனை வேண்டுகின்றான். அதற்குப் பயன்படுத்துவது திருவம்பலச் சக்கரம் ஆகும். இதனை இன்றும் பலர் வீடுகளிலும் அங்காடிகளிலும் வைத்து வழிபடுகின்றனர். திருமந்திரத்தில் (914-928) இதன் அமைப்பு விளக்கப்படுகின்றது.

### திருவம்பலச் சக்கரம்

திருவம்பலச் சக்கரம் என்பது கோடுகள் குறுக்கும் நெடுக்குமாக இட்டு எழுத்துகளைக் கட்டங்களில் அடைத்து வழிபடுவதற்குரியது. திருவம்பலச் சக்கரம் என்றால் சிதாயாப் பெருவெளியில் ஆனந்தக் கூத்தாடும் பெருமான் சத்தியோடு மந்திர வடிவமாய் நின்று நிலவும் சக்கரமாகும். இச்சக்கரத்தை அடுத்து நான்கு சக்கரங்களைத் தொடர்ந்து அமைக்க வேண்டும். இச்சக்கரங்களின் வெளிவட்டத்தில் ஹர ஹர என்றும், அதனை

அடுத்த உள்வட்டத்தில் ஹரி ஹரி என்னும், அதற்கும் அடுத்த உள்வட்டத்தில் ஹம்சம் என்ற அசபையையும் அமைத்தல் வேண்டும். நடுவில் உள்ள இருபத்தைந்து இரேகைகளின் முடிவில் சூலம் இடுதல் வேண்டும். சூலத்தின் நுனியில் சத்தியெழுத்தை எழுதுதல் வேண்டும். சூலத்தைச் சுற்றி வளைத்து ஓம் என்பதையும் சூலங்களுக்கு இடையில் திருவைந்தெழுத்தாகிய நமசிவாயத்தையும் எழுதுதல் வேண்டும். இவ்வெழுத்துகளே சிவன் தங்கும் இடமாகும். பஞ்சபூதங்களில் பஞ்சாட்சரம் உள்ளடங்கியது.

| | | | |
|---|---|---|---|
| 1. | பிருதிவி | நாற்கோணம் | நிலம் |
| 2. | அப்பு | பிறைவட்டம் | நீர் |
| 3. | தேயு | முக்கோணம் | தீ |
| 4. | வாயு | அறுகோணம் | காற்று |
| 5. | ஆகாயம் | வட்டம் | வெளி |

ஐந்தெழுத்தே பஞ்சபூதங்களாகவும் விளங்குகின்றது. பஞ்சபூதங்களுக்குரிய வரிவடிவம் அ, இ, உ, எ, ஒ என்பனவாகும். இவற்றிற்குரிய தூலவடிவம் இருபத்தைந்து கட்டங்களிலும் அடைக்கப்பட வேண்டும். பஞ்சபூதங்களுக்கும் உரிய தூலவடிவங்கள இன்னின்ன என்பதும் (929) விளக்கப்படுகின்றது. இறுதியில் உள்ள வட்டத்தில் சிவசிவ என்ற மகா வாக்கியத்தை அடைத்ததும் திருவம்பலச் சக்கரம் முழுமை அடைகின்றது.

திருவம்பலச் சக்கரத்தில் இயந்திர வடிவில் எழுந்தருளும் சிவனைத் தாமரை, நீலோற்பவம், செங்கழுநீர், கருநெய்தல், பாக்குப்பூ, மகிழம்பூ, புன்னை, மல்லிகைப்பூ, செண்பகம், பாதிரி, செவ்வந்தி முதலிய கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ ஆகியவற்றால் வழிபடுவர். இவற்றோடு புனுகு, கத்தூரி, சந்தனம், குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம், அகில் குழம்பு முதலிய நறுமணப் பொருட்களைப் பன்னீரில் நன்றாகக் குழைத்துச் சக்கரத்திற்கு இட்டு, அன்போடு அருச்சனை செய்து, அமுதம் நிவேதனம் செய்து விளக்கேற்றி வழிபடுவர்.

இன்புடனேவந் தெய்திடும் முத்தியே (திரு.1005)

என்பதனால் இம்மையில் இன்பம் அடைவதற்குரிய பொருட் செல்வங்கள் அனைத்தையும் பெறுவதோடு முத்தியடைவதற்கும் இவ்வழிபாடு வழிவகுக்கும் என்கின்றார் திருமூலர்.

**உமாகாந்தன் வழிபாடு**

எட்டு அறைகள் வெளியிலும் ஓர் அறை உள்ளிருக்கும் படியாகவும் சிகாரத்தினை அமைக்க வேண்டும். இச்சிகாரம் எட்டு

அறைகளிலும் ஒலிவடிவமாய் நிறைந்து இருக்கும். பிரணவ எழுத்தாகிய ஓங்காரத்தால் சூழவிட்டு இறையுணர்வோடு தியானிப்பவர்களுக்கு இவ்வுடல் உயிர் பெற்ற பேறாக இறைவன் உமையோடு வெளிப்பட்டு அருள்புரிவான். திருவம்பலச் சக்கர வழிபாடு எல்லா மக்களாலும் பெரிதும் வணங்கப்படுவது. உமாகாந்தன் வழிபாடு ஞானிகளால் மட்டும் வணங்கப்படுவது. பெரியபுராணத்தில் ஆனாய நாயனார் புராணத்தில் உமையோடு சிவன் வெளிப்பட்டு நாயனாரை ஆட்கொண்டு அருளியதைக் காணமுடிகின்றது.

சக்தி வழிபாடு

சக்தியை உலகமக்கள் பல பேதங்களில் வழிபடுகின்றனர். பராசக்தியின் கூறுகளே கலைமகளாகவும், அலைமகளாகவும், மலைமகளாகவும் விளங்குகின்றன. அவளே பரமேசுவரனோடு இணைந்து ஐந்தொழில் புரிபவளாவாள். சக்தியின் வடிவம் பலவகை என்பதைத் திருவாசகம்,

ஆறு கோடி மாயா சத்திகள்

என்று குறிப்பிடுகின்றது. கருவூரார் எனும் சித்தர் சக்தி வழிபாட்டுக்கு ஆகமவிதியோடு ஆலயம் எழுப்பி அட்டசக்திகளை (எண்வகை சக்திகள்) ஏற்படுத்தியமை.. இங்கே குறிப்பிடத் தக்கதாகும். சக்தி ஒருத்தியே பல வடிவங்களாக விளங்கக் கூடியவள். அதனால்தான்,

தானான மூவுரு வோருருத் தன்மையள் (திரு.1049)

என்று திருமந்திரம் கூறுகின்றது. கலைமகள், அலைமகள், மலைமகள் என விளங்கும் சக்தியைத் திரிபுரை என்று அழைப்பர். இவளே சுத்த மாயையாகவும், அசுத்த மாயையாகவும், விந்துவாகவும், வைகரி வாக்காகவும், ஓம் என்ற பிரணவமாகவும், உள்ளொளியாகவும், காளியாகவும், பராசக்தியாகவும் தாமேயான மந்திரமாகவும், சத்தியின் மூர்த்தியாகவும் விளங்குபவள். அவளே அக்கினி, சூரியன், சந்திரனான பேரழகுடன் திகழ்ந்து உலகைக் காப்பவள். கருநிறமுடைய இச்சக்தி நாரணனுக்குத் திதித் தொழிலை நடத்த மாயா உருவை வழங்கியவள். சிவனோடு கருநிறத்தில் பொருந்திய சிவசக்தியாக விளங்கும் இவ்வம்மையை வணங்குபவர் மனத்தில் ஓங்கும் மணிபோன்ற ஒளி விளங்குபவள். ஆதலால் அபிராமிபட்டர் மணியே என்றும் ஒளியே என்றும் கூறுவார். மணிபோன்ற ஒளி தியானத்தால் பேரொளியாக வணங்குபவர்களுக்கு வீடுபேற்றை அளிப்பவள் என்று திருமந்திரம் தெளிவுபடுத்துகின்றது. வீடுபேறடைவதே திரிபுரையினை வணங்குவதால் கிட்டும் கிடைத்தற்கரிய சிறப்பாகும்.

**இராஜேஸ்வரியின் உருவம், வழிபாடு, பயன்**

> **தாளணி நூபுரம் செம்பட்டுத் தானுடை**
> **வாரணி கொங்கை மலர்க்கன்னல் வாளிவில்**
> **ஏரணி அங்குச பாசம் எழில்முடி**
> **காரணி மாமணிக் கண்டலக் காதிக்கே** (திரு.1049)

என்னும் பாடலில் இராஜேஸ்வரியின் உருவம் சித்திரிக்கப் படுகின்றது. மனத்தில் இவ்வுருவத்தினை நினைந்து வழிபடும் அடியவர்களுக்கு அனைத்தும் வசியப்படும். தனக்கு இன்னல்தரும் மனிதர்களையும் உயிரினங்களையும் ஒருவன் இராஜேஸ்வரியைத் தியானித்து வசியப்படுத்திவிடலாம்.

இராஜேஸ்வரியைத் துதித்துப் பாடிப் பரவினால் அவள் தன்னை வணங்குபவர்களுக்கு வெளிப்படுவாள்; அப்பொழுது அவளை மனிதஉருவில் உள்ளவர்கள் காணலாம். இறைவி,

> **பார்த்திடு மங்குச பாசம் பசுங்கரும்பு**
> **ஆர்த்திடும் பூம்பிள்ளை யாகுமாம் ஆதிக்கே**
> (திரு.1068)

என்னும் வடிவில் காட்சி தருவாள். அங்குச பாசங்களைக் கைக்கொண்டு பசுங்கரும்பினையுடைய அழகிய பெண்ணாக அவள் தோன்றுவாள் என்று திருமந்திரம் காட்டுகின்றது. சித்தர் களுக்கு வாலையாகவும் காட்சிதருவாள். கொல்லிமலையில் கொல்லிப்பாவை இதற்கு எடுத்துக்காட்டு.

**வயிரவி வழிபாடு - பயன்**

வயிரவியை வணங்குவதற்குப் பயன்படுவது வயிரவி மந்திரமாகும். வயிரவியின் இயல்புகள் பற்றி, மென்மையானவள், சீந்திற்கொடி போன்று கீழ்நோக்கியும் மேல்நோக்கியும் படருந்தன்மை உடையவள். நெறியினின்றித் தவறுபவர்களைத் தண்டிப்பவள். எல்லாக் கலைகளிலும் விளங்கும் அறிவை ஒன்றாகப் பெற்றவள். முள்முருக்கம் பூப்போன்ற சிவந்த நிறமுடையவள். இரத்தினக் கல்லைப்போன்று சிவந்த ஒளிவீசுபவள் என்று திருமந்திரம் கூறுகின்றது.

வயிரவிக்குரிய அணிகலன்கள் இன்னின்ன என்பதைத் திருமூலர், நிராதாரக் கலைகள் விளங்கும் சந்திர மண்டலமே பல மணிகள் இழைத்துள்ள முடியாக அவளுக்கு விளங்குகின்றது என்றும், அவள் அழகான ஆகாயத்தைக் காதாக உடையவள் என்றும், அவள் பொன்னைப்போல ஒளி வீசுபவள் என்றும் கூறுகின்றார்.

பொன் ஒன்றே பல அணிகலன்களாக உருமாறுவதைப் போலப் பெருமையுடைய வயிரவி சக்தியே சிவனாகவும், பிரமனாகவும், திருமாலாகவும் விளங்குகின்றாள். மும்மூர்த்திகளாக உள்ள வயிரவி மூலாதாரத்தில் உள்ளபோது வாலை என்றும், சூரிய கண்டமாகிய அநாகதத்தைக் கடந்தபோது தாருணி என்றும், சகஸ்ரதளத்தை அடைந்தபோது பதிவிரதை என்றும் பெயர் பெறுகின்றாள். இத்தகைய ஆற்றல் நிறைந்த தேவியை வணங்கினால் பிறவி வராது என்பது வழிபாட்டுக்குரிய பயனாகும்.

**வயிரவச் சக்கரம் வழிபாடு - பயன்**

வயிரவர் சிவனது கோரமூர்த்தங்களில் ஒன்றாகும். பகை முதலிய இடையூறுகளைப் போக்க இவரை வழிபடுதல் வழக்கமாகும். இதற்கான சக்கரம் வயிரவச் சக்கரம் எனப்படும். வயிரவர்க்கு உரிய நிறம் செம்மையாகும். அவருக்கு ஆறு கரங்கள் உண்டு.

**ஆமேவப் பூண்டரு ளாதி வயிரவன்**
**ஆமே கபாலமுஞ் சூலமுங் கைக்கொண்டங்**
**காமே தமருக பாசமுங் கையது**
**வாமே சிரத்தொடு வாளது கையே** (திரு.1293)

என்ற பாடல் வயிரவர் கையிலுள்ள ஆயுதங்களைக் குறிக்கின்றது. அவை கபாலம், சூலம், தமருகம், பாசம், வெட்டுண்ட தலை, வாள் ஆகியன. ஈஸ்வரனே காவல் தெய்வம் அவர் துணை காளி, அகிலத்தைக் காக்கும் உலக மாதா அன்னை பராசக்தி. பாரதி பராசக்தியை வணங்கி ஞானம் அடைந்தார்.

பதினைந்து திதிகளில் வழிபாட்டிற்குரியனவல்லாத சப்தமி, அட்டமி, தசமி, துவாதசி, சதுர்த்தசி ஆகியன நீங்க, ஏனைய வளர்பிறைமுதல் சட்டிவரை ஆறு ஆதாரங்களில் பொருந்திப் பின் ஒன்பதாம் திதியாகிய நவமியில் நெற்றிக்கு மேலும், பதினோராந் திதியாகி ஏகாதசியில் பிடரிப்பக்கமும், பதின்மூன்றாம் திதியாகிய பௌர்ணமியில் இடக்காதின் பக்கமும் ஆக உடலின் பத்து இடங்களில் வயிரவரை அறிந்து நாளும் அவர் உருவத்தை நினைத்துத் தியானம் செய்தல் வேண்டும்.

தியானத்தின் பயனாக வயிரவரைத் தியானிப்பவருடைய பகைவரின் ஆற்றல் குன்றும்; பகைவனைக் கருணை காட்டாது பந்தாடி அழிக்கலாம் என்கின்றது திருமந்திரம்.

**பூசனை செய்யப் பொருந்தியோ ராயிரம்**
**பூசனை செய்ய மதுவுட னாடுமால்**

**பூசனை சாந்து சவாது புழுகுநெய்**
**பூசனை செய்துநீர் பூசலை வேண்டுமே** (திரு.1295)

என்பது திருமந்திரப் பாடல் வயிரவரை வழிபடுவதற்கு நல்ல தேன், சாந்து, சவ்வாது, புனுகு முதலியவற்றை விரும்பிப் படைத்தலோடு, வயிரவர் நாமத்தை ஓராயிரம் முறை செபித்தல் வேண்டும். இவ்வாறு செபித்தால் பகை நீங்கும்; அது மட்டுமல்லாமல் பகைவருக்குள் கலகத்தையும் வயிரவர் வழிபாடு தோற்றுவிக்கும். கல்வி அறிவற்ற காழ்ப்புணர்ச்சியுள்ள மக்களிடையே இவ்வழிபாடு வழக்கத்தில் இருக்கின்றது. புறப்பகையான பகைவரிடம் மட்டுமின்றி அகப்பகையான ஐம்புல வேடர்களையும் அழிக்கவல்லதாகும் வைரவர் பூசை.

**சாம்பவி மண்டலச் சக்கர வழிபாடு - பயன்**

சிவசக்தியின் மற்றொரு பெயர் சாம்பவி. சிவசக்தியாக விளங்கும் சிவலிங்கத் திருவடிவம் நிறைந்த சக்கரம் இதுவாகும். இவ்வழிபாட்டினை அருவுருவ வழிபாடாகக் கருதலாம். சாம்பவி மண்டலச் சக்கரம் அமைக்கும் முறையைத் திருமந்திரம் இரு பாடல்களில் (1300,1301) விளக்குகின்றது.

**சிவாயநம** என்னும் ஐந்தெழுத்தினை மூலாதாரத்திலிருந்து நடுநாடி வழியாகச் சிரசைக் கடந்து செல்லும்படி நமசிவாய என்று மாற்றினால் சாம்பவி மண்டலச் சக்கர வழிபாடு செய்வோர் ஒளிமண்டலத்தை அடைவார்கள். சக்திமயமான இவ்வொளியில் இரண்டறக் கலந்தவர்கள் நினைப்பவை எல்லாம் நடக்கும். சிவசக்தி ஒளியில் திளைக்கும் இவர்களுக்கு எல்லாப் புறச்செல்வங்களும் தாமே வந்தடையும். பகை என்பது இவர்களை வந்து அணுகாது. பிறரது ஏளன நகைப்புக்குரிய நிகழ்ச்சிகளும் இவர்களை வந்தடையாது. நாள்தோறும் தீவினைகள் இறைவணக்கத்தால் நீங்கிவிடும்; அதனால் பிறவி நீங்கும். உடல் ஆனந்த வடிவமாகத் தோன்றும்.

உயிருக்கு வினைப் போகங்களை ஊட்டிய சக்தி ஆன்மாவின் பக்குவமுணர்ந்து சிவனை நோக்கத் தத்துவங்கள் விந்தில் அடங்க, ஆன்மா தன்னை உணர்ந்து தெளிந்த நிலையை விந்து செயத்தால் அடைகின்றது. இந்நிலையில் உடலில் நாம் உதித்துப் பின் நாதாந்தத்தில் அடங்க, ஆன்மா இறைவனுடன் இரண்டறக் கலந்து முத்தியடையும். வீடுபேறாகிய பெரும்பயன் சாம்பவி மண்டலச் சக்கர வழிபாட்டினால் கிட்டுகின்றது இச்சக்கர வழிபாட்டின் தன்மைகள், பயன்கள் ஆகியன குறித்து இவ்வாறு திருமந்திரம் உரைக்கின்றது.

**புவனாபதி சக்கரம்**

புவனை என்பது சக்திக்குரிய ஒரு பெயர். சக்திக்குரிய மற்றொரு வழிபாட்டு முறையைப் புவனாபதி சக்கரம் தருகின்றது. புவனாபதிக்குரிய எழுத்துகள் பதினைந்து. அவை பொன்மை, செம்மை, வெண்மை என்ற மூன்று நிறங்களை உடையன; ஒவ்வொரு நிறத்துள்ளும் ஐயைந்து எழுத்துகள் இடம்பெறுகின்றன. இவை முறையே

1. வாக்பவ கூடம்
2. காமராஜ கூடம்
3. சக்தி கூடம்

என்று மூன்று காண்டங்களாகப் பிரிக்கப்படுகின்றன.

புவனாபதிக்குரிய வழிபாடு (1) புறவழிபாடு, (2) அகவழிபாடு என்று இருவகைப்படும்.

**1. புறவழிபாடு**

புவனாபதியின் உருவத்தைத் திருமந்திரம்,

செய்ய திருமேனி செம்பட்டுடை தானுங்
கையிற் படையங் குசபாசத் தோடபய
மெய்யில் அணிகலன் இரத்தின மாஃமேனி
துய்ய முடியும் அவயத்தில் தோற்றமே (திரு.1316)

என்று சித்திரிக்கின்றது. சிவந்த திருமேனியை உடைய புவனாபதிக்குச் சிவந்த பட்டாடை உரியது; கைகளில் அங்குசம், பாசம் ஆகியவற்றோடு அபய முத்திரையும் விளங்கும். திருமேனியில் அணிந்துள்ள பல்வேறு அணிகலன்களோடு இரத்தினம் பதித்தவையும் கிரீடமும் காணப்படும். புவனாபதிக்குரிய படையல் ஹ்ரீம் என்று சொல்லி மந்திரிக்கப்பட்ட பால், அன்னம் ஆகியவையாகும். இவற்றைப் படையலிட்டுப் பின் நாரதாய சுவாகா என்று சொல்லி வணங்கி, புவனாபதி தன்னுள் கலந்திருப்பவள் என்று நினைத்து, அன்னத்தை உண்ண வேண்டும்; அப்படிச் செய்பவர்கள் விரும்பும் அனைத்தையும் அவள் தருவாள் எனத் திருமந்திரம் (1317,1318) கூறுகின்றது.

**2. அகவழிபாடு**

திருமூலர் நன்கு ஆராய்ந்து புவனாபதியைத் தவிரச் சிறந்த தெய்வம் வேறில்லை என்று முடிவு கூறுகின்றார். இதனை,

ஓரில் இதுவே உரையும்இத் தெய்வத்தைத்
தேரில் பிறிதில்லை யானொன்று செப்பக்கேள்

**வாரித் திரிகோண மனமின்ப முத்தியுந்**
**தேரில் அறியுஞ் சிவகாயந் தானே** (திரு.1308)

என்னும் பாடல் தெளிவுறுத்துகின்றது. கடலைப்போன்று பரந்து விரிந்துள்ள முக்கோண அமைப்பில் மனம் நித்தியானந்தத்தையும் அகண்டத்தையும் தியானித்தால் அது சிவனை வழிபட்டதற்கு ஒப்பாகும். பராசக்தி ஒருத்தியாக இருந்தாலும் அவளே இறைவனுக்கு அங்கமாகவும் விளங்குகின்றாள். இவளை மனத்தினால் வழிபட்டால் முத்தி கிட்டும். அவள் சிவகுருவோடு பொருந்தி நிற்பதில் எட்டுச் சக்தியாக விளங்குவாள். அட்டசக்திகள் எண்சாண் உடம்பில் என்பது தத்துவம்.

புவனாபதியை வழிபடுவதால் இம்மை வாழ்வுக்குத் தேவையான எல்லாச் செல்வங்களும் கிடைக்கும். அத்துடன், இம்மை வாழ்வுக்குரிய வீடுபேறும் கிட்டும் என்பது திருமந்திரத்தால் தெளிவாகின்றது.

**நவாக்கரி சக்கரம்**

நவாக்கரி சக்கர வழிபாடும் சக்தி வழிபாடே ஆகும். நவம் என்றால் ஒன்பது. ஒன்பது பீசங்களை உடைய சக்தியை வழிபடுவது நவாக்கரி வழிபாடாகும். ஒன்பது எழுத்துகளையும் முதலாகக்கொண்டு ஒன்பதுமுறை செபிப்பதால் நவாக்கரி சக்கரம் எண்பத்தொரு எழுத்துகளை அடைப்பதற்கேற்ற எண்பத்தோர் அறைகளை உடையதாகின்றது. நவாக்கரி சக்கர அமைப்பினைச் சொல்லும்போது திருமூலர் பெண்ணை முன்னிலைப்படுத்திக் கூறுகின்றார்.

மனம் ஒன்றி ஆயிரக்கணக்கான முறை நவாக்கரி மந்திரத்தைச் செபித்தல் வேண்டும். இளம்வாலைப் பெண்ணாகச் சக்தி உள்ளத்தில் தோன்றும் அளவும் செபிக்க வேணடும் என்பதை,

**அர்ச்சனை ஆயிரம் ஆயிரம் சிந்தியே** (திரு.1369)

என்று கூறுகின்றது. தொடர்ந்து தேவியை மனத்தால் வழிபட்டால் தாயும் தந்தையுமாக அருள்புரியும் ஒளிவடிவான நவாக்கரி ஆறு கரங்களை உடையவளாய் வெளிப்படுவாள். ஆறு கரங்களில்,

**பந்தமா சூலம் படைபாசம் வில்லம்பு**
**முந்த கிலீமெழ முன்னிருந் தாளே** (திரு.1370)

மழு, சூலம், தோட்டி, பாசம், வில், அம்பு ஆகிய ஆயுதங்களுடன் காட்சி தருவாள். சக்தியை வழிபடுபவர்கள் கொல்லாமையை மேற்கொள்வதால் மீண்டும் கருவில் சென்று

சேரமாட்டார்கள். இத்தகைய பெறுவதற்கரிய பேறுகளைத் தருபவள் நவாக்கரி. இவ்வுண்மையை உணராது உலகவாழ்வே நிலையென்று இருப்பவர் வீடுபேற்றினைப் பெறாது கெடுவர். இதனை,

கலப்பறி யார்கடல் சூழுல கெல்லாம்
உலப்பறி யாருட லோடுயிர் தன்னைச்
சிலப்பறி யார்சில தேவரை நாடித்
தலைப்பறி யாகச் சமைந்தவர் தானே (திரு.1363)

என்ற பாடல் விளக்குகின்றது. கடல் சூழ்ந்த உலகின் எல்லா இடங்களிலும் சக்தி கலந்துள்ளாள்; உடலோடு கூடிய உயிர் அழியக் கூடியது; அதனால் அழிவு வராமல் தடுத்து ஆளக்கூடியவள் சக்தி; இதனை உணர்ந்து சிறு தெய்வங்களை வழிபடாமல் அவளை வழிபட வேண்டும்; அப்படி வழிபடுபவர்கள் நாதத்தை உணர்வர்; நாதத்தை உணராதவர்க்கு நாதாந்தமும் முத்தியும் கிட்டாது. இதனை மேற்கண்ட திருமந்திரப் பாடலால் அறியமுடிகின்றது.

**இல்லறவாழ்க்கை**

வள்ளுவர் இல்லறத்தானை இல்வாழ்வான் என்கின்றார். அவன் யார்யாருக்குத் துணை நிற்க வேண்டும் என்பதை,

துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கும்
இல்வாழ்வா னென்பான் துணை (குறள்.42)

என்று கூறுகின்றார்.

துறந்தார் என்போர் இல்வாழ்க்கையில் இருந்து தன்னை முற்றும் துறந்த துறவு வாழ்க்கை மேற்கொள்வோர் ஆவர். துவ்வாதார் என்போர் வறியவர் அல்லது ஏழையர் அல்லது உறுப்புக் குறைந்தோர் ஆவர். இறந்தார் என்ற சொல் மண்ணுலகைவிட்டு உயிர் நீத்தவர்கள் என்ற பொருள் ஆகும். இறந்தோர்க்குரிய ஈமச் சடங்குகளைச் செய்யக்கூடிய செயல்முறை விளக்கம் இருப்பவனையே திருமந்திரம் இல்லறத்தான் என்கின்றது. மனைவி, செல்வம், வீடு, சுற்றம், தன்மக்கள் என்ற செல்வங்களைக் கொண்டு இல்லறத்தான் வாழ்கின்றான். நிலையற்ற வாழ்வை நிலையென்று எண்ணி நல்ல உணவினை உண்டு, மனைவியோடு இன்பம் துய்த்து, நோயுற்று, இறுதியில் இறந்து போகின்றான். இதனைத் திருமூலர் நிலையாமைக்கும், இறைவனடி சேராதாருக்கும் எடுத்துக்காட்டாக,

அடப்பண்ணி வைத்தார் அடிசிலை யுண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்

**இடப்பக்க மேஇறை நொந்த தென்றார்**
**கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே** (திரு.148)

என்று பாடுகின்றார். மேலும் இல்லறத்தான் வாழ்ந்த வாழ்வின் சிறப்புகளை,

**மன்றத்தே நம்பி மாடம் எடுத்தது**
**மன்றத்தே நம்பி சிவிகைபெற் றேறினான்**
**மன்றத்தே நம்பி முக்கோடி வழங்கினான்** (திரு.149)

என்னும் பாடலால் அறியமுடிகின்றது. இல்லறத்தான் மாடிவீடு கட்டி மகிழ்ந்திருந்தான். பல்லக்கில் ஊர்ந்து பவனி வந்தான். பொதுவிடத்தில் இயல்புடைய மூவர்க்கும் புத்தாடை வழங்கினான். இவ்வாறு செல்வமும் செல்வாக்கும் பெற்று வாழ்ந்தவனுக்கு மனைவி அருகிருக்கும்போதே இறப்பு வருகின்றது. இதனை,

**மையிட்ட கண்ணாளும் மாடும் இருக்கவே**
**மெய்விட்டு போக விடைகொள்ளு மாறே** (திரு.151)

என்று திருமந்திரம் கூறுகின்றது.

**இல்லறத்தானுக்கு விதிக்கப்பட்டவை**

இல்லறத்தில் ஈடுபட்டுள்ள மனிதனுக்கு உரிய செயல்கள் என்பவை வேறு; விதிக்கப்படுபவை என்பவை வேறு. இல்லறம் மேற்கொள்பவன் உறுதியாகப் பின்பற்ற வேண்டிய விதிமுறைகள் சில உண்டு; இவற்றை விதிக்கப்பட்டவை எனலாம். இவ்விதிமுறைகளை அழியா இலக்கியங்கள் காட்டும் வாழும் பாத்திரங்கள் வாயிலாக உணரலாம். இம்முறையில் இல்லறத்தான் செய்ய வேண்டிய கடமைகள் சிலவற்றை ஆகமமும் சாத்திரமுமாகிய திருமந்திரம் எடுத்துக் கூறுகின்றது.

திருமூலர் குறிப்பிடும் இல்லறத்தானும் மாடு, மனை, செல்வம், மனைவி, மக்களோடு செழுங்கிளை தாங்கும் செல்வனாக வாழ்பவன்; அவன் தன்மனையாளைப் பிரியாது வாழ்ந்து அவளோடு பல அறச்செயல்களைப் புரிபவன்; இரண்டாம் தந்திரத்தில் பாத்திரம் என்ற தலைப்பில் இல்லறத்தான் அறவழியில் சேர்த்த பொருளைச் சேமித்து வைப்பதற்குரிய சேமவைப்பு சிவஞானியர் ஆவர் என்று குறிப்பிடுகின்றார். துறந்தோருக்குப் பணிவிடை செய்ய வேண்டியது இல்லறத்தானுடைய கடமை. அதுவே அவன் வாழ்வில் கிடைக்கும் பெரும்பேறாகும். எள்ளளவு பொன்னை ஞானிக்குக் கொடுத்தாலும் அதனால் இம்மையின்பமும் மறுமைக்குரிய வீடுபேறு கிட்டும்; ஆனால் உலகளவு பொன்னை அஞ்ஞானிகளுக்கு (ஞானமில்லாதவர்)

கொடுத்தாலும் அதனாற்பலன் ஏதுமில்லை (501) என்கின்றார் திருமூலர்.

குற்றமற்ற ஞான குருவுக்கும், தூய்மையான பெரியோருக்கும், காமம், வெஃகுளி, மயக்கம் ஆகியவற்றை விட்டவருக்கும் பொருள் கொடுத்து அந்தந்த நிலையில் நிற்கச் செய்பவன் ஞானம் பெறுவதால் அவனுக்கு நரகம் இல்லாமற் போகும்; சொர்க்கம் கிட்டும் என்றும் திருமந்திரம் (507) குறிப்பிடுகின்றது.

காமம், வெகுளி, மயக்கம் ஆகிய மூன்றையும் விட்டவர் ஞானியர். அவர்களுக்கு அளவான உணவை ஏற்கும் வண்ணம் கொடுப்பதனால் முக்குற்றம் கீழ்படுத்தப்பட்டு ஞானம் மேலோங்குகின்றது. மேலும் உலகம் இயங்க மழை முறையாகப் பெய்தல் வேண்டும்; அதற்குத் தவமுடைய நல்லாரும் ஞானியரும் வேண்டும்; அவர்கள் ஞானம் கெடாது ஓங்கத் துறவறத்தில் நிற்க வேண்டும்; அதற்கு இல்லறத்தார் உதவுதல் வேண்டும். எனவே இல்லறத்தான் தனக்கு விதிக்கப்பட்டபடி துறந்தாரை முறையாகக் காத்தால் நரகம் செல்லாது சொர்க்கம் புகுவான் என்று திருமந்திரம் தெரிவிக்கின்றது.

அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார் (திரு.148)

என்னும் பாடலில் இல்லறத்தான் குடும்பத்தினரோடும் விருந்தினரோடும் உண்டு மகிழ்ந்தான் என்று குறிப்பிடுகின்றார்.

இல்லறத்தில் ஈடுபட்டு நற்செயல்களைச் செய்யும் மக்களிடையில் தீய செயல்களைச் செய்பவரும் உண்டு. இவர்கள் தாங்கள் செய்த பிழைகளை உணர்ந்து நல்லனவற்றைச் செய்து நன்மையடைதல் வேண்டும் என்னும் கருத்தோடு திருமந்திரம் மனிதன் விலக்க வேண்டியவற்றையும் எடுத்துச் சொல்லுகின்றது.

### இல்லறத்தானுக்கு விலக்கப்பட்டவை

மனிதன் தன்நிலையிலிருந்து உயர்ந்து இறைநிலை அடைய முடியும் என்பதைத் திருமூலர் தெளிவுபடுத்துகின்றார். அதனை உலகுக்கு உணர்த்த முற்பட்டார்; எளிய மனிதன் இறைநிலைக்கு உயரவேண்டுமானால் அவன் புலனடக்கம் பெறல் வேண்டும். ஆணவம், கன்மம், மாயை ஆகியவற்றை விடுதல் வேண்டும்.

உடலாலும் உள்ளத்தாலும் மனிதன் விலக்கவேண்டிய பொருள்களுள் காமமும் ஒன்று; இல்லறத்தில் ஈடுபடுபவனுக்கு அளவான காமம் வரையறுக்கப்பட்டு உள்ளது. மாதமிரு முறை போகம். துறவிகள் போகத்தில் ஈடுபட்டாலும் விந்துநீக்கம்

செய்யமாட்டார்கள் என்பது விந்துசெயம் என்ற தலைப்பின்கீழ் உரைக்கப்பட்டுள்ளது. விந்து உடலில் இறுகிப் பின்அமுதமாக மாறுகின்றது என்பது திருமந்திரத்தில் காணப்படுகின்றது. இவற்றை உணராது சிற்றின்பத்தில் மிகுந்த விருப்பம்கொண்டு விலைமகளிரை நாடிச் சென்று மக்கள் உலக மாயையில் சிக்கி அழிகின்றனர். இதனை உணர்த்த வேண்டி, வேதச்சிறப்பு என்ற தலைப்பில் இயலும் இசையும் கூத்துமான முத்தமிழாக விளங்கும் இறைவனை அறியாதவர்கள் பரத்தையரின் புறஅழகில் மயங்கி அவர்களின் ஆடலிலும் பாடலிலும் ஈடுபட்டு அழிதல் தகாது என்று அறிவுறுத்துகின்றார். பொதுமகளிரின் இழிகுணங்களை மகளிர் இழிவு என்ற தலைப்பில் ஐந்து பாடல்களில் குறிப்பிடுகின்றார் திருமூலர்.

பரத்தையர் உண்மையான அன்போடு ஆடவரிடம் பழகுவதில்லை; அவர்தம் நோக்கமெல்லாம் அவர்கள் தரும் பொருள்மீதுதான். தன்னோடு பழகவரும் ஆடவனிடம் பொருளில்லை என்றால் அவனை விலக்குவர். அடுத்து வருபவனிடம் மிகுதியான பொருள் இருந்தால் முதலாமவனைப் புறக்கணிப்பர். இத்தகைய பரத்தையரை,

இயலுறும் வாழ்க்கை இளம்பிடி மாதர்
புயலும் புல்லின் புணர்ந்தவ ரேயினும்
மயலுறும் வானவர் சாரஇரும் என்பார்
அயலுறப் பேசி அகன்றொழிந் தாரே (திரு.206)

என்று பாடுகின்றார் திருமூலர். இவர்களை விட்டு ஆடவர் விலக வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றார். பரத்தையரை விட்டு விலகாது இருப்பவர்க்கு ஞானமும், அதன் பயனாய்க் கிடைக்கும் சிவானந்தமாகிய தேனும் கிட்டாது என்பதை,

மயங்கும் தியங்குங்கள் வாய்மை அழிக்கும்
இயங்கும் மடவார்தம் இன்பமே எய்தி
முயங்கும் நயங்கொண்ட ஞானத்து முந்த
இயங்கும் இடையறா ஆனந்தம் எய்துமே (திரு.330)

என்னும் பாடல் காட்டுகின்றது.

*பிறன்மனை நயத்தல்*

இல்லறத்தானுக்கு விலக்கப்பட்டனவற்றுள் மற்றொன்று பிறன்மனை நயத்தலாகும். பிறன் மனைவியை விரும்புவதற்குக் காரணம் அறியாமையாகும். மிகுகாமியமே அன்புடைய மனைவி வீட்டிலிருந்து தன் கடமையைச் செய்தாலும் பிறருக்கு

உரிமையுடைய ஒருத்தியை விரும்புபவர் காமுகர். வீட்டுப் பலாக்கனியை உண்ணாது, காட்டில் உள்ள ஈச்சம்பழத்தை விரும்பி அங்குச் செல்பவனும் பிறன்மனை நயப்பவனும் ஒத்தவர் ஆவர். முக்கனிகளில் ஒன்றான பலாவின் சுவையையும் பெருமையையும் உணராதவன்தான் சுவையற்ற ஈச்சம்பழத்தை விரும்புவான்; அதுபோல, மனைவியின் அன்பையும் மாண்பையும் உணராதவன்தான் பிறன்மனையை விரும்புவான். காட்டு விலங்குகளும், ஈச்சமர முள்ளும் ஈச்சம்பழம் பெறுவதற்குத் தடையாக நின்று துன்பம் தரும். அதுபோலப் பிறன்மனையை நயப்பவனும் சிறுமையும் கேடும் அடைவான்.

திருத்தி வளர்த்ததோர் தேமாங் கனியை
அருத்தமென் றெண்ணி அறையிற் புதைத்துப்
பொருத்தமி லாத புளிமாங் கொம்பேறிக்
கருத்தறி யாதவர் காலற்ற வாறே (திரு.202)

என்னும் பாடலில் பிறன் மனைவியை விரும்புபவன் கெடுவான் என்பதோடு அவன் மனைவியுங் கெடுவாள் என்கின்றது திருமந்திரம்.

**இல்லறத்தில் உடலோம்பல்**

சீவன் பக்குவமடையும் காலத்தையும் பூமியில் அது வாழ வேண்டிய கால எல்லையையும் இறைவன் முடிவு செய்கின்றான். கரு முதலில் தந்தையின் உடலில் உருவாகின்றது. இதனைத் தந்தையே அறிந்து கொள்வதில்லை. திருமந்திரம்,

புருடன் உடலிற் பொருந்துமற் றோரார் (திரு.454)

என்று இக்கருத்தை உணர்த்துகின்றது. கரு வளரும்போது அருவமாய் ஒவ்வொரு தத்துவப் பொருளும் அதனுடன் வந்து சேர்கின்றன. இதனை,

போகின்ற எட்டும் புகுகின்ற பத்தெட்டும்
மூழ்கின்ற முத்தனும் ஒன்பது வாய்தலும்
நாகமும் எட்டுடன் நாலு புரவியும்
பாகன் விடானெனிற் பன்றியு மாமே (திரு.457)

என்னும் பாடல் தெரிவிக்கின்றது. போகின்ற எட்டு என்பது அருவமாய்ப் போகின்ற புரியட்டக சரீரமாகும். எட்டு சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், மனம், புத்தி, அகங்காரம் என்பன. அடுத்துக் கருவின் உடலை இயக்கும் பத்து வாயுக்களும் காமாதி அட்ட விகாரங்களும் புகுகின்ற பத்தெட்டு எனப்பட்டன. பத்து வாயுக்களாவன தனஞ்சயன், பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன்,

நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன் என்பனவாகும். விகாரங்கள் எட்டாவன காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், துன்பம், அகங்காரம் ஆகியன.

கரு வளரும்போது ஒன்பது துவாரங்களும் வளருகின்றன. இவற்றை **ஒன்பது வாய்தல்** என்று திருமந்திரம் குறிக்கின்றது. **வாய்தல்** என்பது வாயில் என்னும் பொருளைத் தரும். அவை: கண்கள் இரண்டு; செவிகள் இரண்டு; நாசித் துவாரம் இரண்டு; வாய் ஒன்று, கருவாய் ஒன்று, எருவாய் ஒன்று ஆக ஒன்பதாகும். இவற்றை இறைவனாகிய பாகன் மனித உடல் நன்கு அமையும் பொருட்டுக்கருவில் பெற வைக்கின்றான்; ஆனால், இவை முறையாக உடலில் பொருந்தாவிடில் மனிதப்பிறப்பு பன்றியைப்போல் இழிந்ததாய்விடும். புரவி என்பது பிராண இயக்கம். இது உலகியலில் ஒன்றி வாழ்பவர்களுக்குக் கண்டத்திற்குக்கீழ் எட்டு விரற்கடை அளவு செல்லும்; யோகியர்க்குக் கண்டத்திற்குக் கீழ் நான்கு விரற்கடை அளவு செல்லும். எனவே, திருமூலர் எட்டுடன் நாலு புரவியும் என்கின்றார்.

*பாரம்பரியம்*

மனிதன் உருவத்தால் ஒத்திருந்தாலும் பண்புகளால் பெரிதும் வேறுபடுகின்றான். இதற்கான காரணத்தைத் திருமந்திரம் ஆராய்ந்து சொல்கின்றது. பாரம்பரியம் ஒரு மனிதனின் குணங்களுக்குக் காரணமாகின்றன என்று இன்றைய மருத்துவ உலகம் கூறுகின்றது. இதனைத் தாங்கியிருப்பவை குரோமோசோம்கள் என்றும் கூறுவர். திருமந்திரம் இதனை வேறு வகையில் கூறுகின்றது. ஆணும் பெண்ணும் ஒன்று சேரும்போது, விந்தும் கருவும் ஒன்று சேர்கின்றன; அப்போது விந்து கருவினை எதிர்த்துச் சென்றால் பிறக்கும் குழந்தை உருத்திரனைப்போலத் தாமத குணம் பெறும்; மாறாகச் சுரோணிதம் எதிர்த்து வரும்போது பிறக்கும் குழந்தை திருமாலுக்குரிய சத்துவகுணம் பெறும்; விந்தும் கருவும் சமமாகக் கலந்திருக்கும்போது பிறக்கும் குழந்தை பிரமனைப்போல இராட்சத குணம் பெறும்; இம்மூன்று குணங்களும் ஒத்திருக்கும் ஒருவன் பேரரசை ஆளும் தகுதி உடையவனாகவும் விளங்குவான் (458) என்கின்றது திருமந்திரம்.

*பஞ்சகோசம்*

பிறப்பு, மூச்சு, இறப்பு முதலியவை உடலின் பொதுத் தன்மைகள்; கண்ணிற்குப் புலப்படக் கூடியவை; ஆனால், கருவில் உயிர்வந்து தங்குதல் போன்றவை நம் கண்ணுக்குப் புலப்படாதவை. அவ்வாறு கண்ணிற்குப் புலப்படாமல் நம்உடலைச் சுற்றி ஐவகைக்

கோசங்கள் உள்ளன; ஐந்து கோசங்களும் உடலுடன் கொண்டுள்ள தொடர்பை விளக்கும் பகுதி உடலிற் பஞ்சகோசம் என்ற பகுதியாகும். எட்டாம் தந்திரத்தில் இக்கருத்துகள் இடம்பெறுகின்றன.

சந்ததியின்பமும் சேர்க்கையின்பமும் சிறப்படைய வேண்டுமாயின் ஆணும் பெண்ணும் தாம்சேர்வதற்கு முன்நாளில் குடலில் உள்ள மலத்தைப் போக்கி, வாதம், பித்தம், சிலேத்துமம் என்னும் மூன்றையும் தத்தம் நிலையில் இருக்கச் செய்து பின் சேர்தல் வேண்டும். இல்லறத்தான் நாளும் சிவசிந்தனையில் ஈடுபடுவதால் அவன் விரும்பும் பொருட்செல்வமும் நாளாக நாளாக அவனுக்குத் தேவைப்படாது; இறையன்பை மட்டும் வேண்டும் நிலைக்குச் செல்வான் என்பதை உணர்த்துகின்றது.

துறவற வாழ்க்கை

துறவுநிலை என்பது மிக உன்னதமானது. இல்வாழ்க்கை, துறவு வாழ்க்கை இரண்டையுமே அறம் என்றே முன்னோர்கள் கருதினர். எனவேதான் இல்லறம், துறவறம் என்ற பெயர்களைச் சூட்டினர்.

இல்லறத்தார், இல்லம் துறந்தார், இல்லம் துறந்து உள்ளமும் துறந்த துறவறத்தார் ஆகிய மூவரின் ஆன்ம பக்குவத்தைப் பற்றிப் பட்டினத்தார்,

**அறந்தான் இயற்றும் அவனிலுங் கோடி அதிகம்இல்லம்**
**துறந்தான் அவனின் சத்கோடி உள்ளத் துறவுடையோன்**
**இருந்தான் அறக்காற்று அறிவொடிருந்திரு வாதனையற்று**
**இருந்தான் பெருமையை என்சொல்லுவேன் கச்சியே கம்பனே**

(பட்டினத்தார், திருவேகம்ப மாலை பா.1)

இல்லறத்தில் இருந்து அறஞ்செய்பவனிலும் துறவியின் சிறப்பு மேலானது; இந்நிலையில் இருந்து தன்னை விடுவித்துக் கொண்டவன் இல்லறத்தானைக் காட்டிலும் பலகோடி மடங்கு மேலானவன்; இவர்கள் அனைவரையும்விடச் சிறப்புடையவன் உள்ளத்துறவு பூண்டு வாழ்பவன்.

திருமூலர் ஒரு துறவி; எனவே துறவறத்தின் மேன்மையையும், அதன் பல்வேறு படிநிலைகளையும் திருமந்திரத்தில் இனிது விளக்கியுள்ளார். ஆறாம் தந்திரத்தில் துறவு, தவம், தவவேடம், அவவேடம், திருநீறு, ஞானவேடம், சிவவேடம், அபக்குவன், பக்குவன் முதலிய தலைப்புகள் உண்மைத் துறவிகளின் தன்மைகளைப் பற்றியும் செயல்களைப் பற்றியும் வரையறுத்துப் பேசுகின்றன.

***முதற்சித்தன் ஆதிசிவன்***

துறவறத்தில் ஈடுபட்டுள்ள நல்லதொரு துறவிக்குச் சான்றாகத் திருமூலர் சிவபெருமானையே சுட்டுகின்றார்.

**அறவன் பிறப்பிலி யாரும் இலாதான்**
**உறைவது காட்டகம் உண்பது பிச்சை**
**துறைவனுங் கண்டீர் துறந்தவர் தம்மைப்**
**பிறவி யறுத்திடும் பித்தன் கண்டீரே** (திரு.1616)

என்ற பாடல் சிவன் நியதிகளையுடையவன்; பிறப்பற்ற தனியன்; தத்துவக் காட்டை நீத்தவன்; அவன் பிச்சையாக ஏற்பது சீவபோதம்; ஆதலால் சிவனே மிகச் சிறந்த துறவி; அவனே பற்றுகளை நீத்தவரின் பிறவியை நீக்கி முத்தியளிக்க வல்லவன் என்கின்றது திருவாசகம்,

**கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை**
**தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடி**

என்று சுட்டுவது இங்கு ஒப்பிடத்தக்கது. இவ்வாறு ஆன்மாக்களை உலகு துறக்கச்செய்து தவநிலையில் ஈடுபடச் செய்பவனும் சிவனேயாவன். உலகின் தன்மையுணர்ந்து, தன்னையுணர்ந்து இறையுணர்வில் திளைப்பவர்கள் இறையனுபவம் பெற்று முத்தியடைவர். இந்த முக்திக்கு மூலகாரணமாய் இருந்தவன் ஆதிசிவன். அவனே முதற்சித்தனாவான். அதற்குரிய இயல்புகளை மேலே கண்டோம்.

**துறவிகளின் ஒழுகலாறுகள்**

தவத்தில் ஈடுபடும் துறவிகள் செய்ய வேண்டியவை இன்னின்ன என்று வரையறை செய்கின்றது திருமந்திரம். தவவேடம், திருநீறு, ஞானவேடம், சிவவேடம் ஆகிய பகுதிகளில் துறவிகளின் புறஇலக்கணம் கூறப்பட்டுள்ளது.

***துறவிகளின் பொருட்கள்***

**பூதி யணிவது சாதன மாதியிற்**
**காதணி தாம்பிர குண்டலம் கண்டிகை**
**ஓதி யவர்க்கும் உருத்திர சாதனம்**
**தீதில் சிவயோகி சாதனம் தேரிலே** (திரு.1662)

என்றும்,

**யோகிக் கிடுமது உட்கட்டுக் கஞ்சுளி**
**தோகைக்குப் பாசத்துச் சுற்றம் சடையதொன்**

நாகத்து நீறணி யாங்குஅக் கபாலம்
சீகத்த மாத்திரை திண்பிரம் பாகுமே (திரு.1663)

என்றும் இரண்டு பாடல்களில் சிவவேடம் குறித்துப் பாடுகின்றார்

திருநீறு, காதில் தாமிர குண்டலம், கழுத்தில் முப்பத்திரண்டு உருத்திராட்சங்கள் கோத்த மாலை ஆகியன வேதாகமங்களை ஓதித் தீமையில்லாத வீடுபேற்றை வேண்டிச் சிவயோகத்தில் ஈடுபடும் யோகிக்கு உரிய சாதனங்களாகும். மேலும், உள்ளாடை, கைப்பை, தோகை போன்ற மெல்லிய மேலாடை, சுற்றிய சடை, உடம்பு முழுவதும் அணியும் திருநீறு, அங்கையில் மண்டையோடு, பிரப்பங்கோல் ஆகியனவும் துறவிக் குரியனவாம். இவைகளேயன்றி, காதணியாகிய குண்டலமும் கழுத்தணியாகிய உருத்திராக்கமும், சிவசிவ ஒலியும், ஊதுகின்ற வெண்சங்கும், மேலான ஆறுகட்டியும், மண்டையாகிய சட்டியும், குற்றமில்லாத பாதக்குறடும், யோகத்திற்குரிய இருக்கையும், பட்டம், யோகதண்டம் ஆகியனவும் சிவயோகிக்கு உரிய பொருள்களாகும்.

*வெண்ணீறு*

அரசு, ஆல், அத்தி முதலிய தாவரங்கள் வேள்வித்தீயில் உருமாறி, வெண்ணிறமான விபூதியாக ஒளிவீசும். அவ்வாறே இறைவனின் திருவடியை உணர்ந்து அனுபவிக்க விரும்புபவர்களும் மனிதவுடல் ஒளியுடலாக மாறிப் பின்பே இறைவனை அடைய முடியும். இதனை உணர்த்தவே வெண்ணீற்றினை அணிகின்றனர் என்னும் கருத்தையும் திருமந்திரம் விளக்குகின்றது.

*குருவும் சீடனும்*

தனக்கெனச் சீடர்களைத் தேர்ந்தெடுக்கும் குருவினைத் திருமந்திரம்,

அறிவுடை யானரு மாமறை யுள்ளே
செறிவுடை யான்மிகு தேவர்க்குத் தேவன்
பொறியுடை யான்புலன் ஐந்தும் கடந்த
குறியுடை யானொடுங் கூடுவன் நானே (திரு.2636)

என அடையாளம் காட்டுகின்றது. குரு அறிவுடையவனாகவும், வேதம் புகழும் பிரணவத்துள் விளங்குபவனாகவும், தேவர்க்குத் தேவனான சிவனுடன் இரண்டறக் கலந்தவனாகவும் இருத்தல் வேண்டும் என்பது இதனால் அறியப்படுகின்றது.

குரு வாயிலாகச் சீடன் குண்டலினியின் ஆற்றலால் நாதம் உதிக்கும் என்பதைத் தெரிந்து கொள்கின்றான்; அதே நேரத்தில்

தான் உலகாயதமாக மும்மலங்களில் ஆழ்ந்து காமத்தை விலக்காதவரை; தனக்கு நாதம் உதிக்காது என்பதையும் உணர்ந்து கொள்கின்றான். உபதேச முறையை இவ்வாறு விளக்கும் திருமந்திரம்,

> **அஞ்சில் அமுதுமோ ரேழின்கண் ஆனந்த**
> **முஞ்சில் ஓங்காரமோ ரொன்பான் பதினொன்றில்**
> **வஞ்சக மேநின்று வைத்திடிற் காயமாங்**
> **கிஞ்சுகச் செவ்வாய்க் கிளிமொழி கேளே** (திரு.2299)

என்று உணர்த்துகின்றது. குருவருளால் பிரணவ நாதத்தைச் சீடன் குண்டலினி ஆற்றலை விழித்தெழச் செய்து உணர்ந்து கொள்கின்றான். அத்தகைய சீடனுக்கு மேலும் சில உபதேசங்களைக் குரு உபதேசிப்பான். இதனை,

> **மலையுளும் வானகத் துள்ளும் புறத்தும்**
> **உலையுளும் உள்ளத்து மூழ்கிநின் றேனே** (திரு.2632)

என்னும் பாடல் விளக்குகின்றது. இதில் மலை என்பது சிரசு; வானகம் என்பது நெற்றி; நடுமுதல் பிரமப்புழை வரை உள்ள பகுதி; புறம் என்பது விரிந்த சகஸ்ரதளம்; உலையுள் என்பது மூலாதாரமாகிய உலை; உள்ளம் என்பது மனமண்டலம். குரு உபதேசித்தபடி சீடன் தன்உடலில்,

* சிரசிலும், அதன் மேலும் உணர்வை எழச்செய்தல்
* மூலாதாரத்துள்ள இறையுணர்வை மேலெழச் செய்தல்
* பிரமப்புழையிலுள்ள சகஸ்ரதளத்தை மலரும்படி செய்தல்

என்னும் முச்செயல்களையும் செய்து இறையனுபவத்தைத் தன்னுள் காணக் குருவின் அருளாசியும் உபதேசமும் மிகவும் இன்றியமையாதது ஆகும்.

திருமூலர், இறையனுபவத்தை முதலில் தான்உணர்ந்து பின் தான்பெற்ற அனுபவத்தைத் தன்சீடனுக்குக் காட்டிக் கொடுப்பான் குரு என்று விளக்குகின்றார். ஒழுக்கம் மிக்க துறவியே இதனைச் செய்ய முடியும்; போலித் துறவிகளால் இறையனுபவத்தை உணரவும் முடியாது; உணர்த்தவும் முடியாது.

***பரிசனவேதி***

பரிசனவேதி என்பது உலோகங்களைப் பொன்னாக மாற்றக் கூடியது; முப்பு பட்ட உலோகங்கள் பொன்னாவதைப் போலக் குருவின் திருவடி தீட்சை பெற்றவர் யாவரும் மும்மலம் தீர்ந்து சிவகதி பெறுவர் என்பது திருமூலரின் கருத்தாகும். இத்தகைய

பரிசனவேதி ஒழுக்கத்தில் தவறாது அகமும் புறமும் தூய்மையான துறவி; இத்துறவியே உலக மக்களின் மலங்களை நீக்கக் கூடியவர்; மக்களின் மலமறுத்துப் பேரின்பம் பெறச் செய்வதே துறவிகளுக்குரிய ஒழுகலாறாகும்.

**போலித்துறவி**

இம்மை - மறுமை, பிறப்பு - இறப்பு, இரவு - பகல், நன்மை - தீமை, இன்பம் - துன்பம், இல்லறம் - துறவறம் என வாழ்வின் கூறுகள் ஒவ்வொன்றுக்கும் இருநிலைகள் உள்ளன. அவ்வாறே மெய்ப்பொருளாகிய இறைவனை அடைகின்ற நிலையிலும் இருநிலைகள் உள்ளன. இல்லற வாழ்க்கையில் தோல்வியுடைந்தவர்கள் உண்மைத் துறவிகளுக்குள்ள சிறப்பையும், சமுதாயத்தில் இல்லறத்தார் துறவியரைப் பாதுகாத்துப் போற்றுவதையும் கண்டனர்; முயற்சியும் உழைப்புமின்றிச் சமுதாயம் துறவிகளுக்குத் தரும் மதிப்பை மட்டும் கருத்திற்கொண்டு போலித் துறவிகளாக நடமாட முற்பட்டனர். அதனால் திருமூலர் இத்தகைய போலித் துறவிகளின் நடமாட்டத்தைக் கண்டிக்கும் நோக்கத்தோடு அவவேடம், அபக்குவன், இராசதோடம் அ-சற்குரு என்னும் தலைப்புகளில் தம் கருத்துகளை வெளிப்படுத்தியுள்ளார்.

*போலித்துறவிகளைக் கண்டறிதல்*

அறியாமையுடையவர் நூலும் சிகையும் அணிவதால் நாட்டில் உள்ளவர் வாடவும், மன்னன் பெருமை குன்றவும் நேர்கின்றது; அதனால் போலித் துறவியர் ஆடம்பரமாக விளங்கும் பூணூலையும் சிகையையும் களைந்து விடுவது நல்லது; நாட்டுக்கும் மன்னனுக்கு அது நன்மை பயக்கும்,

ஞான மிலாதார் சடைசிகை நூல்நண்ணி
ஞானிகள் போல நடிக்கின்றவர் தம்மை
ஞானிக ளாலே நரபதி சோதித்து
ஞானமுண் டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே (திரு.242)

என்பதற்கேற்ப மன்னன் இத்துறவிகளை ஞானிகள் சிலரைக் கொண்டு சோதித்தறிவான். அறிந்தபின் பழகிய யானையைக் கொண்டு புதிய யானைகளைப் பிடிப்பதுபோன்ற ஞானம் உண்டாக்குதற்கு முயல்வான் மன்னன் என்று திருமந்திரம் கூறுகின்றது.

உணவு உண்பதையும், உலக இன்பங்களைத் துய்ப்பதையுமே குறிக்கோளாகக் கொண்டு மிகையான ஆடம்பரங்களாலும் பொய்யான தவவேடங்களாலும் மக்களையும், உலகத்தையும் மிரட்டிக் கொண்டிருக்கும் போலித் துறவிகளைத்

திருமூலர் சாடுகின்றார் (1639). எனவே அவர் காலத்திலேயே போலித் துறவிகள் இருந்து இருக்கின்றனர். இத்தகைய வேடதாரிகள் குறித்துப் பல பாடல்களைத் திருமந்திரத்தில் காணமுடிகின்றது.

### *பொய்வேடம் களைதல்*

புலன்கள் அடங்கக்கூடிய, பந்தபாசங்கள் அறுந்து போகக்கூடிய தவஞானம் உருவாகாதவர்கள் துறவிகள்போல் பொய் வேடமிட்டு, நாட்டைக் கெடுக்கும் ஈனச் செயல்களில் ஈடுபட்டால் அதுநாட்டின் மானத்தைக் கெடுக்கும். இவர்கள் வாழும் பூமிக்கு அவமானச் சின்னங்கள். இந்தப் போலிகளின் பொய்வேடத்தைக் களைந்து, உண்மையை உலகு அறியச் செய்ய வேண்டும். இதுவே நன்மையும், பக்தர்களுக்கு மகிழ்ச்சியையும் தரும் (1640) என்கின்றார்.

### போலித்துறவிகளின் அடையாளங்கள்

உண்மையான துறவிகளின் அடையாளங்களையும், பண்புகளையும், போலித் துறவிகளின் அடையாளங்களையும், பண்புகளையும் திருமூலர் சில பாடல்களில் கூறுகின்றார்.

மெய்ஞானத்தை உணர்ந்த பின்னரே துறவு வேடம் தரிக்க வேண்டும். உண்மையான ஞானநிலையை அடைந்தவர்களுக்கு எந்த வேடமும் தேவையில்லை என்பதையும் உணர்த்துகின்றார் (1652).

துறவு என்பது காவி, கமண்டலம் போன்ற வேடங்களில் இல்லை. இது மனம், எண்ணம் சார்ந்த நிலை. ஞானத்தால் பற்றற்ற நிலையை அடைவதே உண்மைத் துறவிக்கான அடையாளமாகும். போலித்துறவிகள் பணம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு ஆரவாரமான பேச்சுகள், பிரசங்கங்கள் என்று சுத்தித் திரிவர் (1655). இவர்கள் மாயத் தோற்றத்தாலும், பேச்சாலும், ஆரவாரத்தாலும், மக்களை அசரவைத்துப் பொருளைப் பிடுங்குகின்றனர். உண்மையான துறவிகள் உயிர் இருந்தும் உலக நாட்டம் இன்றிச் செத்த பிணம்போல் திரிந்து கொண்டிருப்பர். இவர்களிடம் மனமயக்கம், இச்சை என்பன அறவே இராது. அகங்காரம் அழிந்துபோகும். இறைவனோடு ஒன்றிய நிலையில் செயல் அற்ற நிலைக்கு வந்து விடுவார்கள். ஆரவாரங்களோ, ஆர்ப்பாட்டங்களோ, பிரசங்கங்களோ இராது. எல்லாம் அவன் செயல்; ஆட்டுவிப்பவன் அவன். இயங்குவது நான் என்ற எல்லையற்ற ஆனந்த நிலையை அடைவர். இதுவே உண்மைத் துறவியின் அடையாளம்.

குரு தெய்வத்திற்கு ஒப்பானவர். குரு நிந்தை தெய்வ நிந்தைக்கு ஒப்பாகும். பொய்த்துறவு பூணுபவர்கள் பூமிக்கே இழுக்கு என்கின்றார் திருமூலர். இவர்களது போதனையில் ஒளி இராது; அற உணர்வு குன்றும்; தானும் கெட்டுப் பிறரையும் கெடுப்பர். இவர்கள் தீய கர்மாக்களைச் சம்பாதித்துக் கொள்கின்றனர் (2023).

பொய்யான போதனைகளைச் செய்து ஆதாயம் ஈட்டும் குரு அறிவில்லாதவன்; முட்டாள் கூட்டத்தின் தலைவன் (2022).

**நல்ல குருவின் இலக்கணம்**

மெய்ஞ்ஞானம் இல்லாதவர்களை மெய்ஞ்ஞானகுரு வழி நடத்தினால் மெய்ஞ்ஞானம் கண்டு, வீடுபேறடைவர். போலிகள் வழி நடத்தினால் அவர்களும் படுகுழியில் வீழ்ந்து சீடர்களையும் படுகுழியில் தள்ளிவிடுவர்.

பந்தபாசங்களில் இருந்து விடுதலை பெற்று, உண்மையான அன்பு உள்ளவரே நல்ல குரு ஆவர். கற்பனையால் வரும் உள்ளக் கிளர்ச்சிகளை வெல்லல், காமம், குரோதம், மோகம், லோபம், மதம், மாச்சரியம் ஆகியவற்றை வெல்லல், மன அழுக்கு அகலல், வீண்விவாதம், சச்சரவுகளில் ஈடுபடாதிருத்தல் போன்றவையே நல்லகுருவின் இலக்கணமாகும். இதற்கு மாறானவர்கள் அசற்குரு (போலிகுரு) ஆவர்.

**இறைவனை அடைதல்**

இப்பிரபஞ்சத்தில் நாம் கண்ணால் காணக்கூடிய பொருள்களும் உண்டு; காண முடியாத பொருள்களும் உண்டு; உணர்வால் உணரும் பொருள்களும் உண்டு, இம்மூன்றில் இறைவன் ஊனக்கண்ணால் காணக் கூடியவன் அல்லன்; அவன் மிகவும் நுண்மையானவன்; ஆதலால், உலக மக்களிடையே கடவுள் உண்டு, இல்லை என்னும் இருவேறு வாதங்கள் எழுந்தன. முடிந்த அளவு சிந்தையைச் சிவன்பால் வைத்து, முடிந்த அளவு இறைவனைப் பற்றியும் ஆன்மாவைப் பற்றியும் இறைவன் இல்லை என்பவர்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டும் என்கின்றார் திருமூலர். இறைவன் இல்லை என்று அவர்கள் சொன்னாலும்

> **இல்லை யெனினும் பெரிதுளன் எம்மிறை**
> **நல்ல வரனெறி நாடுமின் நீரே** (திரு.2103)

என்று கூறல் வேண்டும். எனவே இறைவன் உண்டு என்று தெளிந்து சிவநெறி செல்லுங்கள் என்று திருமந்திரம் கூறுகின்றது.

**ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்**
**நன்றே நினைமின் நமன்இல்லை நாணாமே**
**சென்றே புகும்கதி இல்லை நும்சித்தத்து**
**நின்றே நிலைபெற நீர்நினைந்து உய்மினே** (திரு.2080)

என்ற பாடலில் இறைவன் ஒருவனே என்பதை உணர்த்துகின்றார்.

உலக வாழ்க்கையில் மக்களுக்குப் பிறவிகள் தொடர்வதன் காரணம் தம்மைப் பற்றிய உண்மையை உணராமையே ஆகும். தம்மைத் தாமேஉணர்ந்து கொள்வதற்காகவே உயிர்களுக்கு இச்சையை ஊட்டுகின்றான் இறைவன். உயிர் இவ்வுலகின்மீது கொண்டுள்ள இச்சை பயனற்றது என்பதை உணரும்வரை பிறவி தொடரும்; பிறவி தொடரும்வரை மண், விண், சொர்க்கம், நரகம் ஆகியனவும் தொடரும்.

மனிதன் உலகில் தன்னை உணர்ந்து இறையுணர்வு பெற்ற போது இயற்கையை இறைவனாக வணங்கினான்; இவ்வியற்கை வணக்கத்திற்குக் காரணம் மனிதனிடம் ஏற்பட்ட அச்ச உணர்வே ஆகும். இதுவும் இறப்பின் அடிப்படையில் எழுந்ததே.

**அழிகின்ற வோருடம் பாகுஞ் செவிகண்** (திரு.2140)

என்னும் திருமந்திர வாக்கு தெளிவுபடுத்துகின்றது. இதுபோல் தன்உடலும் அழிதலாகாது என்று நினைத்து, தன்னை இறப்பிலிருந்து காத்துக் கொள்ளவேண்டும் என்னும் எண்ணத்தில் உயிர் வேறு, உடல் வேறு என்பதை அனுபவத்தால் உணர்ந்து, பஞ்சபூதங்களைப் பற்றியறிந்து, தன்னையும் தான்வாழும் உலகையும் இயக்கும் ஓராற்றல் உண்டு என்று அறிந்தான்; அதுவே இறையுணர்வாக உருவானது. இதன் வளர்ச்சியே மதம். மதம் என்பது இறைவன், உலகம், உயிர் என்னும் மூன்றன் கூட்டமைப்பை விளக்கும் நெறியாகும்.

## இறைவனை அடைதற்குரிய வழிமுறைகள்

திருமந்திரம் இறைவனை அடைவதற்கான பல படிநிலைகளை விளக்குகின்றது. அவையாவன:

### 1. சுத்த சைவம்

சடங்குகளில் மனம் நிலைபெறாது, தலைவனான சிவனை அறிந்து, பின்தன்னையும் தன்னைப் பிணைந்துள்ள தளைகளையும் கடந்து, தியானம் செய்து, இறைவன் திருவடிப் பேற்றினை அடைதல் **சுத்த சைவம்** ஆகும். உலகைப் படைக்கும் இறைவன் சத்து; அறிவு வடிவானவன் என்று தெரிந்து கொள்ளுதல்; உயிராகிய தன்னை அறிதல்; பசு, பாச நிலைகளை நீக்கி, அசுத்த,

சுத்தமாயைகளில் தோயாமல் அழியாத சிவத்தைத் தியானித்தல் முதலியன சுத்தசைவத்திற்குரிய செயல்முறைகளாகும். இதனை,

சத்தும் அசத்துஞ் சதசத்துத் தான்கண்டு
சித்தும் அசித்துஞ் சேர்வுறா மேநீத்தும்
சுத்தம் அசுத்தமுந் தோய்வுறா மேநின்று
நித்தம் பதஞ்சுத்த சைவர்க்கு நேயமே (திரு.1420)

என்னும் திருமந்திரத்தில் விளக்குகின்றது.

2. அசுத்த சைவம்

வேடம் பூண்டு சரியை, கிரியை என்ற இரண்டு நெறிகளில் நிற்பவர் பற்றிக் கூறுவது அசுத்த சைவம். இந்நெறியில் செல்பவர் சைவ சமயத்திற்குரிய சின்னங்களே அணிந்து கொள்பவர். இரு காதணிகள், திருநீறு, தலைமாலை, செபமாலை, கண்டமாலை என்னும் உருத்திராட்சமாலை ஆகியன அணிவர் (1423). இவற்றோடு பொன்னால் ஆன கடுக்கன்கள், சிவவேடத்திற்குரிய ஆடைகளை இடையிலும் மேற்புறத்தும் உடுப்பர்; உபதேசம் பெற்றுச் சைவ ஆகமங்களைச் சொல்வர். இத்தகையவர் அக ஒழுக்கத்திற்குக் கொடுக்கும் சிறப்பைப் போலவே புற ஒழுக்கத்திற்கும் சிறப்புக் கொடுப்பர் (1424). இவர்கள் பிரணவத்தை உணர்ந்து மோனநிலை கைவரப்பெற்று அட்டமா சித்திகளை அடைந்து இறைவனைச் சேர்வர். இவ்வாறு திருமந்திரம் அசுத்த சைவர்களைப் பற்றிக் கூறுகின்றது.

3. மார்க்க சைவம்

மார்க்க சைவத்தில் நிற்பவர்கள் மனித நிலையிலிருந்து உயர்ந்து சிவத்தன்மை அடைந்து சிவபோகத்தில் திளைப்பர். இவர்கள் பொன்னால் செய்த உருத்திராட்சத்தை அணிவர்; திருநீறாகிய வெண்ணீற்றையும் புறத்தில் அணிந்திருப்பர். ஆகமக் கருத்துகளை உணர்ந்து வீடுபேற்றிற்கும் உதவும் எண்வகைப் பொருள்களைச் சிந்தித்திருப்பர். அவை ஆன்மாவாகிய தான், சதாசிவமாகிய இறைவன், பதி, பசு, பாசம், முன்வினைப்பயன், நல்வினை, தீவினை, குற்றமற்ற வீடுபேறு ஆகியன. ஞானத்தால் எல்லாம் சிவனே என்று சிந்தையைத் தெளிவித்துப் பசுவுக்குத்தான் பாசத்தொடர்பு ஏற்படும் என்பதையும், பதியாகிய இறைவனுக்குப் பாசம் கிடையாது என்பதையும் உணர்வர். இதற்குச் சான்றாக,

விண்ணினைச் சென்றணு காவியன் மேகங்கள்
கண்ணினைச் சென்றணு காப்பல காட்சிகள்
எண்ணினைச் சென்றணு காமல் எனப்படும்
அண்ணலைச் சென்றணு காபசு பாசமே (திரு.1436)

என்னும் பாடல் விளக்குகின்றது.

### 4. கடுஞ்சுத்த சைவர்

ஞானநிலையில் ஆடம்பரம் ஏதும் இன்றி, தான்அவனாய் நிற்கும் நிலை கடுஞ்சுத்த சைவம். முதல் மூவகைச் சைவரும் புறச்சின்னங்களை அணிவர்; கடுஞ்சித்த சைவர்க்கென்று புறச்சின்னம் ஏதுமில்லை; இவர்கள் மனத்தால் பாசத்தையும் ஆடம்பரத்தையும் நீத்தவர்கள்; சிவஞர்னத்தை மட்டுமே விரும்புபவர்கள். ஐங்கோசங்களையும் ஆறாதாரங்களையும் கடந்து சுத்தமாயையும் நீத்து, பிறவிக்குக் காரணமான பாசங்களையும் விட்டு, தம்மைத்தாம் அறிந்து கொள்வர். ஆகமங்கள் குறிப்பிடும் பதமுத்திகளில் சேராதவர்கள். பிரணவப் பொருளான இறைவனைப் பரமுத்தியால் அடைவர்.

நானென்றுந் தானென்றும் நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவ நல்கலால்
தானென்று நானென்றுஞ் சாற்றுகில் லேனே (திரு.1441)

என்னும் பாடலும் இதனை விளக்குகின்றது.

இறைவனை அடைவதற்கான வழிமுறைகளில் மதத்தைக் குறிக்கும் புறச்சாதனங்களை அணிதல் முதல்நிலை; மனமடக்கித் தளை நீக்குதல் இரண்டாம் நிலை; ஆகமக் கருத்துகளை உணர்ந்து வீடுபேற்றைச் சிந்தித்திருத்தல் மூன்றாம் நிலை; சமய சிந்தனைகளை நீக்கிப் புறச்சின்னங்கள் அணியாது மனத்தினால் இறைவனை நினைந்து பரமுத்தி உணர்ந்து, சாயுச்சிய நிலை பெற்று இறைவனோடு இரண்டறக் கலந்து, சீவன் சிவனாதல் நான்காம் நிலையாகிய இறுதிநிலை. இந்த இறுதிநிலையைக் கடுஞ்சுத்த சைவரிடத்தில் காண்கின்றோம்.

### 5. சரியை (சீலம்)

சரியை, கிரியை, யோகம் என்ற மூன்றும் ஞானத்திற்கு வழி; ஞானம் முத்திக்கு வழி.சரியை வழியில் செல்வது என்பது உலக வாழ்வில் ஈடுபாடு கொண்டிருக்கும் மக்கள், அது நிலையற்றது என உணர்ந்து இறைவனுக்குத் தொண்டு செய்ய முற்படுவது ஆகும். ஆலயத் தொண்டுகள் செய்து இறைவன் பெருமையைப் பாடுவது சரியைநெறி ஆகும். இதனைத் திருமூலர் தம்மாணாக்கர்களான கஞ்சமலையான், காலங்கி முதலானோரை முன்னிலைப்படுத்திக் கூறுகின்றார். அவ்வாறு சரியை நெறியில் இறைவனைப் பணிந்தால் சிவன்,

கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே (1445)

என்பதற்கேற்ப அருள்புரிவான். தன்னை உணர்ந்து வழிபடுவார் உள்ளத்தை அவன் கோயிலாக ஏற்பான்; பின் அடியவர் தம் மும்மலங்களை நீக்குவான். இதனால் சரியை நெறிநிற்பவர் மனம் தெளிவுற்றுத் தாம் உலக வாழ்வுக்காகச் செய்யும் செயல்களைத் தள்ளி, இறைவாழ்வுக்கான தொண்டுகளை மேற்கொள்வது என உறுதி கொண்டு திருப்பணி செய்வர் என்று திருமந்திரம் எடுத்துரைக்கின்றது; சரியை குறித்து 8 பாடல்கள் உள்ளன.

6. கிரியை (நோன்பு)

உடல் பற்றை நீங்கி இறையைத் துதித்தால் அவனை அடையலாம் எனும் கிரியை பற்றி இந்நூலில் ஆறு பாடல்கள் உள்ளன. இந்நெறியாளர் சரியையாளரைப் போன்று கோயில்களைத் தேடிச்சென்று வழிபாடு செய்யாது எல்லாவிடத்தும் சிவன் நிறைந்துள்ளான் என்னும் மனத்தெளிவோடு இறைவன் திருவடியை சரணடைந்து,

தத்தும் வினைக்கடல் சாராது காணுமே (திரு.1451)

என்பதற்கேற்ப, மேன்மேலும் பெருகிவரும் வினைகள் தம்மை வந்து அணுகாதிருக்கத் தத்துவ நீக்கம் பெறுவர். கிரியை நெறியாளர். சந்தனம் முதலான மணப்பொருள்களை அளவில்லாமல் தூவி வழிபடினும் மனம் ஒன்றவில்லையெனில் அதனால் பயனில்லை என்பதை உணர்ந்தவர்கள் கிரியையாளர். அகமும் புறமும் ஒன்றி வழிபாடு செய்வாரோடு சிவன் சோதி வடிவாகக் கலந்துவிடுவான். இக்கருத்துக்கு அகச் சான்றாக,

என்பினுட் சோதி இலங்குகின் றானே (திரு.1456)

என்னும் திருமந்திரப் பாடலடி விளங்குகின்றது.

மனம் தெளிந்து, உணர்வு ஒன்றி, கிரியை புரிந்தால் வழிபடும் உள்ளத்தில் இறைவன் ஒளியாகத் தங்குவான் என்பது கிரியை மார்க்கம் தரும் செய்தியாகும்.

7. யோகம் (செறிவு)

உலகவாழ்வில் முழுவதுமாக ஈடுபடுபவர் சரியையாளர்; உலக நினைவற்று உள்ளமொன்றி வழிபாட்டினை மேற்கொள்பவர் கிரியையாளர்; இந்நிலையில் அவர்தம் என்பிலும் இறைவன் தன் அருட்கருணையால் சோதி வடிவமாகக் கலப்பான். கலந்த பின்பு யோகநிலையை ஆன்மா நாடும். இந்நிலையில் மூலாதாரத்திலுள்ள குண்டலினியோடு பிராணனைக் கூடச்செய்து பின் சிவனோடு பொருந்தச் செய்வர். யோகியர்க்கு இந்த யோக நிலையில் உடல்

உணர்வுகளும் பிற தொடர்பான சிந்தனைகளும் அற்றுவிடும். இதனை,

> சொறியினுந் தாக்கினுந் துண்ணென் றுணராக்
> குறியறி யாளர்க்குக் கூடலு மாமே (திரு.1457)

என்னும் பாடல் தெரிவிக்கின்றது.

8. ஞானம் (முத்தி)

இறைவனை முழுவதுமாக அறிந்துகொள்வது ஞானம் ஆகும். சரியை, கிரியை, யோகம் இவற்றால் சிறிதுசிறிதாகச் சிவானந்தத் தேறலை நுகர்ந்த ஆன்மா பேரின்பமாகிய இறையின்பத்தில் திளைக்கும் நெறி ஞானநெறி. இதன் சிறப்பை,

> ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை
> ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
> ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்
> ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே (திரு.1467)

என்று திருமந்திரம் குறிப்பிடுகின்றது.

சிவஞானிக்குரிய பண்புகள் நான்காபும். அவை ஞானத்தில் - சரியை - கிரியை - யோகம் - ஞானம் என்பன. ஞானத்தின் சரியை- திருவடிப் பேற்றினை ஞானியர் கூறக்கேட்டல், ஞானத்தின் கிரியை - திருவடிப் பேற்றினை நாடல், ஞானத்தில் யோகம் 36 தத்துவமும் கடந்த அருள்வெளியில் காணும் சிவஒளி. ஞானத்தில் ஞானம் யான் எனது எனும் செருக்கறுத்தல் என்று இதனைத் திருமூலர் விளக்கியுள்ளார்.

9. சன்மார்க்கம் (நன்னெறி)

திருமூலர் இறைவனை அடைவதற்குரிய நெறிகளாகச் சன், சக, சற்புத்திர தாசமார்க்கங்கள் நான்கினைக் கூறுகின்றார். இவற்றை ஞானம், யோகம், கிரிகை, சரியை என்றும் கூறுவர்.தான் அவனாம் தன்மையடைதல் சன்மார்க்கம் ஆகும்; இந்நெறியில் நிற்பவர்கள் காலனை வென்ற இறைவனது திருவுள்ளக் குறிப்பை உணர்ந்தவர்களாவர். திருமந்திரம்,

> கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே (திரு.1477)

என்று இதனை எடுத்துரைக்கின்றது.

சன்மார்க்க நெறியில் குரு முக்கியப்பங்கு பெறுகின்றார். குருவிடம் சிவத்தின் ஆற்றல் பதிந்துள்ளதால் குருவையே சிவமாகக் காண்பதும், பூசை செய்து வழிபடுவதும், தியானம் செய்து அவரைத்

தீண்டித் திருவடிகளைச் சிரமேல் சூடுவதும் சன்மார்க்க நெறிக்கான வழிமுறைகளாகும். இவற்றைப் பின்பற்றுபவர் பசுபாசம் நீங்கி முக்தியடைவர்(திரு.1486). சன்மார்க்கம் என்பது நன்னெறியாகும் மெய்ப்பொருளை நாடி எதிலும் வேற்றுமைகள் அற்ற நிலையில் இறைவனைத் தேடுவதும். சமயம் கடந்த நிலையும் இதுவேயாகும். திருமூலர் சன்மார்க்கம் பற்றி 11 பாடல்கள் பாடியுள்ளர்.

### 10. சகமார்க்கம் (தோழமை நெறி)

பசுவாகிய ஆன்மா பதியோடு நெருங்கிப் பழகுவதைச் சகமார்க்கம் என்னும் தோழமை நெறியிற் காணலாம். இந்நெறி பிறப்பு இறப்புகளைத் தவிர்த்து முக்தியளிக்கக் கூடியது; துவாதசாந்தப் பெருவெளியில் நிற்பவர் இறவாநிலை அடைவர்; சகமார்க்கம் தோழமை நெறி என்பதனால் இந்நெறி நிற்பவர் யோகத்தால் சிவசாருபம் பெறுவர். சிவசாருபம் அல்லது சிவரூபம் பெறுதல் என்பது ஒளியுடல் பெறுதல் என்பதாகும். ஒளியுடல் பெற்றவர் உலக மக்கள் அடையும் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கையும் பெற்றவராவர். இவர்கள் புலனைந்தையும் வென்றவராதலால் இவர்தம் உள்ளத்தில் இறைவன் பொருந்துவான். அவன் ஆன்மாவைப் பிணித்துள்ள தத்துவங்களை நீக்கி வீடளிப்பான். இக்கருத்துகளைத் திருமந்திரம் (1488, 1489, 1491, 1493) மூன்று பாடல்களில் தெரிவிக்கின்றது.

### 11. சற்புத்திரமார்க்கம் (மகன்மை நெறி)

மகன் தந்தைக்குப் பணிவிடை செய்யும் முறையில் பக்தியுடன் வழிபடுவது சற்புத்திரமார்க்கமாகும். சிவன் உருவைக் கண்டும், நினைத்தும் வழிபடுதல் (திரு.1469;1500).நின்றும் கிடந்தும் தொழுவாருக்கு இறைவன் வெளிப்பட்டு அருள்வான்; அத்துடன் ஹூம் என்ற சூரியனையும், ஸம் என்ற சந்திரனையும் இணைத்து மனத்தால் உயர்ந்து இறையின்பத்தைப் பருகி, இறைவனைப் பற்றுக்கோடாகக் கொண்டு நிற்பர்; இம்மார்க்கத்தினரைக் கருவில் செலுத்துகின்ற வினைக்கூட்டங்களும் சென்று பணியும்.

### 12. தாசமார்க்கம் (பணிநெறி)

திருக்கோயிலைத் தூய்மைப்படுத்துதல், விளக்கேற்றுதல் முதலான தொண்டுகள் செய்யும் நெறியே தாசமார்க்கம் என்பதாகும். இதனைத் திருமந்திரம் ஐந்து பாடல்களில் கூறுகின்றது. இது கோயிலுக்குச் சென்று சிவனது உருவை நோக்கிச் செய்யும் வழிபாடாகும் (தொண்டு). இதனை,

எளியனல் தீப மிடல்மலர் கொய்தல்
அளிதின் மெழுகல் அதுதூர்த்தல் வாழ்த்தல்
பளிமணி பற்றல் பன்மஞ் சனமாதி
தளிதொழில் செய்வது தான்தாச மார்க்கமே
(திரு.1502)

என்ற பாடல் விளக்குகின்றது.

13. சாலோகம்

சாலோகம் என்பது இறைவன் உலகம் என்னும் பொருள் தரும். இறைவனுடன் ஆன்மாவுக்கு ஏற்படும் தொடர்புகளை இது விளக்குகின்றது.

| | | |
|---|---|---|
| சரியைநெறி | சாலோகம் | இறைவனது அருளுலகில் நிற்பவர்; இறைத்தொண்டு செய்பவர். |
| கிரியைநெறி | சாமீபம் | இறைவன் அருகில் நின்று வழிபாடு செய்பவர். |
| யோகநெறி | சாரூபம் | இறைவன் உருவம் பெறுபவர்; புலனடக்கி உடலும் உள்ளமும் தூய்மையடைபவர். |
| ஞானநெறி | சாயுச்சியம் | இறைவனுடன் இரண்டறக் கலப்பவர்; இறைவன் வேறு; ஆன்மா வேறு என்று இரண்டாக இல்லாமல் இறைவனோடு ஒன்றுபடுவர். |

திருமந்திரம் சாலோகம் முதலான நான்கிற்கும் இத்தகைய விளக்கம் தருகின்றது.

14. சாமீபம்

சாமீபம் என்னும் சொல் இறைவன் அருகில் இருத்தல் என்ற பொருள் தருவதாகும்.

பாசம் பசுவான தாகும்இச் சாலோகம்
பாச மருளான தாகும்இச் சாமீபம்
பாசஞ் சிரமான தாகும்இச் சாரூபம்
பாசங் கரைபதி சாயுச் சியமே (திரு.1509)

என்பது திருமந்திரம். பரமூர்த்தி அடைந்த ஆன்மாவை மீண்டும் பிறவிக்கு வாராது தடுக்கும் படிநிலைகளில் ஒன்றே சாமீபம் என்று கொள்ளலாம்.

**15. சாருபம்**

இறைவன் உருவம் பெறுதல் சாருபம் ஆகும். சாருபநிலை யோகத்தில் நின்று சமாதி கைகூடியவர்களுக்குக் கிட்டுவதாகும். ஞானநெறி நிற்பவர்களுக்கு மட்டுமே இறைவன் உருவம் கிட்டும். இத்தன்மையடைந்தவரது உடல் யோகத்தினாலும், பிராணாயாமத்தினாலும் ஒளியுடல் ஆகும்.

அங்கத் துடல்சித்தி சாதன ராகுவர்
இங்கிவ ராக விழிவற்ற யோகமே (1510)

விரும்பிய கடவுளின் ஒளியுடல் தன்னை அபேதமாகப் பாவித்துச் சமாதியுறல் ஆகும், பேதமற்ற நிலையாகும் என்று திருமந்திர அடிகள் இதனை நன்கு விளக்குகின்றன.

**16. சாயுச்சியம்**

சாயுச்சியம் என்பது இறைவனோடு இரண்டறக் கலத்தல் என்னும் பொருள்படும். இச்சொல்லிலுள்ள சாருதல் என்னும் பகுதி சிவனோடு இரண்டறப் பொருந்துதலும் நான்கு வகையாகப் பகுக்கப்படுகின்றது. முதல்நிலை, விழிப்பின்கண் தன்னை மறந்திருத்தல்; இரண்டாவது நிலை, ஐம்புலன்களில் ஒன்றான கண் விழித்திருப்பினும் அது தன்செயல் மறந்திருத்தல்; மூன்றாவது நிலை, சிவத்துடன் ஆன்மா ஒன்றுபடுதல்; நான்காவது நிலை, இறையனுபவத்தில் திளைத்த உயிர் அதிலேயே நிலைபெற்று மேன்மேலும் திளைப்பதாகும். இந்த நான்காவது நிலையே சாயுச்சிய நிலை. இதுவே வீடுபேறடையும் சிவானந்த நிலையான பேரின்பம் ஆகும்.

**17. சத்திநிபாதம்**

ஆன்மாவைப் பற்றியிருக்கும் மலங்கள் நீங்க அருளைத்தரும் சத்திகள் ஆன்மாவில் வந்து பதிதல் சத்திநிபாதம் எனப்படும். அருள் பதிவுக்கேற்ப ஆன்மா விளக்கமுற்று ஒளிநிலை பெறும். இச்சத்திநிபாதம் நான்கு படிநிலைகளை உடையது. அவை மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என்பன.

**18. ஆறந்தம்**

மேற்கூறிய நெறிகளில் மட்டுமில்லாமல் ஆறு அந்தங்களின் வழியாகவும் இறைவனை அடையமுடியும் என்பதை ஆறந்தம் என்னும் பகுதியில் திருமந்திரம் விளக்குகின்றது.

அந்தம் என்றால் முடிவு என்பது பொருள். ஆறு முடிவுகளாகத் திருமந்திரம் குறிப்பன; வேதாந்தம், சித்தாந்தம்,

நாதாந்தம், யோகாந்தம், கலாந்தம், போதாந்தம் என்பனவாகும் (2570).

**வீடுபேறு**

வீடுபேறு அடைதலே ஆன்ம ஈடேற்றம் ஆகும்; அதனை நோக்கியே சமயங்களின் வாதங்களும் அமைந்துள்ளன. வீடு என்றால் விடுபடுதல்; பேறு என்றால் பெறுதல். விடுதல் என்பது உயிர் ஆகிய ஆன்மா உடற்பற்றையும், உலகப் பற்றையும், தொண்ணூற்றாறு தத்துவங்களையும் விடுதல் என்பதாகும். பெறுதல் என்பது பேரின்ப நிலையைப் பெறுதல் ஆகும். இப்பேரின்ப நிலை அடைந்த உயிர் பிறப்பு, இறப்பு என்னும் பந்தங்களிலிருந்தும் விடுபடுகின்றது.

சிற்றின்பம் விரும்புவார் பெண்களை நாடி, சொல்லாடி, இன்பம் துய்த்துத் தம்மை மறந்திருப்பர்; பேரின்பம் விரும்புவார் செயலும் இத்தகையதே. சிதாகாயப் பெருவெளியை விரும்பும் ஆன்மா பேரின்பத்தை நாடுகின்றது; அதற்காகக் குண்டலினி யோகம் மேற்கொள்ளும்போது பேரின்ப உணர்வு உதிக்கின்றது. இவ்வுணர்வால் நாததரிசனம் ஏற்பட்டுத் துவாதசாந்தத்திற்குச் சென்று உடலுணர்வு கெட்டு, இன்பநுகர்வு கிட்டுகின்றது. இதில் ஆன்மா தன்னையே மறக்கின்றது. இதனை,

**புணர்ச்சியுள் ஆயிழை மேலன்பு போல**
**உணர்ச்சியுள் ஆங்கே ஒடுங்கவல் லாருக்**
**குணர்ச்சியில் லாது குலாவி உலாவி**
**அணைத்தலும் இன்பம் அதுவிது வாமே** (திரு.283)

என்று திருமந்திரம் விளக்குகின்றது. குளத்திலுள்ள தாமரைக்கொடி நீரில் இறங்குபவரைச் சுற்றிக் கொள்வதைப்போல இறையன்பில் ஈடுபட்டு வீடுபேறடைதலைக் குறிக்கோளாகக் கொண்டவர்களையும் வீடுபேறு பொய் என்று இகழ்பவர் தடுப்பார்கள்; இறையுண்மையை உணராத இவர்கள் மூடர்கள்; இவர்கள் இரங்கத்தக்கவர்கள்; இவற்றிற்கும் மேலாக ஞானியரை நிந்திப்பவர்கள் தீவினைகளைச் சேர்த்துக்கொண்டு பெரிதும் வருந்துவர். இவ்வாறு மோட்ச நிந்தை என்றும் தலைப்பின்கீழ் பல கருத்துகளைத் திருமூலர் கூறுகின்றார்.

வீடுபேற்றின் இயல்பு, அடைவோர் தன்மை, மறுப்போர் நிலை ஆகியவற்றைத் திருமந்திரம் பல்வேறு பகுதிகளில் இனிது விளக்கியுள்ளது.

**உடல் வழிபாடு**

உடல் வழிபாடு என்னும் தொடருக்கு உடலை வணங்குதல் என்பது ஒரு பொருள்; வழி-நெறி, படுதல்-ஒரு நெறியில் செல்லுதல் என்று கொண்டு, இத்தொடருக்கு உடலை ஒரு நெறியில் செலுத்துதல் என்றும் பொருள்.

உடல் வழிபாடு என்பது அகவழிபாடாகும். இதன் இன்றியமையாமையைத் திருமந்திரம் வலியுறுத்திக் கூறியுள்ளது.

நோய்நொடிகளுக்கு இடமளித்து அழியக்கூடிய இந்தப் பருவுடலின் கூட்டமைப்புப் பாதுகாவலோடு அமைந்தது. ஐந்து இந்திரியங்கள், ஆறு ஆதாரங்கள், முப்பது எலும்பிணைப்புகள், பதினெட்டுப் பொருத்துள், ஒன்பது பந்தல்கள், பதினைந்து எலும்பு வரிசைகள் ஆகியனவெல்லாம் சேர்ந்தது உடம்பு என்கின்றார் திருமூலர்.

உடல் அழிந்தால் உயிராகிய ஆன்மா உடலில் வாழ்வதற்கும் பக்குவம் பெறுவதற்கும் வாய்ப்பில்லாமல் போகும் என்பதால் திருமூலர் உடம்பை வளர்த்து இறவாவரம் பெறுதற்கான உணர்வைத் திருமந்திரம் வாயிலாக உலகிற்கும் உணர்த்தினார்.

தூல உடல் புறஅளவில் எண்சாண் ஆக அமைந்தது. எண்சாண் அளவான உடலில் உள்ள ஆறு ஆதாரங்களையும் அவற்றின் தொடர்பையும்,

> நாலிதழ் ஆறில் அவிர்ந்தது தொண்ணூறு
> தானித மூனவை நாற்பது நாலுள
> பாலித மூனவன் பங்கய மூலமாய்த்
> தானித மூகித் தரித்திருந் தானே (திரு.1155)

என்னும் திருமந்திரப் பாடல் விளக்குகின்றது.

இறைவன் வீட்டுச்சுவர் மாடங்களில், மண்டபங்களின் பூசையறைகளில், ஆலயங்களில், வேடம் பூண்டவரிடத்தில் உள்ளான் என்று எண்ணி உணர்ந்து வழிபட்டால் காட்சி தருவான்; இறைவன் பொய்கலந்த உள்ளத்தில் தங்க மாட்டான். திருமந்திரம்,

> பொய்கலந்தார்முன் புகுதாப் புனிதன் (திரு.2604)

என்று குறிக்கின்றது.

குண்டலினி யோகம் செய்பவர் குருவருளால் அவருணர்த்திய முறையில் உடலை ஆராதனை செய்தால் சிறப்புகள் பெறுவர். உடலில் ஒலி தோன்றும்; ஒளி பிறக்கும். அது மட்டுமல்லாமல் சகஸ்ரதளத்தை அமுதமுண்டு இறவாவரம் பெறுவர்.

**கோவில் வழிபாடு**

**அன்று நின்றான் கிடந்தான் அவன்என்று**
**சென்று நின்று எண்திசை ஏத்துவர் தேவர்கள்**
**என்றும் நின்று ஏத்துவன் எம்பெருமான் தன்னை**
**ஒன்றிஎன் உள்ளத்தின் உள்இருந் தானே** (திரு.1762)

உள்ளத்தில் உயிராகச் சுடர் விடுபவன் இறைவன். உள்ளமே சிவன் வாழும் கோயில். உள் உள்ள இறைவனைத் தரிசிக்க முடியாதவர், எங்கெங்கோ தேடி அலைகின்றனர் என்று திருமூலர் வருந்துவதை இப்பாடல் கூறுகின்றது.

எனவே திருமூலர் கோயில் வழிபாட்டு முறையை ஏற்கவில்லை. தசையும் எலும்பும் கொண்ட உடம்பே கோயில் என்று கூறும் இவர் உடம்பின் உள்ளே உள்ள இறைவனை வணங்கவே வழி கூறுகின்றார். ஊன் உடம்பே ஆலயமாக சித்திரிக்கின்றார்.

முகத்தின் கண்கொண்டு பார்க்காமல், அகத்தின்கண் கொண்டு பார்த்தால் இந்த உண்மைகளை எல்லாம் அறிந்து கொள்ள முடியும் என்கின்றார்.

இறைவழிபாடு என்பதில் அன்பே சிவம் என்கின்றார். மேலும் அன்பை ஆதாரமாகக் கொண்டவர்களால் மட்டுமே இன்பநிலையை அடைய முடியும் என்கின்றார்.

**என்பே விறகாக இறைச்சி அறுத்திட்டுப்**
**பொன்போல் கனலில் பொரிய வறுப்பினும்**
**அன்போடு உருகி அகங்குழை வார்க்கின்றி**
**என்போல் மணியினை யெய்த ஒண்ணாதே** (திரு.272)

மக்களின் துன்பத்தை நீக்க முயலுவதே இறைவனைத் தொடுவதற்குச் சமமாகும். செலுத்தும் அன்பினில் வேறுபாடு இருக்கக் கூடாது. எல்லாம் சிவமயம் என உணர வேண்டும்.

**மானுடர் ஆக்கை வடிவு சிவலிங்கம்**
**மானுடர் ஆக்கை வடிவு சிதம்பரம்**
**மானுடர் ஆக்கை வடிவு சதாசிவம்**
**மானுடர் ஆக்கை வடிவு திருக்கூத்தே** (திரு.1726)

உயிர் இருக்குமிடம் சிவலிங்கமே என்று கூறும் இப்பாடல் மனித உடலை, சிதம்பரமாகவும் சதாசிவமாகவும் குறிப்பிடுகின்றது.

ஒவ்வொருவருக்கும் அவரவர் உடலே சிவலிங்கமாகும். சிவன் உள்ளத்தில் இருப்பதால் உடல் சிவலிங்கம் ஆகின்றது.

உலகப் பொருள்களில் உள்ள உயிர் அகரமாகும். உயிர் சிவனாக இருப்பதால் அவனே அகரமாகத் திகழ்கின்றான். எந்தப் பொருளிலும் உள்ள ஆற்றல் சக்தியைக் குறிப்பது உகரமாகும். அகரமும் உகரமும் கலந்தது உலகம். ஆக, அகரம் - உயிர்; உகரம் - உடல்; உடலும் உயிரும் கலந்தது என்பதை,

அகர உகர வடிவமே சிவலிங்கம் (திரு.1753)

என்ற அடிகளால் இதை அறியலாம்.

சகஸ்ரதளம் என்று சொல்லப்படுகின்ற தலை உச்சியில் ஒளிவடிவமாக ஆத்மலிங்கம் தோன்றும். விந்துவும் நாதமும் கலந்த ஆத்மலிங்கத்தை ஆதாரமாகக் கொண்டே பஞ்சபூதங்கள் படைத்தல் தொழிலைச் செய்கின்றன.

ஒலி - ஒளி

உண்மைப் பொருளைத் தம்உடலில் உணர்ந்து உள்ளன்போடு வழிபடுபவர்களுக்கு இறைவன் வெளிப்படுவான். இதனை,

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே (திரு.1823)

என்று திருமந்திரம் பாடுகின்றது. உடம்பு, ஆலயம், உள்ளம், கருவறை; வள்ளல், சிவன்; வாய், கோபுரவாசல்; புலனைந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து; காளா மணிவிளக்கு, சீவன் சிவத்துடன் பொருந்தியபோது தோன்றும் பெருஞ்சோதி. உள்ளம் சூக்குமம் என்றும், உடம்பு தூலம் என்றும் அறிதல் வேண்டும். இறைவன் உடலை ஆலயமாகக் கொள்கின்றான்; புறவுலகியல் வழிபாட்டின் போது ஒலியின் வடிவாக மணியை அடித்தலும், ஒளியின் வடிவாகத் தீபம் ஏற்றலும் நிகழ்கின்றன. அவ்வாறே புலனொன்றி இறைவனை வணங்கும்போது, உடலில் இடியும் முழக்கமும் ஈசர் உருவம் என்பதற்கேற்ப ஒளியும் ஒலியும் தோன்றுகின்றன. இடி-ஒளி; முழக்கம்-ஒலி, இவ்வாறு ஒலியும் ஒளியுமாக விந்து நாதமாக உள்ள ஈசனை உடலிற் கண்டு மகிழ்வதும், ஒலியை உணர்வதும், ஒளியை அறிவதும் உடல்வழிபாட்டின் பாற்படுவனவாகும். திருமந்திரம் உடலில் இறைவனைச் சிவசக்தியாய்க் காண்கின்றது. விந்து சக்தி; நாதம் சிவம். விந்தின் வடிவம் வட்டம்; நாதத்தின் வடிவம், தண்டம். நாதமும் விந்தும் கலந்து உருப்பெறுவதை ஆன்மலிங்கம் என்று ஆன்மாவே இலிங்கமாதலைத் திருமந்திரம் விளக்குகின்றது.

சித்ரணி நாடி வழியாக மலைபோன்ற சிரசைப் பிராணன் சென்றடையும்போது ஒலியோடு கூடிய இறைவனைக் காணலாம். இறைவன் சந்திரமண்டலத்தில் ஒலியாகவும் விளங்குகின்றான். நாதத்தின் நிறம் செம்மை என்பதனை,

**புறமதும் எங்கும் புகுந்தொளிர் விந்து**
**நிறமது வெண்மை நிகழ்நாதம் செம்மை** (திரு.1929)

என்ற பாடல் விளக்குகின்றது.

**ஏற்றுகின்றேன் நம்பிரான் ஓர் எழுத்ததே** (திரு.884)

என்று திருமந்திரம் இறைவனை ஓம் என்னும் ஓரெழுத்தால் பிரணவத்தால் ஏத்தும் வழிப்பாட்டையும் சுட்டுகின்றது.

நமசிவாய என்னும் ஐந்தெழுத்தை இடைவிடாது ஒலிப்பதால் ஆகாயத்தில் ஒலி உண்டாகி, முகம், இதயம், உந்தி, குறி ஆகிய இடங்களுக்கு விரிந்து மூலதாரத்தை அடையும்; பின் குதம் சுருக்கப்பட்டுப் பிராணன் அபானனுடன் சேர்ந்து மேலெழும்போது சகஸ்ரதளத்தில் சென்று மோதும்; சிரசின் முன்னும் பின்னும் இறைவன் தோன்றுவான்; பிறரால் அறியப்படாத இறைவன் தன்னையுணர்ந்து கொண்டவர்முன் வெளிப்படுவான். திருமூலர் இம்முறையில் இறைவனைக் கண்டவர் என்பதால்,

**தானே யெழுந்த மறையவ னாமே** (திரு.939)

என்று பாடுகின்றார்.

ஓவியர்கள் தெய்வங்களையோ, சான்றோர்களையோ வரையும்போது உருவங்களின் பின்னால் தலைப்பகுதியைச் சுற்றி ஓர் ஒளிவட்டம் தீட்டுவர். அவ்வாறே மனிதர்கள் தலைப்பகுதியில் ஒளிதோன்றும்; இவ்வொளி தலையைவிட்டு விலகியிருக்கும் என்று திருமந்திரம் கூறுகின்றது. சிவபூமியில் இறைவனை வைத்து வழிபட்டால் சிரசின்மேல் நட்சத்திரங்கள் போன்ற ஒளிதோன்றும் என்பதை விளக்கும் திருமந்திரப் பாடல்,

**மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை**
**கூருமிவ் வானின் இலங்கைக் குறியுறும்**
**சாருந் திலைவனந் தன்னை மலயத்தூ**
**டேருஞ் சுழுமுனை இவைசிவ பூமியே** (திரு.2747)

என்பதாகும்.

ஒளி பெருகும்போது ஆன்மாவும் தத்துவங்களைவிட்டுப் புலன் அடங்குவதால் இருளில்லாத மலமற்ற நிலை ஏற்படுகின்றது;

அதனால் விடிவு என்பது இல்லாமல் போகின்றது; இந்நிலையில் ஆன்மா பரஞ்சோதியான இறைவனுடன் ஒன்றுபடுகிறது. இதனை,

பரஞ்சோதி யாகும் பதியினைப் பற்றாப்
பரஞ்சோதி என்னுட் படித்ததற் பின்னைப்
பரஞ்சோதி யுண்ணான் படியப் படியப்
பரஞ்சோதி தன்னைப் பறையக் கண்டேன் (திரு.2842)

என்ற திருமந்திரம் கூறுகின்றது. தான் தன்னுள்கண்ட ஒளியையும் ஒலியையும் திருமூலர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

ஒளியை உடலில் வழிபட்டவர்கள் பெறும் பயன்களாகப் பின்வருவனவற்றைக் கூறலாம்:

* தத்துவங்கள் அழியும்; மலங்கள் நீங்கும்
* ஒளியின் தன்மை அறிந்து இறைவனோடு கலப்பர்
* செவ்வொளி பெற்று அனைத்துலகும் சென்று வருவர்
* சாந்தியதீதக் கலையில் இருப்பவர் வேண்டுவன பெறுவர்
* காலத்தை வெல்வர்
* பிராண ஒளியே உலகம் முழுவதும் பரந்திருக்கக் காண்பர்
* சூக்கும உடலை ஒளியாகக் காண்பர்
* பதினான்கு மண்டலங்களைப் படைத்து அழித்தல் செய்யலாம்
* உடல் ஒளிபெறும்
* தேவதரிசனம் கிட்டும்
* பேரின்பமான வீடுபேறு கிடைக்கும்

**ஐந்தெழுத்து மந்திரம்**

ஐந்தில் ஒடுங்கில் அகலிடம் ஆவது
ஐந்தில் ஒடுங்கில் அருந்தவம் ஆவது
ஐந்தில் ஒடுங்கில் அரன்பதம் ஆவது
ஐந்தில் ஒடுங்கில் அருள் உடையாரே (திரு.2035)

நமசிவாய எனும் ஐந்தெழுத்து மந்திரத்தையே ஐந்தில் என்று மீண்டும் மீண்டும் இப்பாடலில் குறிப்பிடுகின்றார். இந்த ஐந்தெழுத்து மந்திரமே சிவனடியார்களின் உயிர் மூச்சாகும். நமது சித்தர்கள் பின்பற்றிய யோக தந்திர முறைகளில் இந்த ஐந்தெழுத்து மந்திரத்திற்கு மிகப் பெரிய இடம் உண்டு. இந்த ஐந்தெழுத்து மந்திரத்தில் நமது மனம் முழுமையாக ஒன்றிப் போனால், பரந்து விரிந்த இந்த உலகமே நமது கைவசமாகிவிடும்; தவங்களில் எல்லாம் பெரிய அருந்தவம் கிட்டும். இறையருள் கிட்டுவதால் ஐம்புலன்களும் நமது வசப்பட்டுவிடும்.

நமசிவாய எனும் மந்திரத்தை உச்சரிக்கும்போது மனமும் உடலும் அதனுடன் ஒன்றி ஒடுங்கிப்போக வேண்டும். இது புற அக ஆராதனை, புற ஆரவாரங்கள் இன்றி, மனமும், உடலும் ஒடுங்கி ஐந்தெழுத்து மந்திரத்தில் குவிந்து நிற்கும்போதுதான் இறையருள் கிடைக்கும். இதுவே மோனநிலையாகும்.

தந்திரயோகத்தில் இந்த ஐந்தெழுத்து மந்திரத்தை எப்படிப் பயன்படுத்துவது என்பது மிக விரிவாகத் திருமந்திரத்தில் அட்டாங்கயோகப் பகுதியில் விளக்கப்பட்டுள்ளது. ஐந்தெழுத்து மந்திரத்தில் மனம் ஒடுங்க மனப்பக்குவம் மிகமிக அவசியம் என்பதை,

> **பெருக்கப் பிதற்றில் என்பேய்த்தேர் நினைத்துஎன்**
> **விரித்த பொருட்கெல்லாம் வித்தாவது உள்ளம்**
> **பெருக்கில் பெருக்கும் சுருக்கில் சுருக்கும்**
> **அருத்தமும் அத்தனை ஆய்ந்து கொள்வார்க்கே**
> (திரு.2036)

என்ற பாடலில் திருமூலர் கூறுகின்றார். வீண்பேச்சுப் பேசிப்பேசி என்ன பயன், தோன்றி மறையும் இந்த உலக வாழ்க்கையை மட்டும் நினைத்து என்ன பயன். புலன்களால் கொள்ளும் ஆசைகளே பிறவித் துன்பத்திற்கு வித்தாகின்றன. இது வளர்ந்து நம்மை வாழ்க்கை எனும் மாயக் கயிறுகளால் பிணைத்து விடுகின்றது. எனவே புலன் இச்சைகளை, ஆசைகளை மிகமிகக் குறைத்துக் கொள்ள வேண்டும். மனம் பண்படப் பண்பட நாம் ஆன்மிகப் பயணத்தில் முன்னேறிச் செல்லமுடியும். பயணம் தொடரும்போது பிறவி இல்லாத பெருநிலையை அடையமுடியும். முக்தி நிலை அடைந்தவர்களுக்குப் பிறவி இல்லை எனத் திருமந்திரம் கூறுகின்றது (2067).

**மந்திரம்**

சிவாயநம என்னும் திருவைந்தெழுத்து மந்திரம் பற்றிச் சிலம்புதான் முதலில் குறிப்பிடுகின்றது. ஓர் நாமத்தையோ ஓர் உருவத்தையோ இடைவிடாது நினைப்பது மந்திரம். இது மனத்தை உரப்படுத்தும். அலையும் மனத்தை அடக்கும். மந்திரத்திற்கும் மூச்சிற்கும் தொடர்புண்டு. மூச்சுப்பயிற்சி மந்திரத்தோடு செய்யப்படும். மந்திர சக்தியே மனோ சக்தி; மனோ சக்தியே சீவசக்தி; சீவசக்தியே உடல் சக்தி. மந்திரம் என்பது போலச்செய்தல். நாம் செயல்புரிந்து அதுபோலச் செயல்புரிய இயற்கையைத் தூண்டுவதே நம் செயற்பாடாகும்.

இமாலயச் சந்நியாசிகள் நடுங்கும் பனிக்குளிரில் மந்திரங்களை உச்சரித்துக் கொண்டு, உறையும் நீரில் குளித்தாலும்

அவர்கள் உடலுக்கு எந்த உபாதையும் வருவதில்லை. இதைப்பார்த்து வியந்த ரஷ்யர்கள் சைபீரியாவிலே சோதித்துப் பார்த்தனர். அந்த அதிர்வுகளால் உடலுக்குள் ஒருவித மாற்றம் ஏற்படுவதையும் அதனால் நடுங்கும் குளிரைத் தாங்கும் சக்தி உடலுக்கு உண்டாவதையும் கண்டறிந்தனர்.

ஒரு செயலைச் செய்து கொண்டிருக்கும்போது, அச்செயலைத் தொடர்ந்து செய்ய முடியாமல் தவிக்கும்நிலை ஏற்படுவது உண்டு. அதற்குக் காரணம் மன உளைச்சல். மன உளைச்சலில் செய்யும் செயல் தோல்வியில் முடியும். இதுபோன்ற நேரங்களில் மந்திரமும் நமக்குத் துணை செய்யும். அம்மந்திரங்களுள் சிறந்த மந்திரமாகத் திருவைந்தெழுத்து மந்திரம் உள்ளது. இம்மந்திரத்தை உள்ள உணர்வோடு ஓதினால் மனம் உறுதிபெறும். செய்யும் செயலைச் செம்மையாகச் செய்யலாம். மன் - திரம். மனத்தினைத் திரத்துடன் இறைவன்மேல் எண்ணுவது, திரும்பத்திரும்பக் கூறுவது.

உடல் குண்டலினி என்னும் பௌதிகச் சக்தியால் இயங்குகின்றது. அந்தச் சக்தியை இயக்குவது திருவைந்தெழுத்து ஆகும். இது மனத்திற்கு இன்பத்தைத் தரவல்லது. இம்மந்திரம் உயிர் மூலமாகிய சிவனால் அருளப்பெற்றது. இதனைத் தொடர்ந்து தியானித்தால் முக்தி பேறு கிட்டும்.

திருநீறு பூசும்போது, நமச்சிவாய என ஓதி அணிய வேண்டும் என்கின்றார் அப்பர். சிவாயநம எனச் சொல்லி அணிய வேண்டும் என்கின்றார் வள்ளலார். எந்த மந்திரத்தையும் அடிக்கடி உச்சரித்து உருவேற்ற இறையருளால் எதையும் சாதிக்கலாம் எனக் காட்டியவர் நமிநந்தியடிகள். ஆரூர்ப் பெருமானுக்கு விளக்கெரிக்க, அருகே இருந்த சமணர்களிடம் எண்ணெய் கேட்டார் நமிநந்தியடிகள். அவர்களோ அவரையும் சைவ சமயத்தையும் இறைவனையும் இகழ்ந்து நீரை விட்டு விளக்கு எரிக்கச் சொன்னார்கள். அவர்கள் கூறியவாறு அவர்களுக்குத் தெளிவை உண்டாக்க விளக்கில் நீர் பெய்து விளக்கு எரித்தார்.

சிவாயநம என்பது ஐந்தெழுத்து மந்திரம். இதில் உள்ள சிவாய என்பதை மட்டும் தியானித்தால் பாவமும், பழியும், அறியாமையும், பிறப்பும் நீங்கும். இதில் உள்ள சிவ என்பதை மட்டும் தியானித்தால் மனமும் மூச்சும் பக்குவம் அடையும். மனம், உயிர் உணர்வின் வழியில் இயங்கும். தெளிவு உண்டாகும். சிவசிவ என்று தியானிக்கத் தெரியாதவர் வாயிருந்தும் ஊமை போன்றவர்; தீமைகளை அனுபவிக்க விரும்புபவர்; தீமைகள் தீர,

சிவசிவ என்று தியானிக்க வேண்டும். தியானித்தால் அவர்கள் தேவர்கள் ஆவர்.

சிவசிவ என்றிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்றிடச் சிவகதி யாமே (திரு.2715)

எனவே நமசிவய என்ற ஐந்து எழுத்து உயர்ந்த பொருளாகும்.

இதை ஓதினால் நன்மைகள் பெருகும். ஊழ்வினை என்ற தலையெழுத்தும் மாறும். இதிலுள்ள ஓர் எழுத்தை மட்டும் தியானித்துக் கொண்டே இருந்தால் பிறவி என்ற கடலில் இருந்து கரையேற முடியும். இந்த ஒற்றை மந்திரத்தை நாயோட்டு மந்திரம் என்பர்.

நாயோட்டு மந்திரம் நான்மறை வேதம்
நாயோட்டு மந்திரம் நாதன் இருப்பிடம்
நாயோட்டு மந்திரம் நாதாந்த மாம்சோதி
நாயோட்டு மந்திரம் நாமறி யோமே (திரு.1100)

முன்வினை, தீவினையாகிய பழவினைப் பதிவுகள் நம் செல்களில் பதிவாகி உள்ளன. ஒலியை ஒளியாக மாற்றி அந்த ஒலியைக் கொண்டு ஊழிவினையாகிய செல்களுள் பதிந்து இருக்கும் பதிவுகளை மாற்ற முடியும் என்பதையே நாயோட்டு மந்திரம் செய்கின்றது. சி எனும் ஓரெழுத்து செல்களின் பதிவை அழிக்கும் பணியைச் செய்யும் மந்திரம் ஆகும். இது சிவமந்திரமாகும். சிவாகம மந்திரங்கள் திருமந்திரத்தில் மிகுதியாகப் பேசப்படுகின்றது. நான்காம் தந்திரத்தில் வயிரவி மந்திரம் கூறப்படுகின்றது. அதில் உச்சியின் நடுவில் விளங்குவது சிகா மந்திரம் என்று கூறப்பட்டுள்ளது.

### கைவிரல்கள்

ஐம்புலன்களின் ஆதிக்கம் கைவிரல்களில் அமைந்துள்ளது. விரல்களின் இணைப்பால் சக்தி வலுவடைகின்றது. உடல் உறுப்புகள் பலன் அடைகின்றன. உள்ளம் மனம்போன்ற அருவசக்திகளோடு தொடர்பும் கிடைக்கின்றது. நம்முடைய மோதிரவிரல் கால்களுடனும், சுண்டுவிரல் வயிற்றுடனும், பெருவிரல் மார்புடனும், ஆள்காட்டிவிரல் கழுத்துடனும், நடுவிரல் தலையுடனும் தொடர்புடையவை.

திருமூலர் 3000 ஆண்டுகள் வாழ்ந்ததாகத் திருமந்திரம் கூறுகின்றது. இதையே வல்லவனால் பூட்டப்பட்ட பூட்டு என

வள்ளலார் கூறுகின்றார். இந்த எண்சாண் உடம்பும், எட்டிரண்டும், சாகாத்தலை, வேகாக்கால், போகப்புனல் ஆகிய தத்துவங்களையும், தத்துவம் கடந்த நிலையும் வல்லவனால் பூட்டப்பட்ட பூட்டெனக் கருதுகின்றார்.

செம்பு பொன்னாகுஞ் சிவாயநம வென்னில் (திரு.883)

என்ற அடி சிவாயநம என்று சொன்னால் செம்பு பொன்னாக ஆகிவிடும் என்கின்றது. இங்குச் சிவாயநம என்பது மறைபொருளாக வந்த இரசவாதம் பற்றிய செய்தி என்பர். அதாவது பஞ்சாட்சரமெனும் ஆறாதாரத் தத்துவமாகும்.

கடினமான தாழ்ந்த உலோகத்தை உயர்ந்த உலோகமாக மாற்றும் சக்தி முப்புவுக்கு இருக்கின்றது. உலோகங்களைத் தங்கமாக மாற்றக்கூடிய முப்பு நம் உடலையும் தங்கமாக்கும் எனச் சித்தர்கள் நம்பினர். இரசவாதத்திற்கு உடம்பில் உள்ள பலவகையான உலோகங்களிலுள்ள அழுக்கை அகற்றும் வல்லமை உண்டு. இதன் செயற்பாட்டால் கிடைக்கும் தங்கத்தால் நரைதிரை மூப்பை நீக்கிக் கற்ப கோடிகாலம் வாழலாம் என்பதே இரசவாதத்தின் முக்கிய நோக்கமாகும்.

சிவாயநமஞ் செழுத்திலே தெளிந்து தேவராகலாம்
சிவாயநமஞ் செழுத்திலே தெளிந்து வானராகலாம்
சிவாயநமஞ் செழுத்திலே தெளிந்துகொண்ட வான்பொருள்
சிவாயநமஞ் செழுத்திலே தெளிந்துகொள்ளும் உண்மையே

என்ற பாடல் இரசவாதம் பற்றிய சிந்தனையை மெய்ப்பிப்பதாக உள்ளது. மேலும் இந்நூலில் வரும்,

கறுத்த இரும்பே கனகம தானாற
மறித்திடும் பாகா வகையது போல (திரு.2013)

என்பது இரசவாதக் கலையைக் குறிக்கின்றது. இரசவாதத்தை வேதகம் என்றும் அதற்கும் உதவும் மருந்தைப் பரிசனவேதி என்றும் திருமந்திரம் (889, 2013) குறிப்பிடுகின்றது.

உயிர்கள் வாழ்வதற்கு உண்டாக்கப்பட்டதே திருவைந்தெழுத்து எனும் மந்திரம், அதனை உணராமல் மக்கள் இறப்பை எட்டுகின்றனர் (2663) என்கின்றது திருமந்திரம்.

மேலும்,

தெளியவே ஓதின் சிவாயநம என்னும்
குளிகையை இட்டுப் பொன்னாக்குவன் கூட்டையே
(திரு.2664)

என்று கூறுகின்றது. சிவாயநம என்னும் குளிகை உயிரை மட்டுமல்ல உடலையும் பொன்னாக மாற்றவல்லது என்பதே பஞ்சாக்கரம் எனும் எழுத்தின் இரகசியமாகும்.

மந்திரம் என்பது மனத்தை உரப்படுத்துவது; அலையும் மனத்தை அடக்குவது. ஒரு நாமத்தையோ ஓர் உருவத்தையோ இடையறாது நினைப்பது. அதனால்தான் சிவாயநமவென்று சிந்தித்திருப்போருக்கு அபாயம் ஒரு நாளுமில்லை என்று பெரியோர் கூறுகின்றனர். காலை, நண்பகல், மாலை ஆகிய மூன்று வேளையும் மந்திரம் செபிக்கப்பெறும். தனித்திருந்து கண்களை மூடிக்கொண்டு கருத்தை ஒன்றில் நிறுத்த உதவுவது மந்திரம். எனவேதான் மூச்சுக்கும் மந்திரத்துக்கும் தொடர்புண்டு என்கின்றார் திருமூலர். மூச்சுப் பயிற்சியை மந்திரத்தோடு செய்யவும் சொல்கின்றார்.

**நாசிக்கு அதோமுகம் பன்னிரண் டங்குலம்**
**நீசித்தம் வைத்து நிலையவும் வல்லையேல்**
**மாசித்தி மாயோகம் வந்து தலைப்பெய்யும்**
**தேகத்திற் கென்றும் சிதைவில்லை யாகுமே!** (திரு.581)

என்கின்றது திருமந்திரம்.

ஆயிரம் நாமங்களால் சிவனைப் போற்றி வழிபடுங்கள். அதனால் ஓராயிரம் வகை சுகங்களை அடையலாம். சிரசின்மீது மனத்தை நிறுத்திச் சாதனை செய்தால் ஆயிரக் கணக்கான ஆசைகளினின்றும் நீங்கலாம். இறைவனைத் துதிப்பவர் மனம் அன்பும் பண்பும் உடையதாய் இருக்க வேண்டும். அன்பால் மட்டுமே அவனைக் காணமுடியும். அனைத்திலும் கலந்துள்ளவன்; அனைத்தையும் கடந்து நின்றவன்; சீவர்களின் அறிவானவன்; ஆனால் சீவர்களால் அறியப்படாது மறைந்துள்ளான்.

## துறவின் மேன்மை

இல்லறத்தார் யாக்கை நிலையாமையை உணர்ந்து வீடுபேறு பெறுதற்கு முயலவேண்டும். இல்லறத்தான் செய்ய வேண்டிய கடமைகள் சிலவற்றை விதிக்கின்றது திருமந்திரம். விருந்தோம்புவது அவன் முதற்கடமை; துறந்தார்க்குப் பொருள் கொடுத்துப் பணிவிடைகளும் அவன் செய்ய வேண்டும். நற்செயல்களையே புரிய வேண்டும்; தீயன அனைத்தையும் விலக்க வேண்டும். இல்லறத்தான் விலக்க வேண்டிய சிலவற்றையும் திருமந்திரம் கூறுகின்றது. அவற்றுள் முதலாவது பரத்தையர் தொடர்பு; அடுத்தது, பிறன்மனை நயத்தல்; மூன்றாவது பொருட்பற்று.

துறவறத்தின் மேன்மையைத் துறவியாகிய திருமூலர் தம் நூலில் நன்கு விளக்கியுள்ளார். ஆறாம் தந்திரத்தில் துறவு பற்றிய விளக்கம் மிகுதியாக உள்ளது.

**சிவனே மிகச் சிறந்த துறவி** என்று காட்டும் திருமந்திரம், இறைவனை வழிபட்டுத் திருவடிப் பேற்றினை அடையவேண்டும் என்பதே துறவியின் நோக்கம் என்று உணர்த்துகின்றது. துறவிகளின் ஒழுகலாறுகளையும் திருமந்திரம் விரிவாகச் சுட்டியுள்ளது. தவவேடம், திருநீறு, குருவருள் முதலியன குறித்தும் அது பேசுகின்றது.

இறைவனை அடைதற்குரிய வழிமுறைகள் பல. சுத்த சைவம், அசுத்த சைவம், கடுஞ்சுத்த சைவம், சரியை, கிரியை, யோகம், ஞானம், சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திர மார்க்கம், தாசமார்க்கம், சாலோகம், சாமீபம், சாருபம், சாயுச்சியம், சத்திநிபாதம், ஆறந்தம் ஆகிய பதினெட்டு நெறிகளைத் திருமந்திரம் தெளிந்த முறையில் ஆராய்ந்து சொல்லி அவற்றின் பயன்களையும் குறிப்பிட்டுள்ளது. இவற்றுள் ஏதாவது ஒரு நெறியைப் பின்பற்றி இறைவனை அடைதற்கு மனிதன் முயல வேண்டும் என்பதைத் திருமந்திரம் வலியுறுத்துகின்றது.

**இறையியல்**

வாழ்வின் ஒழுங்கே உடல் உள்ளத்தூய்மைக்கு வழிகோலும். இத்தூய வாழ்வு இறையியலின்பால் ஈர்ப்பை ஏற்படுத்தும். திருமந்திரம் இறையியலுக்கான வழிபாட்டு நெறிமுறைகளையும், முக்திக்குரிய கருவிகளையும், முப்பொருள் இயல்பையும், மெய்ப்பொருளை உணரத் தன்னையே உணர்தலையும், யோகநிலைகளையும், மந்திரங்களையும் வகைப்படுத்தித் தெளிவாகக் கூறுகின்றது. இறையியல் நெறியைப் பின்பற்றுவோர்க்குச் சமயக் கொள்கைகளின் விளக்கமாகத் திருமந்திரம் உள்ளது.

இறைவன் அனைத்து உயிர்கள் உள்ளும் கலந்துள்ளான். அவனைத் துதித்துச் சிந்தை செய்தால் இதனை உணரமுடியும். நல்லது செய்தலை அறமாகக் கொண்டு வாழ்ந்தால் சிவபதம் சேருவர். அன்புடன் விளக்கேற்றித் தீபம் காட்டி வழிபட்டு, திருக்கோயில் தொண்டு செய்தால் இறைவனை அடையலாம். மலரும் நீரும் கொண்டு வழிபட்டால் இறைவன் அருள் புரிவான். உள்ளத்திலே பூசை செய்யும் அளவு உள்ளத் தூய்மை இருந்தால் வழிபாடு எளிமையாகும். அடியாருக்கு உதவுவதே ஆண்டவருக்கு உதவுவது ஆகும். ஞானியருக்கு உணவு அளிப்பது சிறந்த அறம். உண்மை அன்பால் சிந்தையை இறைவன்பால் செலுத்தி மனம் ஒன்றி

வழிபட்டால் இறையருள் கிட்டும். இவ்வாறு எளிய வழிபாட்டு முறைகளையும் திருமூலர் குறிப்பிடுகின்றார். அரிய தவயோகங்களால் வழிபாடு செய்யும் பக்குவம் அனைவருக்கும் இருக்காது. எனவே அவரவருக்கு ஏற்ற நெறியில் நின்று இறையருள் பெறும் நிலையையும் திருமந்திரத்தில் காணமுடிகின்றது.

## முடிவுரை

திருமந்திரம் ஒரு வாழ்வியல் நூல்; இல்லறத்தார்க்கும் துறவறத்தார்க்கும் ஆன்ம ஈடேற்றத்திற்கும் பிறவி நீக்கத்திற்கும் வீடுபேற்றிற்கும் வழிகாட்டுவதே திருமந்திரத்தின் உயரிய நோக்கம் ஆகும். திருமந்திரம் கூறும் ஆன்மிக வாழ்வு சமுதாய ஈடேற்றத்திற்குப் பெரிதும் உறுதுணை புரியும். நல்லன எதிர்கொண்டு அல்லன நீக்கி ஞானம்பெறத் திருமூலர் வலியுறுத்துவதை,

ஆம்விதி நாடி அறம்செய்மின் அந்நிலம்
போம்விதி நாடிப் புனிதனைப் போற்றுமின்
நாம்விதி வேண்டும்அது என்சொலின் மானிடர்
ஆம்விதி பெற்ற அருமை வல்லார்க்கே (திரு.195)

என்ற பாடல் உணர்த்துகின்றது. இந்தப் பிறவியில் இன்பம் தரும் நெறியை நாடி ஒழுக்கத்தில் நில்லுங்கள் என மானிடரைத் திருமந்திரம் நெறிப்படுத்துகின்றது. அறம் செய்யாவிட்டால் அவன் அருளைப் பெறமுடியாது என்பதே இந்நூல் கருத்தாகின்றது. அறத்துடன் அன்பையும், இறைவழிபாட்டையும் வற்புறுத்துகின்றது. உடல் நிலையற்றதாயினும், யோகநெறி வாழ்ந்து, அவ்வுடலைக் கோயிலாக்கி, இறை அனுபவம் உணர்ந்து வாழச் சிறந்த வழியினைக் காட்டியுள்ளார் என்பது இவ்வியலில் எடுத்துரைக்கப்பட்டது.

திருமூல தேவனையே சிந்தை செய்வார்க்குக்
கருமூலம் இல்லையே காண் (தனிப்பாடல்)

# துணைநூற்பட்டியல்


1. கர்ப்ப வாகடத் திரட்டு, மரு.ச. அரங்கராசன், (பதி) சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். 2013.

2. சுவடிப் பதிப்புகளில் உரைவேறுபாடுகள், தொகுதி-2, முனைவர் கோ. விசயராகவன், முனைவர் தி. மகாலட்சுமி (பதி), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2012.

3. சூட்சுமம் திறந்த திருமந்திரம் (பாகம் 2), ஜான் பி. நாயகம், ஆர். எஸ்.பி. பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2010.

4. திருமந்திர ஆராய்ச்சி, இரா. மாணிக்கவாசகம், அன்னை அபிராமி அருள், சென்னை, 1982.

5. திருமந்திரக் கோட்பாடு, ப. அருணாசலம், முல்லை நிலையம், சென்னை, 2002.

6. திருமந்திரச் சிந்தனைகள், மு.பெ. சத்தியவேல் முருகனார், உமா பதிப்பகம், சென்னை, 2003.

7. திருமந்திரத்தில் வாழ்வியல் சிந்தனைகள், ஜி. கௌசல்யா விஜயன், விஜயன் பதிப்பகம், வேலூர், 1998.

8. திருமந்திரம் வைத்தியப் பகுதி, திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை, 2011.

9. திருமூலர் அருளிய திருமந்திரசாரம், பி.எஸ். ஆச்சார்யா, நர்மதா வெளியீடு, சென்னை, 2009.

10. திருமூலரின் கற்றல் கோட்பாடுகள், கா. மீனாட்சி, கா. மீனாட்சி வெளியீடு, சென்னை, 2004.

11. பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம், முனைவர் சுடலி தியாகராஜன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2009.

# திருமந்திரப் பதிப்புகள்

1. திருமந்திரம் மூவாயிரம் - கொ. சண்முகசுந்தர முதலியார், 1887. இதில் சிறப்புப்பாயிரம் உட்பட 235 - இயல்களுக்கு 3083 பாடல்கள்.
2. திருமந்திரம் - திரு.வி. கலியாணசுந்தரனார் பார்வை, 1909. 3083 பாடல்கள்.
3. திருமந்திரம் - திருவாவடுதுறை சுப்பிரமணியத் தம்பிரான் பதிப்பு, 1897. 2006 (5ஆம் பதிப்பு) இயல் 234க்கு 3083 பாடல்கள் உள்ளன.
4. மா.வே. விசுவநாதபிள்ளை குறிப்புரை, 1912 - 3048 பாடல்கள்.
5. ரா. சுப்பிரமணியக் கவிராயர், 100 பாடல்களுக்கு உரை, தமிழ்ச் சங்கம், மதுரை. 1913.
6. திருமூலர் அருளிய திருமந்திரம் - எஸ். சங்கரலிங்க முதலியார் பார்வை, இரத்தின நாயக்கர் சன்ஸ், சென்னை. 1934. 3083 பாடல்கள்.
7. திருமந்திரம் - சைவசித்தாந்த மகா சமாஜம் - எஸ். வையாபுரிப்பிள்ளை பதிப்பு, 1940, 3047 பாடல்கள்.
8. திருமந்திரம் மூவாயிரம் - துடிசைக் கிழார் அ. சிதம்பரனார். (குறிப்புரை) சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1942 - 3000 பாடல்கள்.
9. திருமந்திர மாநாட்டு மலர், கண்டியத் திருமேனி கம்பளிச்சட்டை கைலாயச் சித்தர் உரை - திருவாவடுதுறை ஆதீனம். 1954.
10. திருமந்திர மாலை எனப்பெயர் பெற்ற திருமந்திரம் - ஸ்ரீகாசிமடம், டி.எம். குமரகுருபரன்பிள்ளை, 1956, 3047 பாடல்கள்.
11. திருமூலர் திருமந்திரம், ஸ்ரீபஞ்சாட்சர தீபம் என்ற உரையுடன் - திருவாவடுதுறை ஆதீனம், 1957, 3046 பாடல்கள்.

12. இராமநாதப் பிள்ளை உரை, கழக வெளியீடு, 1957.

13. தண்டபாணி தேசிகர் உரை (கடைசிப் பகுதி - மீனாட்சி சுந்தரம் பிள்ளை உரை) திருவாவடுதுறை ஆதீன வெளியீடு 1971.

14. திருமந்திரம் முதல் மூன்று தந்திரங்கள் - ஜி. வரதராசன் உரையுடன், 1971.

15. திருமந்திர மாலையாகிய திருமந்திரம், 3 பகுதிகள் - சி.அருணை வடிவேல் முதலியார், தருமபுர ஆதீனம், 1974, 3000 பாடல்கள்.

16. திருமந்திரம் 4,5,6 -ஆம் தந்திரங்கள் - ஜி. வரதராசன் பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1983.

17. திருமந்திரம் 7,8,9 - ஆம் தந்திரங்கள் - ஜி. வரதராசன் 1985. இவை மூன்றும் மொத்தம் 3047 பாடல்கள்.

18. நாராயண வேலுப்பிள்ளை உரை. வர்த்தமானன் பதிப்பகம், 3 பகுதி. 1994.

19. சுப. அண்ணாமலை, மூலபாட ஆய்வுப்பதிப்பு - 1997.

20. திருமந்திரத்தில் சைவ சமயக்கலைச்சொல் விளக்கம் அ.மா. பரிமணம், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் - 2002.

21. திருமந்திரம் - வி. உலகநாத முதலியார் - விவேகபோதினி, மைலாப்பூர், சென்னை.

22. திருமூலநாயனார் திருவாய் மலர்ந்த அருளிய திருமந்திரம் - பதிப்பாசிரியர், பதிப்பு, பதிப்பித்த ஆண்டு ஆகியன இல்லை

23. TIRUMANTIRAM - WITH ENGLISH TRANSLATION, SRI RAMAKRISHNA MATH, MADRAS, 1991.

# திருமூலர் படங்கள்



திருமூலர்



திருவாவடுதுறையில் சிவன் கோயில் உட்புறத்தில்
திருமூலருக்கு கோவில் உள்ளது. திருமூலர்
இந்த இடத்தில் அமர்ந்துதான்
3,000 பாடல்கள் எழுதியுள்ளன



**Actual location photograph where Tirumular wrote Thirumantiram; outer prakaram of Thiruvavadutural temple. Statue of Tirumular is installed in the sanctum**



திருமூல தேவராய்ப் படரரசின் கீழ் சிவயோகத்திருத்தல்



பசுபடுதுயர்கண்ட யோகியர் நிலை

# திருமந்திர நூல்களின் முகப்பு அட்டைகள்








சூட்சுமம் திறந்த

# திருமந்திரம்

பாகம் - 2

டாக்டர் ஜாண் பி. நாயகம்
M.B.B.S., M.D., Ph.d., D.Sc.

# நவசிவாய மூர்த்திகள்



# திருமந்திரத்தில் இடம்பெறும் செய்திகளின் விளக்கங்கள் - எந்திரங்கள்



# ஆறு ஆதாரங்கள்




ஆக்கினை

↑

விசுக்தி

↑

அனாகதம்

↑

மணிப்பூரகம்

↑

சுவாதிஷ்டானம்

↑

மூலாதாரம்

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ந | ஐ | ஶி | வ | ய | ஶீ | ஐ | வ | ய | ந | ஶி |
| ய | ந | வ | ஶி | ஐ | வ | ஶி | ய | ந | ஐ | வ |
| ஐ | வ | ய | ந | ஶி | ய | வ | ஶி | ஐ | ய | ந |
| ஶி | ய | ந | ஐ | வ | ந | ந | ஐ | ஶி | வ | ய |
| வ | ஶி | ஐ | ய | ந | ஐ | ய | ந | வ | ஶி | ஐ |
| ஹ | ர | ஹ | ர | ஓம் | [illegible] | ஓம் | ஷ | ர | ஹ | ர |
| வ | ஐ | ந | ய | ஶி | ஓம் | ஶி | ந | ய | வ | ஐ |
| ஶி | ந | ய | வ | ஐ | ஹ | ஐ | ஶி | வ | ந | ய |
| ஐ | ஶி | வ | ந | ய | ர | ய | வ | ஶி | ஐ | ந |
| ய | வ | ஶி | ஐ | ந | ஹ | ந | ய | ஐ | ஶி | வ |
| ந | ய | ஐ | ஶி | வ | ர | வ | ஐ | ந | ய | ஶி |

**914-வது திருமந்திர விளக்கம்**

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| சி | வ | ய | ந | ம | சி | வ | ய |
| ம் | ம | ம | ம | ம | ம் | ம | ம |
| ந் | ம | ந | ந | ந | ந் | ந | ந |
| ய் | ம | ந | ய | ய | ய் | ய | ய |
| வ் | ம | ந | ய | வ | வ் | வ | ய |
| சி | ம | ந | ய | வ | சி | வ | ய |
| ம | ம | ந | ய | வ | வ | வ | ய |
| ந் | ம | ந | ய | ய | ய் | ய | ய |
| ய் | ம | ந | ந | ந | ந் | ந | ந |
| வ் | ம | ம | ம | ம | ம் | ம | ம |
| சி | ம | ந | ய | வ | சி | ம | ந |

**915-வது திருமந்திர விளக்கம்**



921 - வது திருமந்திர விளக்கம்




922 - வது திருமந்திர விளக்கம்

| | | | | |
|---|---|---|---|---|
| சி | வா | ய | ந | ம |
| ம | சி | வா | ய | ந |
| ந | ம | சி | வா | ய |
| ய | ந | ம | சி | வா |
| வா | ய | ந | ம | சி |

923-வது திருமந்திர விளக்கம்



946 - 950 திருமந்திரங்களின் விளக்கம்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 2 |
| 17 | சி | வ | ய | ந | ம | 1 |
| 16 | ம | சி | வ | ய | ந | 2 |
| 15 | ந | ம | சி | வ | ய | 3 |
| 14 | ய | ந | ம | சி | வ | [illegible] |
| 13 | வ | சி | ய | ந | ம | [illegible] |
| 12 | 11 | 10 | 9 | 8 | 7 | [illegible] |

987, 988 திருமந்திரங்களின் விளக்கம்

வடக்கு

மேற்கு / கிழக்கு

| | | | | |
|---|---|---|---|---|
| சி | வ | ய | ம | ந |
| வ | ய | ம | ந | சி |
| ய | ம | ந | சி | வ |
| ம | ந | சி | வ | ய |
| ந | சி | வ | ய | ம |

தெற்கு

998வது திருமந்திர விளக்கம்




1001 வது திருமந்திர விளக்கம்

| | | | | |
|---|---|---|---|---|
| ய | ந | ம | சி | வ |
| வ | சி | ய | ந | ம |
| சி | வ | ய | ந | ம |
| ம | சி | வ | ய | ந |
| ந | ம | சி | வ | ய |

1002 வது திருமந்திர விளக்கம்




1030-வது திருமந்திர விளக்கம்




1069-வது திருமந்திர விளக்கம்



1147-வது திருமந்திர விளக்கம்



1281-வது திருமந்திர விளக்கம்




1298 - 1300 திருமந்திரங்களின் விளக்கம்



1311 - 1314 திருமந்திரங்களின் விளக்கம்
புவனாபதி சக்கரம்



1364-வது திருமந்திர விளக்கம்





## ஆசனங்கள்



கோமுகாசனம் - 1



பத்ராசனம் 1



பத்ராசனம் 2



சுவஸ்தி · ாசனம்



பத்மாசனம்

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, சென்னை - 600 113

### அண்மை வெளியீடுகள்

| | | ரூ. பை. |
|---|---|---|
| 1. | சிலப்பதிகார இலக்கியக் கட்டமைப்பு | 160.00 |
| 2. | பழந்தமிழரின் பழக்க வழக்கங்கள் | 55.00 |
| 3. | பேரறிஞர் அண்ணாவின் சமூகப் பொருளாதாரச் சிந்தனைகள் | 75.00 |
| 4. | தமிழ்ச் செவ்வியல் நூல்களில் அறம், அறிவியல், சமூகம் | 70.00 |
| 5. | கிறித்தவக் காப்பியங்கள் | 225.00 |
| 6. | தமிழ் நாளிதழ்களின் மொழிநடை | 70.00 |
| 7. | சுயமரியாதை இயக்க வீராங்கனைகள் அன்றும் இன்றும் | 50.00 |
| 8. | குலோத்துங்கனின் கவிதை வளம் | 60.00 |
| 9. | தமிழ்த்தூது (கட்டுரைக் கொத்து) | 40.00 |
| 10. | தனிநாயக அடிகளாரின் ஆய்வுகள் | 50.00 |
| 11. | அறிவியல் பார்வையில் வேதாத்திரிய உடல்நலக் கொள்கைகள் | 60.00 |
| 12. | பழங்குடி மாணவர்களுக்கான தமிழ்மொழிப் பாடநூல் மதிப்பீடு | 65.00 |
| 13. | பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் மனிதவள மேம்பாடும் | 50.00 |
| 14. | மேலைநாட்டறிஞர்களின் தமிழ்த் தொண்டு | 175.00 |
| 15. | பெரியார் என்னும் பேரொளி | 60.00 |
| 16. | சீனக்கவிஞர் குமோரோவின் தேவதைகள் (கவிதைத் தொகுப்பு) | 70.00 |
| 17. | புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம் | 100.00 |
| 18. | உலகத் தமிழியல் ஆய்வுகள் (தொகுதி 1) | 450.00 |
| 19. | செவ்விலக்கியச் சாரம் | 70.00 |
| 20. | தொல்காப்பிய உத்திகள் | 60.00 |

வெ.எண் : 792

**திருமந்திரம் காட்டும் வாழ்வியல் நெறிகள்**

விலை : ₹ 165.00

